# திருவிளையாடல் புராணக்கோயில்கள்- ஓர்ஆய்வு

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (**Ph.D.,**) பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

ந.முத்துமணி

(பதிவு எண் :1506)

நெறியாளர்

பேராசிரியர்.சே.செந்தமிழ்ப்பாவை






தமிழ்ப்பண்பாட்டு மையம்

அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் $A^+$ (CGPA: 3.64) தகுதி பெற்றது மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு - இந்தியா


ஜூன் - 2019

பேராசிரியர். சே.செந்தமிழ்ப்பாவை, எம்.ஏ., எம்.ஃ.பில்., பி.எட்., பி.எச்.டி
தமிழ்ப்பண்பாட்டு மையம்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630 003.

நாள்:
06.06.2019

# நெறியாளர் சான்றிதழ்

**"திருவிளையாடல் புராணக்கோயில்கள்- ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில் **திருமதி.ந.முத்துமணி** அவர்கள் முழுநேர முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காகச் செய்துள்ள இவ்வாய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்ப்பண்பாட்டு மையத்தில் அவர் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொண்ட காலத்தில் தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும் இவ்வாய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

(முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை)

நெறியாளர்

ந.முத்துமணி, (பதிவு எண்: 1506)
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்ப்பண்பாட்டு மையம்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630 003.

நாள்: 06.06.2019

# ஆய்வாளர் உறுதிமொழி

**“திருவிளையாடல் புராணக்கோயில்கள்- ஓர் ஆய்வு”** என்னும் தலைப்பில் அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்ப்பண்பாட்டு மையத்தில் முனைவர்பட்ட ஆய்வு மேற்கொண்ட காலத்தில் முனைவர்(பிஎச்.டி.,) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்வாய்வு என் சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

(ந.முத்துமணி)
ஆய்வாளர்

உறுதிக்கையொப்பம்

பேராசிரியர். சே.செந்தமிழ்ப்பாவை, எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பி.எச்.டி
தமிழ்ப்பண்பாட்டு மையம்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630 003.

## நன்றியுரை

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்ப்பண்பாட்டு மையத்தில் **“திருவிளையாடல் புராணக்கோயில்கள்- ஓர் ஆய்வு”** என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வு நிகழ்த்த அனுமதி நல்கிய அழகப்பா பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர் அவர்களுக்கும் மதிப்பிற்குரிய பதிவாளர் அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் ஆய்வின் நெறியாளராக இருந்து எனக்கு ஊக்கமளித்து ஆய்வேட்டைச் செம்மையாக உருவாக்குவதற்குத் துணைநின்ற தமிழ்ப்பண்பாட்டுமையப் பேராசிரியர் மற்றும் இயக்குநர் **முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை** அம்மா அவர்களுக்கு என் உள்ளம் நிறைந்த நன்றி என்றும் உரியது.

இவ் ஆய்விற்குரிய தகவல்களையளித்த ஆதிசொக்கநாதர், புட்டு சொக்கநாதர், திருஏடகநாதர், மதுரை மீனாட்சிஅம்மன் ஆகிய கோயில்களின் நிருவாகிகள், பணியாளர்கள் ஆகியோருக்கும் எனது உளம் கனிந்த நன்றி.

நான் நன்னிலை பெற்றுயர அரும்பாடுபடும் எனது கணவர் சீனி.குமார் அவர்களுக்கும் எனது மகன் கு.பாலசுப்பிரமணியனுக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அன்புடன்,

ந.முத்துமணி.

# பொருளடக்கம்


| வ.எண் | இயல்கள் | உள்ளடக்கம் | பக்கம் |
|---|---|---|---|
| 1. | | முன்னுரை | 1-3 |
| 2. | ஒன்று | திருவிளையாடல்புராணமும் திருக்கோயில்களும் | 4-48 |
| 3. | இரண்டு | திருக்கோயில்கள் அமைப்பும் திருவுருவங்கள் அமைதியும் | 49-105 |
| 4. | மூன்று | வழிபாடும் விழாக்களும் | 106-169 |
| 5. | நான்கு | திருக்கோயில்களின் நிருவாகம் | 170-182 |
| 6. | ஐந்து | திருக்கோயில்கள் உணர்த்தும் பண்பாடு | 183-230 |
| 7. | | முடிவுரை | 231-235 |
| 8. | | துணைநூற்பட்டியல் | 236-245 |
| 9. | | பின்னிணைப்புகள்<br>நேர்காணல்<br>கலைச்சொல் விளக்கம்<br>கோயில் வரைபடம்<br>நிழற்படங்கள் | |

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| அகநா. | - அகநானூறு |
| கலித். | - கலித்தொகை |
| கள.நாற். | - களவழிநாற்பது |
| குறுந். | - குறுந்தொகை |
| சிலப். | - சிலப்பதிகாரம் |
| திருஞா. | - திருஞானசம்பந்தர் |
| திருநாவு. | - திருநாவுக்கரசர் |
| திருவா. | - திருவாசகம் |
| தேவா. | - தேவாரம் |
| தொல்.பொருள்.அகம் | - தொல்காப்பியம்,பொருளதிகாரம்,அகத்திணையியல் |
| நற். | - நற்றிணை |
| நாலா.தி.பிர. | - நாலாயிர திவ்யப்பிரபந்தம் |
| நூற். | - நூற்பா |
| நெடுந. | - நெடுநல்வாடை |
| ப. | - பக்கம் |
| பக். | - பக்கங்கள் |
| பா. | - பாடல் |
| பட்டினப் | - பட்டினப்பாலை |
| பரிபா. | - பரிபாடல் |
| புறநா. | - புறநானூறு |
| பெ.பு. | - பெரியபுராணம் |
| பெரும்பா. | - பெரும்பாணாற்றுப்படை |
| மணிமே. | - மணிமேகலை |
| மதுரைக். | - மதுரைக்காஞ்சி |
| p. | - page |
| pp. | - pages |
| vol. | - volume |

# முன்னுரை

கோயில் மாநகரமான மதுரையில் எண்ணற்ற கோயில்கள் காணப்பட்டாலும் சைவ நெறிகளைப் பரப்பும் வகையில் சிவபெருமானால் நிகழ்த்தப்பட்ட அறுபத்து நான்கு திருவிளையாடல்களில் **“இடைக்காடன் பிணக்குத்தீர்த்த படலம், பிட்டுக்கு மண்சுமந்த படலம், சமணரைக் கழுவேற்றிய படலம்”** என மூன்று முக்கியமான திருவிளையாடல்கள் நடந்த இடமான, **“ஆதிசொக்கநாதர் திருக்கோயில்(சிம்மக்கல்), புட்டுசொக்கநாதர் திருக்கோயில் (புட்டுத்தோப்பு), திருஏடகநாதர் திருக்கோயில்(திருவேடகம்)”** என இம்மூன்று கோயில்களும் கூடல் மாநகருக்குப் பெருமை சேர்க்கின்றன. எனவே இத்திருக்கோயில்கள் குறித்து ஆராய்ந்து ஆவணப்படுத்துவது இன்றியமையாதது ஆகும்.

## ஆய்வுத் தலைப்பு

**“திருவிளையாடல் புராணக்கோயில்கள்-ஓர்ஆய்வு”** என்பது ஆய்வுக்குரிய தலைப்பாகும்.

## ஆய்வு நோக்கம்

பாண்டியர்களின் தலைநகரான மதுரையில் கி.பி.இரண்டாம் நூற்றாண்டு முதலே பிறவாயாக்கைப் பெரியோனாகிய சிவனுக்குக் கோயில் இருந்தமைக்கான குறிப்புகள் காணக்கிடைக்கின்றன. சிவ வழிபாட்டு மரபில் **“ஆதிசொக்கநாதர் திருக்கோயில், புட்டு சொக்கநாதர் திருக்கோயில், திருஏடகநாதர் திருக்கோயில்”** என்னும் மூன்று கோயில்கள் பெறுமிடம் குறித்து ஆராய்வது இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வின் கருதுகோள்

மதுரை மற்றும் அதைச் சுற்றி அமைந்துள்ள கோயில்களுக்கும் திருவிளையாடல் புராணத்திற்கும் நெருங்கிய தொடர்புண்டு என்பது இவ்வாய்வின் கருதுகோளாகும்.

## ஆய்வு எல்லை

**பரஞ்சோதி முனிவர் எழுதிய திருவிளையாடல் புராணம்** என்னும் நூலும் "**ஆதிசொக்கநாதர் திருக்கோயில், புட்டுசொக்கநாதர் திருக்கோயில், திருஏடகநாதர் திருக்கோயில்**" என்னும் மூன்று திருக்கோயில்களும் இவ்வாய்வின் எல்லையாகும்.

## ஆய்வு மூலங்கள்

ஆதிசொக்கநாதர் திருக்கோயில், புட்டுசொக்கநாதர் திருக்கோயில், திருஏடகநாதர் திருக்கோயில் ஆகிய மூன்று திருக்கோயில்களின் தல வரலாறு, பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடல் புராணம் மற்றும் இக்கோயில்கள் தொடர்பான நூல்கள், கள ஆய்வுத் தரவுகள் போன்றவை முதன்மை ஆதாரங்களாக அமைகின்றன. (Primary Sources) திருக்கோயில்கள் தொடர்பான நூல்கள், கட்டுரைகள், இதழ்கள், ஆய்வேடுகள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாகும் (secondary Sources).

## ஆய்வு அணுகுமுறை

ஆய்வு சிறப்பாக அமைவதற்கு ஆய்வு அணுகுமுறை(Research Approches) இன்றியமை யாததாகும். கோயில்களின் வரலாறு, பழமை ஆகியவற்றை ஆராயும் நிலையில் வரலாற்றியல் அணுகுமுறையும் திருக்கோயில் விழாக்கள், வழிபாடுகள் மற்றும் பண்பாடு தொடர்பான செய்திகள் ஆகியவற்றை ஆராயும் நிலையில் விளக்கவியல் மற்றும் பகுப்பாய்வு அணுகுமுறையும் இவ்வாய்வில் அணுகுமுறைகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## முன் ஆய்வுகள்

**"திருவிளையாடல் புராணக் கோயில்கள்"** என்னும் தலைப்பில் இதுவரை ஆய்வு மேற்கொள்ளப்பட வில்லை. பொதுவாகத் தமிழகத் திருக்கோயில்கள் பற்றி எழுதப்பட்ட நூல்கள் யாவும் ஆய்வு முன்னோடிகளாக அமைகின்றன.

## ஆய்வேட்டின் கட்டமைப்பு

**"திருவிளையாடல் புராணக் கோயில்கள்"** என்னும் தலைப்பிலான இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. **அவை,**

1. **திருவிளையாடல் புராணமும் திருக்கோயில்களும்**

2. **திருக்கோயில்கள் அமைப்பும் திருவுருவங்கள் அமைதியும்**
3. **வழிபாடும் விழாக்களும்**
4. **திருக்கோயில்களின் நிருவாகம்**
5. **திருக்கோயில்கள் உணர்த்தும் பண்பாடு** என்பனவாகும்.

முன்னுரையில் ஆய்வுப் பொருள், ஆய்வு நோக்கம், கருதுகோள், ஆய்வின் எல்லை, ஆய்வு அணுகுமுறை, இயல் பகுப்புமுறை ஆகியவை விளக்கப் பெற்றுள.

**"திருவிளையாடல் புராணமும் திருக்கோயில்களும்"** என்பது முதலாமியலாகும். இவ்வியலில் பரஞ்சோதியாரின் திருவிளையாடல் புராணம் உரைக்கும் செய்திகள், நடந்த திருவிளையாடல், ஆதிசொக்கநாதர் திருக்கோயில், புட்டுசொக்கநாதர் திருக்கோயில், திருஏடகநாதர் திருக்கோயில் என மூன்று கோயில்களின் தோற்ற வரலாறு போன்றவை ஆராயப்பெற்றுள.

**"திருக்கோயில்கள் அமைப்பும் திருவுருவங்கள் அமைதியும்"** என்னும் இரண்டாமியலில் மூன்று திருக்கோயில்களின் அமைப்புமுறை, தெய்வங்கள், அவற்றின் திருவுருவங்கள் ஆகியவை குறித்து விளக்கப்பெற்றுள.

**"வழிபாடும் விழாக்களும்"** என்பது மூன்றாமியலாகும். இதில் வழிபாட்டின் தோற்றம், வழிபாட்டுமுறை, நாள்வழிபாடு, வாரவழிபாடு, மாதவழிபாடு, ஆண்டுவழிபாடு, விழாக்கள், விழாக்களில் மக்களின் பங்கு முதலானவை ஆராயப்பெற்றுள.

**"திருக்கோயில்களின் நிருவாகம்"** என்பது நான்காமியலாகும். இதில் கோயிலுக்குரிய நிருவாக முறைகள், வரவு செலவு, சொத்துக்கள், கோயில் பணியாளர்கள் போன்றவை குறித்த செய்திகள் ஆராயப் பெற்றுள.

**"திருக்கோயில்கள் உணர்த்தும் பண்பாடு"** என்பது ஐந்தாமியலாகும். இதில் கோயில் குறித்த மக்களின் நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், மக்கள் வாழ்வில் கோயில்கள் பெறுமிடம் ஆகியவை விளக்கப்பெற்றுள.

ஐந்து இயல்களிலும் ஆராய்ந்து அறியப்பெற்ற கருத்துகள் ஆய்வின் முடிவுரையாக இடம் பெற்றுள. இதனையடுத்து ஆய்விற்குத் துணைநின்ற நூல்கள் துணைநூல் பட்டியலில் இடம் பெற்றுள. இதனையடுத்து நேர்காணல், கலைச்சொல் விளக்கம், ஆய்வுக்குரிய கோயில்களின் வரைபடம், நிழற்படங்கள் போன்றவை பின்னிணைப்பில் இடம்பெற்றுள.

# இயல் - 1

## திருவிளையாடல் புராணமும் திருக்கோயில்களும்

சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த மதுரைக்கு மற்றொரு சிறப்பு மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில் ஆகும். மதுரையில் சுந்தரேசுவரர் நிகழ்த்திய திருவிளையாடல் களைக் கொண்டு பல நூல்கள் எழுந்தாலும் அவற்றில் மிகச் சிறந்ததாகக் கருதப்படுவது பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடல் புராணம் ஆகும். இத்திருவிளையாடல் புராணம் குறித்தும் மற்றும் மதுரையைச் சுற்றி நடந்ததாகக் கூறப்படும் மூன்று திருவிளையாடல்களை அடிப்படையாகக் கொண்டு தோன்றிய மூன்று கோயில்களின் தோற்றம், வளர்ச்சி குறித்தும் விளக்குவது இவ்வியலின் நோக்கம் ஆகும்.

### திருவிளையாடல் புராணம்

சிவபெருமானுடைய மூன்று கண்களைப் போல சைவர்களால் போற்றப்பெறும் புராணங்கள் பெரியபுராணம், கந்தபுராணம், திருவிளையாடல் புராணம் ஆகிய மூன்றாகும். இவை மூன்றும் மூன்று வகையானவை. பெரியபுராணம் தமிழில் தோன்றிய மூலநூல். கந்தபுராணம் மகாபுராணங்கள் பதினெட்டில் ஒரு பகுதி. மகாபுராணத்தின் மற்றொரு பகுதி திருவிளையாடல் புராணம். திருவிளையாடல் புராணம் மதுரைத் தலத்தில் சிவபெருமான் நிகழ்த்திய அறுபத்து நான்கு திருவிளையாடல்களை விரித்துக் கூறும் நூலாகும்.

பாசத்தால் பின்னிப் பிணைந்த உயிர், தன்னை உணர்ந்து தான் பற்ற வேண்டிய உறுதிப் பொருளை இறையருளால் பெற்று, தன்னை இறைவனிடம் செலுத்தும் அன்பே ‘பக்தி’ எனப்படும். இத்தகு உயிர்கள் மீது கொண்ட பேரருளால் சிவபெருமான் மதுரை மாநகரில் திருவிளையாடல்களை நிகழ்த்தினார். இத்திருவிளையாடல்களை விரித்துக் கூறும் புராணங்கள் திருவிளையாடல் புராணங்கள் ஆகும். தமிழில் திருவிளையாடல் கதைகளைக் கூறும் புராணங்கள் ஐந்து உள்ளன. அவை:

| ஆசிரியர் | நூல்பெயர் | மூலநூல் | திருவிளையாடல்கள் |
|---|---|---|---|
| கல்லாடர் | கல்லாடம் | - | 30 |
| பெரும் பற்றப் புலியூர்நம்பி | திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் | புராணத்தின் ஒரு பகுதியான சார சமுச்சயம் | 64 |
| அனதாரியப்பன் | சுந்தரபாண்டியம் | சுந்தரபாண்டியம் | 25 |

| | | | |
|---|---|---|---|
| | | (வடமொழி) | |
| பரஞ்சோதி முனிவர் | திருவிளையாடற் புராணம் | ஸ்ரீஹாலாஸ்ய மகாத்மியம் | 64 |
| வீமநாத பண்டிதர் | கடம்பவனபுராணம் | நீபாரணய மகற்மியம் (அல்லது) கதம்பவன புராணம் | 64 |

இவ்வைந்து நூல்களிலும் மிக விரிவான நூல் பரஞ்சோதியார் இயற்றிய திருவிளையாடல் புராணம் ஆகும்.

**புராணம்**

இந்திய நாட்டு இலக்கியங்களுள் புராணங்கள் ஒரு பெரும் பகுதி. வேத காலத்திலேயே புராண நூல்கள் சிறந்த இலக்கியங்களாகக் கருதப்பட்டிருக்கின்றன. 'புராணம்' என்ற சொல் உபநிடதங்களிலும் சாத்திரங்களிலும் காணப்படுகின்றன.''[1] புராணம் என்றால் பழமை என்பது பொருள். 'புராதனம்' என்ற சொல்லே புராணம் என்றாயிற்று. புராணவித், புராணி போன்ற சொற்கள் ரிக்வேதத்திலும் அதர்வன வேதத்திலும் காணப்படுகின்றன. எனினும் இச்சொற்கள் புராணத்தைக் குறிக்கவில்லை. பழமையானவன், பழமையைப் பரப்புகிறவன் என்ற பொருளிலேயே இச்சொற்கள் வழங்கியிருக்கின்றன.''[2]

''புராணம் என்கிற வடசொல் புரா-நவ என்ற இரு வேர்களில் இருந்து பிறந்தது. இதன் பொருள் பழமைக்கும் பழமையாய்ப் புதுமைக்கும் புதுமையாய் உள்ளது என்பர். இதுவே நாம் கருதும் புராணம். பழமையான எந்த வரலாறுகள் இன்றும் கூட மக்களிடையே சொல்லப்பெற்று வழங்குகின்றனவோ அவை புராணம்''[3] என்றும் குறிப்பிடுவர் மு.அருணாச்சலம்.

புராணம் பழமையோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தாலும் புதுமையிலும் வரவேற்கக் கூடியதாகவே இருக்கிறது. வேத காலத்திற்கு முன்பும் வேத காலங்களிலும் நிலவிய மரபு வழிக் கருத்துக்கள் பிற்காலத்தில் புராணங்களாக வளர்ந்தன. ''எது தொன்று தொட்டு இன்று வரைக்கும் பரவியிருக்கிறதோ அதுவே புராணம்''[4] என்கிறது வாயுபுராணம். புராணத்திற்கு இணையாக ஆங்கிலத்தில் 'Myth'[5] என்ற சொல் வழங்கப்படுகிறது. 'Mythos' என்ற கிரேக்கச் சொல்லிலிருந்து இச்சொல் பிறந்துள்ளது.''[6] தீர்மானமான அல்லது உறுதியானப் பேச்சு அல்லது உரை அல்லது

பண்டைய வரலாற்றைக் குறிப்பிடுவது என்பன போன்ற பொருள்கள் இச்சொல்லிற்குக் சுட்டப்படும் விளக்கங்களாகும்.

### வடமொழிப் புராணங்கள்

வடமொழிப் புராணங்களின் இயல்பை விரிவாகவும் ஆழமாகவும் ஆராய்ந்த அறிஞர்கள் புராணங்கள் வேதகாலப் பண்பாட்டிற்கு முந்தைய தொன்மையான வட்டாரப் பண்பாட்டையும் தன்னுள் பெற்றுள்ளன என்கின்றனர். இந்து சமயத்தில் புராணங்கள் வேதங்களுக்குச் சமமாக மதிக்கப்பட்டன. வடமொழிப் புராணங்களை மகாபுராணங்கள் பதினெட்டு என்றும் துணைப்புராணங்கள் (உப புராணங்கள்) பதினெட்டு என்றும் இருவகைப்படுத்தி அனைத்தையும் இயற்றியவர் வியாசமுனிவர் என்னும் ஒருவரே என்பர். எனினும் இவை பல்வேறு காலங்களில் பல்வேறு இடங்களில் பல்வேறு ஆசிரியர்களால் இயற்றப்பெற்றவை என்பதே பலரது கருத்து. தமிழின் முதல் நிகண்டாகிய திவாகரத்திலேயே இவை கூறப்பட்டிருப்பதைக் கண்டு தமிழறிஞர்கள் இந்தப் புராணங்களை நன்கு மதித்ததை அறியமுடிகிறது.

**“மச்சம் கூர்மம் வராகம் வயிணவம்**
**பற்பம் பிரமம் பாகவதம் சைவம்**
**மார்க்கண்டேயம் காந்தம் வாமனம் கருடம்**
**பிரமாண்டம் இலிங்கம் பிரமனக வர்த்தம்**
**தீதுஇல் பவுடிகம் நாரதம் ஆக்கினேயம்**
**பாற்படு பதினெண் புராணம் என்ப”[7]**

என்பவை மகாபுராணங்களாகவும்

**“நாரசிங்கம் சனற்குமாரம் அனந்தம் கவுமாரம்**
**நாரதீயம் சிவதன்மம் துருவாசம் நந்தீசம்**
**காமியம் ஔசனகம் காளி கரானவயம்**
**வாருணம் மாரீசம் மயேசுரம் பராசரம்**
**பாற்கவம் பிரமாண்டம் எனப்பதி னெட்டும்**
**ஆதி உபபுராணம் ஆகும் என்ப”[8]**

என்பவை உபபுராணங்களாகவும் கொள்ளப்பெறுகின்றன. இவை தவிர, அதிபுராணம் என்று மற்றொரு வகையான பதினெண்புராணமும் உண்டு.

பதினெட்டுப் புராணங்களுள் சிவபெருமானுக்கு உரியவை பத்துப்புராணங்கள் என்றும் பிரமனுக்கு உரியவை இரண்டு என்றும் திருமாலுக்கு உரியவை நான்கு

என்றும் தீக்கடவுள், சூரியன் ஆகிய இருவருக்கும் ஒவ்வொன்று உரியது என்றும் கந்தபுராணம் கூறுகிறது. .இதனை,

**''எதிரில் சைவமே, பவிடியம் மார்க்கண்டம் இலிங்கம்**
**மதிகொள் காந்தம் நல்வராகமே வாமனம் மச்சம்**
**புதிய கூர்மமே பிரமாண்டம் இவை சிவ புராணம்**
**பதும மேலவன் புராணம் ஆம் பிரமமே பதுமம்**
**கருது காருடம் நாரணம் விண்டு பாகவதம்**
**அரிகதைப்பெயர் ஆக்கினேயம் அழற்கதை ஆம்**
**இரவி தன்கதை பிரமனகவர்த்தம் ஆம்; இவை தாம்**
**தெரியும் ஒன்பதிற் றிருவகை புராணமாற்திறனே''**[9]

என்னும் பாடல் விளக்கும்.

பேரா.ச.வையாபுரிப்பிள்ளை இந்த வடமொழிப் புராணங்களின் காலத்தை பொதுவாகக் கி.மு.4 அல்லது கி.மு.5 எனக் கருதுகிறார்.''[10] எனினும் ஆய்வாளர்களுக்குள் இதில் ஒருமித்த கருத்தொற்றுமை இல்லை.

இப்புராணங்கள் குறித்து ''புராணங்கள், பழமையான மற்றும் இடைக்கால இந்துக்களின் சமயம், தத்துவம், வரலாறு, சமூகம், அரசியல் இவற்றின் கலைக்களஞ்சியங்களாக விளங்குகின்றன''[11] என்பர் பர்சிசுடர்.

## தமிழில் புராணங்கள்

புராணம் என்பது வட சொல்லாயினும் அது தமிழில் இரட்டைக் காப்பிய காலத்திலேயே தோன்றி விட்டது.

**''காதற் கொண்டு கடல்வணன் புராணம்**
**ஓதினான் நாரணன் காப்பு என்று உரைத்தனன்''**[12]

என மணிமேகலையில் விட்ணுபுராணம் பற்றிய குறிப்பைக் காணலாம்.

**''பொருளன் புனிதன் புராணன் புலவன்''**[13]

**''புலவன் தீர்த்தன் புண்ணியன் புராணன்''**[14]

**''அசீவகநூல் அறிந்த புராணனை''**[15]

என்னும் அடிகளின் வழி புராணம், புராணன் எனும் சொற்கள் தமிழில் தொடர்ந்து வந்துள்ளதை அறியமுடிகிறது.

தமிழில் புராணத் தோற்றத்தை மு.அருணாசலம், ‘புராணம் என்பது பழங்கதை. இவ்வாறு பழங்கதையை உயர்த்திச் சொல்லி அதை சமயத்துறையில் மதிக்க வேண்டிய ஒரு பெருங்காவியச் சரித்திரமாக ஆக்கினோர் சைனர் என்று கருதவேண்டியிருக்கிறது. இவர்கள் ஆதியில் அந்நிய நாட்டிலிருந்து வந்தவர்கள் ஆதலாலும் தமிழுக்குப் புறம்பான ஒரு சமயத்தையும் நாகரிகத்தையும் தமிழ்நாட்டில் புகுத்த முற்பட்டவர்களாதலாலும் இவ்வாறு இவர்கள் தங்களுக்கென்று பழம்பெரும் சரித்திரப்பழமையும் தேடிக் குறிப்பிடும் முயற்சி மேற்கொண்டது இயற்கையே. சீவகசிந்தாமணியே ஒரு புராணம் என்பது நினைவு கூறத்தக்கது. புராணம் என்ற பெயரோடு நாம் அறிவன புராண சாகரமும் சாந்தி புராணமும் ஆகும். புராண சாகரம் வெண்பாவினால் ஆனது; காலம் 10-ஆம் நூற்றாண்டு என்று யாப்பருங்கலவிருத்தியால் அறிகிறோம். சாந்தபுராணமும் சாந்திநாதர் என்ற பதினாறாவது சைன தீர்த்தங்கரர் வரலாற்றைக் கூறும் ஒரு விரிந்த புராணம் ஆகும். இதன் பாடல்கள் சில புறத்திரட்டுள் தொகுக்கப் பெற்றுள்ளன. இதன் காலமும் பத்தாம் நூற்றாண்டாகலாம். இவ்விரு நூல்களும் இன்று இல்லை”[16] என்று விளக்குவர்.

வடமொழியில் புராணம் என்பது ஒரு தனி இலக்கியவகையாகக் கொள்ளப்பட்டாலும் தமிழில் காப்பியமாகவே கருதப்படலாம் என்பது அவர் கருத்து “தமிழ் மரபின் படி இவையாவும் (இதிகாசம், புராணம், காவியம்) தொடர்நிலைச் செய்யுளாதலின் யாவும் காப்பியம் எனப்படும். அறம், பொருள், இன்பம், வீடு நான்கையும் கூறுவது பெருங்காப்பியம். இந்நான்கில் குறைபாடுடையது காப்பியம். புராணமும் காப்பியமாகக் கருதப் பெறுகிறது”[17]

புராணம் என்பது குறித்து,

**“அறம் பொருள் இன்பம் வீடு அவற்றின் மேலாம் அவ்**
**அறம் முதல் நான்கினும் ஆக்கப்பெறுவது**
**காப்பியம் புராணமாய்க் கருதப் பெறுமே”**[18]

என்று பிரபந்த மரபியலும்

**“அறையும் இதில்சில குறைபாடெனினும் குன்றாது**
**அறம் பொருள் இன்பம் வீட்டில் குறைபாடாகப்**
**பெறுவது காப்பியம் ஆகும்; புராணம் ஆகும்”**[19]

என்று சிதம்பரப் பாட்டியலும்

**“வரை, நதி, நகர், நாடு ஆதியின் வளமும்**
**தெய்வச் செயலும், திறமிகு போரும்**

**செங்கோற் சிறப்பும்; சீர்யோர் தன்மையும்**

**அனையன போலும் அமைவு எலாம் பெருக்கிக்**

**கழறுதல் புராணமும் காவ்யமும் ஆமே"[20]**

என்று அறுவகை இலக்கணமும் குறிப்பிடும்.

**புராண வகைகள்**

தமிழில் புராணங்கள் கடவுளின் பராக்கிரமங்களைக் கூறுதல், தல மகிமையைக் கூறுதல், அடியவர் பெருமையைப் பாடுதல், சாதிப்பெருமையைச் சாற்றுதல், தலைவர்களின் வரலாற்றைப் பேசுதல் என்ற வகையில் அமைந்துள்ளன.

"இந்து, இசுலாம், கிருத்தவம், சைனம் என்று அனைத்து இந்தியச் சமயங்களின் புராண இலக்கியங்களும் தமிழில் உள்ளன."[21]

இவற்றிற்கு எடுத்துக்காட்டாக கந்தபுராணம், கோயிற்புராணம், திருத்தொண்டர் புராணம், தேவாங்கபுராணம், பாகவதம், நாகூர்புராணம், தேம்பாவணி, ஸ்ரீபுராணம் ஆகியவற்றைக் கூற இயலும். பௌத்த சமயத்தைச் சார்ந்த புராணம் எதுவும் தமிழில் இல்லை.

பிறமொழித் தழுவல் இன்றி, தமிழில் புராணம் என்னும் பெயருடன் தோன்றிய முதல் நூல் சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணம். இது முழுக்க முழுக்கத் தமிழ் முதல்நூல். பிறமொழியின் மொழி பெயர்ப்போ தழுவலோ அன்று. அதுமட்டுமன்றி இப்பெரியபுராணம் வடமொழியில் கூறப்படும் எந்தவகையான புராண வரையறைக்குள்ளும் கட்டுப்படாதத் தனித்தன்மை வாய்ந்த இலக்கியம் ஆகும்.

**தலபுராணம் - அறிமுகம்**

இறைவன் கோயில் கொண்டுள்ள ஒரு தலத்தின் மூர்த்தி, தல, தீர்த்தப் பெருமைகளையும் அங்கு வழிபட்டுப் பேறுபெற்றோரின் வரலாறுகளையும் தொகுத்துக் கூறுவது தலபுராணம் எனப்படும்.

**"மைக்கவின் மேனி மாயன் மருவிய தலங்கள் தம்மில்**

**மிக்கசீர்த் தலம், தீர்த்தங்கள், மூர்த்திசீர் விளம்பு கென்றார்"[22]**

என்று காரைமடைத் தலபுராணம் குறிப்பிடுகிறது.

தமிழில் தலம் என்னும் சொல்லை முதன் முதலாக,

**"இத்தலம் நீங்கேன் இளங்கொடி யானும்"[23]**

என்று மணிமேகலை குறிப்பிடுகிறது.

பல ஊர்களுக்கு அங்குள்ள ஆலயங்களாலேயே பெருமை சேர்வதால் தலம் என்பது சிறப்பாகக் கோயிலையே குறிக்கத் தொடங்கியது. இப்பொழுது தலம் என்றால் ஆலயமே நினைவுக்கு வரும். தலயாத்திரை, தலபுராணம் போல்வனயாவும் ஓர் ஊரிலுள்ள கோயிலோடு தொடர்புடையனவே ஆகும். எனவே தலபுராணம் என்றால் குறிப்பிட்ட ஓர் ஊரில் உள்ள குறிப்பிட்ட ஒரு கோயிலின் பழைய வரலாறு என்றே பொருள்படும். புராணம் பழமைக்கும் பழமையாய்ப் புதுமைக்கும் புதுமையாய் உள்ளது என்னும் கருத்து புராணங்களின் பிறவகைகளைவிடத் தல புராணங்களுக்கே மிகப் பொருத்தமானது எனலாம். இன்றும் ஓர் ஊர்க் கோயிலைப் பற்றிப் பேசும்போது அதைப் பற்றிய தலப்புராணச் செய்திகள் தவறாமல் இடம் பெறுகின்றன.

### தலபுராணங்களின் தோற்றம்

குறிப்பிட்ட ஒரு தலத்தின் சிறப்பைக் கூறும் தலபுராணப் பண்பு பழைய இலக்கியங் களிலேயே இடம் பெற்றிருக்கிறது.

திருமுருகாற்றுப்படையில் முருகப்பெருமானுக்குரிய திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், பழமுதிர்ச்சோலை ஆகிய ஐந்து தலங்களும் அனைத்து மலைகளையும் உள்ளடக்கிய குன்றுதோறாடலும் அறுபடை வீடுகளாகக் கருதப்படுகிறது. பரிபாடலில் முருகப்பெருமானின் திருப்பரங்குன்றமும் (6,8,9,11,17,19,21 ஆகிய பாடல்களில்) திருமாலுக்குரிய சோலைமலை (15), இருந்தையூர் (திரட்டு 1), குளவாய் (திரட்டு 1) ஆகிய தலங்களும் இடம் பெற்றுள்ளன.

சிலப்பதிகாரத்திலும் உக்கிரகுமார பாண்டியன் கடல்வற்றும் படி சிவபெருமான் அளித்த வேலாயுதத்தைச் செலுத்தியது. இந்திரனுடைய ஆரத்தைப் பாண்டியன் தன் மார்பில் அணிந்து கொண்டது, இந்திரன் முடிமேல் வளையைச் செலுத்தியது ஆகிய மதுரைத்தலச் செய்திகள் முறையே,

> **“வடிவேல் எறிந்த வான்பகை பொறாது”**[24]
>
> **“செங்கண் ஆயிரத்தோன் திறல் விளக்கு ஆரம்**
> **பொங்கொளி மார்பில் பூண்டோன்”**[25]
>
> **“வச்சிரத் தடக்கை அமரர் கோமான்**
> **உச்சிப் பொன்முடி ஒளிவளை உடைத்தகை”**[26]

என இடம் பெற்றுள்ளன.

மேலும் திருமாலுக்குரிய அழகர் மலையில் உள்ள மூன்று தீர்த்தங்களைப் பற்றியும் அவற்றில் நீராடுபவர்கள் பெறக்கூடிய பயன்கள் பற்றியும்

**"திருமால் குன்றத்துச் செல்குவிராயின்..**
**புண்ணிய சரவணன் பலகாரணியோடு**
**இட்ட சித்தி எனும்பெயர்போகி.. மூன்றுஉள;**
**..... விழுநூல் எய்துவிர் .... பழம் பிறப்பு எய்துவிர்**
**....இட்ட சித்தி எய்துவிர் நீரே"[27]**

என்னும் சிலப்பதிகார அடிகளும் தலபுராணத்தின் ஒரு கூறாகக் கருதத்தக்கது.

இவ்வாறெல்லாம் பழந்தமிழ் இலக்கியங்களிலேயே தல புராணக்கூறுகள் இருந்த போதிலும் தமிழ் இலக்கியத்தில் தலபுராணம் என்று ஒரு இலக்கிய வகை தோன்றி வளர்ந்ததற்கு முதன்மையான காரணமாக ஆழ்வார், நாயன்மார்களின் தலப் பதிகங்கள் அமைந்தன. இவற்றின் வளர்ச்சி தலபுராண இலக்கியமாக உருவாயிற்று"[28] என்பர் ச.வே.சுப்பிரமணியம்.

"முதலில் புராணங்கள் இட்டதெய்வங்களின் திருவிளையாடல்களை அழகிய கதைகளாக்கிக் கூறின. தேசத்திலே சிறந்த காவியங்களும் பண்ணிறைந்த தேவாரங்களும் பிரபந்தங்களும் புராணக் கதைகளையே தமக்குப் பொருளாகக் கொண்டு மலர்ந்தன. பொதுவாக இட்ட தெய்வங்களுக்கான புராணங்கள் தோன்றியப் பின்னரே மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பனவற்றின் சிறப்பைக் காட்டுவதற்காகத் தலபுராணங்கள் தோன்றின என்பாரின் கூற்று மிகவும் பொருத்தமுடையதாகும்"[29] என்பார் வே.இரா.மாதவன்.

தமிழில் முதலில் தோன்றியனவாகக் கருதப்படும் தல புராணங்கள் இரண்டும் இப்போது கிடைக்கவில்லை.

"முதற்குலோத்துங்க சோழன் காலத்தில் வீரைத்தலைவன் பரசமய கோளரி என்பவன் இருந்து செய்த நூல்களுள் திருப்பாதிரிப்புலியூர் தலபுராணங்கள் இரண்டு. அட்டதச புராணம், கன்னிவன புராணம் என்பன. இவை சாசன வாயிலாக அறிகிறோமேயன்றி, நூல்கள் கிடைக்கவில்லை. இவற்றின் காலம் கி.பி. 12-ஆம் நூற்றாண்டின் தொடக்கம்"[30] என்கிறார் மு.அருணாசலம்.

இப்பொழுது நமக்குக் கிடைக்கும் தமிழ்த் தலபுராணங்களுள் காலத்தால் முற்பட்டது வேம்பத்தூர் (செல்லிநகர்) பெரும்பற்றப் புலியூர் நம்பியால் இயற்றப்பட்ட திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம் ஆகும். இது கி.பி. 13-ஆம்

நூற்றாண்டைச் சேர்ந்த நூல். இதனையடுத்து கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் உமாபதி சிவாச்சாரியாரின் கோயிற்புராணம் என்னும் சிதம்பரப் புராணம் தோன்றியது. தலப்பெயர் பெற்ற முதல் தலபுராணம் இதுவே ஆகும். இதுவே பின்னால் வந்த தலபுராணங்களுக்கு சிறந்த வழிகாட்டியாக விளங்குகிறது.

கி.பி. 14-ஆம் நூற்றாண்டிலிருந்து இவ்வகைப்புராணங்கள் (தல) இயற்றப்பெற்ற போதிலும் 19-ஆம் நூற்றாண்டிலே இவை பெருவாரியாகத் தோன்றின. பல ஊர்களுக்கும் நூதனமாகப் புராணங்கள் ஏற்பட்டன. இவற்றில் காவியரசமும் ஒரு சிறிது இருந்தமையினால் சமயப் பற்றுள்ள மக்களும் பிறரும் இவற்றைக் கற்று வைத்தனர்.''[31]

தமிழ் தலபுராணங்களுள் எண்ணிக்கையில் மிக மிகுதியானவை சைவத் தலபுராணங்களே. தமிழில் இதுவரை ஏறக்குறைய நானூற்றுக்கும் மேற்பட்ட தலபுராணங்கள் தோன்றியுள்ளன. மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை ஒருவரே 22 தலபுராணங்களை இயற்றியுள்ளார். இப்பொழுதும் தலபுராணங்கள் தோன்றிக்கொண்டுதான் இருக்கின்றன.

இவற்றுள் பெரும் பாலானவற்றிற்கு, ''எல்லாப் புராணங்களும் ஒரே நெறியிலே சென்று அறிவைச் சலிப்புறச் செய்தமையாலும் இவற்றில் காணப்பட்ட காவியரசம் அதிகச் சிறப்பின்றி இருந்தமையாலும் இவைகள் நாளடைவில் மதிப்பிழந்து போயின''[32] என்னும் வையாபுரிப்பிள்ளையின் கருத்துப் பொருந்துமாயினும் சில நூல்கள் சமயச்சிறப்பாலும் இலக்கியத் தரத்தாலும் சுவையாலும் தலைசிறந்து விளங்குகின்றன எனலாம்.

தமிழ்த் தலபுராணங்களைப் பற்றிக் கலாநிதி சுப்பிரமணியனின், ''தலபுராணம், தலமான்மியம் ஆகிய வகைகளில் உருவாகும் இலக்கிய ஆக்கங்கள் குறித்த ஒரு தலத்தின் இறைவன் புகழை மையப்படுத்தி அதன் சூழலிலுள்ள மக்களின் பண்பாட்டையும் வரலாற்றையும் விரித்துரைப்பதை நோக்கமாகக் கொண்டவையாகும். தமிழகத்திலே சோழப் பேரரசின் வீழ்ச்சிக்குப்பின் (கி.பி.13-ஆம் நூற்றாண்டின்பின்) தமிழகத்தை இந்துக்களல்லாதோரும் தமிழரல்லாதோரும் அடிமைப்படுத்த முயன்று நின்ற காலப்பகுதி அது. அச்சூழ்நிலையில் தமிழக இந்துக்கள் தத்தம் இருப்பையும் பண்பாட்டு உணர்வுகளையும் பிரதேச நிலைகளில் ஊர்கள் தோறும் பேணிக்கொள்ள முற்பட்ட நிலையில் அந்நோக்கை நிறைவு செய்யத் துணை நின்ற முக்கிய இலக்கிய வகை இது. வடமொழி மரபுசார் கதைமூலங்களுடன் தமிழகத்தின் புவிச் சூழலை இணைக்கும் உத்தி தலபுராணங்களில் தொழிற்பட்டது''[33] என்னும் கருத்து தலபுராணம் தோன்றுவதற்குரிய சூழலை நன்கு விளக்கும்.

## திருவிளையாடல் புராணத்தின் சிறப்பு

இமயம் முதல் குமரி வரையுள்ள அனைத்துத் தலங்களும் மூர்த்தி, தீர்த்தம், விருட்சம் என்பனவற்றால் சிறப்புப் பெற்றவனவாய் உள்ளன. இதனை,

> "மூர்த்தி தலம் தீர்த்தம் முறையால் தொடங்கினார்க்கு ஓர்
> வார்த்தை சொலக் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"[34]

என்கிறார் தாயுமானவர். மூர்த்தியின் சிறப்பினை அவ்வத்தலங்களில் வந்து வழிபட்டோர் அடைந்த பயன்கள், தீர்த்தச் சிறப்பினை அவ்வத் தீர்த்தங்களின் மூழ்கி வழிபட்டோரை விட்டு நீங்கிய பாவங்களாலும் விருட்சத்தின் சிறப்பினை அம்மர நிழல்களில் இருந்து அதன் பயனை அடைந்ததால் நீங்கிய பிணிகள் முதலியவற்றாலும் அறிய இயலும். ஒரு தலத்தின் பெருமைகளை ஒன்றாகத் தொகுத்து ஒரு தலபுராணமாகப் பாடுவதால் அந்த இடத்தின் பெருமைகள் அனைத்து வகையினரையும் சென்றடைகின்றன. இதன் காரணமாகவே முன்னோர்கள் தலங்கள் தோறும் தலபுராணங்கள் எழுதி வைத்துள்ளனர்.

அவ்வகையில் திருவிளையாடற்புராணம் மதுரை நகரத்தின் சிறப்பைப் பற்றிக் கூறுவது. இறைவன் தோன்றியிருக்கின்ற தலங்கள் பலவற்றிற்கும் தலபுராணங்கள் உண்டு. அவை எல்லாம் அந்தந்த தலத்தின் பெயராலேயே விளங்கப்பெறுகின்றன. அவ்வாறன்றி, திரு ஆலவாய் பெருமான் நிகழ்த்திய அறுபத்துநான்கு திருவிளையாடல்கள் பற்றி, திருவிளையாடல் புராணம் என்ற பெயரால் இப்புராணம் விளங்குகிறது. இதுவே இப்புராணத்தின் சிறப்பாகும். அனைத்துப் புராணத்திலும் இப்புராணத்தைத் தனித்துக் காட்டி, சிறப்புடையதாகச் செய்வதற்கு இதுவே காரணமாகும். மதுரைத்தலத்தில், மூர்த்தி, தலம், தீர்த்தம் சிறப்புடையதாகும். சிவபெருமான் தமிழ்ச் சங்கத்துத் தலைமைப் புலவராகியதுடன் இறையனார் அகப்பொருள் என்ற நூலின் ஆசிரியராகியுள்ளார். இத்துடன் தமிழ்ச் சங்கம் வைத்துத் தமிழ் மொழியை வளர்த்த மதுரைக்கு மேலும் பெருமை சேர்க்க வேண்டும் என்று கருதி மதுரையில் சிவபெருமான் திருவிளையாடல்களை நிகழ்த்தியதாகவும் தானே மதுரை மண்ணிற்கு மன்னராக வந்து பக்தர்களின் மனக்கவலைகளை போக்கினார் என்று கூறப்படுகிறது.

## மகாபுராணத்தில் திருவிளையாடல் புராணம்

பதினெட்டு மகாபுராணங்களில் காந்தபுராணம் மிகச் சிறந்ததாகும். இது ஆறு சங்கிதைகளைக் (தொகுதி) கொண்டது. அச்சங்கிதை ஒவ்வொன்றும் அவற்றைக் கூறியவர்களின் பெயர்களால் விளங்கும். சனக்குமார முனிவன் கூறிய சங்கிதை சனக்குமாரை சங்கிதை, சூதமுனிவன் கூறிய சங்கிதை சூத சங்கிதை, பிரமதேவன்

கூறிய சங்கிதை பிரம சங்கிதை, திருமால் கூறிய சங்கிதை விட்ணு சங்கிதை, சிவபெருமான் கூறிய சங்கிதை சங்கர சங்கிதை, சூரியன் கூறிய சங்கிதை சூரிய சங்கிதை என்று பெயர் பெறும்.

சிவபெருமான் சங்கர சங்கிதையை உமா தேவிக்குக் கூறினார். அப்போது அவர் மடியின் மேல் முருகப்பெருமான் அமர்ந்து கொண்டு கேட்டு அதனைப் பின்னர் தம்மை வழிபட்ட அகத்திய முனிவருக்குக் கூறினார். அன்றுமுதல் சங்கர சங்கிதை, அகத்திய சங்கிதை என்று பெயர் பெற்றது. அச்சங்கிதையில் கேட்டவுடன் வீடுபேறு அளிக்கும் சிறப்புடையது 'திருவாலவாய்' ஆகும். இது அகத்தியரால் பிறமுனிவர்களும் அறிந்து சொக்கலிங்கப் பெருமானை வழிபட்டு பேறு பெற்றமையைக் கூறுவதாகும். இப்புராணத்தை தமிழில் மொழிபெயர்த்தவர் பரஞ்சோதி முனிவர் ஆவார். சங்கர சங்கிதை என்னும் சிறந்த வடநூலில் உள்ள மதுரையின் பெருமைகளைத் தமிழ் மொழியில் திரட்டித் தந்தருள வேண்டும் என்று மதுரை மாநகரில் வாழும் பெரியோர்கள் கேட்டுக் கொள்ள, "இப்பிறவிலேயே பிறவிப்பயனை அடைந்தோம்" என்று நினைத்து தலவிசேடம், தீர்த்த விசேடம், மூர்த்தி விசேடம் என்ற மூன்றும் மதுரை சோமசுந்தரரின் திருவிளையாடல் அறுபத்து நான்கும் அருச்சனை புரிந்த செயல் ஒன்று சேர்த்து அறுபத்து எட்டினையும் படலங்களாக அமைத்து திருவிளையாடல்புராணம் என்ற தலபுராணத்தை பரஞ்சோதிமுனிவர் இயற்றியுள்ளார்.

## திருவிளையாடல் சொற்பொருள்

தமிழில் 'திரு' என்னும் சொல் பல்வேறு பொருள்களில் வழங்கப்படுகிறது. பொதுவாகத் 'திரு' என்னும் சொல் செல்வத்தையும் திருமகளையும் சுட்டும். அது பல பொருள் ஒரு சொல். அழகு, இலக்குமி, ஒளி, சிறப்பு, செல்வம், தெய்வத்தன்மை, நல்வினை, பொலிவு முதலியவற்றையும் குறிக்கும். திரு என்பதற்கு கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்"[35] என்று பொருள் தருகிறார் பேராசிரியர்.

'திரு' என்னும் சொல் தெய்வத்தன்மை வாய்ந்த நூல்களுக்கும் ஊர்ப் பெயர்களுக்கும் சிறப்படையாக, முன்னொட்டாகச் சேர்க்கப்படுகின்றது. திருக்குறள், திருக்கோவையார், திருத்தொண்டர் புராணம், திருமந்திரம், திருவருட்பா, திருவாசகம் முதலிய நூல்களுக்கும் திருக்குற்றாலம், திருநெல்வேலி, திருப்பரங்குன்றம், திருவாரூர், திருவாலவாய் முதலிய ஊர்களுக்கும் வரக் காண்கிறோம். இது போன்று இறைவன் விளையாடலும் அடைமொழி சேர்க்கப்பட்டு 'திருவிளையாடல்' எனப்படுகிறது.

‘விளையாட்டு’ என்ற சொல் ‘விருப்பம்’ என்ற பொருளில் ‘வில்’ என்ற வேர்ச் சொல்லில் இருந்து பிறந்தது”[36]

ஆடல், ஆடுதல், ஆடுகை என்பவை எல்லாம் ‘அசைவு’ என்றப் பொருளையே தருவன. உயிர்களின் இயக்கமே அசைவு ஆகும். இவ்வாடல் வெற்றிக்கு உரியது. பெருமைக்கு உரியது.

இளமைப் பருவமுடைய சிறுவர்கள் கூடி விளையாடுவதை நாம் விளையாட்டு என்கிறோம். மகிழ்ச்சி ஒன்றையே அடிப்படையாகக் கொண்டு செய்யும் ஆடலே விளையாடல் ஆகும். ஆடி மகிழாத உயிரினம் இல்லை. இத்தகைய சிறப்பு மிக்கது விளையாட்டு, “விளையாட்டென்பது யாருங்குளனும் காவுமாடிப் பதியிகந்து வருதல்”[37]எனப் பேராசிரியர் விளக்கம் தருகிறார். விளையாட்டின் முதல் பயன் இன்பம் ஆகும்.

**“செல்வம் புலனே புணர்வு விளையாட்டென்றும்**

**அல்லல் நீத்த உவகை நான்கே”[38]**

என்கிறார் தொல்காப்பியர்.

இறைவன் ஒரு நோக்கத்தோடு செய்த செயல்களை ‘விளையாட்டு’ என்று கூறுதல் தொன்று தொட்டு வழங்கிவரும் மரபாகும்.

‘விளையாடல்’ என்பது இறைவனின் அருள் விளையாட்டைக் குறிக்கிறது. இதனைக் கம்பர்,

**“உலகம் யாவையும் தாம்உள வாக்கலும்**
**நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா**
**அலகி லாவிளை யாட்டுடை யாரவர்**
**தலைவ ரன்னவர்க் கேசர ணாங்களே”[39]**

என்று குறிப்பிடுகிறார்.

**“சொன்னவித் தொழில்கள் என்ன காரணத் தோற்ற என்னின்**
**முனைவன் விளைாட் டென்று மொழிதலும் ஆமுயிர்க்கு**
**மன்னிய புத்திமுத்து வழங்கவும் அருளால் முன்னே**
**துன்னிய வரங்க ளெல்லாற் றுடைப்பதுஞ் சொல்லலாமே”[40]**

என்னும் சிவஞான சித்தியார் விருத்தமும் இறைவனுடைய முத்தொழில்கள் திருவிளையாடல்கள் என்ற குறிப்பிடுகின்றது.

இறைவன் விளையாடல்கள் மக்கள் விளையாட்டினின்று வேறுபாடு காணும் வகையில் 'திரு' சேர்க்கப்பட்டுத் திருவிளையாடல் எனப்பட்டது. இதனால் இறைவன் எந்தக் கோலத்தில் எழுந்தருளி எந்தச் செயலைச் செய்தாலும் அதைத் திருவிளையாட்டு என்று சொல்லும் வழக்கம் ஏற்பட்டது. ஆலவாய் சுந்தரர் செய்தருளிய செயல்களைக் கூறும் புராணத்திற்குத் 'திருவிளையாடற்புராணம்' என்ற பெயர் வழங்குகிறது.

## அறுபத்து நான்கு திருவிளையாடல்கள் என்பதற்கான நோக்கம்

திருவிளையாடல்களைச் சுட்டும் நூல்களில் திருவிளையாடல்களின் எண்ணிக்கை 64 என்று உள்ளது. கல்லாடம் இறைவன் நிகழ்த்திய திருவிளையாடல்களை 'எட்டெட்டு'[41] என்று வரையறை செய்துள்ளது,

அடுத்ததாக பெரும்பற்றப் புலியூர் நம்பியின் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணமும் 64 திருவிளையாடல்கள் எனச் சுட்டுகிறது. பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற் புராணமும் 64 திருவிளையாடல்களையே கூறுகிறது. சுந்தரபாண்டியம் முழுமையாகக் கிடைக்கப்பெறாத போதும் அதில் ஆசிரியர் அனதாரியப்பன் 64 திருவிளையாடல்களைக் கூறப்போவதாகக் கூறியுள்ளார். பின்னாளில் எழுந்த கடம்பவனப் புராணத்திலும் திருவிளையாடல்களின் எண்ணிக்கை 64 எனவுள்ளது.

இப்புராணங்களில் எல்லாம் கூறியுள்ள கதையில் செய்யுட்களின் அளவு கூடினும் குறையினும் அவை 64 கதைகளையே கூறியுள்ளன. மேலும் இப்புராணங்களில் சில கதைகளே வேறுபட்டிருப்பினும் அவை 64 என்ற எண்ணிக்கையில் மாறுபாடு கொள்ளவில்லை. இங்ஙனம் திருவிளையாடல்கதைகளைக் கூறும் நூல்கள் அனைத்தும் 64 என்ற எண்ணில் மட்டும் உறுதியாக இருந்ததற்கான காரணம் நம் மக்களிடையே தொன்றுதொட்டு நிலவிவரும் எண்கள் பற்றிய நம்பிக்கையே ஆகும். இக்கருத்தினைப் பழைய தமிழ் இலக்கிய நூல்களாகிய புறநானூறு, இனியவைநாற்பது, ஐந்திணை எழுபது, திணைமாலை நூற்றைம்பது என்ற பெயர்கள் புலப்படுத்தும். இறைவனின் படைப்பு சார்ந்த பொருட்களை நான்கு என்ற எண்ணின் அடிப்படையில் கூறுதல் மரபு. நான்கு வேதங்களின் தலைவன் இறைவன் என்பதனை நினைவூட்டுவதே நான்கு என்ற எண்ணை அடிப்படையாகக் கொண்டதாகும். 8 திக்குகள், 16 உபச்சாரங்கள், 28 ஆகமங்கள், 32 இலட்சணங்கள், 48 நாட்களைக்

கொண்ட மண்டலம், 56 தேசராஜாக்கள் என்பவை நான்கின் மடங்காக காண்பவற்றுள் சில.”[42]

இந்த அடிப்படையில் 64 என்ற எண் பற்றிய சிறப்பை நோக்கும் போது சக்திபீடங்கள் 64, சிவ மகாபுராணம் சுட்டும் சிவபெருமான் வடிவங்கள் 64, சிவகணங்கள் 64, ஆயகலைகளில் அகம் தொடர்பான கலைகள், புறம் தொடர்பான கலைகள் 64 என்று 64 என்ற எண்ணிற்கான சிறப்புக்களாக அமைந்துள்ளன. இதன் அடிப்படையில் சைவப் புராணமாகிய திருவிளையாடல் புராணம் திருவிளையாடல்களை 64 என்று வகைப்படுத்தியிருக்கலாம்.

திருவிளையாடல்களை அறுபத்து நான்கு என்று குறிப்பிட்டுள்ளமைக்கு மக்களிடையே நிலவிய எண்கள் பற்றி நம்பிக்கையே அடிப்படையாகும்.

**தமிழ் இலக்கிய வரலாற்றில் பரஞ்சோதி என்ற பெயருடைய பலர் உள்ளனர்.**
1. அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவர் பரஞ்சோதி. கி.பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். பல்லவர் காலத்தில் வாதாபிக்குப் படை நடத்திச் சென்று வெற்றிவாகை சூடியவர். பின்னாளில் சிறுத்தொண்டர் என்ற பெயரில் நாயன்மாராக வாழ்ந்தவர்.

2. மற்றொருவர் அகச்சந்தானக் குரவர்களுள் ஒருவர். இவர் காலம் கி.பி. பதின்மூன்றாம் நுற்றாண்டென்பர். அருள்நந்தி சிவாசாரியருக்கும் உமாபதி சிவாசாரியருக்கும் உபதேசம் செய்தவர் இவர்.

3. சிதம்பரபுராணம் பாடிய புராணத் திருமலை நாதரின் புதல்வரும் பரஞ்சோதியார். சிதம்பர பாட்டியல் என்ற நூலை இயற்றியவர். தத்துவஞான பிரகாசரின் மாணாக்கர். இவரது காலம் கி.பி. பதினாறாம் நூற்றாண்டு ஆகும்.

திருவிளையாடற் புராணத்தை இயற்றிய பரஞ்சோதி முனிவர் மேற்சுட்டியவர்களிலிருந்து வேறுபட்டவர்.

**பரஞ்சோதி முனிவர் வரலாறு**

திருவிளையாடற்புராணம் என்னும் இந்நூலை இயற்றியவர் பரஞ்சோதி முனிவர் ஆவார். இவர் தமிழ் நாட்டில் தலைசிறந்த காவிரி பாயும் சோழநாட்டில் உள்ள திருமறைக்காட்டில் சைவ வேளாளமரபில் மீனாட்சிசுந்தர தேசிகர் என்பவருக்கு மகனாகப் பிறந்தார். இளம் பருவத்திலேயே தென்மொழி, வடமொழி, கற்றுச் சிறந்த புலமையுடையவராய் விளங்கினார். சிவாகமங்களையும் அவற்றின் சாரமாகிய சித்தாந்த சாத்திரங்களையும் கற்றார்.

திருவாரூர், திருவானைக்கா, திருவண்ணாமலை, திருக்காளத்தி, திருத்தில்லை முதலிய பகுதிகட்குச் சென்று சிவபெருமானை வழிபட்டு வரும்போது திருவாலவாய்

என்னும் மதுரைப்பகுதிக்கு வந்தடைந்தார். அது மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றாலும் சிறப்புற்று விளங்குவது என்பதையும் சிவபெருமான் நிகழ்த்திய அறுபத்து நான்கு திருவிளையாடல்களை உடையது என்பதையும் இறையனார் முதலிய சங்கப்புலவர் கூடித் தமிழாய்ந்த பெருமையுடையது என்பதையும் அறிந்து மீனாட்சியையும் சிவபெருமானையும் வழிபட்டு அங்கேயே தங்கினார்.

அவ்வாறு தங்கிய காலத்தில் அந்நகர மக்கள் பலரும் பரஞ்சோதி முனிவரைக் கண்டு பணிந்து சிவனின் திருவிளையாடல்கள் அறுபத்து நான்கினையும் தமிழில் இயற்ற வேண்டும் என்று வேண்டினர். மதுரைக்கு வடமொழியில் உள்ள தலபுராணம் ‘ஆலாஸ்ய மான்மியம்’ என்றே பெயர் சொல்லப்படுகின்றது. அந்த ஆலாஸ்ய மான்மியத்தின் மொழிபெயர்ப்பே திருவிளையாடல் புராணம் ஆகும். ‘ஆலாசியம் என்றால் மதுரை, மான்மியம் என்றால் பெருமை’ என்று பொருள். ஒரு நாள் அங்கயற்கண்ணியம்மை பரஞ்சோதிமுனிவரின் கனவில் தோன்றி ‘‘இறைவன் திருவிளையாடலை இன்னே பாடுக’’ எனக் கூறி மறைந்தார். சக்தியின் ஆணையால் பாடத் தொடங்கியதால் ‘‘சத்தியாய்ச் சிவமாகி’’ எனத் தொடங்கி பாடினார். இந்நூலினை சிவபெருமான் திருக்கோயில் முன்பு உள்ள ஆறுகாற் பீடத்தமர்ந்து வடமொழி, தென்மொழிப் புலவர்கள் முன் அரங்கேற்றினார். இதனை,

**‘‘அறுகால் பீடத்து உயர்மால் ஆழிகடைந்து,**
**அமுதைஅரங்கு ஏற்று மாபோல்,**
**அறுகால்பேரு இசையாரும் கூடல்மான்**
**மியத்தை, அருள் தமிழாற்பாடி,**
**அறுகால்பீடு உயர்முடியார், சொக்கேசன்**
**சந்நிதியில் அமரர் சூழும்**
**அறுகால் பீடத்து இருந்து, பரஞ்சோதி**
**முனிவன், அரங்கு ஏற்றினானே’’ (திருவி.பு.,31)**

என்று திருவிளையாடல் புராணப் பாயிரம் குறிப்பிடுகிறது.

அரங்கேற்றுவது என்பது, தான் பாடிய நூலை அரங்கின் முன் அமர்ந்த புலவர்களுக்குக் கூறி, அவர்கள் ஏற்கும்படி செய்தல் ஆகும். இது தொன்றுதொட்டு வரும் வழக்கமென்பதை தொல்காப்பியம் ‘‘நிலத்தரு திருவிற்பாண்டியன் அவையத்து அரங்கேறியது’’ என்பதனால் அறியலாம். ‘‘அறுகால்பீடத்து’’ என்னும் இச்செய்யுளில் ஆக்கியோன் பெயர், நுதலிய பொருள், களன் முதலியவை கூறப்பட்டுள்ளது.

திருவிளையாடற் புராணத்தைத் தவிர பரஞ்சோதிமுனிவர் மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி, திருவிளையாடல் போற்றிக் கலிவெண்பா முதலிய நூல்களும் இயற்றியுள்ளார்.

பரஞ்சோதி முனிவர் இலக்கண, இலக்கியத்தில் மட்டுமன்றி, கலை நுணுக்கத்திலும் சிறந்தவர். மாணிக்கம் விற்றபடலத்தில் நவமணிகளின் இலக்கணங்களையும் கால்மாறி ஆடிய படலத்தில் நடனக்கலை பற்றியும் விறகு விற்ற படலத்தில் இசை நுணுக்கங்களையும் நரியைப்பரியாக்கிய படலத்தில் குதிரையின் இலக்கணங்களையும் விரிவாகக் கூறுகிறார்.

வடமொழியில் காந்த மகாபுராணத்தில் உள்ள ஈச சங்கிதையில் ஆலவாய் மான்மியம் அமைந்திருக்கிறது என்று பரஞ்சோதி முனிவரே,

**“அண்ணல்பால் தெளிந்த நந்தி**
**அடிகள் பால் சனற்கு மாரன்**
**உள்நிறை அன்பின் ஆய்ந்து**
**வியாதனுக்கு உணர்த்த அந்தப்**
**புண்ணிய முனிவன் சூதற்கு**
**ஓதிய புராணம் மூஆறு**
**எண்ணிய இவற்றுள் காந்தத்து**
**ஈசசங் கதையின் மாதோ”** (திருவி.பு.,24)

என்று பாயிரத்தில் குறிப்பிடுகிறார். அங்கயற் கண்ணியின் அருளுக்குத் தாம் பாத்திரமானதை,

**“இரும்பு மனம் குழைத்தென்னை எடுத்தாண்ட**
**அங்கயற்கண்ணி எம்பிராட்டி”** (திருவி.பு.,5)

**“எம் கருணைப் பெருமாட்டி”** (திருவி.பு.,557)

**‘‘யாவையும் ஈன்ற எம்பிராட்டி”** (திருவி.பு.,581)

**“ஆதி எம்பரை”** (திருவி.பு.,589)

**“வள்ளைவார் குழைஎம் அன்னை”** (திருவி.பு.,616)

**“எங்கள் பிராட்டி”** (திருவி.பு.,635)

**“மாசறுத் தெமையா னந்த வாரிநீர் ஆட்டி பண்டைத்**

தேசுகு விளக்கவல்ல சிவபரம் பரை" (திருவி.பு.,753)

என்று உரைப்பதன் வழி அறிய இயலும்.

### பரஞ்சோதி முனிவர் காலம்

ஆசிரியர் பரஞ்சோதி முனிவரின் காலம் பற்றிப் பல்வேறு கருத்துக்கள் தமிழ் இலக்கிய வரலாற்றில் நிலவுகின்றன. தமிழ் இலக்கிய வரலாற்று நூலாசிரியர்கள், திருவிளையாடலின் ஆசிரியர் பரஞ்சோதி முனிவரைப் பற்றிக் கூறும் கருத்துகள் தக்க சான்றாதாரங்களின் துணை கொண்டு நிறுவப்பட்டனவல்ல என்பதும் குறிப்பிடத்தக்கதொன்றாகும்.

தமிழ் இலக்கிய வரலாறு எழுதிய விமலானந்தம், "பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணம் 16-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பிறந்தது. பாண்டியர் பெருமை பேசுவது"[43] என்கிறார்.

"திருவிளையாடற்புராணம் இயற்றிய பரஞ்சோதிமுனிவர் திருமலைநாயக்கர் காலத்தவர். இந்நூல் எழுதப்பட்ட வரலாறு பலவாறாகக் கூறப்படுகின்றது. பலாவின் சுவை போன்ற இனிய தனித்தனியான, முழுச்சொற்கள் சேர்க்கப்பட்ட செய்யுள்களால் ஆனது இந்நூல். இவர் போற்றிக் கலிவெண்பா, மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதி ஆகிய நூல்களையும் பாடியுள்ளார்."[44]

நூற்றாண்டு வாரியாகத் தமிழ் இலக்கிய வரலாற்றை விரிவாக எழுதி வெளியிட்ட மு.அருணாசலம், "பரஞ்சோதி, பரஞ்சோதி மாமுனிவர், பரஞ்சோதி, பரஞ்சோதி முனிவர் என்பவர்கள் முறையே கி.பி.ஏழு, பன்னிரெண்டு, பதினாறு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில் வாழ்ந்ததாகக் கூறுகின்றார்."[45] இவரின் கூற்றுப்படி பரஞ்சோதிமுனிவரின் காலம் கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டு ஆகும்.

தமிழில் தல புராணங்கள் எழுதியிருக்கும் டாக்டர் வே.இரா.மாதவன் தலபுராண நூலாசிரியர்கள் வரிசையில் பரஞ்சோதிமுனிவர் 18-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர். இவர் சோழ நாட்டு வேதாரண்யத்தைச் சேர்ந்த சைவவேளாளர். திருவிளையாடற் புராணம் மற்றும் வேதாரணியப் புராணம் இயற்றியவர். திருத்துறைப் பூண்டிக்குக் கிழக்கே குறுக்கையென்னும் ஊரினர். திருவிளையாடற் புராணத்திற்காக மானியமும் பெற்றவர்"[46] என்கிறார்.

தமிழில் கோயில் புராணங்களைப் பற்றி எழுதியிருக்கும் மேனாட்டு ஆசிரியர் டேவிட் டீன் சுல்மேன், "TAMIL TEMPLE MYTHS' என்ற நூலில் உள்ள முதல் பின்னிணைப்பில் தமிழில் சிறந்து விளங்கிய முதன்மைத் தலபுராண நூலாசிரியர்களின்

கால நிரலினைக் குறிக்கின்றார். அதில் “கி.பி.12-ஆம் நூற்றாண்டினரானத் திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராண ஆசிரியர் பெரும்பற்றப்புலியூர் நம்பியிலிருந்து கி.பி.19-ஆம் நூற்றாண்டினரான மீனாட்சி சுந்தரம் பிள்ளை ஈராக 32 ஆசிரியர்களையும் அவர்கள் இயற்றிய நூல்களையும் நூற்றாண்டு வாரியாகக் குறிக்கின்றார். இதில் கி.பி.17-ஆம் நூற்றாண்டினைச் சேர்ந்தவர்களாகப் பன்னிரெண்டு ஆசிரியர்களைக் குறிப்பிடும் இவர் அவ்வரிசையின் தொடக்கத்திலேயே பரஞ்சோதி முனிவரைக் குறிப்பிடுகின்றார். எனினும் அவர் பெயருக்குப்பின்னால் எவ்வாசிரியருக்கும் இடா வினாக்குறியை அமைத்துத் தடுமாறியுள்ளதும் கருதத்தக்க ஒன்றாகும்.”[47]

பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற் புராணக்காலம் பி.பி.17-ஆம் நூற்றாண்டு எனத் தெ.பொமீ”[48] கருதுகின்றார்.

கி.பி.17-ஆம் நூற்றாண்டு என்பது பெரும்பான்மையினரின் கருத்தாகும். எனவே பரஞ்சோதி முனிவர் காலம் கி.பி.பதினேழாம் நூற்றாண்டு என்று கருதுவதே பொருத்தமுடையதாகும்.

### திருவிளையாடற்புராண நூல் அமைப்பு

பரஞ்சோதியார், திருவிளையாடல் புராணத்தை மூன்று பெரும் பிரிவுகளாக அமைத்துள்ளார். அவை மதுரைக்காண்டம், கூடல்காண்டம், திருவாலவாய்க் காண்டம் என்பனவாகும். ஒவ்வொரு காண்டமும் ‘படலம்’ என்னும் சிறு பிரிவுகளைக் கொண்டுள்ளது. மதுரைக் காண்டம் பதினெட்டுப் படலங்களையும் கூடற்காண்டம் முப்பது படலங்களையும் திருவாலவாய்க் காண்டம் பதினாறு படலங்களையும் கொண்டுள்ளது.

இப்புராணத்தில் அறுபத்துநான்கு கதைகளோடு முதற்காண்டத்தின் தொடக்கத்தில் கடவுள் வாழ்த்து, பாயிரம், அவையடக்கம், நாட்டுச் சிறப்பு, கயிலாயச் சிறப்பு, புராணவரலாறு, தலவிசேடம், தீர்த்த விசேடம், மூர்த்தி விசேடம், பதிகம் என்னும் பகுதிகளும் இறுதிக் காண்டத்தின் இறுதியில் அருச்சனைப்படலம் என்னும் பகுதியும் உள்ளன. இந்நூலிலுள்ள மொத்தப் பாடல்களின் எண்ணிக்கை 3363ஆகும்.

### மதுரைக்காண்டம்

நூல் தொடக்கத்தில் பரஞ்சோதியார் தம் நூலைக் காப்புச் செய்யுளோடு ‘சத்தியாய்’ எனத் தொடங்கி சக்திக்கு முதலிடம் கொடுக்கின்றார். காப்பியங்களில் நாட்டு வருணனையும் நகர வருணனையும் இடம் பெறுதல் போன்று இப்புராணத்தில்

முதலில் திருநாட்டுப் படலமும் திருநகரப்படலமும் அமைந்துள்ளன. மழை பொழிந்து நாடு நீர்வளமும் நிலவளமும் நிறைந்து தொழில் பெருகிப் பொருள் சிறந்து, அறம் தழைத்து விளங்கும் என்று நாட்டு வருணனையில் கூறப்பட்டுள்ளது. திருநகரப் படலத்தில் முதலில் மதுரை நகரத்தின் அமைப்பும் பலவகைச் சாதியினர் வீதிகளும் கோயிலும் சிறப்பித்துப் பாடப்பட்டுள்ளன. நாட்டு, நகரப் படலங்களுக்குப் பின்னர் திருக்கயிலாயச் சிறப்பும் புராண வரலாறும் தலம், தீர்த்தம், மூர்த்தி ஆகியவற்றின் சிறப்புகளும் கூறப்பட்டுள்ளன.

மதுரைக்காண்டத்தில் இந்திரன் பழிதீர்த்த படலத்திலிருந்து புராணக்கதை தொடங்குகிறது. இப்படலம் முதலாக வருணன் கடலை வற்றச் செய்த படலம் ஈறாக இக்காண்டத்தில் பதினெட்டுப் படலங்கள் உள்ளன. இப்பதினெட்டுப் படலங்களிலும் சிவபெருமான் சிறப்புகளே கூறப்படுகின்றன. சிவபெருமான் தேவேந்திரனின் பழியைத் தீர்ப்பதும் அவனுடைய வெள்ளையானையின் சாபத்தைத் தீர்ப்பதும் முதல் இரண்டு படலங்களில் கூறப்பட்டுள்ளன. இதற்கு அடுத்த படியாகச் சிவபெருமான் ஏவலால் மதுரைநகர் அமைக்கப் பெற்றதைத் திருநகரங் கண்ட படலம் எடுத்துரைக்கின்றது. அடுத்து வரும் ஐந்து படலங்களில் தடாதகைப் பிராட்டியார் மலையத்துவச பாண்டியனுக்கு மகளாகத் தோன்றுவதும் சுந்தரபாண்டியனாகத் தோன்றிய சிவபெருமான் தடாதகைப் பிராட்டியாரை திருமணம் செய்து கொள்வதும் திருமணம் முடிந்தபின் சிவபெருமான் திருக்கூத்தாடுவதும் திருமண விருந்தில் குண்டோதரனுக்கு அன்னமிடுவதும் அவன் பசியைத் தணிக்க அன்னக்குவியலையும் வையை நதியையும் வரவழைப்பதும் விளக்கப்பட்டுள்ளன. தடாதகைப் பிராட்டியாரின் தாய் கடலில் நீராட வேண்டும் என்ற விருப்பத்தை நிறைவேற்றுவதற்குச் சிவபெருமான் ஏழு கடலினையும் மலயத்துவசனையும் அழைத்த வரலாற்றினை அடுத்த இரண்டு படலங்கள் எடுத்துரைக்கின்றன. இதற்குப் பின்பு ஐந்து படலங்கள் சுந்தர பாண்டியனின் மகனாக உக்கிரபாண்டியன் பிறந்ததும் அவன் ஆட்சி ஏற்று நடத்தியதும் கடல் பொங்கியெழுந்து மதுரையை அழிக்க முற்பட்டபோது உக்கிரபாண்டியன் வேல்விடுத்துக் கடலை வற்றச் செய்ததும் இந்திரன் உக்கிரன் மீது கொண்ட பொறாமையால் நாட்டில் மழை பெய்யாது செய்ய, உக்கிரன் இந்திரனுடைய முடியை வளையால் சிதைத்ததும் மேருவைச் செண்டினால் அடித்ததும் நாட்டில் மழை பெய்து செல்வத்தைப் பெருக்குவித்ததும் விளக்கப்பட்டுள்ளன. முனிவர்கள் வேதத்தின் பொருளை அறியாத நிலையில் யாராலும் அறியப்படாத வேதத்திற்குரிய பொருளை அம்முனிவர்களுக்கு அருளிச் செய்ததும் நாடு அரசனின் ஆளுகையின் கீழ் இடைவிடாது இருத்தல் வேண்டும் என்பதற்காக அவர் வணிகனாக வந்து வீர பாண்டியனின் மகனுக்கு மாணிக்கம் விற்றதும் வருணன் ஏவலால் மதுரையை அழித்த கடலினைச் சிவபெருமான் வேல்விடுத்து வற்றச் செய்ததும் இக்காண்டத்து இறுதி மூன்று படலங்களில் கூறப்பட்டுள்ளது.

இக்காண்டம் முழுவதிலும் மாணிக்கம் விற்ற படலத்தைத் தவிர ஏனைய நிகழ்ச்சிகள் சிவபெருமானையும் அவருடைய மகன் உக்கிரபாண்டியனையும் மையப்பொருளாகக் கொண்டு அமைந்துள்ளது. சிவபெருமானே பாண்டியனாகத் தோன்றி நிகழ்ச்சிகளில் நேரடியாகத் தொடர்பு கொண்ட நிலையையும் இக்காண்டத்தின் பெரும்பாலான படலங்களில் காணமுடிகிறது. இக்காண்டத்தில் எவருக்கும் அருள் செய்த வரலாறு இடம் பெறவில்லை. சிவபெருமான் ஏவலால் மதுரை நகரம் நிர்மாணிக்கப்பட்டு நிகழ்ச்சிகள் அனைத்தும் அந்நகரிலேயே நடைபெறுவதால் இப்பகுதிக்கு 'மதுரைக்காண்டம்' என்ற பெயர் மிகவும் பொருத்தமுடையதாகும்.

**கூடற்காண்டம்**

இப்புராணத்து இரண்டாவது பகுதியாகிய கூடற்காண்டத்தில் சிவபெருமான் பல உயிர்களுக்கும் அருள் செய்யும் நிகழ்ச்சி கூறப்பெற்றுள்ளது. இது முப்பது படலங்களைக் கொண்டுள்ள மதுரைக் காண்டத்தின் இறுதிப்படலம் வருணன் ஏவிய கடலினைச் சிவபெருமான் வற்றச் செய்த நிகழ்ச்சியைக் குறிக்கின்றது. தான் ஏவிய கடலினைச் சிவபெருமான் வற்றச் செய்து விட்டதால் வருணன் சீற்றமடைந்து மதுரையை அழிக்குமாறு மேகங்களை ஏவுகின்றான். மேகங்கள் இடைவிடாது மழையைப் பொழிந்து மதுரை நகருக்குப் பெருந்துன்பம் விளைவிக்கின்றன. சிவபெருமான் பாண்டியனின் முறையீட்டைக் கேட்டு நான்கு மேகங்களை ஏவி மதுரையில் நான்கு மாடங்களாக அமைத்து மதுரை நகரை வருணன் பெய்வித்த மழையினின்றும் காத்தருளுகின்றார். இந்நிகழ்ச்சியிலிருந்து இக்காண்டம் தொடங்குவதால் இதற்குக் கூடற்காண்டம் என்ற பெயர் அமைந்தது. வருணன் சிவபெருமானின் ஆற்றலையறிந்து தான் செய்த தீங்கிற்கு வருந்தி வேண்ட, சிவபெருமான் வருணனின் வயிற்று நோயைப் போக்குகிறார். இதனைத் தொடர்ந்து மற்ற படலங்கள் அமைகின்றன.

நான்மாடக்கூடலான படல நிகழ்ச்சிக்கு அடுத்து இரண்டு படலங்களில் சிவபெருமான் சித்தராக வந்து பல அரிய செயல்களைச் செய்து காட்டியதும் கல்லானைக்குக் கரும்பு கொடுத்ததும் விளக்கப்பட்டுள. அடியவர்க்கு அருள் செய்யவே ஆண்டவன் உள்ளான் என்ற உறுதியும் முறை கேட்டு உய்விப்பவன் என்பதும் விருத்த குமார பாலரான படலம், மாமனாக வந்து வழக்குரைத்த படலம், ஆகியவைகளில் இடம்பெற்றுள. இக்காண்டப் படலங்களில் 'சிவனே காக்க வல்லவன்' என்று நினைத்துச் சரணடையும் மன்னர்களுக்குச் சிவபெருமான் பலவேடங்களில் வந்து அருள் புரிந்ததை யானை எய்த படலம், நாகமெய்த படலம், மாயப்பசுவை வதைத்த படலம், உலவாக் கிழியருளிய படலம், விடையிலச்சினையிட்ட படலம், தண்ணீர்ப்பந்தல் வைத்த படலம், சோழனை மடுவில் வீழ்த்திய படலம்

ஆகியவை விளக்குகின்றன. தன்னைக் காண விரும்புகின்றவரின் பழியைத் தீர்த்து அவருக்குச் சிவலோகம் காட்டுதலை வரகுணனுக்குச் சிவலோகம் காட்டிய படலம் கூறுகின்றது.

ஆடல் வல்லவனான சிவன் ஒரு கலைஞன் ஆவான். அவன் கலை வளர்ப்பதனை நான்கு படலங்களில் காணலாம். தானே கலைஞனின் குற்றேவல் புரியும் ஏவலனாக வந்து விறகு விற்றுக் கலைஞரான பாணபத்திரனை உயர்த்துகின்றார். அக்கலைஞனுக்குத் திருமுகங்கொடுத்து உதவுவதும் பலகையிட்டு உதவுவதும் தன்மீது நம்பிக்கை கொண்டு தன்னைச் சரணடைந்த பாணபத்திரன் துணைவி இசையில் வெல்வதற்கு உதவுவதும் கலை வளர்ச்சியைத் தம் அருள் திறத்தால் வளர்ப்பதைக் காட்டும் படலங்களாக அமைந்துள்ளன.

காண்டத்தின் இறுதிப்படலங்கள் நான்கும் தத்தம் வினைகளுக்கேற்பப் பிறப்பு நிகழும் என்பதால் வினைப் பயனை விளக்குகின்றன. சிவன், வருணன் மீது பரிவு கொண்டு அவனது வயிற்று நோயைப் போக்கியதிலிருந்து தொடங்கும் இக்காண்டத்துப் படலங்கள் நாரைக்கு முத்தி கொடுத்த படலத்துடன் முடிவடைகின்றது.

### கூடற்காண்ட அமைப்பு

இக்காண்டத்தில் சிவபெருமானைப் பற்றிய நேரடியான நிகழ்ச்சி ஏதும் இடம்பெறவில்லை. அவர் சித்தராகவும் வீரராகவும் புலவராகவும் ஆசிரியராகவும் வீரவேட்டுவனாகவும் தொழிலாளியாகவும் பன்றியாகவும் தோன்றி உயிர்களுக்கு அருள் செய்த திறம் விளக்கப் பெற்றுள்ளது. சிவன் பல வேடங்களில் தோன்றி அருள் செய்தமை இரண்டு படலங்களிலும் அசரீரியாக அருளுதல் மூன்று படலங்களிலும் பக்தர்களின் கனவில் தோன்றியருளுதல் நான்கு படலங்களிலும் உரைக்கப்பட்டுள்ளன.

மன்னரும் மக்களும் ஆண்பாலரும் பெண்பாலரும் விலங்கும் பறவையும் சிவபெருமானின் பேரருளுக்குப் பாத்திரமாகத் திகழ்ந்து, சிவபெருமானை முழு நம்பிக்கையோடு வேண்டுவதும் இறைவன் தன்னை வேண்டிய உயிர்களுக்கு அருள் புரிவதும் கூடற்காண்டத்தின் மையக் கருவாய்த் திகழ்கின்றமையால் இதனை உயிர்கள் அருள் பெருகாண்டம் எனக்கொள்ள இயலும்.

### திருவாலவாய்க்காண்டம்

திருவாலவாய்க் காண்டத்தில் 16 படலங்கள் உள்ளன. கடல் பொங்கிப் பெருவெள்ளத்தால் அழிந்த நான்மாடக் கூடலின் பழைய எல்லைகளை வங்கிய சேகரபாண்டியன் அறிய இயலாது சிவபெருமானை வேண்ட, அவர் சித்தராகத் தோன்றி நான்மாடக் கூடல் எனப்பட்ட மதுரை நகரின் எல்லையைக் காட்டுமாறு தம் கையில்

கங்கணமாக இருக்கும் நாகத்தை ஏவுகிறார். அந்நாகம் தன் உடலால் நகரின் எல்லைகளைச் சுற்றி வளைத்து வாலினை வாயில் வைத்து அந்நகரின் எல்லையைக் குறிப்பிட்டு மீண்டும் சிவபெருமான் கையை அடைகின்றது. பாம்பினால் அந்நகரின் எல்லைகள் வரையறுக்கப்பட்டதாலும் எல்லைகாட்டிய பாம்பு இறைவனிடம் தம் பெயரால் அந்நகரம் அழைக்கப்பெற வேண்டும் என்று வேண்டி வரம் பெற்றதாலும் இந்நிகழ்ச்சியைக் கொண்டு இக்காண்டம் தொடங்குவதாலும் இது திருவாலவாய்க் காண்டம் எனப் பெயர் பெற்றுள்ளது.

படலப்பெயர் படலத்தையடுத்து சிவபெருமான் புலவர்களுக்குச் சங்கப்பலகை தருவதிலிருந்து தொடங்கி, நக்கீரர், கபிலர், பரணர் முதலிய சங்கப்புலவர்களைப் பற்றித் தமிழ் நயம் தோன்றப் பாடுவதும் புலவரின் வறுமைப் புலம்பலும் புலமையினால் நெற்றிக்கண்ணை இறைவன் காட்டினாலும் அவனைக் குற்றம் எனக் கூறுதலும் உண்மைப்புலம்பலில் பாட்டுப் பிறத்தலும் தான் அறியாத இலக்கியத்தைப் பிறர் துணையால் கற்றறிதலும் தலைசிறந்த இலக்கியங்களைக் கற்றறிதல் என்பன போன்ற ஐந்து படலங்கள் அமைந்துள. இவ்வாறு தமிழையும் புலமையினையும் கூறும் ஆசிரியர், இடைக்காடரின் புலமையினைப் போற்றாது மன்னன் காலம் தாழ்த்தும் திறத்தினையும் புலவனுக்கும் மன்னனுக்கும் நேர்ந்த பிணக்கையும் வேதத்தின் உட்பொருளைக் கருத்தூன்றிக் கேட்காத உமாதேவிக்குச் சிவனார் சாபம் கொடுத்துப்பின் மணந்ததையும் முறையே இடைக்காடன் பிணக்கு தீர்த்த படலம், வலை வீசிய படலம் ஆகியவற்றில் எடுத்துரைக்கின்றார்.

இதனையடுத்து நான்கு படலங்களில் வாதவூரடிகளின் வரலாற்றையும் அவர் பெருமையைப் பாண்டியன் அரிமர்த்தனுக்கு உணர்த்த இறைவன் புரிந்த திருவிளையாடலையும் பரஞ்சோதியார் எடுத்துக் கூறுகின்றார். சிவபெருமானே மண் சுமக்கும் கூலியாளாய் வந்து வாதவூரடிகளை விடுவித்து வந்திக்கும் வீடு பேற்றைத்தருகின்றார்.

அடுத்து வருகின்ற பாண்டியன் சுரந்தீர்த்த படலமும் சமணரைக் கழுவேற்றிய படலமும் சைவத்தின் சிறப்பை அறியாத கூன்பாண்டியனுக்கு சைவத்தின் சிறப்புணர்த்தி நாளும் நற்றமிழால் தமிழ் வளர்த்த திருஞானசம்பந்தர் பெருமையைப் பேசுகின்றன. சமயப்போர் என்பது வாள் கொண்டு நடத்தாமல் பாட்டிலேயே தீர்த்துக் கொள்ளப் பெற்றுள்ளது. இறுதியாக வன்னியும் கிணறும் இலிங்கமும் அழைத்த படலம். தமிழனின் தனி மரபொழுக்கங்களில் ஒன்று அன்பின் ஐந்திணையில் உள்ள காதல் ஒழுக்கம். இவ்வொழுக்கத்தின் மாசற்ற தன்மையை ஐயப்பட்டு நின்ற பெண்ணிற்கும் அறத்தோடு நின்ற பெண்ணிற்கும் சான்றாய்த் தோன்றி விளக்கியதைத் திருவாலவாய்க் காண்டத்தில் தமிழ் வளர்த்த திருஞானசம்பந்தர் வரலாற்றில் விளக்கப்பட்டுள்ளது.

திருவாலவாய்க் காண்டப் படல நிகழ்ச்சிகள் சிவபெருமான் சித்தர், புலவர், வலைஞன், ஆசிரியர், வேடமன்னன், குதிரைச்சேவகன், தொழிலாளி போன்ற பல்வேறு உருவத்தில் தோன்றிப் பலருக்கும் அருள் செய்ததைக் குறிப்பிடுகின்றது.

திருவாலவாய் காண்டத்தின் முதற்படலம் மனிதர்களால் அறிய வியலாத நகரின் எல்லையை அறிவிக்கும் நிகழ்ச்சியாக ஆரம்பித்துக் காண்டம் முழுவதிலும் தமிழ், தமிழ்ப்புலவர்களின் சிறப்பு, வாதவூரார் பெருமை, சைவத்தின் சிறப்பு, தமிழரின் காதல் ஒழுக்கம் ஆகியவற்றை விளக்குவதாக அமைந்துள்ளது.

## திருவிளையாடற் புராணத்தில் கூறப்படும் 64 திருவிளையாடல்கள்

1. இந்திரன் பழிதீர்த்தது
2. வெள்ளை யானை சாபம் தீர்த்தது
3. திருநகரம் கண்டது
4. தடாதகைப்பிராட்டியார் திருவவதாரம்
5. தடாதகைப்பிராட்டியாரின் திருமணம்
6. வெள்ளியம்பலத் திருக்கூத்தாடியது
7. குண்டோதரனுக்கு அன்னமிட்டது
8. அன்னக்குழியும் வையையும் அழைத்தது
9. ஏழுகடல் அழைத்தது
10. மலையத்துவசனை அழைத்தது
11. உக்கிரபாண்டியன் திருஅவதாரம்
12. உக்கிர பாண்டியனுக்கு வேல்வளை செண்டு கொடுத்தது
13. கடல் சுவற வேல்விட்டது
14. இந்திரன் முடிமேல் வளை எறிந்தது
15. மேருவைச் செண்டால் அடித்தது
16. வேதத்திற்குப் பொருள் அருளிச் செய்தது
17. மாணிக்கம் விற்றது
18. வருணன் விட்ட கடலை வற்றச் செய்தது.
19. நான்மாடக் கூடலானது
20. எல்லாம் வல்ல சித்தரானது
21. கல்லானைக்குக் கரும்பு தந்தது
22. யானை எய்தது
23. விருத்தகுமார பாலரானது
24. கால் மாறி ஆடியது
25. பழி அஞ்சியது
26. மாபாதகம் தீர்த்தது

27. அங்கம் வெட்டியது
28. நாகம் எய்தது
29. மாயப்பசுவை வளைத்தது
30. மெய்காட்டிட்டது
31. உலவாக்கிழி அருளியது
32. வளையல் விற்றது
33. அட்டமாசித்தி உபதேசித்தது
34. விடையிலச்சினை இட்டது
35. தண்ணீர்ப்பந்தல் வைத்தது
36. இரசவாதம் செய்தது
37. சோழனை மடுவில் வீழ்த்தியது
38. உலவாக்கோட்டை அருளியது
39. மாமனாக வந்து வழக்குரைத்தது
40. வரகுணனுக்குச் சிவலோகம் காட்டியது
41. விறகு விற்றது
42. திருமுகம் கொடுத்தது
43. பலகை இட்டது
44. இசைவாது வென்றது
45. பன்றிக்குட்டிக்கு முலை கொடுத்தது
46. பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கியது
47. கரிக்குருவிக்கு உபதேசம் செய்தது
48. நாரைக்கு முக்தி கொடுத்தது
49. திருவாலவாயானது
50. சுந்தரப் பேரம்பு எய்தது
51. சங்கப் பலகை கொடுத்தது
52. தருமிக்குப் பொற்கிழி அளித்தது
53. கீரனைக் கரையேற்றியது
54. கீரனுக்கு இலக்கணம் உபதேசித்தது
55. சங்கத்தார் கலகம் தீர்த்தது
56. இடைக்காடன் பிணக்குத் தீர்த்தது
57. வலை வீசியது
58. வாதவூரடிகளுக்கு உபதேசித்தது
59. நரியைப் பரியாக்கியது
60. பரி நரியாக்கி வையை அழைத்தது
61. மண்சுமந்தது
62. பாண்டியன் சுரம் தீர்த்தது

63. சமணரைக் கழுவேற்றியது

64. வன்னியும் கிணறும் இலிங்கமும் அழைத்தது

## மதுரைத் தலத்தின் சிறப்பு

மதுரை மாநகரின் பெருமையைப் பரஞ்சோதி முனிவர் விரித்துக் கூறுகின்றார். இறைவன் தன் திருமுடியில் உள்ள சந்திரகலசத்திலிருந்து அமுதத்தை உகுத்துப் பாண்டியன் அமைத்த நகரைப் புனிதமாக்கினான். மதுரம் என்று அமுதத்துக்கு ஒரு பெயருண்டு. மதுரத்தால் தூய்மை பெற்ற நகரம் மதுரா என அழைக்கப்பட்டது என்று மதுரையின் பெயர்க் காரணத்தை,

**"பொன்மய மான சடைமதிக் கலையின்**
**புத்தமுது உகுத்தனர்; அது போய்ச்**
**சின்மய மான தம்அடி அடைந்தார்ச்**
**சிவமயம் ஆக்கிய செயல்போல்**
**தன்மயம் ஆக்கி அந்நகர் முழுவதும்**
**சாந்தி செய்தது; அது மதுர**
**நன்மயம் ஆன தன்மையால் மதுரா**
**நகரென உரைத்தனர் திருநாமம்"** (திருவி.பு.,513)

என்று பாடுவர் பரஞ்சோதி முனிவர்.

மதுரை நகரத்துக்குச் சிவபுரம் (சிவநகரம்), கடம்பவனம், சீவன்முக்திபுரம், கன்னிபுரம், திருவாலவாய், மதுரை, பூலோக சிவலோகம், சமட்டிவிச்சாபுரம், கூடல், துவாத சாந்தத்தலம் என்பன போன்ற பல பெயர்கள் உண்டு. இதன் நான்கு எல்லையிலும் நான்கு கடவுளர் காவல் புரிகின்றனர். கீழ்த்திசையில் சாத்தனும் தெற்கே சப்தமாதர்களும் மேற்கே திருமாலும் வடக்கே துர்க்கையும் காவல் தெய்வங்களாக விளங்குகின்றன.

மதுரை நகரின் பெருமையைச் சொல்ல வந்த பரஞ்சோதிமுனிவர் இறைவன் பல வடிவங்களையெடுத்து எழுந்தருளிய போது அவனுடைய திருவடிமலர்களைச் சுமக்கத் தவம் செய்த தெருக்களை உடையது என்று பாராட்டுவர். இதனை,

**"ஐய என்உரை வரம்பின் ஆகுமோ? அடியர்**
**உய்ய மாமணி வரிகளை விறகுவிற்று உழன்றோன்**
**பொய்யில் வேதமும் சுமந்திடப் பொறாதகன்று அரற்றும்**
**செய்ய தாள்மலர் சுமந்திடத் தவஞ்செய்த தெருக்கள்"** (திருவி.பு.,133)

என்னும் பாடல் விளக்கும். தேவாரப் பாடல் பாடப் பெற்ற பாண்டிய நாட்டுத்தலங்களில் முதல் தலம் மதுரையே ஆகும்.

**“பாண்டிய நாடே பழம்பதி”[49]**

எனவும்,

**“தென்னாடுடைய சிவனே போற்றி**

**என்னாட்டவருக்கும் இறைவா போற்றி”[50]**

எனவும் மாணிக்கவாசகர் பாண்டிய நாட்டின் பழமையையும் சிவபெருமான் அப்பாண்டிய நாட்டிற்கு உரியவர் என்பதையும் திருவாசகத்தில் கூறுகிறார்.

பன்னிரு திருமுறைகளில் மதுரைத்தலத்துத் தேவாரப் பதிகங்கள் பதினொன்று. அவற்றில் ஒன்பது திருஞான சம்பந்தர் இயற்றியவை; இரண்டு திருநாவுக்கரசர் இயற்றியவை. இத்தலம் திருஞானசம்பந்தர், மாணிக்கவாசகர் ஆகிய இருவரது வாழ்வோடு இயைந்தது.

‘‘சிதம்பரத்தைக் கண்டால் முக்தி, காசிநகரில் இறந்தால் முக்தி, காளத்தியில் வழிபட்டால் முக்தி, ஆனால் திருஆலவாய் என்ற பெயரைக் கேட்டாலே முக்தி’’[51] என்று இதன் பெருமை கூறப்படுகிறது.

சைவ சமயத்துடன் தொடர்புடைய தலங்களை எல்லாம் சிவபெருமானின் உறுப்புகளாகக் கூறிய நம் முன்னோர்கள் மதுரையை மட்டும் துவாத சாந்ததலம் என்றனர். துவாதசாந்தம் என்பது உச்சிக்கு மேலே பன்னிரண்டு அடி உயரத்தில் இருப்பது ஆகும். அது ஆதாரங்களைக் கடந்தது. மதுரையை இங்ஙனம் பிற தலங்கள் எல்லாவற்றிலும் சிறப்புடையது என்று உயர்த்திக் காட்டியுள்ளனர். இவ்வாறு பல சிறப்புகளைக் கொண்ட மதுரையில் சிவன் திருவிளையாடல் நிகழ்த்தியதாகக் கூறப்பெறும். ஆதிசொக்கநாதர் திருக்கோயில் (சிம்மக்கல்), புட்டுசொக்கநாதர் திருக்கோயில் (புட்டுத்தோப்பு), திருஏடகநாதர் திருக்கோயில் (திருவேடகம்) ஆகிய மூன்று கோயில்களின் சிறப்பு, மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் அடிப்படையில் பின்வரும் பகுதியில் விளக்கப்பெறுகிறது.

## அருள்மிகு ஆதிசொக்கநாதர் திருக்கோயில்

### கோயில் அமைவிடம்

ஆதிசொக்கநாதர் திருக்கோயில் சிம்மக்கல் பேருந்து நிறுத்தத்திற்கு அருகில் அமைந்துள்ளது. மாட்டுத்தாவணி பேருந்து நிலையத்திலிருந்து 5.5கி.மீ, பெரியார்

பேருந்து நிலையத்திலிருந்து 2.3கி.மீ, ஆரப்பாளையம் பேருந்து நிலையத்திலிருந்து 2.9.கி.மீ தொலைவுகளில் அமைந்துள்ளது. இக்கோயில் வைகை ஆற்றின் தென்கரையிலும் மீனாட்சிஅம்மன் கோயிலுக்கு மிக அருகில் வடக்கில் அமைந்துள்ளது.

## ஆதிசொக்கநாதர் கோயில்

இக்கோயில் வரலாற்றுப் பழைமை வாய்ந்தது எனக் கூறப்பெறுகிறது. மதுரையை ஆண்ட குலேசபாண்டியன் என்னும் மன்னன் நூல்கள் பல கற்று இலக்கண, இலக்கியங்களில் சிறந்து விளங்கினான். இடைக்காடன் என்ற புலவர், குலேசபாண்டியனின் கல்வி, கேள்வி ஞானங்களை அறிந்து 'தமிழ்ப் பனுவல்' ஒன்றை இயற்றி மன்னனைக் கண்டு பாடிக் காட்டினர். இதனைப் பரஞ்சோதியார்,

**"கழிந்த பெரும் கேள்வியினான் எனக் கேட்டு**
**முழுது உணர்ந்த கபிலன் தன் பால்**
**பொழிந்த பெரும் காதல் மிகு கேண்மையினான்**
**இடைக்காட்டுப் புலவன் தென் சொல்**
**பொழிந்து அரசன் தனைக் காண்டும் எனத்தொடுத்த**
**பனுவலோடு மூரித் தீம் தேன்**
**வழிந்து ஒழுகு தாரனைக் கண்டு தொடுத்து உரைப்**
**பனுவல் வாசித்தான் ஆல்."** (திருவி.பு., 2616)

என்று குறிப்பிடுகிறார்.

மன்னன் இடைக்காடனின் பாடலைக் கண்டு கொள்ளாதது போல அகமகிழ்ச்சியைக் காட்டாமல் வேறு எங்கோ பார்த்துக் கொண்டிருந்தான். மனம் வருந்திய இடைக்காடன் திருவாலவாய் இறைவனாகிய சோமசுந்தரரின் முன் வீழ்ந்து வணங்கி, "என் பாடலுக்கு மன்னன் செவி சாய்க்க வில்லை. இனிய கவிகொடுக்கும் புலவர்களுக்கு ஒரு பயனும் கொடாத பிறவியாக இருக்கிறான். சொல்லின் வடிவாகிய உமாதேவியாரையும் அச்சொல்லின் பொருளான உம்மையும் இகழ்ந்தான். இதனால் எனக்கு வந்த குறையாது?" என்று கூறிவிட்டு கோயிலை விட்டு நீங்கிச் சென்றான்.

இடைக்காடனுக்கும் அவனது நண்பர் புலவர் கபிலனுக்கும் மனமகிழ்ச்சி உண்டாக்கக் கருதிய சோமசுந்தரர் மீனாட்சி அம்மன் கோயிலின் நேர்வடக்கே வைகை ஆற்றின் தென்பக்கத்தே உள்ள கோயிலில் வந்து அமர்ந்தார். சங்கப்புலவர்களும் சிவபெருமான் போன வழியே அங்கு போய்த் தங்கினார்கள். மறுநாள் மீனாட்சி அம்மன்

கோயிலுக்கு வந்த சிவனடியார்கள் அக்கோயிலில் சிவலிங்கத் திருவுருவத்தைக் காணாமல் திகைத்தனர். சிவனடியார்கள் பாண்டிய மன்னனிடம் போய் முறையிட்டனர்.

பாண்டிய மன்னன் தென்கரையிலே மீனாட்சி அம்மையாரோடு வந்து எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரப் பெருமானைக் கண்டு தரிசித்து என்ன பிழை நேர்ந்தது என்று மனம் உருகிக் கண்ணீர் விட்டான். அப்போது இறைவன் ''நீ இடைக்காடன் செய்த செய்யுளை இகழ்ந்தாய்! அப்பொழுதே அவனிடத்துக் கொண்ட அன்பினால் இங்கு வந்தோம்'' என்று அசரீரியாக உரைத்தவர். மேலும் ''திருத்தலங்களுள் திருவாலவாய் மிகவும் உயர்ந்தது. இங்கே அளவிடற்கரிய சுயம்பு லிங்கங்கள் உள்ளன. அவற்றுள் அறுபத்து நான்கு சிறந்தவை. அவற்றுள் எட்டு மிக உயர்ந்தவை. அந்த எட்டும் இந்திரன் முதலிய அட்டத்திக்குப் பாலகர்களால் வழிபடப்பட்டவை. இதில் யாம் எழுந்தருளியிருக்கும் லிங்கம் நம் தோழன் (குபேரன்) வழிபட்டலிங்கமாகும். அதனால் இங்கு வந்து தங்கினோம். இன்று முதல் இத்தலம் உத்தர திருவாலவாய் எனச் சிறப்புப்பெறும்'' என்றார். இதனைப் பரஞ்சோதியாரின்,

**“அக்குறிகளின் மேம்பட்டகுறி அறுபத்து நான்காம்**
**இக்குறிகளின் மேம்பட்டகுறிகள் எட்டினைய வெட்டுத்**
**திக்குறி வானோர் பூசைசெய்தன இவற்றின்வந்து**
**பூக்குறைகுறி நம்தோழன் பூசித்த குறியதாகும்” (திருவி.பு.,2636)**

**“அறைந்தஇத் தெய்வத்தானம் அனைத்தும் ஓர் ஊழிக்காலத்**
**சிறந்த நம் தோழன்கண்ட இலிங்கமாம் அதனால்இங்கே**
**உறைந்தனம் உறைதலாலே உத்தர ஆலவாயாய்ச்**
**சிறந்திடத் தருவது இன்றுமுதல் இந்தத் தெய்வத்தானம்” (திருவி.பு.,2637)**

என்னும் பாடல்கள் விளக்கும்.

சோமசுந்தரரின் அசரீரியைக் கேட்ட பாண்டிய மன்னன், தன்னை மன்னிக்கும்படி சிவபெருமானிடம் வேண்டினான். பின்பு இடைக்காடனைப் புலவர்களோடு தன் மாளிகைக்கு அழைத்துச் சென்று இடைக்காடன் இயற்றிய பனுவலைக் கேட்டு மனம் மகிழ்ந்து பரிசுகள் பல வழங்கினான்.

### புராணப் பெயர்

இத்தலத்தின் புராணப்பெயர் ‘உத்தர ஆலவாய்’ என்பதாகும். உத்தரம் என்றால் வடக்கு. மதுரையின் வடக்குப்பகுதியில் இக்கோயில் அமைந்துள்ளதால் இந்தப் பெயர் வழங்கலாயிற்று.

### மூலவரின் பெயர்

‘அருள்மிகு ஆதிசொக்கநாதர்’ என்பது மூலவரின் பெயராகும். சொக்கு என்பதற்கு அழகு என்பது பொருள். சொக்கர் என்பதற்கு அழகுடையவர் என்று பொருள்.”[52]

### அம்மனின் பெயர்

“அருள்மிகு மீனாட்சிஅம்மன்” என்பது இத்தல அம்மனின் பெயராகும். தமிழில் ‘அங்கயற்கண்ணி’ என்று வழங்கப்பெறும். அங்கயற்கண்ணி என்பது அழகிய மீன்போன்ற கண்களையுடையவள் என்று பொருள்படும்.

“மீன் தன் கண்ணுக்கு இமையில்லாமல் இரவும் பகலும் விழித்துக் கொண்டிருப்பது போல அம்மனும் கண் இமைக்காமல் உயிர்களை எப்போதும் காத்து வருவதால் மீனாட்சி எனப் பெயர்”[53] என்பர்.

ஆதிசொக்கநாதர் கோயிலுகென்று தனியாகத் தலதீர்த்தமோ தலவிருட்சமோ இல்லை.

## அருள்மிகு புட்டுசொக்கநாதர் திருக்கோயில்

### புட்டுசொக்கநாதர் கோயில் அமைவிடம்

புட்டுசொக்கநாதர் திருத்தலமானது மதுரை ஆரப்பாளையம் பேருந்து நிலையத்திலிருந்து 1.7கி.மீ தொலைவிலும் பெரியார் பேருந்து நிலையத்திலிருந்து 2.5கி.மீ தொலைவிலும் மாட்டுத்தாவணிப் பேருந்து நிலையத்திலிருந்து 6.7கி.மீ தொலைவிலும் அமைந்துள்ளது. இத்தலம் அமைந்திருக்கும் இடம் புட்டுத்தோப்பு என்று அழைக்கப்படுகிறது.

### புட்டுசொக்கநாதர் கோயில் பெருமை

கூலியாளாக வந்து சிவபெருமானுக்கு புட்டு செய்து கொடுத்த புட்டுவாணிகச்சி வந்திக்கும் மாணிக்கவாசகருக்கும் இத்தலத்தில் சிவபெருமான் மோட்சம் கொடுத்தார்.

அதனால் இத்தலத்தில் வந்து வழிபட்டால் மோட்சம் கிட்டும் என்ற நம்பிக்கை மக்களிடம் உள்ளது.

**புராணவரலாறு**

மாணிக்கவாசகருக்காக நரிகளைப் பரியாக்கி வையை அழைத்த திருவிளையாடலின் தொடர்ச்சியாகப் "பிட்டுக்கு மண் சுமந்த'' திருவிளையாடலைச் சிவபெருமான் நிகழ்த்தினார்.

வைகை நதியின் வெள்ளப்பெருக்கும் அதன் சீற்றமும் மதுரை நகரை அலைக்கழித்தது. அமைச்சர்களை அழைத்து மன்னன் அரிமர்த்தன பாண்டியன், 'நீங்கள் வைகை நதிக் கரையைக்கட்டி பெருகிவரும் வெள்ளத்தின் வேகத்தைத் தணியுங்கள் அதற்கான ஏற்பாட்டை உடனே தொடங்குங்கள்' என்று கட்டளை இட்டான்.

அமைச்சர்கள் சென்று ஒவ்வொரு குடும்பங்களையும் அழைத்துப் பெயர்களை எழுதினார்கள். அக்குடும்பத்திற்குச் சேர வேண்டிய பகுதியை எல்லையிட்டு அளந்து கோடு கிழித்தனர். பின்னர் அவரவர் பங்கைக் கரைகட்டி அடைக்கவும் என்று பறை அறைந்தனர். ஒவ்வொரு குடும்பத்தினரும் கரை அமைக்கும் பணிக்காக வேலையாட்களை அழைத்து வந்திருந்தனர். மக்கள் அனைவரும் மகிழ்ச்சியோடு கரை உடைப்பை அடைத்துக் கொண்டிருந்தனர்.

அப்பொழுது மதுரைநகரின் தென்கிழக்குப் பகுதியில் ஆயிரம் பிறைகண்டு தொழுதப் (வயதான) பிட்டு விற்கும் வந்தி என்பவள் தனக்கு அளந்து விடப்பட்டிருந்த பங்கினை அடைப்பதற்குக் கூலியாள் கிடைக்காமல் வருந்தினாள். சோமசுந்தரரை வணங்கி, ''தனது பங்கு வேலையைச் செய்ய ஆள் காட்டி அருளும்! எனக் கண்ணீர் விட்டு அழுதாள். உடனே சோமசுந்தரர் அழுக்கேறிய பழைய துணியொன்றைக் கட்டிக் கொண்டு கூலியாள் வேடத்தில் கூலி கொடுத்து வேலைவாங்குவோர் உண்டோ? என்று கூறியபடி வீதியில் வந்து கொண்டிருந்தார். அக்கூலியாளை வந்தி அழைத்து நான் விற்கும் பிட்டினை உனக்கு கூலியாகத் தருகிறேன் எனக்காகக் கரையை அடைப்பாயா? என்று கேட்டாள். தாயே! பெரும்பசி என்னை வாட்டுகிறது. நீங்கள் தயாரித்த பிட்டில் உதிர்ந்தது எல்லாம் கொடுங்கள் நான் உண்டபிறகு, சற்று இளைப்பாறி என்பங்குக் கரையை அடைக்கிறேன் என்று கூறினார், கூலி ஆளாகவந்த சோமசுந்தரர். இதனைப் பரஞ்சோதியார்,

**''பிட்டிடுவேன் உனக்கு என்றாள் அதற்கு இசைந்து பெரும்பசியால்**
**சுட்டிடநான் மிகமெலிந்தேன் சுவைப்பிட்டில் உதிர்ந்தவெலாம்**

இட்டிடுவாய் அதுமுந்தத்தின்று நான் இளைப்பாறிக்

கட்டிடுவேன் நின்னுடைய கரையென்றார் கரையில்லார்" (திருவி.பு.,3012)

என்றுரைப்பர்.

இறைவன் பிட்டுக்கு மண் சுமந்தச் செயலை மாணிக்கவாசகர்,

"ஆங்கது தண்ணில் அடியவட்காக

பாங்காய் மண்சுமந்த தருளிய பரிசும்"[54]

என்று கீர்த்தித் திருவகலிலும்,

"பிட்டு நேர்பட மண் சுமந்த"

பெருந்துறைப் பெரும் பித்தனே"[64]

என்றும் பாடுவது குறிப்பிடத்தக்கது.

சோமசுந்தரர் பிட்டு உண்ட களைப்பில் ஒரு மரத்தடி நிழலை அடைந்து துயில் கொண்டு விடடார். ஏவலாளர்கள் வந்து மூதாட்டி வந்திக்கு அளந்து விடப் பட்ட பங்கு அடைபடாமல் இருப்பதைக் கண்டனர். ஏவலர்கள் மன்னனிடம் சென்று கரை அடைப்பு வேலைகள் எல்லாம் முடிந்து விட்டன. ஆனால் பிட்டு விற்கும் மூதாட்டி இன்னும் தன்னுடைய பங்குக் கரையை அடைக்கவில்லை என்றனர். மன்னனிடம் "இவன் தான் மூதாட்டி வந்தியின் ஆள்" என்று காட்டினர். கோபம் கொண்ட பாண்டிய மன்னன் கூலியாளைப் பொற்பிரம்பால் முதுகில் ஓங்கி அடித்தான். சோமசுந்தரர் கூடையோடு மண்ணை உடைப்பில் கொட்டி விட்டு உடனே மறைந்தார். இதனைப் பரஞ்சோதியார்,

"கண்டனன் கனன்று வேந்தன் கையிற்பொற் பிரம்புவாங்கி

அண்டமும் அளவிலாத உயிர்களும் ஆகமாகக்

கொண்டவன் முதுகில்வீசிப் புடைத்தனன் கூடையோடு

மண்தனை உடைப்பில் கொட்டி மறைந்தனன் நிறைந்தசோதி" (திருவி.பு.,3043)

என்று குறிப்பிடுகிறார்.

இதனை மாணிக்கவாசகர்,

"மண்சுமந்து கூலிகொண்டக் கோவான் மொத்துண்டு

புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்கான் அம்மானாய்"[55]

என்று பாடுவர்.

சிவபெருமான் முதுகின் மேல்பட்ட பிரம்பு அடி அரிமர்த்தன பாண்டியன் முதுகிலும் அமைச்சர்கள் முதுகிலும் அனைத்து உயிர்கள் மீதும் சூரியன் முதலான கோள்களின் மேலும் ஐம்பூதங்கள், தேவர்கள், முனிவர்கள் மேலும் பட்டது. கூலியாள் ஒரு கூடை மண்ணைக் கொட்டியவுடன் அந்தக் கரை நீண்ட மலைபோல உயர்ந்ததையும் அவன் முதுகில் தான் பிரம்பால் அடித்தஅடி தன்னுடைய உடம்பிலும் அமைச்சர்கள் முதலானோர்கள் மீதும் பட்டதையும் கண்டு மன்னன் குழப்பம் கொண்டான்.

அப்போது சிவபெருமான் விண்மொழியாகப் பாண்டியனே! ''உன்னுடைய பொருள்கள் எல்லாம் தரும வழியிலே தேடப்பட்டவை. ஆகையால் அப்பொருள்களை வாதவூரன் (மாணிக்கவாசகர்) நமக்கும் நன்மையடைந்த அடியார்கட்கும் வழங்கினான். அதனை உணராமல் அவனை நீ துன்புறுத்தினாய். அதனால் வைகை ஆற்றில் வெள்ளம் பெருகச் செய்து, கரையை அடைக்க வந்தியின் பொருட்டு கூலியாளாக வந்தோம்'' என்றார். மன்னனும் வாதவூரடிகளை வீழ்ந்து வணங்கி தாம் அறியாமல் செய்த பிழைக்காக மன்னிப்புக் கேட்டான்.

### தலப்பெயர் காரணம்

மாணிக்கவாசகர் பொருட்டு வைகையைப் பெருக்கெடுக்க வைத்து, பிட்டு வாணிகச்சியின் மீது இரக்கம் கொண்டு கூலியாளாக வந்து பிட்டு உண்டதால் இத்தலம் ''புட்டுசொக்கநாதர் திருக்கோயில்'' என்று அழைக்கப்படுகிறது. கோயில் அமைந்திருக்கும் இடம் ''புட்டுத்தோப்பு'' என்று அழைக்கப்படுகிறது.

### மூலவரின் பெயர்

''அருள்மிகு புட்டுசொக்கநாதர்'' என்பது மூலவரின் பெயராகும். புட்டுக்காக சிவபெருமான் மண்சுமந்தார் என்பதனால் இத்தல மூலவரின் பெயர் புட்டுசொக்கநாதர் என்பதாகும்.

### அம்மனின் பெயர்

''அருள்மிகு மீனாட்சிஅம்மன்'' என்பது இத்தல அம்மனின் பெயராகும்.

### தீர்த்தம்

வைகை நதியே இத்தலத்தின் தீர்த்தமாகும். சிவபெருமான் வைகை நதியை மையமாக வைத்து வந்திக்குக் கூலியாளாக வந்து வைகைக் கரையை அடைக்க உதவினார். அதனால் இத்தலத்தின் சிறப்பு வைகைநதி ஆகும். இத்தலத்தின்

அருகிலேயே வைகை நதி ஓடுகிறது. வந்திக்கும் மாணிக்கவாசகருக்கும் வைகை நதிக்கரையில் தான் சிவபெருமான் மோட்சம் கொடுத்தார்.

## தல விருட்சம்

“பழங்காலத்தில் மக்கள் மரங்களின் அடியிலேயே தெய்வங்களை வைத்து வழிபட்டனர். பின்னர் களிமண், செங்கல், மரம் இவைகளால் கோயில் அமைத்தனர். மரங்களின் அடியில் ஆதியில் கோயில் ஏற்பட்டதால் அந்த மரங்களைப் புனிதமாகக் கருதினார்கள். அவைகளைத் தலவிருட்சம் எனப் பெயரிட்டு அழைத்தனர்.”[56] ‘சூர் இருந்த புறவு’, ‘கடவுள் தங்கிய காடு’ என்னும் தொடர்கள் கடவுள் காட்டில் உறைவதைக் குறிக்கின்றன.”[57]

“கோயில்கள் வளர்ந்தாலும் மரத்தினை மறக்காமல் அதற்கெனக் கோயில்களில் ஓரிடம் ஒதுக்கி அதில் மரத்தினையும் வைத்து வழிபடு பொருளாக்கினார்கள். இதற்குத் தலவிருட்சம் என்னும் பெயர் அமைந்தது. ‘விருட்சம்’ என்னும் சொல் ‘பெருகுதல்’ என்னும் பொருளைக் கொண்டது. ஒரு மரம் பலமரங்களாகப் பெருகுதல் போல மக்கள் வாழ்வும் மரங்களை வணங்குவதால் பெருகும் என்னும் நம்பிக்கை உள்ளது.”[58]

புட்டுசொக்கநாதர் கோயிலின் தலவிருட்சம் வன்னிமரம் ஆகும். பிட்டு வாணிகச்சி வன்னி மரத்தின் அடியில் அமர்ந்து பிட்டு செய்து சிவபெருமானுக்குக் கொடுத்ததால் வன்னிமரம் தல விருட்சம் ஆனது.

# அருள்மிகு திருஏடகநாதர் திருக்கோயில்

## திருஏடகம் அமைவிடம்

திருஏடகம் என்ற திருத்தலமானது மதுரையிலிருந்து, சோழவந்தான் செல்லும் பாதையில் 17கி.மீ தொலைவிலும் சோழவந்தான் புகைவண்டி நிலையத்திற்குத் தெற்கே சுமார் 5கி.மீ தொலைவிலும் அமைந்துள்ளது. தென்னை மரங்கள், மாமரங்கள் நிறைந்த, குளிர்ச்சியான பகுதியாக இத்தலம் வைகையாற்றின் கீழ்க்கரையில் அமைந்துள்ளது,

## திருவேடகத்தின் பெருமை

சைவக்குரவர்களால் பாடப்பெற்ற திருவேடகம் பாண்டிய நாட்டில் உள்ள பதினான்கு தலங்களுள் நான்காவது தலமாக உள்ளது. இவ்வூரில் எழுந்தருளியிருக்கும் ஏடகநாதரை அடிபணிந்து வணங்கினால் வினைகள் யாவும் நம்மை விட்டு நீங்கும் என்பதனை,

"பொய்கையின் பொழிலுறு புதுமலர்த் தென்றலார்
வைகையின் வடகரை மருவிய வேடகத்
தையனை யடிபணிந் தாற்றுமின் னடர்தரு
வெய்யவன் பிணிகெட வீசெளி தாகுமே"[59]

என்ற ஞானசம்பந்தரின் பாடல் உணர்த்தும். இத்திருத்தலத்தில் திருஞானசம்பந்தருக்கு தனிக்கோயில் அமைந்துள்ளது. திருஞானசம்பந்தர் வைகையில் இட்ட ஏடு கரையேறிய இடத்தில் திருஏடகநாதர் திருக்கோயில் அமைந்துள்ளது.

ஏடகத்தின் பெருமையைப் பரஞ்சோதியார்,

"அற்றைநாள் ஆதியாக 'ஏடகம்' என்னும் நாமம்
பெற்றதில் ஏடகத்தின் மேவிய பிரானைப் பாண்டிக்
கொற்றவன் சமணரோடும் கூடிய பாவம் எல்லாம்
பற்று அறப்பூசை செய்தும் பாசமும் கழியப் பெற்றான்"(திருவி.பு.,3247)

என்று பாடுவர்.

புராண வரலாறு

மதுரையை ஆண்ட நின்றசீர் நெடுமாறன் என்னும் பாண்டியன் ஆட்சியில் தொடக்கத்தில் சைவசமயம் செழித்திருந்தது. அவன் சோழன் மகளாகிய மங்கையர்க்கரசியை மணந்து கொண்டான். மங்கையர்க்கரசி சைவப்பற்று மிகுந்தவர். நெடுமாறன் சமண சமயத்தைத் தழுவ, மன்னன் எவ்வழியோ மக்களும் அவ்வழி என்பது போல் மக்களில் பலர் சமண சமயத்தைத் தழுவினர். எனவே சைவ சமயம் வீழ்ச்சியடைந்தது. இந்நிலைகண்டு வருந்திய மங்கையர்க்கரசியாரும் அமைச்சர் குலச்சிறையாரும் திருஞானசம்பந்தரின் பெருமைகளைக் கேள்விப்பட்டு சமண இருளைப் போக்கி சைவ ஒளி பரவ திருஞானசம்பந்தரை மதுரைக்கு வரவழைத்தனர். அவ்வாறு வந்த சம்பந்தர் நகரின் புறத்தே இருந்த மடத்தில் தங்கியிருந்தார். திருஞானசம்பந்தர் வந்தது கண்டு அச்சமுற்ற சமணர்கள் அவர் தங்கியிருந்த மடத்திற்குத் தீயிட்டனர்.

ஞானசம்பந்தரும்,

''பொய்யராம் கொளவும் சுடர் பையவே சென்று பாண்டியர்க்காக"[60]

என்று பாடினார். அப்பொழுது திருமடத்தில் வைத்த தீ வெப்பு நோயாக மாறிப் பாண்டியனைச் சென்று பற்றியது. வெப்பு நோயால் பாதிக்கப்பட்ட மன்னன் சமணர்களது மந்திரமும் மருந்துகளும் வேலை செய்யாமல் போனதால் திருஞானசம்பந்தரின் பெருமையினை அரசியார் மற்றும் குலச்சிறையார் மூலம்

கேள்வியுற்று ‘யான் உற்ற நோயை நீக்கினால் வென்றவர் பக்கம் சார்வேன்” எனக் கூறினார். திருஞானசம்பந்தர்,

“மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்திலுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கண்றிரு வாலவாயன்றிரு நீறே”[61]

என்ற திருப்பதிகத்தைப் பாடித் தமது கரத்தால் பாண்டியனுக்குத் திருநீறு பூச வெப்பு நோய் முற்றிலும் தீர்ந்தது. இவ்விரு நிகழ்வையும் பரஞ்சோதியார்,

“மருந்தும் மந்திரம் யாவையும்
மறைஉரைப் பதுவும்
பொருந்தும் இன்பவீடு அளிப்பதும்
போகமும் பொருளும்
திருந்தும் ஆலவா யான்திரு
நீறுஎனச் சிறப்பித்து
அருந்தும் இன்னமுது அனையசொற்
பதிகம்அது அறைந்து” (திருவி.பு.,3168)

என்று குறிப்பிடுகிறார்.

**அனல்வாதம்**

மன்னனின் வெப்பு நோய் குணம் அடைந்ததை அறிந்த சமணர்கள் தமது சமயத்திற்கு வீழ்ச்சி வந்ததாக அஞ்சி ஞானசம்பந்தரை அனல் வாதத்திற்கு அழைத்தனர். சம்பந்தர், **“போகமார்த்த பூண்முலையாள்”** என்னும் திருநள்ளாற்றுப் பதிக ஏட்டை நெருப்பிலிட ஏடானது நெருப்பில் எரியாமல் இருந்தது. சமணர்கள் இட்ட ஏடானது எரிந்து சாம்பல் ஆனது.

**புனல்வாதம்**

அனல்வாதத்தில் தோற்ற சமணர்கள் ஞானசம்பந்தரைப் புனல்வாதத்திற்கு அழைத்தனர். உடன் ஞானசம்பந்தர்,

“வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்

**வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக**

**ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே**

**சூழ்க வையகமும் துயர் தீர்கவே"**[62]

என்னும் திருப்பாசுரப் பதிக ஏட்டை வைகை ஆற்றில் இட்டார். சமணர்கள் **"அத்தி நாத்தி"** என்றெழுதிய ஏட்டை ஆற்றில் இட்டார்கள். சமணர்கள் இட்ட ஏடு ஆற்றோடு போயிற்று. ஞானசம்பந்தரது ஏடு மதுரையிலிருந்து வைகை நீரை எதிர்த்து, கிழக்கிலிருந்து மேற்காக நீந்திச் சென்றது. ஞானசம்பந்தர் திருப்பாசுரத்தில் **"வேந்தனும் ஓங்குக"** என்றதால் கூன்பாண்டிய மன்னனின் கூன் நிமிர்ந்து நின்றசீர் நெடுமாறன் ஆனான். ஆற்றில் பதிக ஏடு விட்ட செயலைப் பெரியபுராணம்,

**அந்தணர் தேவர் ஆன் இனங்கள் வாழ்க என்**

**றிந்தமெய்ம் மொழிப்பயன் உலகம் இன்புற**

**சந்த வேள்விகள் முதற் சங்கரர்க்கு முன்**

**வந்த அர்ச்சனை வழிபாடு மன்னவாம்"**[63]

என்றும், திருவிளையாடல்புராணம்,

**"சிறையேய் புனல்கழ் வேணுபுரச்செல்வர்**

**யாரும் தெளிவெய்த**

**மறையே வாய்மை உரையாகில் மறைகள்**

**முழுவதும் துணிபொருள்**

**பிறையேய் வேணிப்பிரான் ஆகில் பெருநீர்**

**எதிரே செல்க என**

**முறையே பதிகம் எடுத்து எழுதி விட்டார்**

**முழங்கி வருபுனலில்"** (திருவி.பு.,3224)

என்றும் குறிப்பிடுகிறது.

## திருவேடகம் தலப்பெயர்க் காரணம்

வைகை ஆற்றை எதிர்த்து ஏடு நீந்திச் சென்றதை அறிந்த ஞானசம்பந்தர் ஏடு நிலைத்து நிற்குமாறு,

**"வன்னியும் மத்த மதிபொதி சடையினன்**

**பொன்னியின் திருவடி புதுமலரை வைகொடு**

**மன்னிய மறையவர் வழிபட வடியவர்**

இன்னிசைப் பாடலா ரேடகத் தொருவனே”[74]

என்னும் திருப்பதிகத்தைப் பாடியவுடன் அந்த ஏடு வில்வமரங்கள் அடர்ந்த சூழலில் கரையோரமாக ஒதுங்கியது. ஒரு இலிங்கமும் அதன் பக்கத்தில் இருந்தது. மன்னனும் மற்றவர்களும் அதனைக் கண்டு மகிழ்ந்தனர். இலிங்கத்தை உள்ளடக்கி மன்னன் ஒரு கோயில் கட்டினான். பாட்டின் மேல் கருணை வைத்து இறைவன் சுயம்பு மூர்த்தியாகத் தோன்றியதை,

“பாட்டின் மேல் கருணை வைத்தார்
சுயம்பு வாய்ப் பராரை வில்வக்
காட்டினும் இருப்பு நேரே கண்டு
தாழ்ந்து எழுந்து சண்பை
நாட்டினர் வலம் கொண்டு ஏத்தி எதிர்
நின்றார் நகைத்தார் நிம்பத்
தோட்டினான் அது கேட்டு அங்கே
தோன்றினான் தானையோடும்” (திருவி.பு.,3240)

என்று திருவிளையாடல் புராணம் குறிப்பிடுகிறது. ஏடு (ஓலைச்சுவடி) தங்கிய இடம் ஆதலின் ஏடகம் ( ஏடு+அகம்) எனப் பெயர் பெற்றது. அதனால் தான் திருஞானசம்பந்தரும்,

“கோடு சந்தனமகில் கொண்டிழி வைகைநீ
ஏடு சென்றணைதரும் ஏடகத் தொருவனை
நாடு தென்புகலியுண் ஞான சம்பந்தன்
பாடல் பத்திவைவல்லார்க்கு இல்லையாம் பாவமே”[65]

என்று பாடினார். அன்று முதல் இவ்வூர் திரு என்ற அடைமொழியுடன் “திருவேடகம்” என்ற பெயர் பெற்று விளங்கி வருகிறது.

## தலத்தின் வேறுபெயர்கள்

திருவேடகம் என்பது இத்தலத்தின் பெயராகும். வில்வமரம் இத்தலமரமாக இருப்பதால் இத்தலத்திற்கு ‘வில்வாரண்யம்’ என்ற பெயரும் உண்டு. ஆதிசேடன் வழிபட்ட தலமாதலின் “சேடனூர்-திருவேடகம்”[66] என்ற பெயரிலும் இத்தலம் அழைக்கப்படுகிறது.

### மூலவரின் பெயர்கள்

'ஏடகநாதர்' என்பது இத்தல மூலவரின் பெயராகும். இவ்இறைவனை வடமொழியில் 'பத்திரா பரமேசுவரர்' என்று அழைக்கின்றனர்.

### அம்மனின் பெயர்கள்

ஏலவார்குழலி, சுகந்த குந்தளாம்பாள் என்பது இத்தல அம்மனின் பெயர்களாகும். ஏலவார்குழலி என்னும் பெயரினை,

**"ஏலமார் தருகுழ வேழையோடு எழில்பெறும்**

**கோலமார் தருவிடைத் குழகனர் உறைவிடம்"**[67]

என்னும் ஞானசம்பந்தரின் பாடல் அடிகளும் உரைக்கும். **'ஏலவார் குழலி'** என்பதற்கு ஏலம் போன்ற மனம் கொண்ட கூந்தலை உடையவள் என்பது பொருளாகும். **'சுகந்த குந்தளாம்பாள்'** என்றும் பிற்காலத்தில் வழங்கப்பட்டமை குறிப்பிடத்தக்கது.

### தீர்த்தங்கள்

பிரம்மனால் உண்டாக்கப்பெற்ற **'பிரம்ம தீர்த்தம்'** இங்குள்ளது. இத்தீர்த்தம் சித்தப் பிரமையைப் போக்கக் கூடியது. இந்த பிரம்மதீர்த்தக் குளத்தில் தைமாதம் மகத்தன்று தெப்பத்திருவிழா நடைபெறுகிறது. கோயில் நிறுவும் பொழுது குளமும் அமைத்தல் மரபாகும். அவ்வாறு குளம் வெட்டும் பொழுது அங்கே கிடைக்கும் நீரின் தன்மை, அதில் உள்ள மூலப்பொருட்கள், மூலிகை கலந்த சத்துக்கள், அவ்விடத்தில் நீர் ஆதாரம் முதலியவற்றை ஆய்வு செய்த பின்னரே குளத்தை உண்டாக்கியிருக்கிறார்கள். எனவே அக்குளத்தில் உள்ள தீர்த்தம் நோய் தீர்க்கும் தன்மை உடையதாய் அமைந்துள்ளது.

இத்தலத்தில் **'வைகைநதி'** மற்றொரு தீர்த்தமாக உள்ளது. இந்நதி காசியில் ஓடும் கங்கை போல் தெற்கு வடக்காக ஓடுகிறது. அதனால் வைகையில் நீராடி ஆலய வழிபாடு செய்தால் காசியில் வழிபாடு செய்த பலன் உண்டாகும்.

### தல விருட்சம்

வைகை நதிக்கரையில் வில்வமரங்கள் சூழ்ந்த இடத்தில் ஏடு கரை ஒதுங்கியதால் 'வில்வமரம்' இத்தலத்தின் தலமரமாக உள்ளது. சிவம் என்பது சூடு அல்லது அனல், சூட்டைத் தணிப்பது வில்வம். அதனால் தான் பெரும்பாலான

சிவன் கோயில்களில் வில்வமரம் தலவிருட்சமாக உள்ளது. இராசகோபுரத்தின் முன்னர் இருபுறமும் தலமரம் அழகுற அமைந்துள்ளது.

### திருக்கோயில்களின் தோற்றம்

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களைப் பற்றிக் கிடைத்துள்ள சான்றுகளை வைத்து ஆதிசொக்கநாதர் கோயில் யாரால் எப்பொழுது கட்டப்பட்டது என்று அறுதியிட்டுக் கூற முடியவில்லை. “இராணிமங்கமாள்(1689-1706) இக்கோயிலுக்கு மகாமண்டபம் எழுப்பித் திருப்பணிகள் செய்துள்ளார்.”[68]

### புட்டுசொக்கநாதர் கோயில்

புட்டுசொக்கநாதர் கோயில் திருமலைநாயக்க(1623-1659) மன்னரால் கி.பி.17 நூற்றாண்டில் கட்டப்பட்டது. பின்பு வாணிபச்செட்டியார் இனத்தாரால் 1886-இல் இக்கோயில் மகா மண்டபம் கட்டப்பட்டது. இன்றும் வாணிபச்செட்டியார் இனத்தாரால் இக்கோயில் பராமரிக்கப்பட்டு வருகிறது.

### திருஏடகநாதர் கோயில்

திருஏடகநாதர் திருக்கோயில் கருவறை நின்றசீர் நெடுமாறன் காலத்தில் கட்டப்பட்டது. அக்காலத்தில் மதுரையில் ஆட்சிபுரிந்து வந்த மன்னன் கூன்பாண்டியன் சமணச்சார்புடையவனாக இருந்தான். திருஞானசம்பந்தரால் சைவத்தை ஏற்ற பாண்டிய மன்னன் சிவத்தொண்டில் திளைத்து நின்றசீர் நெடுமாறன் என்ற பெயருடன் 63 நாயன்மார்கள் வரிசையில் இடம்பெற்றான். திருஞானசம்பந்தர் கி.பி.ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தார் என்பதால் நின்றசீர்நெடுமாறனும் அக்காலத்தவர் என்பதாகும். மன்னன் சைவத்திற்கு மாறக் காரணமாக இருந்த இத்தலத்தில் மன்னன் ஒரு கோயில் எழுப்பினான். அதுவே திருஏடகநாதர் திருக்கோயில்.

இக்கோயில் பழங்காலப் பாண்டியர் ஆட்சிக் காலமிருந்தே பல திருப்பணிகளுக்கு இடமாகி இருக்கிறது. 20-ஆம் நூற்றாண்டில் தேவகோட்டை நகரத்தார் மு.ப.-மு.கு. வகையறாக்கள் பெரும்பாலான வாகனங்களை இத்திருக்கோயிலுக்குச் செய்து வைத்திருக்கிறார்கள். மேலும் இங்கு தண்ணீர்ப் பந்தலும் வேதபாடசாலையும் வைத்துப் பராமரித்துள்ளனர்.

அதற்கு பின்பு 1930-இல் நகரத்தார் மரபில் வந்த உ.ராம.மெ.க.சேவுகன் செட்டியார், உ.ரா.மெசு.சேவுகன் செட்டியார், உ.ரா.மெசு.மெய்யப்பச் செட்டியார் ஆகிய மூன்று குடும்பத்தாரும் இணைந்து இக்கோயிலில் மகாமண்டபம், முன்மண்டபம் போன்றவற்றை எழுப்பியுள்ளனர். இன்றும் இவர்களின் வாரிசுகள் பரம்பரை அறங்காவலராக இருந்து வருகின்றனர்.

தொகுப்புரை

- மதுரையில் சுந்தரேசுவரர் நிகழ்த்திய 64 திருவிளையாடல்களைக் கொண்டு பல நூல்கள் இயற்றப்பட்டுள்ளன.
- அவற்றுள் மிகச் சிறந்ததாகக் கருதப்படுவது பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளையாடல் புராணம் ஆகும்.
- சிவபெருமானால் நிகழ்த்தப் பெற்ற 64 திருவிளையாடல்கள் மதுரையைச் சுற்றி பல இடங்களில் நடந்தது. அவற்றில் **இடைக்காடன் பிணக்குத் தீர்த்தது, மண் சுமந்தது, சமணரைக் கழுவேற்றியது** என்னும் மூன்று முக்கிய திருவிளையாடல்கள் நடந்த இடங்களில் அவற்றின் நினைவாக எழுந்த அருள்மிகு **ஆதிசொக்கநாதர் கோயில், புட்டுசொக்கநாதர் கோயில், திருஏடகநாதர் கோயில்** என்னும் திருக்கோயில்கள் முக்கியமானவை.
- வடமொழிப் புராணங்களை மகாபுராணம், உபபுராணம், அதிபுராணம் என மூன்று வகைப்படுத்துவர். இவை ஒவ்வொன்றும் பதினெட்டு வகைப்படும். மகாபுராணம் பதினெட்டில் **காந்தபுராணம்** மிகச் சிறந்ததாகும். இது ஆறு சங்கிதைகளைக்(தொகுதி) கொண்டது. அவற்றுள் **சங்கரசங்கிதை** என்னும் பகுதியிலிருந்து பரஞ்சோதி முனிவரால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது திருவிளையாடல் புராணம் ஆகும்.
- புராணம் என்ற சொல்லாட்சி தமிழில் இரட்டைக் காப்பிய காலத்திலேயே தோன்றி விட்டது.
- தமிழில் புராணங்கள் கடவுளின் பராக்கிரமங்களைக் கூறுதல், தலமகிமையைக் கூறுதல், அடியவர்களின் பெருமையைப் பேசுதல் என்ற வகையில் அமைந்துள்ளது. பிறமொழித் தழுவல் இன்றித் தமிழில் புராணம் என்னும் பெயருடன் தோன்றிய முதல் நூல் **சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணம்** ஆகும்.
- திருவிளையாடல் புராணம் மதுரைக் காண்டம், கூடற்காண்டம், திருவாலவாய்க் காண்டம் என முப்பெரும் பிரிவுகளைக் கொண்டது. இதில் தல விசேடம், தீர்த்த விசேடம், மூர்த்தி விசேடம் என்ற மூன்றும் சிவபெருமானின் திருவிளையாடல்கள் அறுபத்து நான்கும் அருச்சனை புரிந்த செயல் ஒன்றும் சேர்த்து அறுபத்து எட்டுப் படலங்களாக அமைந்துள்ளன. இந்நூலில் உள்ள மொத்தப் பாடல்களின் எண்ணிக்கை 3363 ஆகும்.
- பரஞ்சோதி முனிவரின் காலம் பற்றி அறிஞர்களுக்கிடையே பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன. பெரும்பான்மையோரின் கருத்து கி.பி 17-ஆம் நூற்றாண்டு என்பதாகும்.

- ஆதிசொக்கநாதர் கோயில் வரலாற்றுப் பழமை வாய்ந்தது. இராணிமங்கம்மாள் இக்கோயிலுக்கு திருப்பணி செய்துள்ளார்.
- புட்டுசொக்கநாதர் கோயில் திருமலைநாயக்கரால் கட்டப்பட்டது.
- திருஏடகநாதர் கோயில் நின்றசீர்நெடுமாறன் காலத்தில் கட்டப்பட்ட சிறப்புடையது.

சான்றெண் விளக்கம்

1. கலைக்களஞ்சியம், தொகுதி-7, முதற்பதிப்பு, ப.436.
2. மருததுரை, புராண இலக்கிய வரலாறு, ப.15.
3. மு.அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, ப.6.
4. கலைக்களஞ்சியம், தொகுதி-7, ப.436.
5. இரா.பாலசுப்பிரமணியன், புராணவியல், ப.1.
6. “The word is derived from the Greek word mythos, which means word or speech and is akin to our word mouth”-oxford junior Encyclopedia, p.332.
7. திவாகர முனிவர், சேந்தன் திவாகரம்,12: 169.
8. மேலது, 12: 170.
9. கந்த புராணம், பாயிரப்படலம், பக்.54-55.
10. பேரா.ச.வையாபுரிப் பிள்ளை, இலக்கிய உதயம், ப.127.
11. Encyclopedia of Religion and Ethics, p.668.
12. மணிமே., 27: 98-99.
13. சிலப்., 10: 179.
14. மணிமே., 5: 98.
15. மேலது, 27: 108.
16. மு.அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, தொகுதி-7, ப.183.
17. மேலது, தொகுதி-10, ப.xi.
18. பிரபந்த மரபியல், 21.
19. சிதம்பரப் பாட்டியல், 43.
20. அறுவகை இலக்கணம், 518.
21. புராண இலக்கியச் சிந்தனைகள், ப.8.
22. காரமடை அருணை அருள் முருக அடிகளார், காரமடைத் தலபுராணம், ப.163.
23. மணிமே., 21: 169.
24. சிலப்., 11: 18.
25. மேலது, 11: 24-25.
26. மேலது, 23: 49-50.
27. மேலது, 11: 99-103.
28. ச.வே.சுப்பிரமணியம், தமிழ் இலக்கிய வகையும் வடிவும், ப.287.

29. வே.இரா. மாதவன், தமிழில் தலபுராணங்கள், ப.35.
30. மு.அருணாசலம், மு.நூ., ப.184.
31. வையாபுரிப் பிள்ளை, ஆராய்ச்சித் தொகுதி, தொகுதி-7, பக்.39-40.
32. மேலது, ப.40.
33. அ.கலாநிதி, சுப்பிரமணியனின் ஆய்வுகள் பார்வைகள், பதிவுகள், தொகுதி-2, ப.14.
34. தாயுமானவர் பாடல்கள், பராபரக்கண்ணி, பா.156.
35. மாணிக்கவாசகர், திருக்கோவையார், பேராசிரியர் உரை, பா.1.
36. வ.ஜோதி, திருவிளையாடல் புராணம் உரை, ப.10.
37. தொல்.,பொருள்., 255.
38. தொல்.,மெய்ப்., 11.
39. கம்பராமாயணம், பாயிரம், பா.1.
40. ஸ்ரீஅருணந்தி நாயனார், சிவஞான சித்தியார், பா.36.
41. கல்லாடம், 96: 14.
42. நேர்காணல், புலவர் நீ.சி.சுந்தரராமன், நாள். 9.6.2018.
43. விமலானந்தம், மதுரை சங்கத்தமிழ் இலக்கிய வரலாறு, ப.182.
44. கே.கே.பிள்ளை, தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், ப.411.
45. மு.அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, தொகுதி-7, ப.365.
46. வே.இரா.மாதவன், தலபுராண நூலாசிரியர்கள் வரிசை, ப.127.
47. Shulman David Dean, Tamil Temple myths, pp.353-354.
48. T.P.Meenakshi sundaram, A History of Tamil Literature, p.167.
49. திருவாசகம்., 2: 18.
50. மேலது, 4: 164-165.
51. பழைய திருவிளையாடல் புராணம், பா.237.
52. ச.மெய்யப்பன், மதுரை மீனாட்சி, ப.45.
53. மேலது, ப.66.
54. திருவாசகம்., 8: 2: 47.
55. மேலது. 8: 30: 2.
56. மேலது, 8: 8: 8.
57. தா.ஏ.ஞானமூர்த்தி, யுகந்தோறும் மாறும் தல மரங்கள், ஆய்வுக்கோவை(1991), ப.766.
58. இரா.பாலசுப்பிரமணியன், புராணவியல், ப.84.
59. க.கைலாசநாத குருக்கள், சைவத்திருக்கோவிற் கிரியை நெறி, பக்.53-54.
60. திருஞா.தேவா. 3: 345: 6.

61. மேலது, 3: 309: 1.
62. மேலது, 2: 202: 1.
63. மேலது, 3: 340: 1.
64. பெரிய.புரா., 4: 821.
65. திருஞா.தேவா. 3: 340: 1.
66. மேலது, 3: 349: 11.
67. மேலது, 3: 349: 3.
68. மேலது, 3: 343: 4.

# இயல் - 2

## திருக்கோயில்கள் அமைப்பும் திருவுருவங்கள் அமைதியும்

கட்டடத்தை வடிவமைக்கக் கூடிய கலையே கட்டடக்கலை எனப்படும். கட்டடம் என்பது அதன் எகலைநயத்தால் மகிழ்ச்சியைத் தருவதோடு பாதுகாப்பு அரணாகவும் விளங்குகிறது. ஒரு நாட்டின் நாகரீகத்தின் கருவாய்த் திகழ்வது அதன் கட்டடக்கலையே ஆகும். ஒரு நாட்டின் மக்கள் வாழும் வாழ்க்கை முறை, அறிவின் வளர்ச்சி, ஆட்சிமுறை ஆகியவற்றை அந்நாட்டின் கட்டடக்கலை அமைப்பைக் கொண்டே அறிய இயலும். ஒரு நாட்டின் அகத்தோற்றப் பொலிவாக விளங்குகின்ற பண்பாட்டை வளர்க்கக் கலையியல் உற்ற துணையாகத் திகழ்கிறது.

அவ்வகையில் கட்டடக்கலையையும் சிற்பக்கலையையும் தன்னிடத்தே கொண்டுள்ள ஆதிசொக்கநாதர் கோயில், புட்டுசொக்கநாதர் கோயில், திருஏடகநாதர் கோயில் ஆகிய மூன்று திருக்கோயில்களின் அமைப்பு முறை மற்றும் தெய்வங்களின் திருவுருவ அமைதிகள் குறித்து விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

### கோயில் (அ) ஆலயம் பெயர்க்காரணம்

இறைவனை வழிபடுவதற்காக அமைக்கப்பட்ட இடம் கோயில் அல்லது ஆலயம் என்ற பெயர்களில் சுட்டப்படுகிறது. கோயில்=கோ+இல். கோ-என்பது இறைவன். இல்-என்பது இறைவன் உறையுமிடம் எனப்பட்டது. கோ-என்பது முன்னர் மன்னர்களைக் குறித்தது. அதுவே பின்பு இறைவனைக் குறித்த சொல்லாக மாறியது. ஆலயம்=ஆ+லயம். ஆ என்பது ஆன்மா, லயம் - என்பது ஒன்றுவது, சேருவது எனப்படும். எனவே ஆன்மாவானது இறைவனைச் சேரும் இடம் எனப்படுகிறது. இது ‘‘ஆ என்பது ஆணவ மலத்தையும் லயம் என்பது அடங்கியிருத்தலையும் குறிக்கும். அதனால் ஆலயம் ஆன்மா அடங்குவதற்குரிய இடம்”[1] எனவும் பொருள் கொள்ளப் பெறுகிறது.

### கோயிலின் வேறுபெயர்கள்

இறைவன் குடிகொண்டுள்ள இடம் கோயில் எனப்படுகிறது. இவை கோயில் என்பதோடு மட்டுமில்லாமல் கோட்டம், நியமம், நகரம், பள்ளி எனப் பலபெயர்களால் சுட்டப்படுகின்றது. இதனை,

**‘‘நுதல்விழி நாட்டத்து இறையோன் கோயிலும்,**
**உவணச் சேவல் உயர்ந்தோன் நியமமும்,**
**மேழி வலன் உயர்ந்த வெள்ளை நகரமும்,**
**கோழிச் சேவற்கொடியோன் கோட்டமும்,**

**அறத்துறை விளங்கிய அறவோர் பள்ளியும்**

**மறத்துறை விளங்கிய மன்னவன் கோயிலும்"**[2]

என்னும் பாடலடிகள் விளக்கும்.

**கோயில்**

கோயில் என்ற சொல்லாட்சி சங்க காலத்திலிருந்தே பயன்படுத்தப்பட்டு வந்துள்ளது.

**"கோயிலுள் கண்டார் நகரமை வேண்டுவல்"**[3] எனக் கலித்தொகையிலும்,

**"சிலம்பிற் சிலம்புங் கோயில்"**[4] என நெடுநல்வாடையிலும்,

**"திருக்கிளர் கோயில் ஒருசிறைத் தாங்கி**

**தவம்செய் மாக்கள் தம் உடம்பு இடாஅது"**[5]

**"வெண்கோயில் மாசு ஊட்டும்"**[6]

என்று பட்டினப்பாலையிலும் கோயில் என்ற சொற்கள் கையாளப்பட்டிருப்பதிலிருந்து சங்ககாலத்திற்கு முன்பே கோயில் இருந்திருக்க வேண்டும் என்பதனை உணரமுடிகிறது. மேலும்,

**"...... இறைக் கண்டன் னுறைக்கோயில்"**[7]

என்பதில் கோயில் என்ற சொல்லாட்சியை அப்பர்பெருமான் பயன்படுத்தியுள்ளார். இவற்றிலிருந்து கோயில் என்ற சொல்லாட்சி தொன்று தொட்டு பயன்படுத்தப்பட்டு வந்தமையை அறியமுடிகிறது.

**கோட்டம்**

கோயிலுக்குக் கோட்டம் என்ற ஒரு பெயரும் உண்டு. இதுவும் சங்க காலத்திலிருந்தே பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை,

**"புத்தேளிர் கோட்டம் வலம் செய்து"**[8]

**"அணங்குடை முருகன் கோட்டத்து"**[9]

**"உருகெழுதிறல் உயர்கோட்டத்து"**[10]

**"கோழி சேவற் கொடியோன் கோட்டமும்"**[11]

என்னும் தொடர்கள் விளக்கும்.

## திருக்கோயில்களின் வகைகள்

கி.பி.7-ஆம் நூற்றாண்டு வரையில் திருக்கோயில்கள் எங்ஙனம் இருந்தன என்பதனை, அப்பர் பெருமானின் தேவாரப் பாடலொன்று வகைப்படுத்துகின்றது.

**"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்**
**பெருங்கோயில் எழுபதினோ டெட்டும் மற்றும்**
**கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற் கோயில்**
**கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக் கோயில்**
**இருக்கோதி மறையவர்கள் வழிபட் டேத்தும்**
**இளங்கோயில் மணிக்கோயில் ஆலக் கோயில்**
**திருக்கோயில் சிவனுறையும் கோயில் சூழ்ந்து**
**தாழ்ந்தினறைஞ்சத் தீவினைகள் தீரு மன்றே"**[12]

இதன் வழி பெருங்கோயில்கள் எழுபத்தெட்டு இருந்துள்ளதை அறியமுடிகிறது.

இது தவிர கரக்கோயில், ஞாழற்கோயில், கொகுடிக்கோயில், இளங்கோயில், மணிக்கோயில், ஆலக்கோயில் என்ற அமைப்புடைய கோயில்கள் அமைத்து வழிபட்டு வந்ததையும் அறியமுடிகிறது.

## பெருங்கோயில்

பெருங்கோயில் எனப்பெறும் கோயில் குன்றுகளின் மேல் அமைக்கப்பெறுபவை. இதனை மலைக்கோயில் என்றும் குன்றல்லாமல் உயரமாகக் கட்டப்பட்ட கோயிலை மாடக்கோயில் என்றும் குறிப்பிடுவர். இவை யானைகள் ஏறாவண்ணம் உயரமாகக் கட்டப்பட்டனவென்றும் யானை படுத்திருப்பது போல் தோன்றுவதால் தூங்கானை மாடம் என்றும் கூறப்படுகிறது. நன்னிலம், குடவாயில், வைகல், தண்டலைச்சேரி, பெண்ணாடகம் என்னும் ஊர்களில் இத்தகு கோயில்கள் அமைந்துள்ளன.

## கரக்கோயில்

கரக்கோயில் என்பது தேர் வடிவமாகச் சக்கரங்களோடு அமைக்கப்பெற்ற கோயிலாகும். கருவறை, இரதம் போன்று அமைக்கப்பட்டு குதிரைகள் இழுத்துச் செல்வது போன்று அமைப்புடன் விளங்கும். இக்கோயில் சிதம்பரத்திற்கு அருகில் உள்ள கடம்பூரில் அமைந்துள்ளது.

### ஞாழற்கோயில்

நறுஞ்சோலைகளின் நடுவே அமைந்த கோயில் ஞாழற்கோயில் எனப்படும். ஞாழல் என்பது கொன்றை மரத்தின் ஒருவகை. இம்மரத்தின் அடியில் எழுந்தருளிய இறைவன் 'ஞாழற்பெருமான்' ஆவார். ''திருப்பாதிரிப்புலியூர் கோயில் கல்வெட்டில் இத்தகைய கோயில் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.''[13]

### கொகுடிக்கோயில்

கொகுடி என்பது ஒரு மரத்தின் பெயர். அம்மரத்தினால் அமைக்கப்பட்ட கோயிலுக்குக் கொகுடிக் கோயில் என்று பெயர். ஆனால் இது தவறு என்கிறார் மயிலை சீனி. வேங்கடசாமி."[14] இதன் அமைப்பினைத் திட்டமாகக் கூற இயலாது என்கிறார்.

ஞானசம்பந்தரும்,

> **"குற்றமறியாத பெருமான் கொகுடிக் கோயிற்**
>
> **கற்றென விருப்பது கருப்பறிய லூரே"**[15]

என்று கூறுகிறார். இதன் வழி கருப்பறியலில் உள்ள கோயில் கொகுடி வகை சார்ந்த கோயிலென்பது பெறப்படும்.

### இளங்கோயில்

நாள் வழிபாடு தடையின்றி நடைபெறுவதன் பொருட்டும் பழைய கோயிலைப் புதுப்பிக்கும் பொருட்டும் கருவறையில் உள்ள பெருமானை அவற்றிற்கருகில் எழுந்தருளச் செய்து வழிபாடு செய்யும் கோயில் இளங்கோயில் எனப்படும். இடைக்கால வழிபாட்டிற்காக அமைக்கப்பெற்ற இச்சிறிய கோயிலை 'பாலாலயம்' எனவும் வழங்குவர். இது தனிக் கோயிலாகவே காட்சியளிக்கின்றது.

''சித்தூர் நாட்டில் இக்காலத்தில் திருச்சானூர் என வழங்கும் ஊரில் ஈசனார் அமைந்தருளிய இடம் இளங்கோயில் என்பது சாசனங்களில் விளங்குகின்றது. திருவேடகக் கோட்டத்து கடவூர் நாட்டுத் திருச்சானூரில் உள்ள இளங்கோயில் பெருமான் என்பது சாசன வாசகம், இவ்வூரின் பெயர் திருச்சானூர் என்றும் சித்திரநானூர் என்றும் சிதைந்து வழங்குவதாக''[16] இரா.பி.சேதுபிள்ளை குறிப்பிடுகின்றார். கடம்பூர், மீய்ச்சூரில் உள்ள கோயில்கள் இளங்கோயில்கள் ஆகும்.

### மணிக்கோயில்

மணி போன்ற விமான அமைப்பைக் கொண்ட கோயில் மணிக்கோயிலாகும். பிற்கால கட்டடங்களில் எழுந்த கோயில்களில் இவ்வமைப்பைத் தெளிவாகக் காணமுடிகிறது. ''மணிக்கோயில் எனப்படுவது ஆறு அல்லது எட்டுப்பட்டையான சிகரமுள்ள கோயிலாக இருக்கக்கூடும்''[17] என்பர் மயிலை சீனி. வேங்கடசாமி.

**"நாமரு கேள்வியர் வேள்வியோவா**

**நான்மறை யோர்வழி பாடுசெய்ய**

**மாமரு வும்மணிக் கோயின்மேய**

**மருக ணிலாவிய மைந்த சொல்வாய்"**[18]

என்பதன் வழி 'மணிக்கோயில்' இருந்தமையை அறியமுடிகிறது.

### ஆலக்கோயில்

ஆலக்கோயில் என்பது கோயில் வகைகளில் ஒன்று. இதனை ஆனைக்கோயில் என்றும் குறிப்பிடுவர். சிற்ப நூல்களில் இக்கோயில் "கஜபிருஷ்ட, ஹஸ்திபிருஷ்ட விமானக் கோயில் என்றும் கூறப்படுகிறது. கஜம், ஹஸ்தி என்னும் சொற்களுக்கு யானை என்பது பொருள் யானையின் முதுகுபோல இக்கோயில் அமைந்திருப்பதால் இதற்கு இப்பெயர் ஏற்பட்டது."[19] என்பர். திருவெற்றியூர், திருக்கழுக்குன்றம், திருவானைக்கா முதலிய கோயில்கள் ஆலக்கோயிலாகும்.

### இலக்கிய இலக்கணங்களில் கோயில்கள்

தொல்காப்பிய அகத்திணையியலில் முதல், கருப்பொருட்கள் பற்றிக் குறிப்பிடுகின்ற பொழுது தெய்வமானது முன்னிலைப் படுத்தப்பட்டுள்ளது.

**"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை**

**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**

**அவ்வகை பிறவும் கருவென மொழிப"**[20]

என்னும் கருப்பொருள் பற்றிய நூற்பா மனிதன் உயிர்வாழத் தேவையான உணவுக்கு முன்னர் தெய்வத்தை முதலாவதாகச் சுட்டுதல் குறிப்பிடத்தக்கது.

இவ்வாறாக முன்னிலைப்படுத்தப்பட்ட தெய்வம் அந்தந்த நிலத்திற்கு ஏற்றாற்போல் பாகுபடுத்தப் பட்டதை,

**"மாயோன் மேய காடுறை உலகமும்**

சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"[21]

என்ற தொல்காப்பிய நூற்பாவின் வழி அறியமுடிகிறது.

"நீரு நிலனுந் தீயும் வளியும்
மாக விசும்போ டைந்துட னியற்றிய
மழுவா ணெடியோன் றலைவ னாக"[22]

என்பதில் உள்ள 'மழுவான் நெடியோன்' சிவன் ஆவான்.

"நுதல்வழி நாட்டத்து திறையோன் முதலாப்
பதிவாழ் சதுக்கத்துத் தெய்வ மீறாக"[23]

என்பதில் சாத்தனார் சிவபெருமானை முதலாவதாகச் சுட்டுவது குறிக்கத்தக்கது.

## பழங்காலக் கோயிலும் அதன் கட்டட அமைப்பும்

பழங்காலத்தில் தெய்வங்களானது மரத்தடியிலும் இதர இடங்களிலும் இருந்தன. தெய்வங்கள் உறையும் கோயில்கள் மண்ணாலும் மரத்தாலும் சுட்ட செங்கற்களாலும் சுண்ணாம்பு கொண்டும் அமைக்கப்பட்டது. பாதுகாப்பிற்காகச் சுற்று மதில்களும் வெயிலிலும் மழையிலும் பாதிக்கப்படாமல் இருக்க மேற்கூரையும் வேயப்பட்டிருந்தது.

"இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென
மணிப் புறாத்துறந்த மரஞ்சேர் மாடத்து
எழுது அணி கடவுள் போகலின்"[24]
"தாமரைப் பொகுட்டின் காண்வரத் தோன்றிச்,
சுடுமண் ஓங்கிய நெடு நகர் வரைப்பின்"[25]
" ...... தண்டமிழ் நூற்பல வாணர்கோர்
அம்மானே பரவையுண் மண்டளி அம்மானே"[26]
"மண்ணினுங் கல்லினும் மரத்தினுஞ் சுவரினும்
கண்ணிய தெய்வதங் காட்டுநர் வகுக்க"[27]
"காடமர் செல்வி கழிபெருங் கோட்டமும்

...... ......  ...... ......

**குறியவும் நெடியவும் குன்றுகண் டன்ன**

**சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டமும்"[28]**

என்பன போன்ற பாடல்அடிகள் பழங்காலத்தில் கோயிலானது மண், கல். மரம் ஆகிய பொருட்களைக் கொண்டு கட்டப்பட்டிருந்ததைப் புலப்படுத்துகின்றது.

## மரக்கட்டடங்கள்

பழங்காலத்தில் கோயில்கள் முழுவதும் கற்கள் இல்லாமல் மரங்களைக் கொண்டு அமைக்கப்பட்டிருந்தன. இவ்வமைப்பு கொண்ட கோயிலினை பாண்டிய நாட்டில் இன்று காண்பதிற்கில்லை. இம்மரக்கட்டட அமைப்பினைக் கொண்ட கோயில்கள் எளிதில் பழுதடைந்து போயின. எனவே அதன் மேலுள்ள பகுதியில் (கூரைப்பகுதி) செப்புத்தகட்டினைப் பொருத்தினால் செப்புத்தகட்டினால் பொருத்தப்பட்ட பகுதியானது எளிதில் பழுதடையாமல் இருந்தது. அக்கால மன்னர்கள் கோயில் விமானக் கூரையின் மேல் செப்புத் தகடுகளையும் பொன்னால் ஆகிய தகடுகளையும் பொருத்தினர்.

மரக்கட்டடங்களாக இருந்த சிலகோயில்கள் பிற்காலத்தில் கற்றளிகளாக மாற்றியமைக்கப்பட்டன. இதற்குச் சான்றாக சிதம்பரம் நடராசர் கோயில் அமைந்துள்ளது.

## செங்கற் கட்டடங்கள்

மரங்களால் கட்டப்பட்ட கோயில்கள் விரைவில் பழுதடைந்ததோடு மட்டுமல்லாமல் எளிதில் தீப்பற்றக்கூடிய வகையிலும் இருந்தன. எனவே செங்கல், சுண்ணாம்பு முதலிய பொருட்களைக் கொண்டு கோயில் கட்டடங்களை எழுப்பினர். "இக்கட்டடங்கள் ஏறக்குறைய 200 அல்லது 300 ஆண்டுகளுக்கு மேல் நிலைபெறுவதில்லை. கி.பி. 600-க்கு முற்பட்ட காலத்தில் இருந்த நமது நாட்டுக் கோயிற் கட்டடங்கள் எல்லாம் செங்கல் கட்டடங்களே"[29] என்பர் மயிலை சீனி.வேங்கடசாமி.

## குடைவரைக்கோயில்

கோயில்கள் செங்கல், சுண்ணாம்பு, மரம் போன்றவற்றால் கட்டப்பட்டதால் அவை விரைவில் அழிந்தன. அதனால் அவை இல்லாமல் கோயில்கள் உருவாக்க எண்ணி மிகப்பெரிய கற்பாறைகளைக் குடைந்து அதனுள் தூண்கள், முகமண்டபம், மகாமண்டபம், கருவறை முதலியவைகளை முதன்முதலில் அமைத்தவன் பல்லவ மன்னன் மகேந்திரவர்மன் ஆவான். இவன் ஆட்சிக்காலம் கி.பி. ஏழாம் நூற்றாண்டின்

முற்பகுதி ஆகும். “தமிழகத்தில் ஆட்சி செய்த பல்லவர்கள் சாளுக்கியருடன் கொண்டிருந்த தொடர்பினால் முதன் முதலில் குடைவரைக் கோயில்களைக் குடைவித்தனர்.”[30] பின்னர் பல்லவரது சமகாலத்தவரான பாண்டியர், பல்லவரது கலைப்பாணியைப் பின்பற்றியும் அவற்றில் சிலமாற்றங்கள் செய்தும் குடைவரைகளைப் பாண்டிய நாட்டில் தோற்றுவித்தனர்.”[31] பாண்டியரைப் பின்பற்றி முத்தரையரும் அதியன்களும் ஒருசில கோயில்களை அமைத்தனர்.

**ஒற்றைக்கல் ரதங்கள்**

ஒற்றைக்கல் ரதங்கள் என்பன மகாபலிபுரத்தில் முதலாம் நரசிம்மப்பல்லவனால் தோற்றுவிக்கப்பட்ட ‘‘பஞ்சபாண்டவ ரதங்கள்’’ எனப்படும் கற்சிற்பங்கள் ஆகும். இவை ஒவ்வொன்றும் ஒரே கல்லில் செதுக்கப்பட்டுள்ளதால் இப்பெயர் பெற்றன. மகேந்திரவர்மனுக்குப் பிறகு அவன் மகன் மாமல்லன் என்னும் நரசிம்மவர்மன் மாமல்லபுரம் முதலிய இடங்களில் குடைவரைக் கோயில்களையும் கல் ரதங்களையும் நிர்மாணித்திருக்கிறான். இவ்ஒற்றைக் கல் ரதங்களே தமிழகத்தில் பின்னர் தோன்றிய கட்டுமானக் கோயில்களுக்கு அடிப்படையாக அமைந்தன. இதனை அடுத்துப் பாண்டிய நாட்டில் கழுகுமலையில் அமைந்துள்ள வெட்டுவான் கோயிலை ஒற்றைக்கல் ரதத்திற்கு உதாரணமாகக் கூறலாம்.

மகேந்திரன் காலத்து அமைந்த குடைவரைகள் மிகச் சாதாரணமானவை. தூண்கள் நிறைந்த முகமண்டபமும் உள்ளே தள்ளியிருக்கும் அர்த்தமண்டபமுமே பல குடைவரைகளில் காணமுடிகிறது. அதிகமான குடைவரைகளில் கருவறை இருப்பதில்லை. தூண்கள் கூட போதிகை இல்லாத சாதாரணத் தூண்களாகவும் போதிகை இருந்தாலும் சாதாரணமாகவே அமைந்துள்ளது. அடியிலும் மேல்தளத்திலும் நான்கு பட்டையும் இடையே எட்டுப்பட்டை வடிவமும் உள்ள தூண்கள் தான் அதிகமாகக் காணப்பட்டாலும் சிலகுடைவரைகளில் பல்லவர் சின்னமான சிம்மம் தூண்களைத் தாங்கி நின்ற நிலையில் காணப்படுகிறது.

நரசிம்மவர்மன் காலத்தில அமைக்கப்பட்ட குடைவரைகளை விட அவன் அமைத்த கல்ரதங்களே மிக்க வேலைப்பாடுகள் உடையவை. பின்னர் தமிழ்நாட்டில் தோன்ற இருக்கும் கோயில்களுக்கு முன்மாதிரியாக அமைந்தவை.

**கட்டுமானக் கோயில்கள்**

குடைவரைக் கோயில்களையும் ஒற்றைக்கல் ரதங்களையும் தோற்றுவித்த பல்லவர் கட்டுமானக் கோயில்களையும் கட்டினர். பல்லவர்களில் இராஜசிம்மன் எனப்படும் முதலாம் பரமேசுவரவர்மனால் கட்டப்பட்ட மாமல்லபுரத்துக் கடற்கரைக் கோயிலும் காஞ்சி கைலாசநாதர் கோயிலும் தமிழகக் கட்டடக்கலை வரலாற்றில்

முதலாவதாகத் தோன்றிய கட்டுமானக் கோயில்கள் எனப்படுகின்றன. தமிழகத்தில் பல்லவர்கள் பல கட்டுமானக் கோயில்களைக் கட்டத்துவங்கியவுடன் பாண்டியரும் நிறுவத் தொடங்கினர். பாண்டியரது கட்டுமானக் கோயில்களை இரண்டாகப் பிரிக்கலாம். அவை:

1. முற்காலப் பாண்டியர் 2. பிற்காலப் பாண்டியர்

சோழர்கள் ஆட்சிக்கு வந்தபொழுது தமிழகத்தில் குடைவரைக்கோயில் அமைக்கும் முறையானது மறைந்து கொண்டிருந்தால் சோழர்கள் நேரடியாகக் கட்டுமானக் கோயில்களை அமைத்தனர். தமிழகக் கட்டுமானக்கோயில்களின் வளர்ச்சியில் பெரும் சாதனை படைத்தவர்கள் சோழர்களாவர். சோழர்காலத்தில் கட்டப்பட்ட இருநூற்றுக்கும் மேற்பட்ட கோயில்களில் ஒருசிலவற்றைத் தவிர பிற நல்லநிலையில் இருக்கின்றன. தமிழகத்தில் பல்லவர், பாண்டியர், சோழர்களைத் தொடர்ந்து கட்டடக்கலை வளர்ச்சியில் குறிப்பிடத்தக்கவர்கள் விஜயநகர, நாயக்கராவர். நாயக்கரது கட்டடக்கலைப்பாணி விசயநகரத்து கட்டடக்கலைப்பாணியை அடியொற்றியதே என்றாலும் அதில் சற்று வளர்ச்சியடைந்த நிலையினை நாயக்கரது கட்டடக்கலையில் காணஇயலும். இவர்களது கட்டடக்கலையில் வளர்ச்சி நிலையே தமிழகத்தின் கோயில் கட்டடக்கலை வளர்ச்சியின் இறுதி நிலையாகக் கொள்ளப்படுகிறது.

## கோயிலின் பொது அமைப்பு

பொதுவாகச் சிவாலயங்களில் ஒரு வாயில் மட்டுமே உள்ள மூலத்தானத்தில் சிவலிங்கத்தைப் பிரதிட்டை செய்வர். இவ்விடம் சிறியதாகவே இருக்கும். இதனை அடுத்து அர்த்தமண்டபம் இருக்கும். இதன் வெளியே இரு துவாரபாலகர்கள் வாயிற் காவலர்களாக நிற்பர். அடுத்து மகாமண்டபம் எனப்படும் பெரிய மண்டபம் இருக்கும். இங்கிருந்து மக்கள் இறைவனை வணங்குவர். இங்கு நந்தி இருக்கும். மூலவரான சிவலிங்கத்திற்கு வலப்பக்கம் விநாயகப் பெருமானும் இடப்பக்கம் முருகனும் எழுந்தருளியிருப்பர். திருச்சுற்றில் சண்டிகேசுவரரும் கொடிமரம், பலிபீடம், பெரியநந்தி ஆகியவையும் இடம் பெற்றிருக்கும்.

மூலத்தானத்தின் மீது விமானம் கட்டப்பட்டிருக்கும். அதன் உச்சியில் கலசங்கள் பொருத்தப்பட்டிருக்கும். வெளி வாயிலில் சுதைச் சிற்பங்கள் நிறைந்த கோபுரமும் அதனை இணைத்தாற் போன்று திருச்சுற்று மதில்களும் காணப்படும். இம்மதில் மேல் நந்தி, சிவகணங்கள் ஆகியவை அமைக்கப்பட்டிருக்கும். கோயிலின் வெளித்திருச்சுற்றில் தல விருட்சமும் கோயிலின் வெளியே அதன் அருகில் திருக்குளமும் அமைந்திருக்கும். சுவாமி சன்னதிக்கு வலப்பக்கத்தில் அம்மன் சன்னதி அமைந்திருக்கும்.

கோயில் அமைப்பில் ஐந்து வகையான லிங்கங்கள் அமைந்திருப்பதாக சைவ மரபு கூறுகிறது. அவை:

கோபுரம் - தூலலிங்கம்

கருவறை - சூட்சுமலிங்கம்

பலிபீடம் - ஆதிசூட்சுமலிங்கம்

கொடிமரம் - காரணலிங்கம்

மூலலிங்கம் - மகாகாரணலிங்கம் என்பனவாகும்.

ஆலய அமைப்பில் கோபுரம், கருவறை, பலிபீடம், கொடிமரம் போன்றவை வேறு தோற்றத்தில் காணப்பட்டாலும் அவையும் சிவபெருமானின் வேறுவடிவங்கள் என்பதை அறியமுடிகிறது.

மேற்சுட்டிய எல்லா இலக்கணங்களும் அமையப் பெற்ற நிலையில் ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களும் அமைந்துள்ளன.

**கருவறை அமைப்பு**

இந்திய நாட்டுக் கட்டடக்கலையில் கட்டடங்களைச் சிற்பக் கலைஞர்கள் மூன்று பெரும்பிரிவுகளாகப் பிரித்துள்ளனர். அவை: நாகரம், வேசரம், திராவிடம் என்பன. நாகரம் என்பது வடஇந்தியக் கோயில் கட்டடங்கள். இவை அடிமுதல் நுனிவரை நான்கு பட்டையாக (சதுரமாக) அமைந்திருக்கும். இத்தகைய அமைப்புடைய கோயில்கள் பாண்டிய நாட்டில் காணப்படவில்லை. வேசரம் என்பது பௌத்த மதத்தினர் வளர்த்த கட்டட முறையாகும். இவை வட்ட வடிவ அமைப்பில் அமைக்கப்பட்டிருக்கும். இவற்றில் சில தமிழ்நாட்டில் காணப்படுகின்றன. திராவிடம் என்னும் பிரிவு தென்னிந்தியக் கோயில் கட்டடமாகும். அவ்வகையில் ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களும் திராவிடக் கலைப்பாணியில் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

திருக்கோயிலின் முதன்மை இடமாகக் கருதப்பெறுவது கருவறை. இக்கருவறை இறைவனின் திருவுருவம் நிறுவப்பெற்று வழிபடப்பெறும் சிறப்பினை உடையது. ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களின் கருவறைகளும் கிழக்கு நோக்கிச் சதுர வடிவில் அமைந்துள்ளன. ஓம் என்ற ஒலிக்கு இதன் உட்புறத்திலுள்ள காற்று மண்டலம் ஒத்து அதிர்வுற்று காற்றின் ஒவ்வொரு மூலக்கூறும் முழுவீச்சுடன் இயங்குமாறு கருவறைகள் அமைக்கப்பட்டுள்ளன. இக்கருவறை “திருவுண்ணாழிகை, அகநாழிகை, கருப்பக்கிரகம், மூலஸ்தானம் என்னும் பெயர்களால் சுட்டப்பெறுகிறது.”[32] அனைத்து உலகங்களையும் படைப்பதற்குக் காரணமான மூலப் பரம்பொருளின் இடமான கருவறை, அதன் முன்பு அமைந்துள்ள வாகனம், மண்டபங்கள் ஆகியன

இறை, உயிர், தளை அல்லது பதி, பசு, பாசம் என்ற முப்பெரும் உண்மைகளை உணர்த்துகின்றன."[33] என்பர். ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் கருவறையில் மூலமூர்த்தி லிங்க வடிவில் காட்சியளிக்கின்றார்.

முழுமுதற் கடவுள் என்று போற்றப்படும் சிவ பெருமான் உருவத்திருமேனி, அருவத்திருமேனி, அருவுருவத் திருமேனி என்னும் மூன்று வடிவங்களில் விளக்கப்படுவதை, "பக்தர்களின் நன்மைக்காக உருவமற்ற இறைவன் உருவ வடிவில் காட்சியளிப்பது உருவத் திருமேனியாகும். கண்ணுக்குப் புலப்படாமல் உணர்வில் மட்டும் வெளிப்பட்டு ஞானிகளின் உள்ளத்தில் புலனாவது அருவத்திருமேனியாகும். உருவமாகத் தோன்றியும் அருவமாக நின்றும் தோன்றியும் தோன்றாமலும் விளங்குவது அருவுருவத் திருமேனியாகும்''[34] என்பர் புலியூர்க் கேசிகன்.

"கண்ணுக்குத் தென்படாத அருவத் திருமேனிக்கும் கண்ணுக்குப் புலப்படும் உருவத் திருமேனிக்கும் மூலமாகிய சிவபெருமானை அறிந்து வழிபடுவதற்கு அடையாளமாக விளங்குவதே சிவலிங்கம்''[35] ஆகும். அனைத்துக் கோயில்களிலும் இவ்வுருவமே பல்வேறு பெயர்களுடன் மூலவராகக் காட்சியளிக்கிறது. இலிங்கத்தின் வட்டவடிவ ஆவுடையாரில் கோமுகி வடக்கு நோக்கி அமைந்துள்ளது. ''லிங்கம் என்பதில் ''லிங்'' என்பது ஒடுக்கமாகிய லயத்தையும், "கம்" என்பது தோற்றத்தையும் குறிக்கும். எனவே லிங்கம் என்பது சிருட்டியின் சின்னமாகும்''[36] என்பர். எனவே லிங்கம் என்பதைத் தோற்ற ஒடுக்கத்தின் சின்னமாக ஆகமங்கள் விளக்குகின்றன.

இச்சிவலிங்கம் மூன்று பாகங்களையுடையது. பூமியில் மறைந்து ஒடுங்கி நிற்கும் அடிப்பகுதி பிரம்மபாகம். அபிடேக நீரைத்தாங்கி நிற்கும் நடுப்பகுதி திருமாலுக்குரியது. மேற்பகுதி சிவபெருமானுக்குரியது. "பீடமாக உள்ள பகுதி விந்து என்ற தத்துவத்தையும் லிங்கமாக உள்ள பகுதி நாதம் என்ற தத்துவத்தையும் உணர்த்துகின்றன. காண்பதற்கு ஒரே வடிவமாகத் தோன்றும் சிவலிங்கம் தனித் தனியாக மூன்று பகுதிகளை ஒன்றாக இணைத்து அமைந்துள்ளது.''[37] இம்மூன்று பகுதிகளையும் பீடம், ஆவுடையார், லிங்கம் என்று கூறுவர். ஓங்கியுயர்ந்துள்ள வானம் லிங்கம் எனவும் சுற்றியுள்ள எட்டு திசைகளின் விரிவே ஆவுடையார் என்றும் பரந்து விரிந்துள்ள நிலப்பரப்பே பீடம் ஆகும்.''[38] இம்மூன்று பகுதிகளும் இச்சா, கிரியா, ஞானம் ஆகிய மூன்று சக்திகளாக விளங்குகின்றன. திருக்கோயில்களில் இவ்வாறு எழுந்தருளிய லிங்கத்தைச் சூச்சும லிங்கம் அல்லது பரார்த்த லிங்கம் என்று குறிப்பிடுவர். இவற்றுள் சுயம்பு லிங்கம் ஒரு முக்கிய பிரிவாகும். "சுயம்புலிங்கம் தானே தோன்றுவது. தொடக்கமற்றது. பலவகைப்பட்ட உபாதைகளின் விளைவாகச் சிதைவுறினும் திரும்பவும் பிரதிட்டை முதலிய கிரியைகள் இன்றியே வழிபடத்தக்க

பெருமை வாய்ந்தது.''[39] என்று சுயம்பு இலிங்கத்தின் சிறப்பைச் சைவத்திருக்கோவிற் கிரியை நெறி சுட்டும். ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களில் திருஏடகநாதர் திருக்கோயிலில் உள்ள மூலலிங்கம் இத்தகைய சுயம்புலிங்கமாகும். இதுவே மூலத்தானத்தில் இடம் பெற்றுள்ளது. மற்ற இரு கோயில்களிலும் அமைந்துள்ளமை பிரதிட்டை செய்யப்பட்ட இலிங்க மூர்த்தங்களாகும்.

திருக்கோயில்களில் காணப்படும் சிவலிங்கங்கள் அனைத்தும் ஒரே விதமாய் இருப்பதில்லை. குறிப்பிட்ட விதிகளின்படி பலவகை நிலைகளில் விளங்குகின்றன. ''ஆவுடைக்கு மேல் விளங்கும் பூசாபாகம் (பாணம்) உயர அளவில் மாறுபடுகின்றன. சில மிக உயரமாக அமைந்து இறைவனின் நின்ற கோலத்தையும் நடுத்தர உயரமாக அமைந்து அமர்ந்த கோலத்தையும் உயரம் குறைவாக அமைந்து கிடந்த கோலத்தையும் உணர்த்துகின்றன.''[40] என இலிங்கத்தின் உயர அடிப்படையில் பாகுபடுத்துவர்.

இலிங்கத்தின் உயர அடிப்படையில் ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் வட்ட வடிவ ஆவுடையாரில் சுவாமி நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். திருஏடகநாதர் கோயில் கருவறை உயரமானதாகக் காணப்படுகிறது. இதற்கு காரணம் வைகை ஆறு அருகில் இருப்பதால் நீர் பெருக்கெடுக்கும் பொழுது நீர் கருவறையின் உட்புகாமல் இருப்பதற்காக இவ்வாறு கட்டப்பட்டுள்ளது.

### கட்டடக்கலைக் கூறுகள்

கருவறையை அடுத்துக் கோயில்களின் முக்கிய பகுதிகளாக விமானம், மண்டபங்கள், திருச்சுற்றுகள், கோபுரம் போன்றவை அமைகின்றன. இதில் விமானம் என்பது கருவறையுடன் கூடியது என்பதால் விமானமே முக்கியமாகக் கருதப்படுகிறது.

### விமானம்

கோயில் விமானம் என்பது பொதுவாக ஆறு அங்கங்களைக் கொண்டிருக்கும். எனவே அது 'சடங்க' விமானம் என அழைக்கப்படும். விமானத் தளங்கள் தொடக்க காலத்தில் கற்களினாலேயே கட்டப்பட்டு வந்தன. சோழர்காலத்தில் மிக உயரமான விமானங்கள் அமைக்கப்பட்ட போதிலும் அவை கல்லினாலேயே அமைக்கப்பட்டன. பிற்காலத்தில் இவ்வமைப்பு மாற்றமடைந்து பாண்டியரது கோயில்களில் கூரைவரை கல்லினாலும் கூரைக்கு மேல் செங்கல், சுதையினாலும் கட்டப்பட்டன. விஜயநகர, நாயக்கரும் பாண்டியர் பாணியையே பின்பற்றியுள்ளனர்.

மகாபலிபுரம் பஞ்சபாண்டவ ரதங்களில் 'ஏகதள விமானம்' (திரௌபதிரதம்), 'துவிதள விமானம்' (அர்ச்சுணன் ரதம்), 'திரிதள விமானம் (தர்மராசரதம்) என மூன்று

தள அமைப்பு வரை நிறுவப்பட்டது. பல்லவர் காலத்திலேயே விமான தளங்களைக் கூட்டி அமைக்கும் வழக்கம் இருந்துள்ளதை ஒற்றைக்கல் ரதங்களுக்கு அடுத்துக் கட்டப்பட்ட காஞ்சி கைலாசநாதர் கோயில், வைகுண்டப் பெருமாள் கோயில் ஆகியன நான்கு தளங்களைக் கொண்டனவாக அமைந்ததிலிருந்து அறிய முடிகிறது.

இவ்வாறு துவங்கிய விமானத்தளங்களின் வளர்ச்சி சோழர்காலத்தில் உச்ச நிலையை அடைந்தது. பிற்காலப் பாண்டியர் காலத்தின் இறுதியில் இம்மரபு மாறி விமானத்தின் உயரத்தைக் (தளங்களை) குறைத்து கோபுரங்களின் உயரத்தைக் கூட்டும் வழக்கம் துவங்கியது. இவ்வழக்கம் விஜயநகர, நாயக்கர் காலத்தில் நிலைத்து நின்றது. அவர்கள் கட்டிய அல்லது விரிவுபடுத்திய கோயில்களில் கோபுரங்களை விமானத்தின் உயரத்தை விட மிகப்பெரிய அளவில் அமைத்தனர். விமானத்தின் உயரத்தை உயர்த்தியவர்கள் சோழர்கள்.

கருவறைக்கு மேலுள்ள கட்டுமானமே விமானம் என்று தவறாகக் குறிப்பிடப்படுகிறது. கருவறையின் அடிமுதல் உச்சிவரை உள்ள மொத்த அமைப்பும் விமானம் ஆகும்.

**கருவறையின் அடிப்பகுதி முதல் கலசம் வரை உள்ள பகுதி ஆறு அங்கங்களாகப் பகுக்கப்படுகிறது.**

1. **அதிட்டானம்**
2. **சுவர் அல்லது பித்தி**
3. **கூரை அல்லது பிரஸ்தரம்**
4. **கழுத்து அல்லது கிரீவம்**
5. **தலை அல்லது சிகரம்**
6. **கலசம் அல்லது ஸ்தூபி என ஆறாகப் பிரிப்பர்.**

விமானத்தின் தளங்களில் நான்கு பக்கங்களிலும் அந்தந்த திசைகளுக்குரிய கடவுளரின் உருவங்கள் இடம் பெறும். மேலும் விமானதள உறுப்புக்களான கர்ணம், பஞ்சரம், சாலை போன்ற உறுப்புகளும் இடம் பெறுவதோடு இவற்றில் சுதையாலான சிற்பங்களை அமைப்பர். இச்சிற்பங்கள் பெரும்பாலும் இதிகாசம் மற்றும் புராணச் சிற்பங்களாக அமையும். இத்தகு சிற்பங்கள் அமைக்கப்படாவிட்டாலும் விமான தளங்களில் அந்தந்த திசைக்குரிய கடவுள் உருவங்கள் இடம்பெறும். இவை விமான தேவதைகள் என்று அழைக்கப்படும்.

**ஆதிசொக்கநாதர், அம்மன் சன்னதி விமானங்கள் துவிதள விமானமாகும்.**

**புட்டுசொக்கநாதர், அம்மன், வந்தி சன்னதி விமானங்கள் துவிதள விமானமாகும்.**

திருஏடகநாதர், அம்மன், விநாயகர், சுப்பிரமணியர், சண்டிகேசுவரர், சண்டிகேசுவரி, நடராசர் சன்னதி விமானங்கள் ஏகதள விமானமாகும்.

## உபபீடம்

விமானத்தின் உயரத்தைக் கூட்டிக் கோயிலைக் கம்பீரமாகத் தோன்றச் செய்ய வேண்டி அதிட்டானத்தின் கீழ் உபபீடம் அமைப்பதுண்டு. உபபீடம் என்பது கட்டுமானத்தின் முக்கிய உறுப்பாகும். உபபீடம் இன்றியும் கட்டுமானங்கள் அமைவது உண்டு. உபபீட அமைப்பானது கோயிலின் சிறந்த கட்டடக் கலைக் கூறாகவும் பாதுகாப்பு அரணாகவும் அழகிய வேலைப்பாடு மிக்க கலை அரங்கமாகவும் அமைகிறது.

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களில் ஆதிசொக்கநாதர் கோயிலிலும் திருஏடகநாதர் கோயிலிலும் இத்தகைய உபபீடம் காணப்படுகின்றது. புட்டுசொக்கநாதர் கோயிலில் உபபீடம் சிறியதாகக் காணப்படுகிறது. ஆதிசொக்கநாதர் கோயில் உபபீடம் எந்த ஒரு அலங்கார வேலைப்பாடுகளும் இல்லாமல் எளிமையாகவே காணப்படுகிறது. திருஏடகநாதர் கோயில், உபானம், பத்மசகதி, கண்டம், கபோதம் ஆகிய உறுப்புகளைக் கொண்டு கபோதபந்த உபபீடமாக அமைந்துள்ளது.

## அதிட்டானம்

கருவறைக் கட்டடம் முழுவதையும் தாங்கும் கீழ்ப்பகுதியே அதிட்டானம் ஆகும். விமானத்தின் பிற பகுதிகள் அதிட்டானத்தின் மேல் அமைந்திருக்கும். அதனால் இது பாதத்திற்கு இணையாகக் கருதப்படுகிறது. இதற்குக் கீழுள்ளது உப அதிட்டானம் எனப்படும். துணைப்பீடம் கட்டடத்தின் உயரத்தை அதிகரித்துக் காட்டுவதுடன் பீடத்தின் அழகையும் கூட்டுகிறது. அதிட்டானம் பல உறுப்புக்களைக் கொண்டதாகும். அவை உபானம், ஜகதி, குமுதம், கண்டம், பட்டிகை, வேதி என உறுப்புகள் மாறி அமைவதும் உண்டு. இவ்வாறு உறுப்புகளை மாற்றி அமைத்துப் பலவகை அதிட்டான அமைப்புகளை உருவாக்கியுள்ளனர்.

தமிழ் நாட்டுக் கோயில்களில் அதிட்டான அமைப்பானது பல்லவ மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் உள்ள மகாபலிபுரம் பஞ்ச பாண்டவர் ரதங்களில் காணப்படுகின்றன. தமிழ் நாட்டுக் குடைவரைக் கோயில்களில் அதிட்டான அமைப்பு காணப்படினும் அது கட்டுமானக் கோயில்களில் காணப்படுவது போல வெளிப்படையாக அமையவில்லை. குடைவரைக் கோயில்களில் அதிட்டானப் பகுதிகளின் அமைப்பு பெருமளவில் காணப்படவில்லை. அக்காலத்தில் கட்டப்பட்ட கட்டுமானக் கோயில்களில் இவ்வதிட்டானப் பகுதிகள் அமைந்திருப்பதைப் போன்று,

குடைவரைக்கோயில்களில் அமையவில்லை எனலாம். “கட்டடக் கலை நூல்களான மயமதத்திலும் மானசாரத்திலும் அதிட்டானப் பிரிவுகள் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளன.”[41] அதிட்டானங்களில் காணப்படும் உறுப்புகளின் அடிப்படையிலும் அவ்வுறுப்புக்கள் காணப்படுகின்ற இடங்களை மையமாகக் கொண்டும் அதிட்டானத்தின் பெயர்கள் அமைந்துள்ளன.

அதிட்டானத்தின் பதினெட்டு வகைகளை மானசாரம் குறிப்பிடுகிறது. அவை, “பாதபந்த அதிட்டானம், பிரதி பந்த அதிட்டானம், உரகபந்த அதிட்டானம், குமுத அதிட்டானம், பத்ம சேகர அதிட்டானம், புஷ்ப புஷ்பகல அதிட்டானம், ஸ்ரீ பந்த அதிட்டானம், மச்ச பந்த அதிட்டானம், ஸ்ரெனி பந்த அதிட்டானம், பத்ம பந்த அதிட்டானம், வப்ர பந்த அதிட்டானம், வஜ்ர பந்த அதிட்டானம், கும்ப பந்த அதிட்டானம், ஸ்ரீ போக அதிட்டானம், இரத்ன பந்த அதிட்டானம், பட்ட பந்த அதிட்டானம், காக்ஸ பந்த அதிட்டானம், கம்ப பந்த அதிட்டானம”[42] என்பனவாகும்.

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களில் ஆதிசொக்கநாதர் கோயிலில் பாதபந்த அதிட்டானமும் திருஏடகநாதர் கோயிலில் வர்க்கபேத அதிட்டானமும் காணப்படுகிறது. புட்டுசொக்கநாதர் கோயிலில் பாதபந்த அதிட்டானம் உள்ளது.

### பாதபந்த அதிட்டானம்

பாதபந்த அதிட்டானம் என்பது ஜகதி, முப்பட்டை, குமுதம், கண்டம், பட்டிகை, வேதி என்ற உறுப்புகளைக் கொண்டு அமைந்து வருவது ஆகும். இதில் தூண்களின் காம்புப் பகுதியானது (கால்) முப்பட்டைக் குமுதம் வரை இறங்கியிருக்கும். கால்களால் அடைக்கப்பட்டிருப்பதால் இது பாதபந்த அதிட்டானம் எனப்படுகிறது. பாதபந்த அதிட்டானத்தில் உறுப்புகள், அலங்காரம் இன்றி எளிமையாக அமைந்துள்ளன. ஆதிசொக்கநாதர், புட்டுசொக்கநாதர் கோயில்களில் இவ்வகை எளிமையான பாதபந்த அதிட்டானம் காணப்படுகிறது.

### வர்க்கபேத அதிட்டானம்

கர்ணப்பகுதியிலும் பத்ரப்பகுதியிலும் அதிட்டான உறுப்புக்கள் ஒரே மாதிரியாக அமையாது மாறி மாறி அமைவது வர்க்கபேத அதிட்டானம் ஆகும். கர்ணப் பகுதியில் கபோத பந்த அதிட்டான அமைப்பும் பத்ரப் பகுதியில் பாதபந்த அதிட்டான அமைப்பும் கபோத பந்த அமைப்பும் இடம் பெறுவதால் இது பாத பந்த கபோதபந்த அதிட்டானம் அல்லது வர்க்கபேத அதிட்டானம் எனப்படுகிறது. வர்க்கபேத அதிட்டானத்தில் உபானம் மற்றும் ஜகதியில் ஒரு பக்கம் அலங்காரம் இன்றியும் மற்றொரு பகுதியில் பத்ம வேலைப்பாடும் இடம் பெற்றிருக்கும். ஒரு பக்கம்

முப்பட்டைக் குமுதமும் மற்றொரு பகுதியில் விருத்த குமுதமும் இடம் பெற்றிருக்கும். திருஏடகநாதர் திருக்கோயிலில் இவ்வர்க்கபேத அதிட்டானம் அமைந்துள்ளது.

## சுவர் (பித்தி)

பித்தி என்பது கருவறையின் சுவர்ப்பகுதியாகும். அதிட்டானத்தை அடுத்துள்ள இதற்கு கால், பாதம், ஸ்தம்பம், கம்பம் ஆகிய பிற பெயர்களும் வழங்கப்படுகின்றன. இச்சுவர்ப் பகுதியில் அரைத்தூண்கள், தேவகோட்டங்கள், சாளரம், கோட்டபஞ்சரம் முதலான உறுப்புகள் இடம் பெறுகின்றன.

பஞ்சரம் ஓர் அலங்காரக் கலை வேலைப்பாடாகி உள்ளது. இப்பஞ்சரம், கும்ப பஞ்சரம், கம்ப பஞ்சரம், கோட்ட பஞ்சரம் என மூவகைப்படும். இது அமைப்பில் பெரும்பகுதி தேவகோட்டத்தை ஒத்துக் காணப்பட்டாலும் தேவகோட்டத்தினின்று வேறுபட்டதாகும். இவை தேவகோட்டத்தை ஒட்டி அதன் இருபுறம் உள்ள அகாரை மற்றும் கர்ணப் பகுதியிலும் இடம் பெறும். கும்ப பஞ்சரம் என்பது அடிப்பகுதியில் கலசமும் அதன் மேல்கால் பகுதியும் அதற்கு மேல் பஞ்சரமும் இடம் பெறுவதாகும். கும்ப பஞ்சரம் என்பது இதே அமைப்பைப் பெற்று கீழே கும்பம் இன்றி அமையும்.

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களில் திருஏடகநாதர் கோயிலில் மட்டும் கோட்ட பஞ்சரம் அமைப்புக் காணப்படுகின்றது. மற்ற இரு கோயில்களில் பஞ்சர அமைப்பு அமையவில்லை.

## அரைத்தூண்கள் அமைப்பு

கருவறையின் புறச்சுவர் பகுதியில் காணப்படும் அலங்கார வேலைப்பாடுகளுடன் கூடிய தூண்கள் அரைத்தூண் எனப்பெறும். அதிட்டானத்தையும் கபோதத்துடன் கூடிய கூரைப் பகுதியையும் இணைக்கின்ற விமானத்தின் சுவர் பகுதிகளுக்கிடையில் வரிசையாக அமையப்பெறும். அரைத்தூண்கள், அதிட்டானத்தின் அடுத்தப்பகுதியான சுவர் பகுதிக்கு (கால்) அரணாக அமைவதாகும். அரைத் தூண்கள் அழகியல் கலைக்கூறுகளுடன் குடைவரைக் குகைக் கோயில்களில் அறிமுகப்படுத்தப்பட்டு, பின்னர் சில மாற்றங்களுடன் இவற்றிற்குப் பின் தோன்றிய கட்டுமானக் கோயில்களிலும் அமைக்கப்பட்டன.

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களில் புட்டுசொக்கநாதர் கருவறையில் அரைத் தூண்கள் இடம் பெறவில்லை. ஆதிசொக்கநாதர் கோயிலில் சதுர அமைப்புக் கொண்ட அரைத்துண்களும் திருஏடகநாதர் கோயிலில் அரைத்துண்களின் கீழ்ப்பகுதி சதுரவடிவிலும் தண்டுப்பகுதி எண்பட்டை, அறுபட்டை வடிவிலும் வட்ட வடிவிலும் காணப்படுகின்றன.

## பிரநாளம்

கட்டடக் கலைக் கூறுகளில் பிரநாளம் என்பது முக்கிய கட்டுமான உறுப்பாகும். தெய்வப் பூசனைகளுடன் தொடர்புடையது. கருவறையில் உள்ள இறைவனுக்கோ அல்லது அர்த்த மண்டபத்தில் உள்ள உற்சவமூர்த்திக்கோ அபிடேகம் நடைபெறும் பொழுது திருமஞ்சன நீர் வெளிவருவதற்காக வடிவமைக்கப்பட்டதே பிரநாளம். பிரநாளம் அமைந்திருக்கும் இடம், பிரநாளத்தின் அமைப்பு மற்றும் உறுப்புகளைக் கொண்டு கோயில் கட்டப்பட்ட காலத்தை அறிய முடியும். பிரநாளத்தின் அலங்காரப் பாகம் மட்டுமின்றி இதனுடைய பயன்பாட்டின் அடிப்படையில் முக்கியக்கட்டுமான உறுப்பாகவும் கொள்ளலாம். இவ்வுறுப்பு கருவறையின் மட்டத்தில் அமைக்கப்படுகிறது. கருவறை திசையை மையமாகக் கொண்டு எப்பொழுதும் இடது பக்கத்தில் அமைந்திருக்கும். இவ்வுறுப்பு இடம் பெறாத கோயில்களே இல்லை எனலாம்.

திருஏடகநாதர் கருவறைப் பிரநாளத்தின் அடிப்பகுதி சரியாக அதிட்டான தளத்துடன் இணைக்கப்பட்டு இதனுடைய வளைந்த பூ முனைப்பகுதி பிரகார மேடையுடன் இணைக்கப்பட்டுத் தொட்டியில் கவிழ்ந்த நிலையில் காணப்பெறுகின்றது. அழகிய வேலைப்பாடுகளுடன் அமைந்துள்ள வரிவடிவப் பிரநாளத்தின் நுனியில் அமைக்கப் பட்டுள்ள பூமுனை மிகவும் நேர்த்தியாக அமைக்கப்பட்டுள்ளது. இப்பிரநாளத்தின் அடிப்பகுதி யாளியின் வாயிலிருந்து புறப்படுவது போல் உள்ளது. கருவறையில் தெளிக்கப்படுகின்ற அபிடேகப்பொருட்கள் நீருடன் கலந்து, இப்பிரநாளத்தின் வழியாக வெளிவந்து இத்துடன் இணைக்கப்பட்ட தொட்டியில் நிரம்புகிறது. இந்த நீர் பக்தர்களுக்குப் புனித நீராகப் பயன்படுகிறது.

இப்பிரநாளங்கள் யாளியின் வாயிலிருந்து தொடங்குகையில் சதுர வடிவிலும் பின் அழகிய வரிகளுடனும் இறுதியில் பூமுனையுடனும் அமைக்கப்பட்டுள்ளது. திறந்த நிலையிலுள்ள யாளியின் வாயும் யாளியின் வாயிலிருந்துப் புறப்படுகின்ற வடிவாய்க்கால் தண்டும் குவிந்த பூமுனையும் இப்பிரநாளத்தின் சிறப்பம்சங்களாகும். இவ்வமைப்பு கொண்ட பிரநாளம் திருஏடகநாதர் கோயிலில் காணப்படுகிறது. ஆதிசொக்கநாதர் கோயிலில் எளிமையான பூமுனை கொண்ட பிரநாளம் அமைந்துள்ளது. புட்டுசொக்கநாதர் கோயிலில் சிறிய பிரநாளம் அமைந்துள்ளது.

## போதிகை

போதிகை என்பது தூண் மற்றும் அரைத்தூண்களின் தலைப்பாகம் ஆகும். தூணை உத்திரத்துடன் இணைக்கும் பகுதி. ஆட்சியாளர்களின் விருப்பம் மற்றும் மன இயல்புகளைப் புலப்படுத்தும் கட்டுமானப் பகுதியாகும். தூண்களை அலங்கரிக்கின்ற போதிகை அமைப்புகள் தென்னிந்தியக் கோயில்களில் குறிப்பாகத் தமிழகக்கோயில்களில் பல்லவர்காலம் முதல் விசயநகர, நாயக்க மன்னர்கள் காலம்

வரை பல்வேறு கலைக் கூறுகளில் காணப்படுகின்றன. இவற்றில் தமிழகத்தை ஆண்ட மன்னர்களின் அழகுணர்வுகள் தென்படுகின்றன. கோயில்கள் உருவான காலத்தைக் கணக்கிடப் போதிகைகள் பயன்படுகின்றன. ஏனெனில் போதிகையானது பல்லவரது குடைவரையிலிருந்து நாயக்கர் காலம் வரை பல்வேறு வளர்ச்சியைப் பெற்றுள்ளது. தமிழகத்தை ஆண்ட ஒவ்வொரு மன்னர்களும் அவரவர்களின் பாணிகளில் போதிகைகளை உருவாக்கியுள்ளனர் என்பது வெளிப்படையான ஒன்றாகும். சில சமயங்களில் ஒரு மன்னர்காலத்துப் போதிகைகள் அடுத்த மன்னர்களின் ஆட்சிக் காலத்தில் மாற்றப்படுவதும் மறைக்கப்படுவதும் இயல்பாக நிகழ்ந்துள்ளன, என்பதற்கு கோயில்களில் காணப்படுகின்ற மாறுபட்ட போதிகைகளைக் கூறலாம். மொட்டு வடிவப் போதிகைகள் என்றும் வாழைப் பூமுனைப் போதிகைகள் என்றும் அவற்றை வகைப்படுத்தலாம். ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் மொட்டுப் போதிகை மற்றும் வாழைப்பூப் போதிகைகள் காணப்படுகின்றன. இவை பாண்டியர், நாயக்க மன்னர் காலக் கலைப்பாணியை வெளிப்படுத்துகின்றன.

### கூரை (பிரஸ்தரம்)

சுவரின் மீதுள்ள கூரையே கருவறையை மூடும் அங்கமாகும். இது விமானத்தின் முக்கியப் பகுதிகளில் ஒன்றாகும்.

### கழுத்து (கிரீவம்)

கூரையின் மேற்பகுதியில் காணப்படும் உறுப்பு கழுத்து ஆகும். இது சிகரத்திற்கு உட்பட்ட உறுப்பாகும். கோயிலின் அமைப்பை உயர்த்திக் காட்டுகின்ற இப்பகுதி சதுரமாகவும் வட்டமாகவும் நீள் சதுரமாகவும் எண்பட்டை வடிவிலும் அமைக்கப்பெறும். கிரீவ கோட்டங்களின் மேல் அச்சன்னதியில் குடி கொண்டுள்ள தெய்வங்களின் திருவுருவம், வாகனங்கள், பூதகணங்கள் போன்றவை அமைக்கப்படும்.

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களின் கழுத்துப்பகுதி சதுர வடிவுடன் அமைந்துள்ளன. கிரீவ கோட்டங்களின் மையத்தில் பூதகணங்களும் அதன் இரு புறமும் நந்தியும் சுதைச் சிற்பமாக அமைந்து காணப்பெறுகின்றன.

### தலை (சிகரம்)

தலை விமானத்தின் மேற்பகுதியாகவும் கலசத்திற்குக் கீழ்ப்பகுதியாகவும் அமைகிறது. இப்பகுதியை அடுத்தே கலசம் இடம் பெறும். விமானத்தின் சிகரமானது திராவிடம், நாகரம், வேசரம் என மூவகைப்படும். வட்டவடிவமாக இருந்தால் திராவிடம் என்றும் அறுகோண வடிவமாக இருந்தால் நாகரம் என்றும் சதுரவடிவமாக இருந்தால் வேசரம் என்றும் அழைக்கப்பெறும்.

ஆய்விற்குட்பட்ட ஆதிசொக்கநாதர் கோயில், புட்டுசொக்கநாதர் கோயில் ஆகிய இரண்டும் வேசர வடிவமாகவும் திருஏடகநாதர் கோயிலில் இறைவன், இறைவியின் கருவறை விமானம் திராவிட வடிவமாகவும் பரிவார தெய்வங்களின் விமானம் வேசர வடிவமாகவும் அமைந்துள்ளன.

மூன்று கோயில்களில் ஆதிசொக்கநாதர் கோயில், திருஏடகநாதர் கோயில் ஆகிய கோயில்களில் மட்டுமே விமானத்தின் தளங்களில் நான்கு பக்கங்களிலும் அந்தந்த திசைகளுக்குரிய தெய்வங்களான, தட்சிணாமூர்த்தி, திருமால், பிரமன், இந்திரன் என அமைந்துள்ளது. இச்சிற்பங்கள் சுதையிலான சிற்பங்கள் ஆகும். புட்டுசொக்கநாதர் கோயில் விமானத்தில் சிற்பங்கள் இடம் பெறவில்லை.

## கலசம் (ஸ்தூபி)

உச்சிக்கு மேல் உள்ள ஆறாவது பகுதி கலசம் ஆகும். விமானத்தின் இறுதிப் பகுதியாகவும் தலைப்பகுதியாகவும் அமைந்திருப்பது இதுவே. இப்பகுதியே விமானத்தின் நிறைவைக் காட்டுகின்ற பகுதியாகும். ஒரு குடமும் அதன்மேல் செங்குத்தாக வைக்கப்பட்ட வாழைப்பூவும் போன்ற தோற்றமுடையது கலசம். இது கல், சுதை அல்லது உலோகத்தால் செய்யப்படும். இக்காலத்தில் செம்பினாலும் தங்கத்தினாலும் கலசங்கள் அமைக்கப்பெறுகின்றன.

திருவிழாக்காலங்களிலும் குடமுழுக்குச் செய்கின்ற காலங்களிலும் கோயிலின் உச்சியிலுள்ள கலசம் முக்கியத்துவம் பெற்ற கட்டுமான உறுப்பாகத் திகழ்கிறது. குடமுழுக்கின் போது வேத முழக்கத்துடன் குடத்தில் வைத்துப் பூசிக்கப் பெற்ற நீரை இக்கலசத்தில் ஊற்றிப் புனித நீராட்டுவர். இதன் மூலம் “ஆற்றலானது கலசத்தின் வழியாகக் கருவறை இறைவனைச் சென்றடைகிறது என்பது நம்பிக்கையாகும். இவை இயற்கையின் சக்தியான இடி மற்றும் மின்னலின் தாக்குதல்களைத் தடுக்கின்ற இடி தாங்கியாகவும் பயன்படுகின்றன.”[43] கலசங்களில் தானியங்கள் வைக்கப்பட்டு அவை குடமுழுக்கின் போது மாற்றப்பட்டு புது தானியங்களால் நிரப்பப்படும்.

பல கோயில்களில் ஒன்றுக்கு மேற்பட்ட கலசங்கள் காணப்படுகின்றன. பெரும்பாலும் எண்பட்டை, வட்டம், சதுரம் ஆகிய அமைப்புகளையுடைய சிகரங்களில் ஒரு கலசம் மட்டும் காணப்படுகின்றது. ஒன்றுக்கு மேற்பட்ட கலசங்களை சாலை அல்லது வண்டிக் கூடு வடிவில் உள்ள சிகர அமைப்புகளில் காணலாம். கருவறையில் அமைகின்ற தெய்வங்களின் எண்ணிக்கைகளைப் பொறுத்து கலசங்கள் நிறுவப்படுகின்றன. ஒன்று அல்லது இரண்டு தெய்வங்கள் குடி கொண்டுள்ள சன்னதிகளில் ஒற்றைக் கலசமும் இரண்டிற்கு மேற்பட்ட தெய்வங்கள் கருவறையில் நிறுவப்படும் பொழுது பொதுவாக ஒன்றுக்கு மேற்பட்ட கலசங்களும் நிறுவப்படுகின்றன.

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் விமானத்தின் மேல் ஒற்றைக் கலசமே நிறுவப்பட்டுள்ளது. ஆதிசொக்கநாதர் மற்றும் புட்டுசொக்கநாதர் கோயில்களில் தங்கமுலாம் பூசப்பட்டகலசமும் திருஏடகநாதர் கோயிலில் செம்பாலானக் கலசமும் அமைக்கப் பட்டுள்ளன.

## தேவகோட்டம்

கருவறையின் சுவர்ப்பகுதிகளில், வாயில் பகுதியைத் தவிர மற்ற மூன்று பக்கங்களிலும் தேவகோட்டங்கள் அமைக்கப்பட்டுள்ளன. சில சமயங்களில் தேவகோட்டங்கள் அர்த்த மண்டபச் சுவர்ப் பகுதிகளிலும் அமையலாம். "தேவகோட்டங்களில் திசைக்குரிய தெய்வங்களின் வடிவங்கள் வைத்திட வேண்டுமென ஆகம விதிகள் குறிப்பிடுகின்றன."[44] பொதுவாகக் கோயிலில் குடி கொண்டுள்ள இறைவனைத் தவிர, இத்தெய்வத்தோடு தொடர்புடைய பிற தெய்வங்கள் நின்ற நிலையிலும் அமர்ந்த கோலத்திலும் வைக்கப்படுவது இயல்பாகும்.

சைவக் கோயில்களில், தெற்குப்பகுதியில் தட்சிணாமூர்த்தியும் மேற்குப் பகுதியில் லிங்கோத்பவரும் வடக்குப் பகுதியில் பிரமன் அல்லது துர்க்கையும் அமைக்கப்படுவர். கட்டுமானக் கோயில்களில் காணப்படுகின்ற தேவகோட்ட அமைப்புகள், குடைவரைக் கோயில்களில் இல்லை. தேவகோட்ட அமைப்பானது, பல்லவ மன்னர்களின் ஆட்சிக்காலத்தில் உருவான மாமல்லபுரத்து இரதங்களில் உருவாக்கப்பட்டுள்ளன.

கி.பி.8-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த காஞ்சி கைலாசநாதர் கோயிலில் கருவறைச் சுவரின் மேற்குப் பகுதியில் லிங்கோத்பவரும் வடக்குப் பகுதியில் திரிபுராந்தகரும் தெற்குப் பகுதியில் ஊர்த்துவதாண்டவ மூர்த்தியும் அமைந்துள்ளனர். எனவே கி.பி.8-ஆம் நூற்றாண்டில் தேவகோட்டச்சிற்ப வடிவங்கள் எந்தப் பகுதிகளுக்கு, எந்த இறைவனின் வடிவங்கள் வைக்கப்பட வேண்டுமென விதிமுறை வகுக்கப்படவில்லை. இதன் பிறகு சோழ மன்னர்களின் ஆட்சிக்காலத்தில் முறையான விதிமுறைகள் வகுக்கப்பட்டு பின்பற்றப்பட்டன எனக்கருத இடமுண்டு.

## தட்சிணாமூர்த்தி

கருவறை தேவகோட்டத்தில் தெற்கு நோக்கியவாறு தட்சிணாமூர்த்தி இடம் பெற்றுள்ளார். தட்சிணம் என்பது தெற்கு திசையைக் குறிக்கும். அதனால் இவருக்குத் தட்சிணாமூர்த்தி என்று பெயர். தட்சிணம் என்ற சொல்லுக்கு ஞானம் என்னும் பொருளும் உண்டு. சிவபெருமான் ஐந்தொழில் நிமித்தமாய் இருபத்தைந்து திருமேனிகள் கொண்டருளினார் என்று சைவநூல்கள் கூறுகின்றன. சிவபெருமான் கொண்டருளிய அத்திருமேனிகளுள் ஒன்று தட்சிணாமூர்த்தி. நான்கு வகையான தட்சிணாமூர்த்தி சிற்பங்கள் பற்றிச் சிற்பக்கலை நூல்கள் கூறுகின்றன.

அவை:

1. யோக தட்சிணாமூர்த்தி
2. வீணா தட்சிணாமூர்த்தி
3. ஞான தட்சிணாமூர்த்தி
4. வியாக்யான தட்சிணாமூர்த்தி என்பனவாகும்.

தென்முகக் கடவுளான இவா் ஆலமரத்தின் கீழ் அமா்ந்திருப்பதால் ஆல்அமா்கடவுள் என்றும் அழைக்கப்படுகிறார் “குரு வடிவத்தில் கல்லால மரத்தின் கீழ் தென்முகமாக இருந்து பிரம்ம புத்திரா்களாகிய சனகா், சனந்தனா், சனாதனா், சனத்குமாரா் ஆகிய நால்வருக்கும் உபதேசிக்கும் பாங்கில் அமைந்த கோலமே தட்சிணாமூர்த்தியின் திருக்கோலமாகும்.”[45] ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் தட்சிணாமூர்த்தி கல்லால மரத்தடியில் ஆசனத்தில் வீராசனக் கோலத்தில் அமா்ந்தவாறு சனகாதிய முனிவா்களுக்கு வேதாகமங்களின் பொருள் நுட்பங்களை விளக்கி ஞானோபதேசம் செய்யும் நிலையில் காட்சி தருகின்றார். இவரது பின் கரங்களில் தீப்பிழம்பும் நாகம் சுற்றிய உடுக்கையும் உள்ளன. முன் இடக்கரம் கீழ் நோக்கியுள்ளது. கீழ்வலக்கரம் சின்முத்திரையை வெளிப்படுத்துகிறது. இரு புறங்களிலும் உபதேசத்தைக் கேட்டவாறு முனிவா்கள் உள்ளனா். காலடியில் முயலகன் என்ற அசுரன் வீழ்ந்த நிலையில் காட்சியளிக்கிறார்.

தட்சிணாமூர்த்தியின் இத்தோற்றநிலையின் சிறப்பினை, “தட்சிணாமூர்த்தியின் தலையிலுள்ள சடைமுடி ஞான நோக்கைக் காட்டுகிறது. யுகமுடிவில் உலகைச் சுட்டு எரிக்கும் அக்னி ஒரு கரத்திலுள்ளது. உடுக்கை சிருட்டித் தொழிலை உணா்த்துகிறது. உடுக்கையைச் சுற்றியுள்ள நாகம் உலகியலில் உழலும் ஆன்மாக்களை உணா்த்தும். மும்மலங்களும் நீங்கிய உயிா்கள் இறைவனுடன் கலத்தலை வெளிப்படுத்தும். சின்முத்திரையை முன் வலக்கரம் காட்டும். முப்பத்தாறு தத்துவங்களையுணா்த்தும் உருத்திராட்சமும் குண்டலினி சக்தியைக் குறிக்கும் நாகஉதரபந்தமும் இவரது உடலில் விளங்குகின்றன. இவரது ஈடு இணையற்ற தன்மையை வீராசனம் குறிக்கும். மாயையைச் சுட்டும் கல்லாலமரமும் பாசத்தில் கட்டுண்டு அவதியுறும் உயிா்களையுணா்த்தும் முயலகனும் இவருடன் உள்ளன. மௌனம், புலனடக்கம் தியானத்தின் சிறப்பு ஆகியவற்றைக் காட்டவே இவா் தெற்கு முகமாக அமா்ந்துள்ளார்.”[46] என்பா் எஸ்.நாராயணசுவாமி.

## லிங்கோத்பவர்

கருவறையின் மேற்குப் புறத்திலுள்ள தேவகோட்டத்தில் லிங்கோத்பவர் காட்சியளிக்கிறார். ஆணவ வயப்பட்ட நான்முகன், திருமால் ஆகியோர் முன் பெரும் அனல் பிழம்பாகச் சிவன் தோன்றினார். அவரது திருமுடியைக் காண அன்னவடிவில் சென்ற நான்முகனும் திருவடியைக் காண வராக வடிவில் சென்ற திருமாலும் தோல்வியுற்றுக் கர்வபங்கம் அடைந்தனர். இருவரின் அகந்தையையும் சிவபெருமான் நீக்கிப் பேரொளி வடிவினராக எழுந்த கோலமே லிங்கோத்பவராகும்.

“லிங்கோத்பவத் தத்துவமும் சிவலிங்கத்தத்துவமும் ஒன்றே. பஞ்ச பூதங்களுள் காற்று, நீர், வானம் ஆகியவற்றை ஒரு நிலையான உருவமாகக் காட்டவியலாது. மண் (பூமி) ஒரு வடிவைப் பெற்ற போதிலும் ஒளியைப் பெறாது. நெருப்பைக் கண்ணால் மட்டுமே காணலாம். கொழுந்துவிட்டெரியும் நெருப்பின் நடுவிலுள்ள நீலநிறமுடைய பிரகாச வடிவு நீண்ட வட்ட வடிவமாகப் புலப்படும். இவ்வடிவமே லிங்கமானது. இந்த லிங்க வடிவத்தில் உற்பத்தியான மூர்த்தியே லிங்கோத்பவர்.’’[47]

லிங்கத்தின் முற்பாகத்தில் சந்திரசேகர மூர்த்தியை வடித்தால் அது லிங்கோத்பவராகும். லிங்கத்தின் ஐந்தில் ஒரு பகுதி மேலும் கீழும் சிற்பமின்றி இருத்தல் வேண்டும். லிங்கத்திலிருந்து தோன்றிய சந்திரசேகரனின் முழங்காலுக்குக் கீழுலுள்ள பகுதி தெரியாமல் மறைந்திருக்கும். லிங்கத்தின் உச்சியில் வலப்பகுதியில் அன்ன வடிவில் நான்முகனும் கீழே இடப்பகுதியில் வராக வடிவில் திருமாலும் தோன்றுகின்றனர். மூன்று திருக்கோயில்களிலும் லிங்கோத்பவர் நான்கு கரங்களுடன் அனற்பிழம்பாக நின்ற திருக்கோலத்தில் காட்சியளிக்கிறார். பின்னிரு கரங்களில் பாசமும் மானும் உள்ளன. முன்னிரு கரங்களில் வலது கரம் சின்முத்திரையாகவும் இடது கரம் வரதமாகவும் காட்சியளிக்கின்றன. மூன்று கோயில்களிலும் லிங்கத்தின் இருபக்கமும் பிரமன், விட்ணு இடம் பெறவில்லை.

## துர்க்கை

உலகெங்கும் பரந்து காணப்படும் அன்னை வழி பாட்டின் ஒரு முக்கியக் கூறு துர்க்கை வழிபாடாகும். துர்க்கை மூன்று கண்களும், நான்கு, எட்டு அல்லது அதிக கரங்களும் கரிய மேனியும் வடிவமான உருவமும் உடையவள். தலையில் கரண்ட மகுடமும் உடலில் பலவகையான அணிகளும் அலங்கரிக்கும். பத்மாசனம் அல்லது எருமைத்தலை மீது நின்று இருப்பாள்’’[48] எனத் துர்க்கையின் வடிவம் சுட்டப்பெறுகிறது.

ஆய்விற்குப்பட்ட மூன்று கோயில்களிலும் சுவாமியின் கருவறையின் வடக்குப்புற தேவகோட்டத்தில் துர்க்கையின் சிற்பம் காணப்படுகிறது. எருமைத்தலைமீது நான்கு கரங்களுடன் துர்க்கை காணப்படுகிறாள். மேலிரு கரங்களில் சங்கும் சக்கரமும் கீழிரு

கரங்களில் அபயமுத்திரையும் கடக முத்திரையும் இடம்பெற்றுள்ளன. சங்கும் சக்கரமும் தாங்கியிருப்பதால் இவரை விட்ணு துர்க்கை என்பர். மகிடாசுரனை அழித்ததால் அவனது தலை துர்க்கையின் காலடியில் இடம்பெற்றுள்ளது.

**சண்டிகேசுவரா்**

"சண்டிகேசுவரா் சைவக்கோயில்களில் அட்ட பரிவாரங்களில் ஒருவராகக் கருதப்படுபவர். மேலும் சிவாலயங்களில் கணபதி, முருகன், சிவன், அம்பிகை, சண்டேசன் ஆகியோர் பஞ்சமூர்த்திகள் என்றும் அழைக்கப்படுவர்.''[49] சண்டேசுவரா் சிவன் கோயிலின் வரவு செலவுகளையும் பார்த்துக் கொள்பவராகக் கருதப்படுகிறார்.''[50]

இச்சண்டிகேசுவரா் திருக்கோயிலில் இடம்பெறுவதற்கான காரணத்தை "எச்சதத்தன் என்பவர் மகன் விசாரசருமா். இவன் இளம் வயதிலேயே கலைகள் பலவும் கற்றுத் தெளிவு பெற்றவன். ஒரு நாள் பசுக்களை அடித்துக் கொடுமை செய்த ஓா் இடையனை விலக்கி விட்டுத் தாமே அப்பசுக்களை மேய்த்து வந்தார். இவரது பேரன்பின் விளைவாகப் பசுக்கள் மிகுதியான பால் சுரந்தன. அதனைத் தாம் வாழிபாட்டிற்கென மண்ணால் அமைத்துக் கொண்ட சிவலிங்கத்திற்கு அபிடேகம் செய்வதற்குப் பயன்படுத்தி வந்தார். இதனைக் கண்ணுற்ற அப்பசுக்களின் உரிமையாளா் எச்சதத்தனிடம் முறையிட, அவா்தன் மகன் விசாரசருமன் சிவ பூசைக்கென வைத்திருந்த திருமஞ்சனக்குடப்பாலைத் தம் காலால் உதைத்தார். சிவ வழிபாட்டில் திளைத்திருந்த விசாரசருமா், தம்மை மறந்த நிலையில் அருகிலிருந்த ஒரு கோலை எடுத்து எச்சதத்தன் மீது எறிந்தார். அது சிவன் அருளால் மழுவாக மாறி எச்சதத்தனின் இரு கால்களையும் வெட்டிக் கீழே வீழ்த்தியது. பின்னரும் விசாரசருமா் சிவவழிபாட்டிலே மனம் ஒன்றி நின்றார். அப்போது சிவபெருமான் வெளிப்பட்டு, நம் பொருட்டால் ஈன்ற தந்தை விழ எறிந்தாய், அடுத்த தந்தை இனி உனக்கு நாம்'' என்று அருளிச் செய்து மகிழ்ந்தார். மேலும் சண்டீசன் என்னும் பதவியும் தந்தார்."[51] என்றுரைப்பர்.

திருஏடகநாதா் கோயிலில் சண்டிகேசுவரா் சன்னதி, கருவறையின் வடப்புறம் சதுரவடிவில் தெற்கு நோக்கி அமைந்துள்ளது. ஆய்விற்குட்பட்ட மற்ற இரு கோயில்களில் சண்டிகேசுவரருக்குத் தனிச் சன்னதியில்லை. தனிப்பீடத்தில் தெற்கு நோக்கி அமைந்துள்ளது.

சண்டிகேசா் சிற்பம் வலது கால் இருக்கைக்குக் கீழ் தொங்குமாறு இடது கால் இருக்கை மீது உள்ளவாறும் அமா்ந்த நிலையில் வடிக்கப்பட்டுள்ளது. இரண்டு கைகளின் வலது கரத்தில் அங்குசமும் இடது கரம் வரதமுத்திரையும் காட்டி

அமைந்துள்ளது. ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் இவ்வமைப்பே காணப்படுகிறது.

இச்சண்டிகேசுவரா் திருவுருவைக் கண்டு வணங்கி வழிபட வில்லையென்றால் திருக்கோயில் வழிபாடு நிறைவு பெறாது. இவா் நாயன்மார்களுள் ஒருவராகவும் மற்றும் காவல் தெய்வமாகவும் போற்றப்படுகின்றாா். “சிவதியானத்திலேயே ஆழ்ந்திருக்கும் சிந்தனையுடன் திகழும் சண்டேசுவரா் முன் நம் வருகையைத் தெரிவிப்பதற்காக மூன்று முறை மெல்லக் கையைத் தட்ட வேண்டும். இவரை வலம் வருதல் கூடாது என்றும் கூறப்படுகின்றது.”[52] அட்ட பரிவாரங்களில் சண்டேசுவரா் மட்டுமே மானுடப் பிறவியெடுத்து உயா்ந்தவா் என்பா்.”[53]

## அம்மன் சன்னதி

சிவன் கோயில்களில் தனியாக அம்மன் சன்னதியை உருவாக்கும் பழக்கம் பிற்காலச்சோழா்களின் காலத்தில் முதலாம் குலோத்துங்கனின் ஆட்சியில் துவங்கியது.”[54]

ஆதிசொக்கநாதா், புட்டுசொக்கநாதா் கோயில்களில் அமைந்துள்ள அம்மன், மீனாட்சிஅம்மன் என்ற பெயரிலும் திருஏடகநாதா் கோயிலில் ஏலவாா் குழலி என்ற பெயரிலும் சிவனின் கருவறைக்கு அருகில் வலப்பக்கத்தில் கிழக்கு நோக்கித் தலையில் கிரீட மகுடம் தரித்து பீடத்தின் மீது நின்ற கோலத்தில் காட்சியளிக்கின்றனா். இறைவனோடு சோ்ந்து விளங்கும் அம்மனுக்கு இரண்டு கரங்கள் தான் இருக்கும். இவ்வமைப்பு “இறைவனை விட அம்மன் சக்தி குறைந்தவள் என்பதற்கும் இறைவனுக்குத்தான் முதன்மை என்பதற்கும் அடையாளமாக உள்ளது”[55] என்பா்.

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் அம்மனுக்கு இரு கரங்களே உள்ளன. ஆதிசொக்கநாதா், புட்டுசொக்கநாதா் கோயில்களில் அமைந்துள்ள மீனாட்சி அம்மன்களின் வலக்கரம் கிளியை ஏந்தியும் இடக்கரம் கீழே தொங்க விட்ட நிலையிலும் அமைந்துள்ளன. திருஏடகநாதா் கோயிலில் அமைந்துள்ள ஏலவாா்குழலி அம்மனின் இரண்டு கைகளிலும் அங்குசம், பாசம் ஆகியவை இடம்பெற்றுள்ளன. அம்மனின் சன்னதி முன்பு சிம்ம வாகனமும் பலிபீடமும் அமைந்துள்ளன.

## துவார பாலகா்கள்

மன்னா்களின் அரண்மனைகளிலும் பிரபுக்களின் மாளிகைகளிலும் பணியாற்றும் பணியாட்கள் சேவகா்கள் என்பதைப்போல, கோயில்களின் வாயில்களிலும் கருவறையின் வாயில்களிலும் அக்கோயிலில் குடிகொண்டுள்ள தெய்வங்களின்

ஆணைகளை ஏற்று அதன் படி செயல்படுகின்ற ஆண்,பெண் காவலர்கள் துவாரபாலகர்கள் என்றும் துவாரபாலகிகள் என்றும் அழைக்கப்படுகின்றனர். வாயில்காப்போர் என்பது இவர்களின் தொழில் பெயராகும். ஆண் தெய்வங்கள் உறைகின்ற கோயில் மற்றும் கருவறை வாயில்களில் ஆண்களும் பெண் தெய்வங்களின் வாயில்களில் பெண்களும் துவார பாலகர்களாக நிறுத்தப்பட்டுள்ளனர். இவர்கள் வாயில்களில் பக்கத்திற்கு ஒருவராக நின்ற நிலையில் காட்சி தருகின்றனர். கோயில்களில் துவாரபாலகர்கள் பல்லவர்கள் காலத்தில் உருவாக்கப் பட்டனர். இம்மரபு இன்று அனைத்துக் கோயில்களிலும் காணப்பெறுவது சுட்டத்தக்கது. துவாரபாலகர்கள் பல நிலைகளில் இரண்டு கைகளுடனும் சில நிலைகளில் நான்கு கைகளுடனும் காணப்படுவர்.

ஆதிசொக்கநாதர் கோயிலில் துவார பாலகர் இடம் பெறவில்லை. புட்டுசொக்கநாதர் கோயிலில் சுவாமி, அம்மன் கருவறைகளில் துவார பாலகர்கள் புடைப்புச் சிற்பமாகக் காணப் பெறுகின்றனர். துவாரபாலகர்களின் நான்கு கரங்களில் வலமேல்கை சூசி முத்திரையும் கீழ்க்கை கதை மீது வைத்தும் இடப்புறம் மேல்கையில் சூலமும் கீழ்க்கையில் பாசமும் கொண்டுள்ளது. வாயிலின் வலப்புறத்தில் இருக்கும் வாயிற்காவலர் இடது காலை ஊன்றியும் வலது காலைத்தூக்கியும் இடப்புறத்தில் இருப்பவர் வலதுகாலை ஊன்றியும் இடது காலைத் தூக்கியும் நின்ற நிலையில் காணப்படுகின்றனர். இதே வடிவமைப்பில் அம்மன் கருவறை முன்பு உள்ள துவாரபாலகிகளும் அமைந்துள்ளனர்.

திருஏடகநாதர் கோயிலில் உள்ள துவார பாலகர்கள் வலக்கையில் சூசிமுத்திரையும் இடக்கை வலப்புறம் குறுக்காக வந்து கதையின் மீது வைத்தும் காட்சியளிக்கின்றனர். இரண்டுகாலில் வலக்கால் தூக்கியும் இடக்கால் ஊன்றியும் உள்ளது. இடது புறம் உள்ள துவாரபாலகர் இடக்கையில் சூசிமுத்திரையும் வலக்கையில் கதையைப் பற்றியும் வலக்காலை ஊன்றியும் இடக்காலைத் தூக்கியும் அமைந்துள்ளது. அம்மன் சன்னதி முன் அமைந்த துவாரபாலகிகள் இதே அமைப்பில் காணப்பெறுகின்றனர்.

## நந்தி

சிவாலயத்தின் தலைமைக் காவலராக விளங்கும் நந்திதேவர் ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் மகாமண்டபத்திலும் திருஏடகநாதர் கோயிலில் மட்டும் வெளிமண்டபத்தின் முகப்புப்பகுதியில் கொடிமரத்தின் முன்பும் இடம் பெற்றுள்ளார். கருவறையில் உள்ள சிவலிங்கத்தை நோக்கியவாறு நான்கு கால்களும் மடித்த நிலையில் அமைந்துள்ளது. நீண்ட உடல்வாகும் எடுப்பான திமிலும் அகன்ற தாடையும் நீண்டமூக்கும் பக்கங்களில் இடம்பெறும் குட்டையான காதும் மேல் வாய்ப்பற்கள் தெரியுமாறு சிறிது திறந்த வாயும் நாசியும் திறந்த கண்களும்

குறுங்கொம்பும் கழுத்தை அலங்கரிக்கும் சலங்கை கோர்த்த மணிமாலையும் நீண்ட வாலும் கொண்டு நந்தி காட்சியளிக்கிறது.

### பலிபீடம்

சுவாமி, அம்மன் கருவறைகளின் எதிரில் உள்ள நந்தியை அடுத்துப் பலிபீடம் உள்ளது. பாசத்தையும் தீய சிந்தனைகளையும் பலிகொடுத்து விட்டால் இறைவனை அடையலாம் என்ற உண்மையை உணர்த்தும் விதமாய் பலிபீடம் வட்ட வடிவத்தில் அமைந்துள்ளது.

### கொடிமரம்

பலிபீடத்தையடுத்து கொடிமரம் உள்ளது. பலிபீடத்தின் கால்பாகம் சதுரமான அடிப்பாகத்தின் மேல் உயரமான எட்டுக் கோண மேடையால் சூழப்பட்டுள்ளது. மேல் பாகத்தில் பொருத்தப்பட்டுள்ள இரண்டு உதவித் தடிகளும் (உபதண்டம்) மூன்று பலகைகளும் (ஸ்கந்தம் அல்லது யஸ்திபாலகம்) கொடிமரம் உறுதியாக இருக்கவும் கொடி ஏற்றும் பொழுது பிடிப்பாக விளங்கவும் பயன்படுகின்றன. இக்கொடிமரத்தில் திருவிழாவின் போது இடபம் மீது அமர்ந்த சிவ பார்வதி உருவங்கள் வடிக்கப்பட்டு ஏற்றப்படுகிறது. ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களில் திருஏடகநாதர் கோயிலில் மட்டும் கொடிமரம் அமைந்துள்ளது. இது தங்க முலாம் பூசப்பட்ட தகடால் ஆனது. அக்காலத்தில் இக்கோயிலில் பத்து நாட்கள் திருவிழா நடைபெற்றுள்ளது. ஆனால் தற்சமயம் நிதி பற்றாக்குறையின் காரணமாக கொடிமரம் இருந்தும் திருவிழா நடை பெறுவது இல்லை. சித்திரை முதல் நாளில் மட்டும் கொடிமரத்திற்கு அபிடேகம் செய்யப்பட்டு அதற்கு முன்பு பஞ்சாங்கம் வாசிக்கப்படுகிறது. மற்ற இரு கோயில்களில் கொடிமரம் அமையவில்லை.

### மண்டபங்கள்

கோயில்கள் விழாக்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதால் விழாக்களின் வருகையின் போது பெரிய மண்டபங்களின் தேவையும் ஏற்பட்டது. இதனால் அரசர்கள் கோயில்களில் மண்டபங்களைக் கட்டத்துவங்கினர்.

தமிழகத்தை ஆண்ட விசயநகர, நாயக்கரது காலத்தில் புதுப்புது விழாக்கள் கொண்டாடப்பட்டதால் அதற்கேற்ப கோயில்களில் புதுப்புது மண்டபங்கள் கட்டப்பட்டன. இவர்கள் கட்டிய மண்டபங்களில் முக்கியமானவை கல்யாண மண்டபம், வசந்த மண்டபம், நூற்றுக்கால் மண்டபம், ஆயிரங்கால் மண்டபம், நீராழி மண்டபம் முதலியன ஆகும்.

இறைவன்- இறைவிக்கு நடத்தப்படும் திருமண விழாக்களுக்காகக் கல்யாண மண்டபங்கள் கட்டப்பட்டன. இம்மண்டபங்கள் வெறுமனே தூண்களுடன் கட்டப்படாமல் அத்தூண்களில் சிற்பங்களையும் இடம்பெறச் செய்தனர். இக்கல்யாண மண்டபத்தில் இறைவன்- இறைவி திருமணம் நடப்பதோடு அதனுடன் தொடர்புடைய விழாக்களும் அங்கே நிகழ்த்தப்பட்டன.

வசந்த மண்டபம் என்பது மண்டபத்தின் நடுவில் கோடைகாலத்தில் இறைவனை எழுந்தருளச் செய்வதற்காக, நான்கு தூண்களுடன் கூடிய மேடை ஒன்று அமைத்து அம்மேடையைச் சுற்றி பள்ளங்கள் வெட்டப்பட்டிருக்கும். கோடைகாலத்தில் இதில் தண்ணீரை நிரப்பிக் குளிர்ச்சியை உண்டாக்கச்செய்வர்.

இவை தவிர இவர்களது காலத்தில் நூற்றுக்கால் மண்டபங்கள் பெரும்பாலான கோயில்களில் தோன்றின. பெரிய அளவிலான கோயில்களில் ஆயிரங்கால் மண்டபங்களை அமைத்தனர். இத்தகைய மண்டபங்களில் தூண்கள் அணி ஒட்டுத் தூண்களாகவும் அவை அலங்கரிக்கப்பட்டும் சிற்ப வேலைப்பாடுகளுடனும் திகழ்ந்தன. தூண்களுடன் ஆளுயரச் சிற்பங்களும் இடம்பெற்றன. இம்மண்டபங்களுக்கு ஏறிச் செல்லும் படிகள் அமைந்ததோடு அதன் இருபுறமும் யாளி அல்லது கஜயாளிகளைக் கொண்ட அலங்கரிக்கப்பட்ட கைப்பிடிகள் அமைக்கப்பட்டன. இவை ‘திருக்களிற்றுப்படி’ என அழைக்கப்படும். இத்தகைய மண்டபங்கள் நான்கு புறமும் திறந்த நிலையிலும் மூடிய நிலையிலும் அமைக்கப்பட்டன. மண்டபங்கள் இன்றளவும் விழாக்காலங்களில் பெரிதும் பயன்பாடுடையதாக அமைந்து வருகின்றன.

## அர்த்த மண்டபம்

கருவறையை அடுத்து அமைந்துள்ள பகுதி இடைநாழி ஆகும். இது கருவறையை விடச் சிறியதாக மூன்று கோயில்களிலும் இடம் பெற்றுள்ளது. இப்பகுதியில் தான் வழிபாட்டிற்குரியப் பூசைப்பொருட்கள் வைக்கப்படுகிறது. இடைநாழியை அடுத்துள்ள பகுதி அர்த்த மண்டபம் ஆகும். இது சதுர வடிவமானது. ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களில் திருஏடகநாதர் கோயிலில் மட்டும் அர்த்த மண்டபம் அமைந்துள்ளது. மற்ற இரு கோயில்களில் அர்த்தமண்டபம் காணப்படவில்லை. கருவறையை ஒட்டி மகாமண்டபமே காணப்படுகிறது. இம்மண்டப வாயிலின் இரு புறங்களிலும் துவார பாலகர்கள் உள்ளனர்.

## மகா மண்டபம்

இறைவன் திருவீதி உலாச் செல்வதற்கு முன் அலங்கரித்து மண்டபத்தில் வைக்கப்படுவார். ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் பிரதோச காலம் மற்ற

திருவிழாக் காலம் ஆகிய காலங்களில் மக்கள் பலரும் ஒன்று கூடி வழிபடத் தக்க முறையில் இம்மண்டபம் பெரியதாகவும் உயர்ந்த தளமாகவும் அமைந்திருக்கிறது.

திருக்கோயில் கட்டட வளர்ச்சியில் மண்டபங்கள் சிறப்பிடம் பெறுகின்றன. காலப்போக்கில் பலவகைப் பயன்பாடுகளுக்காக மண்டபங்களின் எண்ணிக்கை பெருகின. ஆதிசொக்கநாதர் மற்றும் புட்டுசொக்கநாதர் கோயிலில் மகாமண்டபம் மட்டும் காணப்படுகிறது. திருஏடகநாதர் கோயிலில் மகாமண்டபமும் முன் மண்டபமும் காணப்படுகிறது. ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களில் மகாமண்டபத்திலும் அதனை ஒட்டிய திருச்சுற்றிலுமே பரிவாரதெய்வங்கள் அனைத்தும் அமைக்கப்பட்டுள்ளன.

## ஆதிசொக்கநாதர் கோயில் பரிவாரதெய்வங்கள் அமைப்பு

மகாமண்டபத்தின் நுழைவாயிலின் இடது புறம் நால்வர் தனிப் பீடத்தில் நின்றவாறும் அதனை அடுத்து வள்ளி, தெய்வானையுடன் கூடிய முருகன் சன்னதி சதுர வடிவிலும் உள்ளது. வடபகுதியில் சுவரோரமாகச் சண்டிகேசுவரரின் திருவுருவம் தெற்குப் பார்த்தவாறு தனிப் பீடத்தின் மீதும் அதன் அருகில் இடைக்காடன் உருவம் கிழக்குப் பார்த்தவாறு தனிப்பீடத்தின் மீதும் அமைந்துள்ளது. இதன் அருகில் நடராசர் சன்னதி சதுர வடிவிலும் அதன் அருகில் பைரவர் சன்னதி தெற்கு நோக்கியவாறும் அமைந்துள்ளது. அதன் அருகில் நவகிரகங்கள் உயர்ந்த பீடத்தின் மீது அமைந்துள்ளன. கருவறையின் வாயிலில் வலப்புறம் விநாயகரும் இடப்புறம் முருகனும் உள்ளனர்.

## புட்டுசொக்கநாதர் கோயில் பரிவாரதெய்வங்கள் அமைப்பு

மகாமண்டபத்துடன் கூடிய சுற்றுப் பிரகாரத்தில் விநாயகர், பாலமுருகன், திருமணக் கோலத்தில் மீனாட்சி சுந்தரேசுவர், சரசுவதி, மகாலெட்சுமி, துர்க்கை, வீரபத்திரர், சப்தகன்னியர், கல்யாணவிநாயகர், நால்வர், கலியநாயனார், அய்யப்பன், வல்லபசித்தர், கன்னிமூல கணபதி, வள்ளி தெய்வானையுடன் சுப்ரமணியர், இரட்டை நாய்வாகனத்துடன் பைரவர், ஆஞ்சநேயர் போன்றவை தனித்தனிப்பீடத்தின் மீது அமைந்துள்ளன.

## திருஏடகநாதர் கோயில் பரிவாரதெய்வங்கள் அமைப்பு

மகாமண்டபத்துடன் கூடிய திருச்சுற்றின் வலப்பக்கம் கிழக்கே நால்வரும் அதன் அருகில் 63 நாயன்மார்களும் பாலகணபதியும் தெற்கு பார்த்தவாறு நின்ற நிலையில் தனித்தனிப் பீடத்தில் உள்ளனர். வடமேற்கு மூலையில் ஆறுமுகப்பெருமான் வள்ளி தெய்வானையுடன் சதுர வடிவ தனிச் சன்னதியில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளார். அதன் அருகில் சப்தமாதர்கள், இரட்டை விநாயகர், சுப்பிரமணியர், மகாலெட்சுமி,

சக்தி விநாயகர், துர்க்கை, சண்டிகேசுவரர் ஆகியோர் தனித்தனிப்பீடத்தில் வடக்கு நோக்கி அமைந்துள்ளனர். அதன்பின் நடராசர் சன்னதி சதுர வடிவில் வடக்கு நோக்கி உள்ளது. அதன் அருகில் கிழக்கு பக்கம் மேற்கு நோக்கியவாறு பைரவர், வல்லகணபதி, ஐயனார், பூரணை, புட்கலை, சந்திரன், கார்த்திகை, ரோகிணி, சூரியன் முதலியோர்கள் தனித்தனிப் பீடத்தில் உள்ளனர்.

### திருச்சுற்று (பிரகாரம்)

தமிழகத்தில் பெரும்பாலான கோயில்களில் துவக்க காலத்தில் கருவறை மற்றும் அர்த்த மண்டபம் மட்டும் கட்டப்பட்டன. அதன்பின் மகா மண்டபங்கள் கட்டப்பட்டன. பிற்காலச் சோழர் காலத்திலும் பாண்டியர் காலத்திலும் திருச்சுற்றுகள் அமைத்து வெளித்திருச்சுற்றுச்சுவரின் வாயிலில் கோபுரமும் அமைக்கப்பட்டன. விசயநகர, நாயக்கர்கள் எல்லாக் கோயில்களிலும் இத்தகு திருச்சுற்றுகளை அமைத்தனர். சிலக்கோயில்களின் திருச்சுற்றுகளில் வீதிகளும் கடைகளும் மற்றும் மக்கள் வசிப்பிடங்களும் அமைந்துள்ளன. இவ்வமைப்பு திருவரங்கம் கோயிலில் உள்ளது.

திருச்சுற்றுகள் ஒவ்வொன்றும் ஏதேனும் ஒரு கருத்தமைதியுடன் அமைக்கப்படும் என்று கூறப்படுகிறது. ஐந்து திருச்சுற்றுகள் இருப்பின் அவை பஞ்சபூதங்களுடன் தொடர்பு படுத்தப்படும். அது சைவக் கோயிலாக இருந்தால் நவசிவாய எனும் ஐந்தெழுத்து மந்திரத்துடன் தொடர்பு படுத்தப்படும். வைணவக் கோயில்களில் எட்டுத் திருச்சுற்றுகள் இருந்தால் அவை ஓம் நமோ நாராயணா எனும் மந்திரத்தைக் குறிப்பதாகக் கருதப்படுகிறது. கோயில்களில் இடம்பெறும் திருச்சுற்றுகள் கருவறையைச் சுற்றி வருவதாகவே அமையும். திருச்சுற்றுகளில் பக்தர்கள் சுற்றிவரும்போது அவர்கள் பார்ப்பதற்காக புராண இதிகாசங்களுடன் தொடர்புடைய பல்வேறு சிற்பங்கள் அமைக்கப்பட்டிருக்கும்.

கருவறையில் எழுந்தருளியிருக்கும் மூர்த்தியை வலம் வந்து வணங்க அமைக்கப்படும் சுற்றுப்பாதைக்குத் 'திருச்சுற்று' என்றுப் பெயர். இதனை வடமொழியில் 'ஆவரணம்' என்றும் 'பிரகாரம்' என்றும் கூறுவர். இத்திருச்சுற்று, உள்சுற்று, வெளிச்சுற்று என இரு வகைப்படும்.

### உள்திருச்சுற்று

கருவறையை மட்டும் வலம் வருவதற்கு வாய்ப்பாக உள்திருச்சுற்று அமைந்துள்ளது. கருவறையின் சுவருக்கும் வெளிச்சுவருக்கும் இடைப்பட்டதும் கருவறையைச் சுற்றி மேற்கூரையுடன் அமைக்கப்பட்டுள்ளதுமான இப்பகுதியை (மண்டபத்தை) உள்திருச்சுற்று என்பர். இச்சுற்று அமைப்பு அர்த்தமண்டபம் அல்லது

மகாமண்டபம் தொடங்குமிடத்திலும் முடியும் இடத்திலும் இருவாயில்களைக் கொண்டுள்ளது. மகாமண்டபத்துடன் கூடிய இத்திருச்சுற்றில் தூண்களும் பரிவார தெய்வங்களும் நாயன்மார்களும் நவகிரகங்களும் அமைக்கப் பெற்றிருக்கும். ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களும் இவ்வமைப்பே கொண்டுள்ளது. இச்சுற்றின் வாயிலில், சாளகோபுரம் அல்லது இராசகோபுரம் அமைந்துள்ளன.

## வெளித்திருச்சுற்று

திருச்சுற்று மதில்களை அடுத்து, மேற்கூரைஇல்லாமல் காணப்படுவது வெளித்திருச்சுற்று ஆகும். வெயில், மழை என்று பாராமல் எல்லா காலங்களிலும் கோயிலை வலம் வரவேண்டும் என்ற வகையில் அடியவர்கட்கு வசதியாக மதிலுக்கு உட்புறமாக சுற்றிலும் கல் பாவப்பெற்ற நடைபாதை அமைக்கப்பெற்றுள்ளது. ஆய்விற்குப்பட்ட மூன்று கோயில்களில் திருஏடகநாதர் கோயிலில் மட்டும் இத்திருச்சுற்று காணப்படுகிறது. இச்சுற்றின் தென்கிழக்கு மூலையில் மடைப்பள்ளியும் வடக்குப்பகுதியில் அன்னதானக் கூடமும் அமைந்துள்ளன. இச்சுற்று வெளிமண்டபத்தை உள்ளடக்கி உள்ளது. இதில் கொடிமரம், பலிபீடம், நந்தி போன்றவையும் மகாமண்டபத்தின் வாயிலின் இருபுறமும் விநாயகரும் முருகப்பெருமானும் அமைந்துள்ளனர். வாயிலில் இராசகோபுரம் அமைந்துள்ளது.

இதனையடுத்து மூன்றாவது திருச்சுற்றில் தலமரம், அலுவலகம், கோமாதா கொட்டில், வாகன இருப்பிடம் போன்றவை அமைந்துள்ளன. இத்திருச்சுற்றில் கிழக்குப் புறம் இருவாயில்களும் (சுவாமி, அம்மன்) மேற்குப்புறம் ஒரு வாயிலும் அமைந்துள்ளன. மேற்குப்புறம் வாயிலின் மேற்பகுதி சாளக்கோபுரத்தில் சோமாசுகந்தர் உருவம் கோட்டத்தில் அமைந்துள்ளது. கிழக்குப்புறம் மொட்டைக்கோபுரமாக அமைந்துள்ளது. இத்திருச்சுற்றின் மதில்சுவர் இருபதைந்து அடி உயரம் கொண்டதாகக் காணப்படுகிறது.

## தூண்கள்

மண்டபத்தின் முக்கிய உறுப்பாகக் கருதப்படுவது தூண்கள் ஆகும். தூண்கள் உத்திரத்தைத் தாங்கும் உறுப்பாகும். இது சதுரம், எண்பட்டை, பதினாறு பட்டை போன்ற வடிவங்களில் காணப்படும். ஆதிசொக்கநாதர் கோயிலில் நான்கு தூண்கள், புட்டுசொக்கநாதர் கோயிலில் பதினாறு தூண்கள், திருஏடகநாதர் கோயிலில் சுவாமி சன்னதியில் இருபத்து நான்கு தூண்கள், அம்மன் சன்னதியில் இருபத்து இரண்டு தூண்கள் அமைந்துள்ளன. இவை அனைத்தும் மூன்று கோயில்களிலும் மகாமண்டபத்திலேயே அமைந்துள்ளன. திருஏடகநாதர் கோயிலின் வெளிமண்டபத்தில் எட்டுத்தூண்கள் அமைந்துள்ளன.

புட்டுசொக்கநாதர் கோயில் தூண்களில் சுவாமி கருவறையின் முன் இடம்பெற்றுள்ள இரண்டு தூண்களில் மட்டும் துவாரபாலகர்களின் சிற்பங்கள் அழகுற வடிவமைக்கப்பட்டுள்ளன. மற்ற தூண்கள் சிற்பங்கள் இன்றி எண்பட்டை வடிவில் அமைந்துள்ளன. ஆதிசொக்கநாதர் கோயில் தூண்களில் விநாயகர், ஆஞ்சநேயர், சிவலிங்கம், முருகன், ஞானசம்பந்தர், மயில், குதிரை, சிவலிங்கம், அன்னப்பறவை, விருட்சம், தண்டபாணி(கையில் கோலுடன் நிற்கும் முருகன்) போன்ற சிற்பங்கள் காணப்படுகின்றன. இவை பதினாறு பட்டைத் தூண்களாக அமைந்துள்ளன.

திருஏடகநாதர்கோயிலில் ஒட்டுத்தூண்களும் 16 பட்டை தூண்களும் அமைக்கப்பட்டுள்ளன. இவற்றில் விநாயகர், முருகன், காளை வாகனத்தில் சிவன், பார்வதி, திருமால், இலக்குமி, சிவலிங்கம், தட்சிணாமூர்த்தி, ஞானசம்பந்தர் போன்ற சிற்பங்கள் அமைந்துள்ளன. மூன்று கோயில்களிலும் கீழ்ப்பகுதியும் மேற்பகுதியும் சதுர வடிவிலும் இடைப்பட்ட பகுதிகள் எண்பட்டை, பதினாறு பட்டை வடிவிலும் கீழ் சதுரப்பகுதியில் சிற்பங்களும் அமைந்துள்ளன. தூண்களின் அடிப்பகுதி நாகபந்த அமைப்புடன் காணப்படுகிறது.

### பள்ளியறை

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களில் திருஏடகநாதர் கோயிலில் மட்டும் பள்ளியறை அமைந்துள்ளது. இது அம்மன் சன்னதியின் மகா மண்டபத்தின் இடது புறம் தெற்கு நோக்கி பளிங்குக் கற்களால் அமைக்கப்பட்டுள்ளது.

### மடைப்பள்ளி

சுவாமிக்குப் படைக்கப்பெறும் நிவேதனப் பொருட்களைத் தயாரிக்கும் இடம் பாகசாலை, மடைப்பள்ளி என்ற பெயர்களால் அழைக்கப்படும். ஆதிசொக்கநாதர் கோயிலில் மகா மண்டபத்தின் தெற்குப்பகுதியில் வடக்கு நோக்கியும் புட்டுசொக்கநாதர் கோயிலில் கோயிலின் வெளிப்புறத்தில் வடப்பக்கம் கிழக்கு நோக்கியும் திருஏடகநாதர் கோயிலில் இரண்டாவது திருச்சுற்றில் கிழக்குப் பகுதியில் மேற்கு நோக்கியும் மடைப்பள்ளி அமைந்துள்ளது.

### கோபுரங்கள்

தமிழகத்தில் முதன்முதலில் கட்டப்பட்ட கோபுரம் காஞ்சி கைலாசநாதர் கோயிலின் கோபுரமாகும். சோழர் காலத்தில் கோபுரங்கள் சிறியனவாக இருந்தன. பிற்காலப் பாண்டியரது காலத்தில் உயர்ந்த கோபுரங்களை அமைக்கும் மரபு தொடங்கியது. பின்னர் விசயநகர, நாயக்கர் காலத்தில் கோபுரங்கள் மிக உயரமாக அமைக்கும் வழக்கம் தொடர்ந்தது. இவர்கள் கோபுரங்கள் கட்டுவதில் அதிக ஈடுபாடும் கவனமும் செலுத்தினர்.

சோழர் காலத்தில் விமானங்கள் உயர்ந்த அளவில் கட்டப்பட்டன. அதே சமயதில் இவை கல்லினால் கட்டப்பட்டன. தஞ்சை பிரகதீசுவரர் கோயிலில் முதலாம் இராசராசன் காலத்தில் இரண்டு கோபுரங்கள் ஒரே நேர்கோட்டில் அமைக்கப்பட்டிருப்பது கோபுரங்களின் வளர்ச்சிநிலையில் ஒரு முக்கிய நிகழ்வாகும்.

விசயநகர, நாயக்கரது காலத்தில் கட்டப்பட்ட கோபுரங்களில் கூரை வரை கருங்கல்லாலும் அதன்மேல் செங்கற்களாலும் கட்டப்பட்டிருக்கும். வாயிலின் இருமருங்கிலும் பெரிய கற்கள், தூண்கள் போல் அமைந்திருக்கும். மரத்திலான வாயிற்கதவுகளில் அழகிய மரவேலைப்பாடுகளுடன் கூடிய சிற்பங்களைக் காணலாம். குறிப்பாக மதுரையை ஆட்சி செய்த நாயக்க மன்னர்களில் ஒருவரான திருமலைநாயக்கர் மிக உயர்ந்த கோபுரங்களை அமைத்துக்கோயில்களை அழகுபடுத்தினார். திருக்கோயிலின் நாற்புறமும் கோபுரங்களை அமைத்த பெருமை இவர்களுக்குரியது. கிருஷ்ண தேவராயரும் 7,9,11 என்ற நிலைகளைக் கொண்ட உயர்ந்த கோபுரங்களைக் கட்டினார். இவர் கட்டிய கோபுரங்கள் இராய கோபுரம் என்று அழைக்கப்பட்டு இன்று இராசகோபுரம் என்று வழங்கப்பெறுகிறது.

கோபுரம் என்பது கோயில் உறுப்புகளில் மிக முக்கியமானது. இக்கோபுரங்கள் நுழை வாயிலுக்கு மேல் அமைக்கப்படுவதாகும். பெரிய கோயில்களில் ஒன்றுக்கு மேற்பட்ட கோபுரங்களும் சிறிய கோயில்களில் ஒற்றை கோபுரங்களும் அமைவது இயல்பாகும்.

விண்ணைத் தொடுமளவிற்கு உயர்ந்து நிற்கும் கோபுரம் திராவிடக் கலையின் தனிப்பெருமையை எடுத்துக்காட்டுகின்றது. பாண்டியநாட்டுத் தலங்களில் உள்ள கோபுரங்கள் பெரும்பாலும் உயர்ந்தே காணப்படுகிறது. இவை கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. ஒரு சில தலங்களில் மட்டுமே வடக்கு நோக்கி அமைந்துள்ளது. கோபுரங்கள் பல அடுக்குகள் (மாடங்கள்) கொண்டுள்ளது. இவற்றில் பொறிக்கப்பட்டுள்ள சிற்பங்கள் சுதையாலானது. கோபுரத்திலுள்ள சிற்பங்கள் உளவியல் நோக்கிலும் புராணநோக்கிலும் அருளியல் நோக்கிலும் மற்றும் இறைவனின் மூர்த்தச் சிறப்பு நோக்கிலும் அமைக்கப்பட்டுள்ளன. கோபுரச் சிற்பங்களில் பாலியல் நோக்கிலான சிற்பங்களை அமைப்பது சராசரி மக்கள் உலக இயல்பின் உண்மை புலப்பாட்டினை அறிய வேண்டும் என்பதற்காகவே அமைந்துள்ளன. கோபுரத்தின் நுனியில் உள்ள கலசங்கள் கோபுரத்தின் அடுக்குகளைப் பொருத்து மூன்று முதல் பதினொன்று வரையில் அமைக்கப்படுகின்றன.

பழங்காலத்தில் கோபுரத்தின் உச்சியில் வைக்கப்படும் கலசமானது சுதையால் செய்யப்பட்டிருந்தது. பிற்கால வளர்ச்சியின் காரணமாக செம்பு, தங்கம் முலாம் பூசப்பட்ட தகடு ஆகியவற்றால் கலசங்கள் அமைக்கப்பட்டன. இவற்றுள்

கோபுரங்களின் அடுக்குகள் எத்தனை உள்ளனவோ அதே அளவு கலசங்கள் கோபுர உச்சியில் அமைக்கப்படுகின்றன.

திருஏடகநாதர் திருக்கோயிலில் கிழக்கு நுழைவாயிலில் பாதியுடன் நிற்கும் மொட்டைக் கோபுரமும் அதனை அடுத்த திருச்சுற்றில் சுவாமி, அம்மன் என இருவாயில்களில் ஐந்து நிலைக் கோபுரங்களும் அதனை அடுத்து அர்த்த மண்டபத்தை ஒட்டி மூன்று நிலைக் கோபுரங்களும் அமைந்துள்ளன. இவை சாளரங்கள், தூண்கள், சிற்ப உருவங்கள் ஆகியவற்றைப் பெற்று அழகுடன் காட்சியளிக்கின்றன.

## மொட்டைக் கோபுரங்கள்

கிழக்கு நுழைவாயிலின் இருபுறமும் மொட்டைக் கோபுரமாக காட்சியளிக்கிறது. அக்கோபுரம் "விசயநகர மன்னர்களால் தொடங்கப்பெற்று கன்னடியர், முகமதியர் முதலியவரோடு நிகழ்ந்த இடையறா போரினால் குறையாகவே நின்று போயிற்று"[56] என்கிறது தலவரலாறு.

"கோபுரம் அமைப்பதற்காகத் தேர்ந்தெடுத்த கல் தேரை விழுந்த கல்லாக இருந்ததால் பாதியிலேயே இக்கோபுரம் நின்று போயிற்று"[57] என்பர் ஆ.இளஞ்செழியன்.

## ஐந்து நிலை இராச கோபுரங்கள்

மொட்டைக் கோபுரத்தைக் கடந்து சென்றால் இராசகோபுரங்கள் சுவாமி, அம்மன் சன்னதிகளின் இரு வாயில்களிலும் காணப்படுகின்றன. இவற்றில் ஐந்து நிலை மாடங்களும் தூண்களும் உச்சியில் நான்கு புறமும் யாழியும் காணப்படுகின்றன. சிவனின் வெவ்வேறு வடிவங்கள், திருமாலின் ஒன்பது அவதாரங்கள், முனிவர்கள், ஆண், பெண் சிற்பங்கள், ஆண், பெண் பாலியல் சிற்பங்கள், பூதகணங்கள் போன்றவை காணப்படுகின்றன. தென் புறம் ஒவ்வொரு நிலையிலும் நடுவில் தட்சிணாமூர்த்தியும் வடபுறம் நான்முகனும் காட்சியளிக்கின்றனர். உச்சியில் ஐந்து தங்கக்கலசங்கள் காணப்படுகின்றன.

## மூன்று நிலைக் கோபுரங்கள்

கம்பத்தடி மண்டபத்தைக் கடந்தவுடன் அர்த்த மண்டபத்தை ஒட்டி மூன்று நிலைக் கோபுரங்கள் அமைந்துள்ளன. சுவாமி சன்னதி மேல் அமைந்த கோபுரத்தில் நான்கு திசைகளிலும் அந்தந்த திசைக்குரிய தெய்வங்களும் ராதாகிருஷ்ணன், சுவாமி, அம்மன், யாளி, ஆண், பெண் சிற்பங்கள், பூதகணங்கள் போன்றவையும் அமைந்துள்ளன.

அம்மன் சன்னதியில் உள்ள கோபுரத்தில் தென்புறம் தட்சிணாமூர்த்தியும் வடபுறம் நான்முகனும் மற்ற இருபுறங்களில் அம்மனின் நின்றநிலை, அமர்ந்த நிலை, திருமணக்கோலம், போன்றவையும் முனிவர்கள், ஆண், பெண் சிற்பங்கள், பூதகணங்கள், பாலியல் சிற்பங்கள், அம்மனின் இருபுறமும் சாமரம் வீசும் பெண்கள், முருகன், விநாயகர் சிற்பங்கள், நாற்புறமும் யாளி போன்றவையும் அமைந்துள்ளன. செம்பாலான மூன்று கலசங்கள் மேலே உள்ளன.

## சாளக்கோபுரம்

ஆதிசொக்கநாதர் கோயிலில் இராசகோபுரம் இன்றி சாளக்கோபுரம் அமைக்கப் பட்டுள்ளது. இவை அழகிற்காக அமைக்கப்பட்டுள்ளன. சுவாமி, அம்மன் என இரண்டு வாயில்களையும் இணைத்து சுவாமி சன்னதி முன்பு காளை வாகனத்தில் அமர்ந்த சுவாமி, அம்மன் உள்ளடக்கிய கோட்டத்தின் மேல் யாழியின் உருவம் அமைந்துள்ளது. அருகே இடதுபுறம் கந்தன் மயில் அருகில் உள்ளவாறு ஒரு கோட்டத்திலும் வலது புறம் விநாயகர் அமர்ந்த நிலையில் ஒரு கோட்டத்திலும் அமைந்துள்ளது. நடுவில் உள்ள கோட்டம் மூன்று நிலைகளைக் கொண்டு பூதகணங்கள் நான்கு புறமும் அமைந்துள்ளது. மூன்று கலசங்கள் தங்க முலாம் பூசப்பட்டு காணப்படுகின்றது.

அம்மன் சன்னதிமுன்பு உள்ள கோபுரம் காளை வாகனத்தின் மீது அம்மன் அமர்ந்த நிலையிலும் வலப்புறம் சரசுவதியும் இடப்புறம் இலட்குமியும் நின்ற நிலையில் அமைந்துள்ளனர். அருகே மற்றொரு கோட்டத்தில் நடுவில் அம்மை, அப்பனுடன் வலப்புறம் விநாயகர், இடப்புறம் முருகன் நின்ற நிலையில் அமைந்துள்ளனர். கருவறை, அர்த்தமண்டபம் போன்றவற்றை உள்ளடக்கி மேலே மூடப்பட்டுள்ள சுவரின் முன்புறம் வாயிலில் இந்த சாளக்கோபுரம் அமைந்துள்ளது. சுவரின் நான்கு புறங்களிலும் காளை வாகனத்துடன் கூடிய பூதகணங்கள் அமைந்துள்ளன.

புட்டுசொக்கநாதர் கோயில் கோபுரமின்றி சாதாரண வாயிலுடன் காணப்படுகிறது.

## பரிவார தெய்வங்களின் திருவுருவ அமைதி

முற்காலச் சோழர்களின் காலத்தில் மூலக் கோயிலைச் சுற்றி சூரியன், சப்தமாதர்கள், கணபதி, முருகன், சேஷ்டாதேவி, சந்திரன், சண்டேசுவரர், பைரவர் ஆகிய பாவார தேவதைகளுக்குத் தனித்தனி கோயில்கள் அமைக்கப்பட்டன. காலப் போக்கில் இச்சுற்று தெய்வங்கள் மூலக்கோயிலின் உட்பிரகாரத்திலும் வெளிச் சுற்றிலும் இடம் பெற்றன.

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் தெய்வத் திருவுருவங்கள் கோயில்களின் கருவறைகளிலும் மண்டபங்களிலும் தூண்களிலும் கோபுரங்களிலும்

ஏராளமாகக் காணப்படுகின்றன. இவற்றுள் தெய்வநிலை சார்ந்த தெய்வ உருவங்களும் (Deities) தெய்வங்களோடு தொடர்புடைய மீமானிட உருவங்களும் (Saints) விலங்கு உருவங்களும் (Divine animals or Vahanas) அடங்கும். இவ்வகை உருவ அமைதிகள் வழிபாட்டோடும் மக்களின் சடங்கு முறைகளோடும் நெருங்கிய தொடர்புடையவையாகும். இவ்வுருவங்கள் மக்களின் வழிபாட்டு அடையாளங்களாக (Fetishistic) மானிடப் பண்புருவாக்கம் பெற்றும் (Anthro Pomorphic form) மனித மற்றும் விலங்குகளுடனும் தெய்வீகச் சிற்பங்களாக உருவாக்கம் பெற்றுள்ளன.

இவ்வகைச் சிற்பங்களுள்,

1. லிங்கோத்பவர்
2. நடராசமூர்த்தி
3. முருகன்
4. விநாயகர்
5. வள்ளி
6. தெய்வானை
7. துர்க்கை
8. பைரவர்
9. தட்சிணாமூர்த்தி
10. சண்டிகேசுவரர், சண்டிகேசுவரி
11. சூரியன்
12. சந்திரன்
13. அறுபத்துமூன்று நாயன்மார்கள்
14. துவாரபாலகர், துவாரபாலகியர்
15. இச்சா சக்தி
16. ஞான சக்தி
17. கிரியா சக்தி
18. மீனாட்சிஅம்மன்
19. இலக்குமி

ஆகிய சிற்பங்கள் முக்கியமானவை ஆகும். இச்சிற்பங்கள் சிவனின் சக்திகளைப் பெற்ற மாற்றுருவங்கள் எனவும் கொள்ளலாம். இவ்வகையான மாற்றுருவங்களைத் தவிர, சிவபெருமானோடு நெருங்கிய தொடர்புடைய தெய்வங்களும் இக்கோயில்களில் காணப்படுகின்றன.

**விநாயகர்**

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் விநாயகர் சன்னதி வாயிலின் வலது புறம் இடம் பெற்றுள்ளது. திருஏடகநாதர் கோயிலில் மகாமண்டபத்தின் வாயிலில் உள்ள மற்றொரு விநாயகருக்கு விமானத்துடன் கூடிய தனிச்சன்னதி அமைந்துள்ளது.

விநாயகர் திருவுருவம் ஓங்கார வடிவாய் அமைந்துள்ளது. தனக்கு மேல் ஒரு தலைவன் இன்றித் தானே அனைவருக்கும் தலைவன் என்ற பொருளை விநாயகர் என்ற பெயர் உணர்த்தும். சிவசக்தியின் மகனாகையால் பிள்ளையார் என்றும் பக்தர்களின் இடர்களைக் களைவதால் விக்னேசுவரர் என்றும் பெயர்கள் உண்டு. ஞானநெறியில் நின்று மோட்சத்தை அளிப்பதால் கணபதி (க-ஞானநெறி, ண-மோட்சம், பதி-பரம்பொருள்) எனவும் கணங்களுக்குத் தலைவனாகையால் கணபதி என்றும் அழைப்பர்."[58]

விநாயகரின் திருவுருவத்தில் யானைமுகம், பெருவயிறு, தாழ்செவிகள், ஐங்கரங்கள் ஆகியன முக்கிய உறுப்புகளாகும். "அ,உ,ம் என்ற மூன்று எழுத்துகளின் இணைப்பான 'ஓம்' என்ற ஒலி ஓங்காரம் என்றும் பிரணவம் என்றும் கருதப்படுகிறது. இம்மூன்று எழுத்துகளும் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களைக் குறிக்கும். யானை முகத்தையுடைய விநாயகர் இந்த ஓங்கார வடிவமாக விளங்குகிறார்."[59] இவ்விநாயகர் திருவுருவம் முதன் முதலாகப் பிள்ளையார்பட்டி குடைவரையில் தான் இடம் பெற்றது. இதனை அடுத்து முற்காலச் சோழர் கோயில்களில் பரிவார ஆலயங்களில் ஒன்றாக இடம் பெற்றார். முப்பத்தியிரண்டு வகையான விநாயகர் பற்றி ஆகம நூல்கள் விவரிக்கின்றன."[60] பாலகணபதி, தருணகணபதி, வீரகணபதி, சக்தி கணபதி, லட்சுமிகணபதி, உத்திஷ்ட கணபதி, மகா கணபதி, ஊர்த்துவ கணபதி, பிங்கள கணபதி என்றும் நூல்கள் வரையறுக்கின்றன."[61] விநாயகர் இருக்கையின் மீது வலதுகாலை ஊன்றி, இடது காலைச் சற்று முன் வைத்து அமர்ந்த நிலையில் நான்கு கரங்களுடன் காட்சிதருகிறார். வலது மேற்கையில் பாசமும் இடது மேற்கையில் அங்குசமும் வலது கீழ்க்கையில் ஒடிந்த கொம்பும் இடது கீழ்க்கையில் மோதகமும் உள்ளன. துதிக்கை வளைந்து மோதகத்தைப் பற்றியவாறு உள்ளது. தலையில் கரண்ட மகுடம் சூடியுள்ளார். விநாயகருக்குரிய வாகனமாக மூஞ்சூறு அமைந்துள்ளது.

**முருகன்**

திருஏடகநாதர் கோயிலில் மகாமண்டபத்தின் வாயிலில் விமானத்துடன் கூடிய தனிச்சன்னதியில் முருகன் இடம்பெற்றுள்ளார்.

முருகனின் திருவுருவம் நான்கு கரங்களுடன் பின்னிருகரங்களில் வலக்கரம் சக்தி ஆயுதமும் இடக்கரம் வஜ்ராயுதமும் கொண்டு காணப்படுகிறது. முன்னிரு கரங்களில் வலக்கரம் அபயத்தையும் இடக்கரம் வரதத்தையும் கொண்டுள்ளது. தலையைக் கீரிடமகுடம் அலங்கரிக்கின்றது. முருகனின் பின்நிற்கும் மயில் நீண்ட தோகை அடுக்குகளைக் கொண்டு அழகுறக் காணப்படுகின்றது.

### முருகன், வள்ளி தெய்வானை சிற்பங்கள்

திருஏடகநாதர் கோயிலில் உள்ள முருகன் ஆறுமுகம், பன்னிரெண்டு கைகள் கொண்டு வள்ளி தெய்வானையுடன் காட்சி தருகிறார். கந்தன், கடம்பன், காங்கேயன், கார்த்திகேயன், சரவணன், விசாகன், குமரன். குகன், சேந்தன், சேயோன், சித்தன், ஆறுமுகன், முத்தையன் என்ற பல பெயர்களால் அழைக்கப்பெறும் ஆறுமுகர், பன்னிரு திருக்கரங்களில், வில், வேல், தண்டு, வச்சிரம், சூலம், அரிவாள், அம்பு, கேடயம், பாசம் அங்குசம், கண்டாமணி, தாமரை ஆகியவை உள்ளன. ஞானம், ஐசுவரியம், அழகு, வீரியம், வைராக்கியம், புகழ் என்ற ஆறு குணங்கள் ஆறுமுகங்களாகத் திகழ்கின்றன.

ஆதிசொக்கநாதர் கோயிலில் முருகன் அருகில் தெய்வானை மட்டும் அமைந்துள்ளார். தெய்வானையுடன் கூடிய முருகன் சிற்பம் ஐம்பொன்னால் செய்தது ஆகும். புட்டுசொக்கநாதர் கோயிலில் வள்ளி தெய்வானையுடன் காணப்படுகிறார். இவ்விரு கோயில்களில் காணப்படும் முருகன் நான்கு கரங்களுடன் ஒருமுகம் கொண்டு காணப்படுகிறார்.

முருகனுக்கு வலப்புறம் வள்ளியும் இடப்புறம் தெய்வானையும் உள்ளனர். முருகனின் பின் கரங்களில் சக்தி, வஜ்ரம் ஆகிய ஆயுதங்களும் முன்னிரு கரங்கள் அபய, வரத முத்திரைகளையும் கொண்டுள்ளன. நீண்டவேல், முன் வலது கரத்தின் மீது சார்த்தப்பட்டுள்ளது. வள்ளி வலது காலை நிலத்தில் ஊன்றியவாறும் இடது காலை லேசாக மடித்தவாறும் தோன்றுகிறாள். இடது கரத்தில் தாமரைமலரும் வலது கரம் கடக முத்திரையிலும் அமைந்துள. தலையைக் கரண்ட மகுடமும் அலங்கரிக்கின்றது.

தெய்வானையின் வலது கரத்தில் தாமரை மலரும், இடக்கரம் தொங்குகரமாகவும் அமைந்துள. இடது கால் பூமியில் நேராக ஊன்றியும் வலது கால் சற்று மடிந்தும் காணப்படுகிறது. “இவ்வுருவங்கள் குமாரதந்திரம் என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ள விதிமுறை களுக்கேற்ப அமைந்துள்ளன.”[62]

## தண்டாயுதபாணி

திருஏடகநாதர் திருக்கோயிலில் உள்ள தண்டாயுதபாணி ஒரு முகமும் இரண்டு கரங்களும் கொண்டு ஒரு கரத்தில் தண்டம் ஏந்தியும் மற்றொரு கரம் இடுப்பில் வைத்துக் கொண்டும் கோவணம் உடுத்தியும் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகிறார்.

## இலக்குமி

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களில் புட்டுசொக்கநாதர் கோயில் மற்றும் திருஏடகநாதர் கோயிலின் திருச்சுற்றில் இலக்குமி இடம்பெற்றுள்ளார்.

தாமரை மலரில் அமர்ந்து இடது கால் மடக்கியும் வலது கால் தொங்க விட்டும் நான்கு கரங்களுடன் அமைந்துள்ள இலக்குமியின் மேல் இரு கரங்களில் நீலோத்பவ மலரும் கீழ்க்கரங்கள் இரண்டும் அபய வரதமாகவும் காட்சியளிக்கின்றன. தலையில் அழகிய கரண்டமகுடம் அணிந்து முழங்காலுக்கு கீழ்வரை மடிப்புடைய ஆடையுடன் அழகுறக் காட்சியளிக்கிறார்.

## கசஇலக்குமி

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களின் கருவறை நுழைவு வாயில்களின் மேலே புடைப்புச் சிற்பமாக கசஇலக்குமி இடம் பெற்றுள்ளாள். திருமகளின் எட்டாவது வடிவம் கசஇலக்குமியாகும். விஷ்ணுபுராணம் "இவள் கடலிலிருந்து வெளிப்பட்டதும் திசையானைகள் எண் திசையிலிருந்தும் பொற்குடங்களில் தூய நீரை ஏந்தி வந்து நீராட்டின என்று கூறுகின்றது. யானைகள் நீராட்ட நடுவில் வீற்றிருப்பதால் இவளைக் கசலெட்சுமி என்று அழைக்கின்றனர். நடைமுறையில் இரண்டு யானைகள் நீராட்டுவது போல் அமையும் கசலெட்சுமியை மிகப்பழங்காலத்திலிருந்தே போற்றி வழிபட்டு வந்துள்ளனர்."[63]

தாமரைமலரில் அமர்ந்துள்ள கசஇலக்குமி மேலிருகரங்களில் தாமரை மலர்களையும் கீழிருகரங்கள் அபய வரத முத்திரைகளையும் தாங்கி, இருபுறமும் யானைகள் நீராட்ட அமர்ந்த கோலத்தில் காட்சிதருகிறாள்.

## நடராசர்

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் நடராசர் வடக்குபக்கம் தெற்கு நோக்கியவாறு தனிச்சன்னதியில் அமைந்துள்ளார்.

முற்காலச் சோழர் காலத்தில் கல்லில் முதன் முதலாக திருவாலீசுவரம் திருக்கோயில் சிவனின் ஆனந்த தாண்டவம் இடம்பெறத் தொடங்கியது. அதனைத்

தொடர்ந்து கோனேரி ராசபுரம் கோயிலில் அர்த்த மண்டபத்தின் தெற்குப்புற தேவகோட்டத்தில் கற்சிற்பமாக இடம் பெற்றுள்ளது.''[64] சிவபெருமான் ஆடிய தாண்டவங்கள் நூற்றியெட்டு எனக் கூறப் பெறுகின்றன. இவற்றுள் எண்பது வகையான கரணங்கள் கி.பி. பதினோராம் நூற்றாண்டில் இராசராசன் காலத்தில் தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் இறைவனே ஆடுவது போலச் செதுக்கப் பெற்றள்ளன. இன்று நாம் பெரும்பான்மையான ஆலயங்களில் காண்பது இறைவன் ஆடிய ஆனந்ததாண்டவ வடிவமே. இவ்வடிவம் பெருந்தத்துவப் பொருளை உள்ளடக்கியது. சங்க நூல்களில் பாண்டுரங்கம், கொடுகொட்டி எனும் இரண்டு ஆடல்கள் பெரும்பான்மையாகப் போற்றப்பட்டுள்ளன.''[65] ''பதஞ்சலி, புலிப்பாதர் என்னும் முனிவர்கள் காண்பதற்காக ஆனந்ததாண்டவத்தை இறைவன் செய்தருளினார் என்பர்.''[66] படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து செயல்களும் இத்தாண்டவத்தில் ஒருங்கே நிகழ்கின்றன.

நடராசர் திருவுருவம் மூன்று கண்கள் நான்கு கைகளுடன் வடிக்கப்பட்டுள்ளது. பின்னிரு கரங்களில் வலக்கரம் டமருகமும் இடக்கரம் தீச்சுடரும் தாங்கியுள்ளது. முன்னிரு கரங்களில் வலக்கரம் அபயமுத்திரையிலும் இடக்கரம் கசஹஸ்த முத்திரையிலும் செதுக்கப்பட்டுள்ளது. தலையில் கங்கையும் இடப்பக்கத்தில் பிறைச்சந்திரனும் சூடியுள்ளாா். இடுப்பில் புலித்தோலாடை அமைந்துள்ளது. ஆடும் வேகத்தை ஒத்து விரிசடை காட்டப்பட்டுள்ளன. வலக்கால் முயலகன் மீது வைத்துள்ளார். இவர் காலடியில் முயலகன் கிடந்த நிலையில் பாம்பைப் பிடித்துள்ளான். இடக்கால் தூக்கிய பாதமாக இடம் பெறுகின்றது. இவரின் பின்புறம் திருவாச்சி வட்ட வடிவில் உள்ளது. நடராசரின் அருகில் சிவகாமசுந்தரியின் உருவம் நின்ற கோலத்தில் வடிவமைக்கப் பட்டுள்ளது. இடதுகை தொங்க விட்டவாறும் வலதுகை சற்று மடங்கிக் கடக முத்திரையுடனும் காணப்பெறுகிறது. திருவாச்சி இல்லாத போதும் அருகே சிவகாமசுந்தரி இல்லாத போதும் நடராசரை வழிபடுவதால் பயன்கிடையாது என்று கூறப்படுவதால் இவ்விரண்டும் நடராசர் உருவத்துடன் எப்போதும் இடம் பெற்றிருக்கும்.

''நடராசப் பெருமான் திருக்கரத்தில் உள்ள உடுக்கை உலகின் தோற்றத்தையும் அபயம் அளிக்கும் திருக்கரம் காத்தலையும் பிறிதொரு கரத்தில் உள்ள நெருப்பு அழித்தலையும் முயலகன் என்னும் அசுரனின் மீது வைத்த கால் மறைத்தலையும் தூக்கிய கால் முக்தியையும் அருள் புரிதலையும் விளக்குகின்றன''[67] என்பா் வா.மெய்யப்பன்.

## பைரவர்

ஆய்விற்குபட்ட மூன்று கோயில்களிலும் பைரவர் இடம்பெற்றுள்ளார். புட்டுசொக்கநாதர் கோயிலில் இரட்டை நாய் வாகனங்கள் கொண்டு பைரவர் அமைந்திருப்பது சிறப்பாகும். இதனால் இவர் இரட்டைகால பைரவர் என அழைக்கப்படுகிறார்.

சிவபெருமானின் 64 வடிவங்களுள் பைரவர் குறிப்பிடத்தக்கவர். "சிவபுராணம் பைரவரை பூரணரூபம் என்று குறிப்பிடுகிறது. சிவனின் முழுவடிவமே பைரவர். உலகைக் காப்பதினாலும் கொடூரமான தோற்றம் காரணமாகவும் பைரவர் என்று அழைக்கப்படுகிறார். காலனும் பயப்படுவதால் இவருக்கு காலபைரவர் என்று பெயர். ஆமர்ந்தகன் என்ற பெயரும் பைரவருக்கு உண்டு. கெட்டவர்களை அழிப்பதால் பைரவருக்கு ஆமர்ந்தகன் என்ற பெயரும் உண்டு. சிற்ப, ஆகம நூல்களில் 64 வகையான பைரவர்களின் உருவ அமைப்பு விளக்கப்பட்டுள்ளன."[68]

பயங்கர வடிவம், பெரிய தோற்றம், உக்கிர சொரூபம் ஆகியன பெற்று உலகெங்கும் வியாபித்துள்ள பைரவரின் உபாசனை தீமைகளைக் களைந்து நன்மையளிக்க வல்லது. ஆலயங்களில் காலையில் பூசைகள் துவங்கும் முன்னரும் இரவில் பூசைகள் நிறைவேறும் முன்னரும் பைரவருக்கு விசேட வழிபாடுகள் செய்வது இவரின் முக்கியத்துவத்தைப் புலப்படுத்தும்.

பைரவர் நான்கு கரங்களுடன் காட்சியளிக்கிறார். பின்னிருகரங்களில் வலக்கரம் உடுக்கையும் இடக்கரம் பாசத்தையும் முன்னிரு கரங்களில் வலக்கரம் திரிசூலத்தையும் இடக்கரம் மண்டை ஓட்டையும் பற்றியுள்ளது. இவரின் தலையைச் சுவாலையுடன் கூடிய மகுடம் அலங்கரிக்கின்றது. கோரைப்பல், இடது மார்பில் மண்டையோடுகள் கோர்த்த மாலையுடன் ஆடையற்ற கோலத்தில் காட்சி தரும் பைரவர் சிற்பத்தின் பின்புறம் நாய் வாகனம் இடம் பெற்றுள்ளது.

## சூரியன்

சூரிய வழிபாடு தொன்று தொட்டு இருந்து வருகிறது. சூரியன் ஒளியின் தலைவன் ஆவான். சூரியனை ஒட்டியே உயிர்கள் வாழ்கின்றன. சைவமதம் சூரியனைச் சிவச்சூரியனாகவும் வைணவம் சூரிய நாராயணனாகவும் போற்றுகின்றன.

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் சூரியன் சிற்பம் மகாமண்டபத்தின் வாயில் அருகில் மேற்கு நோக்கியவாறு அமைந்துள்ளது. திருஏடகநாதர் கோயிலில் மட்டும் சூரியன் நடுவிலும் அவருக்கு வலப்புறம் சாயையும் இடப்புறம் சமிக்ஞையும் இடம் பெற்றுள்ளனர். சூரியன் நின்ற கோலத்தில் நான்கு கரங்கள் கொண்டுள்ளார். வலது, இடது மேற்கைகளில் குவளை மலரும் கீழிரு கைகள் அபய, வரதமாகவும்

உள்ளன. இவரின் தலையில் கரண்ட மகுடமும் தலையைச் சுற்றிச் சூரிய பிரபையும் இடம் பெற்றுள்ளது.

### சந்திரன்

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் சந்திரன் சிற்பம் அமைந்துள்ளது. திருஏடகநாதர் கோயிலில் அவரது மனைவியரான கிருத்திகை, ரோகினியுடன் நின்ற கோலத்தில் மகாமண்டபத்தின் வாயில் அருகில் மேற்கு பார்த்தவாறு இடம் பெற்றுள்ளார். நான்கு கரங்களுடன் காணப்படும் இச்சிற்பத்தின் பின்னிரு கரங்களில் தாமரை மலர்களும் முன்னிரு கரங்கள் அபய, வரதமாகவும் உள்ளது. தலையைச் சுற்றிலும் சந்திர பிரபையும் மகுடமும் இடம் பெற்றுள்ளன.

### நால்வர்

சைவ சமய வளர்ச்சிக்குப் பெரும் தொண்டாற்றிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரின் திருவுருவங்கள் ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் மகா மண்டபத்தின் தென்புறத்திலேயே அமைந்துள்ளன. பொதுவாக இத்திருவுருவங்கள் சில விதிமுறைகளுக்குட்பட்டு அமைக்கப்படுகின்றன. “திருஞானசம்பந்தர் ஒரு கரத்தில் சிறு கிண்ணம் ஏந்தியவாறும் மறு கரத்தை வான் நோக்கிச் சுட்ட வேண்டும். திருநாவுக்கரசர் தனது கைகளை கூப்பியவாறும் தோளில் உழவாரப் படையை ஏந்தியவாறும் சித்தரிக்கப்பட வேண்டும். சுந்தரர் இறைவன் மீது அதிக உரிமை கொண்ட வன்தொண்டராகப் படைக்கப்பட வேண்டும். மாணிக்க வாசகர் கௌபீனம் யஞ்ஞோபவிதம், ருத்ராச மாலை, சுருண்ட கேசம் ஆகியவற்றுடன் எளிமையாகத் தோன்ற வேண்டும்”[69] என்பர்.

திருஞானசம்பந்தரின் கரத்தில் பொற்றாளம் உள்ளது. சுந்தரர் ஒரு கரத்தில் சாமரமும் மற்றொரு கரத்தைத் தண்டத்தின் மீது ஊன்றியவாறும் தோன்றுகிறார். மாணிக்கவாசகர் ஓலைச்சுவடியுடன் காட்சியளிக்கிறார். நால்வரும் உயரமான மேடை மீது நின்ற கோலத்தில் காட்சி தருகின்றனர்.

### நாயன்மார்கள்

நால்வர் வரிசையையடுத்து அறுபத்து மூன்று நாயன்மார்களும் ஒன்பது தொகையடியார்களும் திருத்தொண்டர் புராணத்தில் இடம் பெற்றுள்ள அதே வரிசையில் காட்சியளிக்கின்றனர். திருஏடகநாதர் கோயிலில் மட்டும் தனிச்சன்னதியில் அமைந்துள்ளனர். மற்ற இரண்டு கோயில்களில் நால்வர் மட்டும் நின்றகோலத்தில் காட்சியளிக்கின்றனர்.

## நவக்கிரகங்கள்

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் தனித்த நிலையில் உயர்ந்த பீடத்தின் மீது நவக்கிரகங்கள் காணப்படுகின்றன.

மனிதன் எதைக் கண்டு அஞ்சுகிறானோ அதனையே வழிபடும் இயல்புடையவன். சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சனி, இராகு, கேது எனப் பெயர் பெற்றவை ஒன்பது கிரகங்கள். இக்கிரகங்கள் வழிபடுவதற்குரியன. புராணங்கள் கிரகங்களைத் தனித்தனித் தெய்வங்களுடன் தொடர்புபடுத்திக் கூறுவதோடு அமையாது பெருந்தெய்வங்களே நவக்கிரக வழிபாடு நிகழ்த்தியதாகவும் கூறுகின்றன. இத்தகைய நவக்கிரக வழிபாடு பிற்காலத்தில் ஏற்பட்டதாகும்.

திருஞானசம்பந்தரின் கோளறு பதிகம் தோன்றிய பின்னரே மனித வாழ்வில் நன்மை, தீமை ஆகியவற்றுடன் தொடர்புடைய கோள்களின் வழிபாடு துவங்கியிருக்கக் கூடும். ஆலயத்தின் வடகிழக்குப் பகுதியில் நவக்கிரகங்கள் நிறுவப்பட வேண்டும் என்று சிற்ப நூல்கள் கூறுகின்றன. நவக்கிரகங்களின் உருவமைப்பு பற்றி ரூபமண்டனம் என்ற நூல் விரிவாகக் கூறுகிறது. “வெண்ணிறமுடைய சூரியன் இரு கரங்களிலும் தாமரை மலர்களைத் தாங்கியவாறு ஏழு குதிரைகள் இழுக்கும் தேரில் பவனி வருவார். வெண்ணிறமுடைய சந்திரன் இரு கரங்களில் குமுத மலர்களை ஏந்தியவாறு பத்து குதிரைகள் இழுக்கும் தேரில் செல்வார். செந்நிறமுடைய அங்காரகன் தண்டம், கமண்டலம் ஆகியவற்றை ஏந்தியவாறு ஆட்டு வாகனத்தில் பவனி வருவார். மஞ்சள் நிறமுடைய புதன் யோக முத்திரையளிக்கும் கரங்களுடன் சர்ப ஆசனத்தில் காட்சியளிப்பார். பிரஹஸ்பதி (வியாழன்) மஞ்சள் நிறமுடைய மேனியுடன் அக்கமாலை, கமண்டலம் ஆகியன ஏந்தியவாறு ஹம்ஸ வாகனத்தில் இருப்பார். வெண்ணிறமுடைய சுக்கிரன் அக்கமாலை, கமண்டலத்துடன் தவளையை வாகனமாக உடையவர். கருநிறமுடைய சனீஸ்வரன் தண்டம், கமண்டலம் ஏந்தியவாறு காகத்தை வாகனமாக உடையவர். புகை நிறமுடைய இராகு யாககுண்டத்தில் அமர்வார். கீழ்ப்பாகத்தில் பாம்பு வடிவுடைய கேது புகை நிறை மேனியுடன் அஞ்சலி ஹஸ்தராகத் தோன்றுவார்.”[70]

நவக்கிரகங்களின் அமைப்பில் நடுவில் சூரியன் கிழக்கு நோக்கி இருப்பார். சூரியனுக்கு மேற்கே சனி மேற்கு நோக்கியும் வடமேற்கில் கேது தெற்கு நோக்கியும் தென்மேற்கில் ராகு தெற்கு நோக்கியும் வடக்கே குரு (வியாழன்) வடக்கு நோக்கியும் வடகிழக்கில் புதன் கிழக்கு நோக்கியும் சுக்கிரன் கிழக்கில் கிழக்கு நோக்கியும் சந்திரன் தென்கிழக்கில் மேற்கு நோக்கியும் செவ்வாய் தெற்கில் தெற்கு நோக்கியும் அமைந்துள்ளன.

வ

மே

| | | |
|---|---|---|
| கேது | குரு (வியாழன்) | புதன் |
| சனி | சூரியன் | சுக்கிரன் |
| ராகு | செவ்வாய் | சந்திரன் |

கி

தெ

இச்சிற்பங்கள் உயரமான மேடை மீது அமைந்துள்ளன. திருஞானசம்பந்தர் நவக்கிரகங்கள் குறித்து,

**"வேயுறு தோளிபங்கன் விடமுண்டகண்டன்**
**மிக நல்ல வீணைதடவி**
**மாசறுதிங்கள் கங்கை முடிமேல் அணிந்தென்**
**உளமே புகுந்ததனால்**
**ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி**
**சனிபாம்பு இரண்டும் உடனே**
**ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல**
**அடியார் அவர்க்கு மிகவே"**[71]

என்று கோளறு பதிகத்தில் உரைக்கின்றார். நவக்கிரகங்களில் சனிபகவான் சிறப்பிடம் பெறுவார். சில கோயில்களில் நவக்கிரகங்கள் திருமணக் கோலத்துடன் காணப்படுவர். ஒரு சில கோயில்களில் திருமணக் கோலமின்றித் தனித்த நிலையிலும் நவக்கிரகங்கள் அமைந்துள்ளன.

## இடைக்காட்டுச்சித்தர்

இடைக்காடர் தொண்டை மண்டலத்தில் உள்ள இடையன் மேடு என்ற பகுதியைச் சேர்ந்தவர் என்றும் மதுரைக்குக் கிழக்கே உள்ள இடைக்காடு என்னும் ஊரில் பிறந்தவர் என்றும் இரு கருத்துக்கள் உள்ளன. இடைக்காடருக்காக இறைவன் கோயில் கொண்ட இடம் என்பதால் ஆதிசொக்கநாதர் கோயிலில் இடைக்காட்டுச்சித்தர், சுவாமி சன்னதியின் வடபுறத்தில் கிழக்கு நோக்கியவாறு அமர்ந்தகோலத்தில் உள்ளார். இவருக்கு இரண்டு கரங்கள். கண்களை மூடித் தியான நிலையில் மேடை மீது அமர்ந்துள்ளார். ஆதிசொக்கநாதர் கோயில் இடைக்காடன் பிணக்குத் தீர்த்த திருவிளையாடலோடு தொடர்புடையது என்பதை இவ்இடைக்காடன் சிற்பம் உறுதிப்படுத்துகிறது.

### வந்தியம்மை

வந்தியம்மைக்கு புட்டுசொக்கநாதர் கோயிலில் சுவாமி சன்னதியின் இடப்பக்கம் விமானத்துடன் கூடிய தனிச் சன்னதி அமைந்துள்ளது. வந்தியம்மை நின்ற கோலத்தில் இரண்டு கரங்கள் கொண்டு உள்ளார். வலக்கரம் அபயமுத்திரையிலும் இடக்கரத்தில் பிட்டுடன் கூடிய கிண்ணத்துடனும் காட்சி தருகிறார். புட்டுசொக்கநாதர் கோயில் மண் சுமந்த திருவிளையாடலுடன் தொடர்புடையது என்பதை வந்தியம்மையின் சிற்பம் உறுதிப்படுத்துகிறது.

### திருஞானசம்பந்தர்

திருஏடகநாதர் கோயிலின் அருகில் வைகை ஆற்றங்கரையோரம் திருஞானசம்பந்தருக்குத் தனிக்கோயில் அமைந்துள்ளது. நடுவில் திருஞானசம்பந்தர் சன்னதி உள்ளது. அதனைச் சுற்றி நான்கு மூலையில் நான்கு தூண்களும் அதனைச் சுற்றிக் கம்பிகளால் ஆன அடைப்பும் காணப்படுகிறது. கோயிலைச் சுற்றிச் சுற்றுச்சுவர் அமைந்துள்ளது.

திருஞானசம்பந்தர் நின்ற நிலையில் இரண்டு கரங்கள் கொண்டு உள்ளார். இடது கரத்தில் ஏடும் வலது கரத்தில் சூசி முத்திரையுடனும் தலையின் வலது பக்கத்தில் கொண்டையும் கழுத்தில் அணிகலன்களும் சிற்பத்தை அழகுபடுத்துகின்றன. சமணரைக் கழுவேற்றிய திருவிளையாடலின் ஒரு பகுதியான புனல் வாதத்தின் போது ஞானசம்பந்தர் ஆற்றில் இட்ட ஏடு கரை ஒதுங்கியதை அடிப்படையாகக் கொண்டு இக்கோயில் அமைந்துள்ளமை சுட்டத்தக்கது.

### மீனாட்சி திருக்கல்யாணம்

மீனாட்சி சுந்தரரேசுவரர் திருக்கல்யாணச் சிற்பம் புட்டுசொக்கநாதர் கோயிலில் மட்டும் வடமேற்கு மூலையில் தனிப்பீடத்தின் மீது கிழக்கு நோக்கி அமைந்துள்ளது.

மீனாட்சி, சொக்கநாதர் திருக்கல்யாணச் சிற்பம் மதுரை மாவட்டம் கோயில்களில் மட்டுமே அதிகளவில் இடம் பெறுகிறது. இச்சிற்பம், நடுவில் மீனாட்சியும் திருமால் மீனாட்சியைத் தாரைவார்த்துக் கொடுக்க சிவபெருமான் பெற்றுக் கொள்வது போல் அமைந்துள்ளது. திருமாலின் நான்கு கைகளில் வலது, இடது மேற்கைகளில் சங்கும் சக்கரமும் கீழ் வலது கை மீனாட்சியின் வலக்கையைப் பற்றி சிவபெருமானின் வலக்கையில் கொடுத்த நிலையிலும் இடக்கை இடுப்பில் வைத்தும் காணப்படுகிறது. மீனாட்சியின் இடக்கை இடுப்பில் வைத்தவாறும் வலக்கை சிவபெருமானைப் பற்றியவாறும் உள்ளது. சிவபெருமானின் நான்கு கைகளில் வலது இடது மேற்கைகளில் மானும் மழுவும் கீழ்வலக்கை மீனாட்சியைப் பற்றிய வாறும்

இடக்கை இடுப்பில் வைத்தவாறும் அமைந்துள்ளது. சிவன், திருமால் மீனாட்சி ஆகிய மூவரும் தலையில் கரண்ட மகுடம் அணிந்து அழகுறக் காட்சியளிக்கின்றனர்.

சிற்பம் அமைந்துள்ள மேடையின் கீழ்ப்பகுதியில் நான்முகன், முனிவர்கள் போன்றவற்களின் சிற்பங்கள் சிறியஅளவில் புடைப்புச்சிற்பமாக வடிவமைக்கப்பட்டுள்ளனர்.

### ஐயப்பன்

புட்டுசொக்கநாதர் கோயிலில் மட்டும் ஐயப்பன் சிற்பம் தனிப்பீடத்தின் மீது அமைந்துள்ளது. ஐயப்பனின் தோற்றம் வலதுகை சின்முத்திரையுடனும் இடதுகை மடக்கியபாதத்தை நோக்கி நீட்டியவாறும் உள்ளது. கால்கள் இரண்டும் குத்துக்காலிட்டு ஆசனத்தின் மீது அமர்ந்தவாறு காட்சி தருகிறார்.

### ஐயனார்

ஐயனார் சிற்பம் திருஏடகநாதர் கோயிலில் மட்டும் அமைந்துள்ளது. அய்யனார்(ஐயனார்) ஒரு நாட்டுப்புறக்காவல் தெய்வம். பழங்காலம் தொட்டே ஐயனார் வழிபாடு தமிழர் இடையே இருந்து வருகிறது. குறிப்பாக மதுரையிலும் அதனைச் சுற்றியுள்ள சிற்றூர்களிலும் இவ்வழிபாடு இருந்து வருகிறது. ஐயனார் வழிபாட்டைக் குலத்தெய்வ வழிபாடு என்றும் குறிப்பிடலாம்.

ஐயனார் வலது கையில் மலரைப் பிடித்தபடியும் இடதுகையை இடதுகாலின் மீது சார்த்தியது போலும் வைத்திருக்கிறார். இவர் காலை மடித்துப் பீடத்தின் மீது வைத்துக் கொண்டு வலது காலைக் கீழே தொங்கவிட்டிருக்கிறார். ஐயனாரின் அருகில் வலப்புறம் புட்கலையும் இடப்புறம் பூரணையும் உள்ளனர். புட்கலை, இடக்காலை மடித்துப் பீடத்தின் மீது வைத்துக் கொண்டு வலக்காலைக் கீழே தொங்க விட்டபடியும் இடக்கையில் மலரைப் பிடித்தபடியும் வலக்கையைத் தொடைமீது வைத்து அமர்ந்த கோலத்தில் உள்ளார்.

பூரணை, வலக்காலை மடக்கியும் இடக்காலைக் கீழே தொங்க விட்ட படியும் கையில் மலரைப் பிடித்தபடியும் அமர்ந்துள்ளார். இம்மூவரும் தனித்தனிப்பீடத்தில் அருகருகே உள்ளனர்.

### கலியநாயனார்

கலியநாயனார் சிற்பம் புட்டுசொக்கநாதர் கோயில் பிரகாரத்தில் அமைந்துள்ளது. வணிக மரபைச் சேர்ந்தவர் ஆதலால் அவரைச் சிறப்பிக்க வணிக மரபினரால் நிருவகிக்கப்படும் இக்கோயிலில் இச்சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது. தொண்டை நாட்டின் திருவொற்றியூரிலே செக்குத் தொழிலை உடைய வணிகர் மரபிலே

தோன்றியவர் கலியநாயனார். இவர் சிவபெருமானுக்கு விளக்கிடும் பணியாற்றிய போது விளக்கிட எண்ணெய் இல்லாததால் தன் கழுத்தை அறுத்து உதிரத்தால் விளக்கேற்ற எண்ணும் பொழுது சிவபெருமானால் ஆட்கொள்ளப்பட்டார். இவர் நாயன்மார்களில் ஒருவராவார். இச்சிற்பம் கையில் வாளுடன் கழுத்தில் அவ்வாளை வைத்த நிலையில் நின்ற கோலத்தில் அமைக்கப்பட்டுள்ளது.

## வல்லபசித்தர்

மதுரை அருகில் உள்ள திருப்பூவனம் என்ற ஊரில் பொன்னனையாள் என்ற பெண் திருப்பூவனநாதருக்குத் தொண்டு செய்து கொண்டு அடியவர்களுக்கும் உணவு படைத்துக் கொண்டிருந்தார். அவளுக்கு திருப்பூவனநாதருக்கு உற்சவத் திருமேனி செய்ய வேண்டும் என்ற ஆசை இருந்தது. அப்பொழுது சித்தர் வடிவத்தில் வந்த சிவபெருமான் அவள் ஆசையை நிறைவேற்ற அவள் வீட்டில் இருந்த பித்தளை, செம்புப் பாத்திரங்களை நெருப்பில் இட்டுத் தங்க மாக்கினார்.

**"வைத்த வேறுவேறு உலோகமும்**
**மழு உழை கரந்த**
**சித்த சாமிகள் நீற்றினைச்**
**சிதறினர் பார்த்தே**
**இத்தை நீ இரா எரியில் இட்டு**
**எடுக்கின் பொன்ஆம்**
**அத்தை நாயகன் திருஉக் கொள்க**
**என அறைந்தார்"**[72]

என்னும் பாடல் அதனை விளக்கும். அதில் சிலை செய்த அந்தப் பெண் அதனை எடுத்துக் கொண்டு அவர் மதுரையில் இருப்பதை அறிந்து, அவரைக்காண மதுரை வருகிறார். அங்கும் சித்தர் அனைவருக்கும் அற்புதங்கள் நிகழ்த்திக்கொண்டிருந்தார். அவள் சென்றபோது தியானக் கோலத்தில் அமர்ந்திருந்த அவருக்கு பூப்பந்தல் இட்டு வணங்கினாள் பொன்னனையாள். நீ எனக்குப் பூப்பந்தல் இட்டு வழிபட்டது போல் யார் என்னை வழிபடுகிறார்களோ அவர்களுக்கு நினைத்தது நடக்கும் என்று கூறிவிட்டு கற்சிலையாகி விட்டார். இவரே வல்லபசித்தர் என அழைக்கப்படுகிறார்.

இவ்வல்லபசித்தர் சிற்பம் புட்டுசொக்கநாதர் கோயிலில் அபய, வரத முத்திரையுடன் அமர்ந்த கோலத்தில் மகாமண்டபத்தில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இவருக்கு ஒவ்வொரு தமிழ் மாதப்பிறப்பு அன்றும் பூப்பந்தல் இட்டு வழிபாடு செய்யப்படுகிறது.

## சப்த கன்னியர்

புட்டுசொக்கநாதர், திருஏடகநாதர் ஆகிய கோயில்களில் சப்தகன்னியர் சிற்பங்கள் தனித்தனி பீடத்தின் மீது அமைக்கப்பட்டுள்ளது. பிராமி, மகேசுவரி, கௌரி, வைணவி, வராகி, சாமுண்டி, இந்திராணி இவர்களே சப்த கன்னியர் ஆவர். இவ்வழிபாடு இந்தியா முழுவதும் நடைபெறுகிறது. மொகஞ்சதாரோ, ஹரப்பா காலத்திலுள்ள முத்திரைத் தகடு ஒன்றில் தாய்த் தெய்வ உருவமும் அதனுடன் ஏழு துணைப் பெண் தெய்வ உருவங்களும் வடிக்கப் பெற்றிருந்தமையினை வரலாற்று ஆய்வாளர்கள் குறிப்பிடுவர்.''[73] சப்த கன்னியர் வழிபாடு கி.பி.5 முதல் கி.பி.10-ஆம் நூற்றாண்டு வரை அதிக செல்வாக்குப் பெற்றிருந்தது. காலம் செல்லச் செல்ல சப்தகன்னியர் வழிபாடு பிற தெய்வங்களின் வழிபாட்டோடு இணைக்கப்பெற்று அனைத்துக் கோயில்களிலும் வழிபடப் பெற்றது.

### பிராமி

பிராமி பிரமனின் கூறுகளை உடையவள். இவள் நான்கு முகங்களும் நான்கு கரங்களுடன் காட்சிதருகிறாள். பத்மாசனத் திருக்கோலத்தில் அமர்ந்திருக்கும் இவளின் கீழிரு கரங்களில் அபய வரத முத்திரையும் மேலிரு கரங்களில் மாலையும் கமண்டலமும் காணப்படுகின்றன.

### மகேசுவரி

இவள் மகேசுவரனின் கூறுகளைக் கொண்டவள். மகேசுவரனைப் போன்று திருக் கண்களை உடையவள். சடாமகுடம் தரித்தவள். ரிசப வாகனத்தில் எழுந்தருள விருப்பம் கொண்டவள். நான்கு திருக்கரங்களில் வல, இட மேற்கைகளில் சூலம், உடுக்கை உள்ளது. கீழ் வலக்கை நீலோற்பவ மலரையும் இடக்கை தொடையின் மீது ஊன்றியும் உள்ளன.

### கௌரி

இவள் முருகனின் கூறுகளை உடையவள். எப்பொழுதும் இரத்தின மகுடமே அணிந்திருப்பாள். அழகிய நான்கு திருக்கரங்களில் அபய வரத முத்திரையும் வேல், அங்குசம் போன்றவைகளை ஏந்தியும் காட்சி தருகிறாள். செம்பட்டாடை இவளது விருப்பமாகும்.

### வைணவி

இவள் திருமாலின் கூறுகளை உடையவள். இவளை நாராயணி என்றும் அழைப்பர். நான்கு திருக்கரங்களை உடையவள். இவைகளில் அபய. வரத

முத்திரையும் சங்கு, சக்கரங்களைக் கொண்டும் காணப்படுகிறாள். இவளது கொடி மற்றும் வாகனம் கருடன் ஆகும்.

### வராகி

இவள் சிவன், திருமால் ஆகிய இருவரின் கூறுகளையும் கொண்டு விளங்குபவள். வராக முகத்தினை உடையவள். உலக்கை, கலப்பைகளை வல இட மேற்கரங்களிலும் இடக்கையைத் தொடையின் மீது ஊன்றியும் வலக்கையை அபயக் கரமாகவும் கொண்டுள்ளாள். இவள் மஞ்சள் ஆடையை விரும்புபவள். சிம்மவாகனத்தில் வீற்றிருக்கின்றாள்.

### இந்திராணி

இவள் இந்திரனின் கூறுகளை உடையவள். இவளது வாகனம் யானை. நான்கு கரத்தினள். உலக்கை, கலப்பை போன்றவற்றை வல, இட மேற்கரங்களிலும் கீழ்க்கரங்களில் அபய, வரத முத்திரையும் தாங்கியுள்ளாள்.

### சாமுண்டி

மகிசாசுரனின் சேனைத் தலைவர்களான சண்டன், முண்டன் என்னும் இரு அசுரர்களை யாகத்தில் பசுவை வதைப்பது போன்று தலையைக் கொய்தமையால், சக்திதேவியினால் இவள் சாமுண்டி என அழைக்கப்பட்டாள். இவள் மூன்று கண்களும் எட்டு கரங்களும் உடையவள். அதில் சூலம், அம்பு, கட்சம், சங்கு, சக்கரம், பாசம், பலகை, வில் முதலியவைகளைத் தாங்கி இருப்பாள். தலையில் சடாமகுடம் தரித்திருப்பாள். மகிச வாகனம் கொண்டிருப்பாள்.

### உற்சவப் படிமங்கள் (அ) செப்புத்திருமேனி

தெய்வமூர்த்தங்களை அசையாதவை(அசலம்), அசையும் தன்மையுடையவை(சலம்) இவ்விரண்டு தன்மைகளையும் பெற்றவை(சலாசலம்) என்று பிரித்துள்ளனர். இவற்றுள் மூல உருவங்களை அசலம் என்று கூறலாம். ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு எடுத்துச் செல்லும் உருவங்கள் சலம் என்ற வகையைச் சார்ந்தவை. இவ்உற்சவத் திருமேனிகள் செம்பால் செய்யப் பெருவதால் செப்புத் திருமேனிகள் என அழைக்கப்பெற்றன.

### சிற்பக்கலை

கட்டடக்கலையை விடச் சிற்பக்கலை மிக நுண்ணியது. மனிதன், விலங்கு, பறவை, மரம், கடல், மலை முதலிய இயற்கை உருவங்களை அழகுபட அமைப்பதே சிற்பக்கலையாகும்.

## சைவக்கோயில்களின் சிற்பங்கள்

சைவ சமயத்தைச் சார்ந்தவர்கள் சிவபெருமானுடைய திருவுருவங்களை இருந்த கோலமாகவும் நின்ற கோலமாகவும் ஆடுங்கோலமாகவும் வடித்தனர்.

## நால்வகைப்பிரிவு

உலோகத்தினாலும் கல்லினாலும் அமைக்கப்பட்ட சிற்ப உருவங்களை நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை: 1. தெய்வ உருவம் 2. இயற்கை உருவம் 3. கற்பனை உருவம் 4. பிரதிமை உருவம் என இந்நான்கு வகையான சிற்பங்களையும் நமது நாட்டுக் கோயில்களில் காணலாம்.

## பிரதிமைச் சிற்பங்கள்

தனிப்பட்ட ஆட்களின் உருவ அமைப்பை உள்ளது உள்ளவாறு அமைப்பது பிரதிமைச் சிற்பங்கள் ஆகும். பெரும்பாலும் திருக்கோயில்களைக் கட்டிய மன்னர்கள், வள்ளல்களின் உருவங்கள் சிற்பங்களாகச் செதுக்கப்படும்.

## பாண்டியர் கலைப்பாணி

ஆய்விற்குட்பட்ட மூன்று திருக்கோயில்களும் பாண்டிய மன்னர்களது கலைப்பாணியை ஒத்துள்ளது. பாண்டியரது சிற்பக்கலைப்பாணியை முற்காலப் பாண்டியர் (கி.பி. 600லிருந்து 850 வரை) கலைப்பாணி, பிற்காலப் பாண்டியர் (கி.பி. 1200 முதல் 1350 வரை) கலைப்பாணி என இருவகைப்படுத்தலாம். முற்காலப் பாண்டியரது கலைப்பாணியில் அமைந்த சிற்பங்கள் சிறு அளவினையுடையதாக (குறுகியதாக) இருக்கும். தலையில் இடம்பெறும் மகுடமானது சிறியதாக (கரண்டமகுடமாக) இடம்பெறும். ஆபரணங்கள் குறைவாகவே காணப்படும். முற்காலப் பாண்டியரது கோயில்கள் பெருமளவு சிதைந்து விட்ட படியால் ஒருசில கோயில்களே சிதைவடையாது நமக்குக் கிடைக்கின்றன. எனவே, முற்காலப் பாண்டியரது சிற்பங்கள் பெருமளவு உதிரியாகவே ஆங்காங்கே கிடைக்கின்றன.

பிற்காலப் பாண்டியரது சிற்பக்கலைப்பாணியானது முற்காலப்பாண்டியர் கலைப்பாணியிலிருந்து மாறுபட்டு வளர்ச்சியடைந்தவைகளாக உள்ளன. பாண்டியர் தம் கோயில்களின் கோட்டங்களில் சிற்பங்களை வைக்கவில்லை. அதற்கு பதிலாக விமானத்தின் மேல்தளங்களிலும் கோபுரங்களிலும் சிற்பங்களை அமைத்தனர்.

விழாக்காலங்களில் மூல தெய்வ உருவங்களின் பிரதிநிதிகளான உற்சவ உருவங்கள் பற்பல வாகனங்களில் சகல அலங்காரங்களுடன் வீதியுலாவாகச் செல்வது வழக்கம். இவ்வுருவங்கள் பொதுவாகப் பஞ்சலோகம் என்ற உலோகக் கலவையால் உருவாக்கப்படுகின்றன. வயது முதுர்ச்சி, உடல் ஊனம், நோய்,

அலுவலக நிமித்தம் போன்ற காரணங்களால் கோயில்களுக்குச் செல்ல முடியாதவர்கள் இருந்த இடத்திலிருந்தே இறைவனை வழிபடுவதற்காகவே கடவுளை மக்களிடம் கொணர்தல் என்ற இவ்வழக்கம் உருவாயிற்று. உற்சவ படிமங்கள் பெரும்பாலும் செப்புத் திருமேனிகளாக வடிக்கப்படுகின்றன.

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களில் ஆதிசொக்கநாதர் கோயிலில் பிரதோசநாதர், சந்திரசேகரர், முருகன், தெய்வானை (சலாசலம்) ஆகிய செப்புப் படிமங்களும் புட்டுசொக்கநாதர் கோயிலில் மீனாட்சி, சொக்கநாதர், பிரதோசநாதர் ஆகிய செப்புப் படிமங்களும் திருஏடகநாதர் திருக்கோயிலில் விநாயகர், சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை, சண்முகர், வள்ளி, தெய்வானை, சோமாசுகந்தர், சந்திரசேகரர், சண்டிகேசுவரர், பிச்சாடனார், நடராசர், சிவகாமசுந்தரி, மாணிக்க வாசகர், ஞானசம்பந்தர், பிரதோசநாதர் ஆகிய செப்புப் படிமங்களும் உள்ளன.

### சந்திரசேகர்

பிறைமதியைச் சிரசில் சூடியுள்ளதால் சிவபெருமானுக்குச் சந்திரசேகரர் என்ற பெயர் உண்டு. இவரது பின் இடது கரத்தில் மழுவும் பின் வலது கரத்தில் மானும் காட்சியளிக்கின்றன. முன் கரங்கள் அபய, வரத முத்திரைகளை வெளிப்படுத்துகின்றன. தலையில் பிறைச் சந்திரனையும் சடாமகுடத்தையும் தரித்துள்ளார். உற்சவரான இவர் மூலவரின் பிரதிநிதியாக அபிடேக ஆராதனைகளை விழா நாட்களில் ஏற்கிறார். சந்திரசேகர் அருகே ஒரு கரத்தில் மலரை ஏந்தியவாறும் மறுகரத்தைக் கீழே தொங்க விட்டவாறும் உமையன்னை காட்சியளிக்கிறார். இவ்விரு உருவங்களும் ஒரே பீடத்தின் மீது நின்றவாறு காட்சியளிக்கின்றன. இவ்விரு உருவங்களுக்கும் மேல் அழகிய வேலைப்பாடுகள் அமைந்த திருவாச்சி உள்ளது.

### பிரதோசநாயகர்

பிரதோச வழிபாட்டிலும் உலாவிலும் பங்கேற்கும் உற்சவரே பிரதோசநாயகர். இவ்வுருவம் சந்திரசேகரருக்குரிய வடிவமைப்பைப் பெற்றுள்ளது. அருகே உள்ள அம்மனும் அவ்வாறே அமைந்துள்ளார்.

### சோமாசுகந்தர்

அமர்ந்த கோலத்திலுள்ள இறைவன், இறைவி ஆகியோருக்கிடையே முருகப்பெருமானின் சிறு உருவத்தைப் பெற்றுள்ள வடிவமே சோமாசுகந்தர் ஆகும். (சோமன்+உமா+கந்தன்) இவ்வுருவில் சிவபெருமான் மூன்று கண்கள், நான்கு கரங்கள் ஆகியவற்றைப் பெற்றுள்ளார். பின் இருகரங்களில் மானும் மழுவும் காட்சியளிக்கின்றன. முன்னிரு கரங்கள் அபய, வரத முத்திரைகளை

வெளிப்படுத்துகின்றன. இடது காலை மடக்கியவாறு வலதுகால் சுகாசனமாகத் தொங்க விட்டவாறு காட்சியளிக்கிறார்.

அருகே உள்ள உமையன்னை சுகாசனமாக அமர்ந்துள்ளார். வரத முத்திரையில் இடது கரம் தொடை மீது அமைந்துள்ளது. நீலோற்பல மலரை ஏந்தியுள்ள வலது கரம் சிம்ம கர்ண முத்திரை காட்டுகிறது. இடுப்பில் அரைஞாண், மிருதுவான கேசம், குழந்தைகளுக்குரிய அணிகள் ஆகியவற்றை அணிந்துள்ள கந்தன் இருவருக்குமிடையே அமர்ந்துள்ளார்.

"உண்மை, அறிவு, இன்பம் மூன்று அரிய குணங்களின் சேர்க்கையே சிவனாகும். (சித்+சித்+ஆனந்தம்) இவற்றுள் ஒன்று மற்றொன்றை விட்டுப் பிரியாமல் இணைந்திருக்கும். இவ்வாறு ஒரே பொருள் மூன்று நிலைகளில் தோன்றுவதையே சிவன், உமை, கந்தர் ஆகியோர் இணைந்த சோமாசுகந்தர் உருவம் வெளிப்படுத்துகிறது."[74]

### மீனாட்சி, சொக்கநாதர்

சுவாமி, இரண்டு கரங்களுடன், அபய, வரத முத்திரையுடன் நின்றகோலத்தில் காட்சியளிக்கின்றார். மீனாட்சி இரண்டு கரங்களில், வலது கரத்தில் கிளியும் இடதுகரத்தைக் கீழே தொங்க விட்டவாறும் நின்ற கோலத்தில் காட்சியளிக்கின்றார்.

### நடராசர், சிவகாமசுந்தரி

நடராசர் திருவுருவம் நான்கு கைகளுடன் இரு கால்களில் ஒரு காலைத் தூக்கி நடனமாடும் கோலத்துடன் அமைந்துள்ளது. அருகே சிவகாம சுந்தரி நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். இச்சிற்பங்கள் திருஏடகநாதர் கோயிலில் உள்ளது.

### விநாயகர்

நின்ற கோலத்தில், சமபங்க நிலையில் காட்சியளிக்கும் விநாயகரின் திருவுருவம் திருஏடகநாதர் கோயிலில் உள்ளது.

### சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை

நின்ற கோலத்தில் நான்கு கரங்களுடன் சுப்பிரமணியரும் இரண்டு கரங்களுடன் வள்ளி, தெய்வானையும் ஒரே பீடத்தில் திருஏடகநாதர் கோயிலில் அமைந்துள்ளனர்.

### சண்முகர், வள்ளி, தெய்வானை

ஆறுமுகங்களுடன் மயில்வாகனத்தில் அமர்ந்தவாறு சண்முகர், வள்ளி, தெய்வானையுடன் கூடிய சிற்பம் திருஏடகநாதர் கோயிலில் உள்ளது.

### ஞானசம்பந்தர்

ஞானசம்பந்தர் இரண்டு கரங்களுடன் இடதுகரத்தில் ஏடும், வலது கரத்தை சூசி முத்திரை காட்டியும் ஏடகநாதர் கோயிலில் நின்ற நிலையில் காட்சித்தருகிறார்.

### மாணிக்கவாசகர்

பீடத்தின் மீது நின்ற கோலத்தில் வடிக்கப்பட்டுள்ள இவரின் இரண்டு திருக்கரங்களில் இடது கரத்தில் ஓலைச்சுவடியும் வலது கரம் சின்முத்திரையுடனும் காட்சிதருகிறார். தலையை உருத்திராட்சம் அலங்கரிக்கிறது.

### சண்டிகேசுவரர்

நின்ற கோலத்தில் கூப்பிய கரங்களுடன் கூடிய சண்டிகேசுவரர் இடுப்பைச் சுற்றி ஆடையும் உடலில் அணிகலன்களும் அழகு செய்கின்றன. தலையில் சடாமகுடம் அணி செய்கிறது.

### 36 கால் மண்டபம்

36 கால் மண்டபம் புட்டுசொக்கநாதர் கோயில் அருகில் வைகை ஆற்றங்கரையில் அமைந்துள்ளது. இது சதுர வடிவில் 36 தூண்களைக் கொண்டு முழுவதும் கல்லால் அமைந்துள்ளது. மண்டபத்தின் மேல் பகுதியில் கல்லால் ஆன மேற்கூரையும் அதன் மீது சுதையிலான அரைத்தூண்களும் காணப்படுகின்றன. மேற்பகுதியில் விமானம் எந்த வித அலங்காரமும் இன்றி ஒற்றைக் கலசத்துடன் சுதையினால் அமைக்கப்பட்டுள்ளது. கலசம் செம்பினால் ஆனது ஆகும். இம்மண்டபத்தின் நடுவில் விநாயகர் சிறு விமானத்துடன் கூடிய கருவறையில் அமைக்கப்பட்டுள்ளார். இம்மண்டபத்தில் தான் ஒவ்வொரு ஆவணி மாதமும் புட்டுத் திருவிழாக் கொண்டாடப்படுகிறது. இங்கு தான் வந்தியம்மைக்கும் மாணிக்கவாசகருக்கும் மோட்சம் கொடுக்கும் நிகழ்வு நடைபெறுகிறது. இம்மண்டபம் அருகில் வைகை ஆற்றின் ஓரத்தில் ஒரு பீடத்தில் சிவலிங்கமும் ஒரு குளம் போன்ற அமைப்பும் வைக்கப்பட்டுள்ளது. அக்குளத்தைச் சுற்றி புட்டுத்திருவிழாவின் போது வைகை ஆற்றைக் கரை அடைக்கும் நிகழ்வு நடைபெ

## தொகுப்புரை

- திருவிளையாடல் புராணம் தொடர்பாக அமைந்த கோயில்களான ஆதிசொக்கநாதர் கோயில், புட்டுசொக்கநாதர் கோயில், திருஏடகநாதர் கோயில் ஆகிய மூன்று கோயில்களும் காரண, காமிக ஆகம விதிமுறைகளைப் பின்பற்றி அமைக்கப் பெற்றதாகும்.
- இத்திருக்கோயில்கள் கருவறை, அர்த்த மண்டபம், மகாமண்டபம், திருச்சுற்று, பரிவாரத் தெய்வங்களின் சன்னதிகள், அம்மன்சன்னதி, மடைப்பள்ளி, பள்ளியறை, கல்மண்டபம் ஆகிய பகுதிகளை திருக்கோயில் உறுப்புகளாகக் கொண்டுள்ளது.
- மூன்று கோயில்களிலும் கருவறை கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. சுவாமி கருவறையின் தேவகோட்டத்தில் தெற்கே தட்சிணாமூர்த்தியும் மேற்கே லிங்கோத்பவரும் வடக்கே துர்க்கையும் காட்சியளிக்கின்றனர்.
- கருவறையின் வாயில் இருபுறமும் துவாரபாலகர்களும் கருவறையின் முன்பு பலிபீடம், நந்தி போன்றவையும் அமைந்துள்ளன.
- மகாமண்டபத்துடன் கூடிய திருச்சுற்றில் பரிவாரத்தெய்வங்கள், நவக்கிரகங்கள், நால்வர், 63 நாயன்மார்கள், நடராசர், வந்தி, இடைக்காடன் போன்றோர் இடம் பெற்றுள்ளனர்.
- ஆதிசொக்கநாதர் கோயில், புட்டுசொக்கநாதர் கோயில் ஆகிய கோயில்களில் சுவாமி கருவறையை ஒட்டியவாறு அம்மன் சன்னதி அமைந்துள்ளது. திருஏடகநாதர் கோயிலில் மட்டும் தனி மண்டபத்துடன் கூடிய கருவறையில், சுவாமி சன்னதியை ஒட்டினார் போல் அம்மன் சன்னதி உள்ளது.
- ஆதிசொக்கநாதர் கோயிலில் சுவாமி, அம்மன் என இரு கருவறை விமானங்களும் புட்டுசொக்கநாதர் கோயிலில் சுவாமி, அம்மன், வந்தி என மூன்று கருவறை விமானங்களும் திருஏடகநாதர் கோயிலில் சுவாமி, அம்மன், பரிவாரத்தெய்வங்கள் என ஏழு விமானங்களும் அமைந்துள்ளன. இவை துவிதள, ஏகதள விமானங்களாக உள்ளன.
- புட்டுசொக்கநாதர் கோயிலின் அருகில் 36 கால் கல்மண்டபம் அமைந்துள்ளது. இங்கு தான் வருடாவருடம் புட்டுத்திருவிழா நடத்தப்பட்டு, வந்திக்கும் மாணிக்கவாசகருக்கும் மோட்சம் கொடுக்கப்படுகிறது. திருஏடகநாதர் கோயிலில் திருஞானசம்பந்தருக்குத் தனி கோயில் அமைக்கப்பட்டுள்ளது.
- மூன்று கோயில்களிலும் உள்ள இறைவன், இறைவியரது திருவுருவங்கள் கற்படிமத்திலும் செப்புப் படிமத்திலும் வடிக்கப்பட்டு வழிபடப் பெறுகின்றன.

- மூன்றுகோயில்களிலும் உள்ள மூலவர் இலிங்க வடிவில் காட்சியளிக்கின்றனர். அம்மன் உருவங்கள் நின்ற வடிவில் இரு திருக்கரங்களுடன் அருட்பாளிக்கின்றன.
- கருவறைத் தேவகோட்டத் தெய்வங்களாக தட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், துர்க்கை ஆகியவை இடம் பெற்றுள்ளன. தட்சிணாமூர்த்தி கல்லால மரத்தின் கீழ் அமர்ந்து முனிவர்களுக்கு வேதாகமங்களை உபதேசித்தவாறும் லிங்கோத்பவர் விட்ணு, பிரமன் ஆகியோருக்கு தீப்பிழம்பாகக் காட்சி கொடுத்த நிலையிலும் துர்க்கை அசுரன் மீது நின்ற கோலத்திலும் காட்சியளிக்கின்றனர்.
- பரிவாரத் தெய்வங்கள் அழகுற, கையில் ஆயுதங்களுடனும் அபய, வரத முத்திரைகளுடனும் நின்ற நிலையிலும் அமர்ந்த நிலையிலும் காணப்பெறுகின்றனர்.
- 63 நாயன்மார்களில் காரைக்கால் அம்மையார்(அமர்ந்த நிலை) தவிர மற்றவர் நின்ற நிலையில் காணப்படுகின்றனர்.
- திருவிளையாடல்கள் தொடர்புடைய சிற்பங்களான இடைக்காடன் அமர்ந்த நிலையிலும் வந்தி, திருஞானசம்பந்தர் ஆகிய இருவரும் நின்ற நிலையிலும் காட்சியளிக்கின்றனர்.
- விமானம், கோபுரங்களில் உள்ள சிற்பங்கள் சுதைச் சிற்பமாக அழகுடன் வடிக்கப்பட்டுள்ளன.

சான்றெண் விளக்கம்

1. கே.ஆறுமுக நாவலர், இந்து மத இணைப்பு விளக்கம், ப.44
2. சிலப்., 14: 7-12.
3. கலித்., மருதம். பா.94: 39.
4. நெடுந., 100.
5. பொருநா., 90-91.
6. பட்டினப்., 50.
7. திருநாவு.தேவா., பா.90: 3-4.
8. கலித். மருதம். பா.82: 4.
9. புறநா., பா.299: 6.
10. பட்டினப்., 36.
11. சிலப்., 14: 10.
12. திருநாவு.தேவா., பா.715.
13. எஸ்.சிவமணி, திருக்கோயிலும் சைவத் திருமுறைகளும், ப.380.
14. மேலது, ப.52.
15. திருஞா.தேவா., பா.104.
16. இரா.பி.சேதுபிள்ளை, தமிழகம் ஊரும் பேரும், ப.220.
17. மயிலை சீனி. வேங்கடசாமி, தமிழா் வளா்த்த அழகுக் கலைகள், ப.58.
18. திருஞா.தேவா., பா.4, 1-2.
19. மயிலை சீனி வேங்கடசாமி, மு.நூ., ப.48.
20. தொல்.பொருள்.அகத்., நூற்.5.
21. மேலது, நூற்.5.
22. மதுரைக்., 453-455.
23. மணிமே., 1: 2: 54-55.
24. அகநா., 167: 13-15.
25. பெரும்பா., 404-405.
26. சுந்தரா் தேவா., பா.187: 3-4.
27. மணிமே., 21: 16: 125-126.
28. மணிமே., 6: 7: 53,58,59.
29. மயிலை சீனி வேங்கடசாமி, மு.நூ., ப.31.
30. K.R.Srinivasan, Gave Temples of the pallavas
31. C.Sivaramamurti, Kalugumalai and Early PandiYan Rockcut Shrines. p.84.

32. சொ.சிங்காரவேலன், திருக்கோயில்களும் பண்பாடும், திருவாவடுதுறை, 1995, ப.1.
33. கே.ஆறுமுக நாவலர், மு.நூ., ப.48.
34. புலியூர்க் கேசிகன், சித்தியளிக்கும் சிவநெறி, பக்.26-27.
35. பெரிய புரா., பா.3643.
36. சிவாலயத் திருமேனிகள், திருவாவடுதுறை ஆதினம், ப.71.
37. மா.சிவகுருநாத பிள்ளை, சிவவடிவங்கள், பக்.9-10.
38. ந.ரா.முருகவேள், தெய்வத் திருவுருவங்கள், ப.59.
39. கா.கைலாசநாத குருக்கள், சைவத்திருக்கோவிற் கிரியை நெறி, ப.120.
40. மா.சிவகுரு நாத பிள்ளை, மு.நூ., ப.17.
41. ஆர்.வெங்கட்ராமன், இந்தியக்கோயில் கட்டடக் கலை வரலாறு, ப.108.
42. அம்பை மணிவண்ணன், கோயில் ஆய்வுகளும் நெறிமுறைகளும், ப.91.
43. P.V.Jagadisa Iyyer, South Indian shrines, p.14.
44. எல்.மணிவண்ணன், பாண்டிய நாட்டு வைணவக் கோயில்கள் கலையும் கட்டடக் கலையும், ப.62.
45. ப.அருணாசலம், சைவசமயம் ஓர் அறிமுகம், ப.70.
46. எஸ்.நாராயணசுவாமி, தட்சிணாமூர்த்தி, பாகம்.2, பக்.xviii-xx.
47. ஆர்.இராமஷேன், ரா.கிருஷ்ணன், மகேசுவர வடிவங்கள், ப.115.
48. T.A.Gopinatha Rao, Elements of Hindu Iconnography, Vol.1. part.II, p.341.
49. எல்.மணிவண்ணன், ஆகம சிற்ப சாஸ்திரங்களில் திருக்கோயில் அமைப்பும் திருவுருவ அமைதியும், ப.153.
50. மேலது, ப.153.
51. கோ.மு.முத்துசாமி பிள்ளை, கோயிற்களஞ்சியம், ப.65.
52. முத்து.எத்திராசன், இலக்கியங்களும் சிற்பங்களும், ப.75.
53. செ.வைத்தியலிங்கன், சிற்பக்கலை, ப.299.
54. S.R.Balasubramaniyan, middle chola Tembles, (A.D.985-A.D.1070) Faridabad 1975, p.410.
55. வை.கணபதி ஸ்தபதி, சிற்பச்செந்நூல், ப.68.
56. வ.நடராஜன், ஸ்ரீஏடகநாதர் திருக்கோயில், ப.6.
57. நேர்காணல்: ஆ.இளஞ்செழியன், செயல் அலுவலர், நாள்.2.8.2018.

58. மு.சுப்பையா, பிள்ளையார், பக்.1-2.
59. ந.ரா.முருகவேள், தெய்வத்திருவுருவங்கள், பக்.10-12.
60. எஸ்.நாராயணசுவாமி, மு.நூ. பக்.1-32.
61. T.A.Gopinatha Rao, Elements of Hindu Iconnography, Vol.1. part.II, pp.53-54.
62. T.A.Gopinatha Rao, Elements of Hindu Iconnography, Vol.1. part.II, p.445.
63. எஸ்.நாராயணசுவாமி, மகாலட்சுமி, ப.186.
64. K.R.Srinivasan, Temples of south India, pp.125-126.
65. தவத்திரு மருதாசலஅடிகள், ஆய்வுக்கோவை(தொகுதி.2) 12-ஆம் உலக சைவ மாநாடு, ப.68.
66. மயிலை.சீனி வேங்கடசாமி, இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம், ப.95.
67. வ.மெய்யப்பன், தில்லைத் திருக்கோயில், ப.49.
68. எஸ்.நாராயணசுவாமி, பைரவர், ப.16-20.
69. Vidya Dehajia, Slaves of the lord, paths of the Tamil saints, pp.41,50,59,68.
70. A.Gopinatha Rao, Elements of Hindu Iconnography, Vol.11. part.II, p.567.
71. திருஞா.தேவா., பா.1.
72. பரஞ்சோதி முனிவர், திருவி.பு., 1879.
73. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி-7, ப.372.
74. எஸ்.நாராயணசுவாமி, சோமாஸ்கந்தர், ப.170.

# இயல் - 3

## வழிபாடும் விழாக்களும்

மனிதன் தன் முன்னோர்களை நினைக்கத் தொடங்கியபோது வழிபாடு தொடங்கிவிட்டது. தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் வழிபாடு பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. மக்கள் ஆற்றலால் செயல்களைச் செய்ய முடியாத போதும் தன் ஆற்றலுக்கு மேலானவற்றைச் செய்து மக்கள் தோல்வியுற்ற போதும் மக்கள் தங்கள் வாழ்க்கையில் அழிவை, நிலையாமையை உணர்ந்த போதும் தங்களுக்கு மேலான ஓராற்றல் இருப்பதாகக் கருதினர். கடுங்காற்றலும் மழை வெள்ளத்தாலும் மக்கள் தாக்குண்ட போது தங்களால் கட்டுப்படுத்த முடியாத ஓராற்றல் இயங்குவதாக எண்ணினர்.

மக்களின் ஆற்றலால் கட்டுப்படுத்த முடியாதவையெல்லாம் மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்டவையாயின. இதனால் அத்தகைய வியக்கத்தக்க ஆற்றலை மக்கள் கண்டு அஞ்சினர். அதனைத் தன்வயப்படுத்த வழிபட்டனர். வழிபாட்டின் தொடக்கம் மக்கள் கூட்டமாக வாழத் தொடங்கிய போதே தொடங்கியது. இவ்வாறு வளர்ந்த வழிபாடு திருக்கோயில்களில் முறைப்படுத்தப் பெற்றது. ஆய்விற்குட்பட்ட மூன்று திருக்கோயில்களில் கொண்டாடப்படும் வழிபாடு மற்றும் திருவிழாக்களைப் பற்றி விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

### வழிபாடு

வழிபடு என்ற வேர்ச்சொல்லிலிருந்து வழிபாடு என்னும் சொல் தோன்றியது. வழிபாடு என்ற சொல்லுக்கு “வழியிற் செல்லுகை, பின்பற்றுகை, வணக்கம், பூசனை”[1] எனவும் “இறைவனை வணங்கும் செயல்”[2] எனவும் அகராதிகள் குறிப்பிடுகின்றன. வழிபாடு என்பது ஒருவன் தன்னையோ, பிறரையோ, இறைவனிடம் வழிப்படுத்துதல்”[3] என்பர் இரா.சீனிவாசன்.

### வழிபாட்டு நெறி

இன்றைய வழிபாட்டில் பெருநெறிமரபு, சிறுநெறிமரபு என இரண்டு வழிபாட்டு மரபுகள் உள்ளன. இம்மரபானது அதனைப் பின்பற்றிய மக்களைப் பொருத்து அமைகின்றது. பெருநெறிமரபானது ஆகம நெறிகளுக்கு உட்பட்டும் சிறுநெறி மரபானது ஆகம நெறிகளுக்கு உட்படாமலும் மேற்கொள்ளப்படுகிறது. பெருநெறி மரபில் அமைந்துள்ள பெருந்தெய்வங்களாக சிவன், விட்ணு, முருகன், கணபதி, இலக்குமி, சரசுவதி, அம்பிகை போன்ற தெய்வங்கள் சுட்டப்படுகின்றனர். சிறுநெறி மரபு என்று சொல்லப்படும் நாட்டார் தெய்வ மரபில் காளி, மாரி, அய்யனார், முனியாண்டி,

கருப்பசாமி போன்ற தெய்வங்கள் சுட்டப்படுகின்றன. இத்தெய்வங்கள் ஊரின் நடுவிலும் எல்லைப்புறங்களிலும் அமைந்துள்ளன.

**கடவுள்**

மனிதனது தேவைகளைப் பூர்த்தி செய்யவும் இறைவனுடன் தொடர்பு கொள்ளக் கண்ணால் காணக்கூடிய ஒன்று தேவைப்பட்டது. அப்பொழுது அவனுக்கு உதவியது 'கடவுள் உருவங்கள், சின்னங்கள், இடங்கள்'[4] என்பர். கடவுள் நமது சக்திக்கு அப்பாற்பட்டவன். அவனே உலகத்தை இயக்குகிறான். அவனன்றி ஓர் அணுவும் அசையாது. எனவே, அவன் பரம்பொருள் என அழைக்கப்பட்டான். அப்பரம்பொருளையே கடவுள், இறை எனப் பொதுப் பெயரிட்டு அழைக்கின்றோம்.

கடவுள் என்னும் பதம் 'கட' என்னும் பகுதியினையும் 'உள்' என்னும் தொழிற்பெயர் விகுதியையும் கொண்டது. கடவுள் என்பதற்கு எல்லாவற்றையும் கடந்தவன் எனவும் எல்லாவற்றுள்ளும் கடந்து நிற்பவன் எனவும் எல்லா அண்டங்களையும் அவற்றிலுள்ள உயிரினங்களையும் இயக்குபவன் எனவும் பொருள் கூறலாம்.

இவ்வுலகில் அனைத்து உயிரினங்களும் தோன்றி வாழ்ந்து மடிகின்றன. இச்செயல்கள் ஆதி காலம் முதல் நடைபெற்று வருகின்றன. இத்தொழில்கள் ஒழுங்காய் நடைபெறத் தோன்றாதவனும் அழியாதவனும் என்றும் நிலவி நிற்பவனுமாகிய ஒருவன் தேவைப்படுகிறான். அவனே கடவுள் ஆவான். அவனுக்கு ஒரு நாமம், ஊர், குணம், வடிவம், குறி முதலியன கிடையா. அவன் நமது உடம்பில் உயிரில் கலந்து விளங்குகின்றான். கடவுள் அருவநிலையில் தன் அருளால் மக்களைக் காத்து வருகின்றார். இவர் வெளிப்படையாகத் தோன்றாமல் விறகில் தீயைப் போன்றும் பாலில் நெய்யைப் போன்றும் மணியில் ஒளியைப் போன்றும் மறைந்திருக்கின்றான். அவனை நாம் எண்ணித் துதிக்கும் பொழுது அவன் நம்முன் தோன்றுவான் என்பதை,

**"விறகில் தீயினன் பாலில் படுநெய்போல்**
**மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்**
**உறவு கோல்நட் குணர்வு கயிற்றினால்**
**முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே"[5]**

என்று நாவுக்கரசர் குறிப்பிடுகிறார்.

இயற்கையைத் தெய்வங்களாக வணங்கி வந்த மக்கள் நாளடைவில் நாகரிக வளர்ச்சியின் காரணமாக நிலத்தினை நால்வகைப்படுத்தி, ஒவ்வொரு நிலத்திற்கும் ஒவ்வொரு தெய்வத்தைப் படைத்து வழிபடலாயினர்.

## நிலப்பிரிவுகளும் தெய்வங்களும்

பண்டைத் தமிழர்கள் நிலத்தினைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நால்வகைப்படுத்தினர். இதனைத் தொல்காப்பியம்,

**“முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையால் சொல்லவும் படுமே”[6]**

எனக் கூறும். ஒவ்வொரு நிலத்திற்கும் முறையே மாயோன், சேயோன், வேந்தன், வருணன் ஆகியோர் தெய்வமாகக் கருதப்பட்டனர். குறிஞ்சியாலும் முல்லையாலும் மாறுபட்ட தன்மையினையுடையது பாலை எனப்பட்டது என்பதைச் சிலப்பதிகாரம் சுட்டுகிறது.

**“முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் திரிந்து**
**நல்லியல் பிழந்து நடுங்குதுய ருத்துப்**
**பாலை என்பதோர் படிமங் கொள்ளும்”[7]**

என்றுரைக்கும். பாலை நில மக்கள் கொற்றவையை வழிபட்டனர்.

## வழிபாட்டு வகைகள்

வழிபாட்டு நிலையில் வளர்ச்சி ஏற்பட்டுப் பல வழிபாடுகள் தோற்றம் பெற்றன. மனிதன் மனதைப் பக்குவப்படுத்துவது, நெறிப்படுத்துவது சமயம் ஆகும். பண்டைக் காலத்தில் சைவம், வைணவம், சமணம் முதலிய சமயங்கள் சிறப்புற்று விளங்கின. இவர்கள் முறையே சிவன், திருமால், அருகன் முதலிய தெய்வங்களை வணங்கினர். மன்னர் ஆட்சிக் காலத்தில் வழிபாடு மிகவும் சிறப்புற்று விளங்கியது. மன்னர்கள் பின்பற்றிய சமயத்தையே மக்களும் பின்பற்றினர். இதனால் சமயப் பூசல்கள் மிகுந்து பிற சமயத்தவர் அடக்கப்பட்டனர்.

இவ்வாறு சமயங்கள் சிறப்புற்று விளங்கிய கால கட்டத்தில் தெய்வங்கள் பெருந்தெய்வம், சிறுதெய்வம் என்னும் பாகுபாட்டைப் பெற்றன. அதனைப் போன்றே வழிபாடு, கோயில் அமைப்பு முறை, பூசை, விழாக்கள் ஆகியவற்றிலும் பெருந்தெய்வ, சிறுதெய்வ வேறுபாடுகள் தோன்றின.

## வழிபாட்டுத் தோற்றுவாய்

ஆதித் தமிழர்கள் இயற்கையாய் விளங்குகின்ற பஞ்ச பூதங்களைத் தான் முதலில் வழிபட்டனர். இயற்கை வழிபாட்டிலிருந்து தான் உருவ வழிபாடு அமைந்தது. இதனைச் இரா.சாரங்கபாணி "மரநிழலில் தூணை நிறுத்தி இறைஞ்சினர். தூண்-கந்து எனப்படும். கந்து- இலிங்கமாயிற்று. இங்ஙனம் மரவழிபாடு வளர்ந்து கடவுள் வழிபாட்டிற்கு இடமளித்தது. ஆலமர் கடவுள் சிவ வழிபாட்டிற்கும் கடம்பமர் கடவுள் முருக வழிபாட்டிற்கும் கானமர் செல்வி கொற்றவை வழிபாட்டிற்கும் இடம் தந்து சமய வளர்ச்சிக்குத் துணைநின்றன"[8] என்றுரைப்பர்.

## வழிபாட்டில் மந்திரம்

இறை வழிபாட்டில் மந்திரம் சிறப்பிடம் பெறுகிறது. அனைத்து கடவுள்களும் மந்திர ஒலிகளுக்குக் கட்டுப்பட்டவர்கள். மந்திரம் குறித்து இரா.கணபதி, "மனனம் செய்பவனைக் காப்பது எதுவோ அதுவே மந்திரம் எனப்படும். அசைவு ஏற்படும் இடங்களில் எல்லாம் ஒலி உண்டாகும் என்பது அறிவியல். அசைவற்ற பிரும்மம்,. ஆகாயமாகவும் காற்றாகவும் தீயாகவும் நீராகவும் மண்ணாகவும் இன்னும் எண்ணிறந்த பொருட்களாகவும் சக்திகளாகவும் எண்ணங்களாகவும் தோன்றிய போதெல்லாம் வெவ்வேறு அசைவுகள் உண்டாகித்தானே இருக்க வேண்டும். இந்த அசைவுகளின் போது ஏற்பட்ட ஒலிகளை ஒத்த மானுட ஒலிகளை யோகிகள் கண்டு கொண்டார்கள். இந்த ஒலிகளைக் கூறுவதன் மூலம் மூல அசைவிலிருந்து பிறந்த சக்திகளைப் படிப்படியாகப் பெற்றுக்கடைசியில் அந்தச் சக்திகளுக்கெல்லாம் மூலமான அசைவற்ற ஏகத்தையும் படித்து விடலாம்"[9] என்பர். அவ்வகையில் திருக்கோயில் வழிபாட்டில் மந்திரங்கள் சிறப்பிடம் பெறுகின்றன.

## கோயில்களில் நடைபெறும் விழாக்கள்

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் மாதந்தோறும் நட்சத்திர அடிப்படையிலும் முழுநிலவு நாள், வைகாசி விசாகம், ஆனித் திருமஞ்சனம், ஆடிப் பதினெட்டாம் பெருக்கு, ஆவணி அவிட்டம், விநாயகர் சதுர்த்தி, புரட்டாசி நவராத்திரி, கார்த்திகைத் திருவிளக்குத் திருநாள், மார்கழி திருவாதிரைத் திருநாள், மாசிமகம், பங்குனி உத்திரம் எனப் பல்வேறு விழாக்கள் கொண்டாடப்பெறுகின்றன. இவ்விழாக்களில் பல இல்ல விழாக்களோடும் தொடர்புடையவையாகும்.

சிவன் கோயில்களில் நடைபெறும் திருவிழாக்கள் மாதந்தோறும் மற்றும் ஆண்டிற்கு ஒரு முறையோ அல்லது இருமுறையோ அல்லது நீண்ட நாள் திருவிழாவாகவோ நடைபெற்று வருகின்றன. இவ்விழாக்கள் மக்களிடையே ஒற்றுமையையும் சமய உணர்வையும் வளர்க்கின்றன.

### ஆண்டு வழிபாடு

மாதங்கள் பன்னிரெண்டு சேர்ந்தது ஓர் ஆண்டு எனப்படும். சித்திரை முதல் பங்குனி வரை வருகின்ற மாதங்களில் மக்கள் இறைவனுக்கு விழா எடுத்து வணங்கியமையும் அவ்வாறு விழா எடுக்காவிட்டால் துன்பம் ஏற்படும் என்ற நம்பிக்கையும் கொண்டிருந்தமையை,

**"விழாக்கோள் மறப்பின்**

**மடித்த செவ்வாய் வல்லெயிறு இலங்க,**

**இடிக்குரல் முழக்கத்து இடும்பை செய்திடும்"**[10]

என்ற மணிமேகலை பாடல் அடிகளால் அறியமுடிகிறது.

### வழிபாட்டின் வகைகள்

"திருக்கோயிலில் தெய்வ உருவங்கள் பிரதிட்டை செய்வதற்கும் வேள்வியும் விழாவும் எடுத்து வழிபாடு செய்வதற்கும் உள்ள முறைகளைக் குறிக்கும் நூலுக்கு ஆகமங்கள் என்று பெயர்"[11] என்கிறார் கே.ஏ.பக்கிரிசாமி பாரதி. இத்தகைய வழிபாடானது ஆத்மார்த்த வழிபாடு, பரமார்த்த வழிபாடு என இரண்டு வகைப்படும்.

### ஆத்மார்த்த வழிபாடு

தன் குடும்ப நன்மைக்காகத் தங்களின் வீட்டிலேயே தங்களின் வசதிக்கேற்ப வழிபாடு செய்வது ஆத்மார்த்த வழிபாடு எனப்படும். இவ்வகையில் வழிபடுபவர்கள் பிம்பம், சக்கரம் முதலியவற்றை வைத்து வழிபடுவர். ஆலய விதிகளுக்கு உட்பட்ட விதிகளிலேயே இவ்வழிபாடு நடைபெறுகிறது. இறைவனை வழிபடும் ஒவ்வொருவரும் செய்யும் பூசை ஆத்மார்த்த பூசை எனப்படும்.

### பரமார்த்த வழிபாடு

கோயிலில் உள்ள மூர்த்திகளுக்கு ஆகம விதிகளின் படி அர்ச்சகர்களைக் கொண்டு வழிபாடு செய்வது பரமார்த்த வழிபாடு எனப்படுகிறது. இது நித்தியம், நைமித்யம், காமிகம் என மூன்று வகைப்படும். நித்தியம் என்பது அன்றாடம் செய்யப்படும் வழிபாடு ஆகும். நைமித்யம் என்பது பிரதோசம், அமாவாசை, பவுர்ணமி போன்ற நாட்களில் செய்யப்படும் சிறப்பு வழிபாடு. காமிகம் பக்தர்களின் விருப்பத்தின் அடிப்படையில் செய்யப்படுவது. இவ்வழிபாட்டு முறையானது உலக நன்மை கருதி செய்யப்படுவதாகும்.

ஆலயங்களில் நடைபெறும் பூசைமுறைகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

அவை:

1. நித்திய பூசை
2. நைமித்ய பூசை
3. காமிக பூசை

### நித்திய பூசை

திருக்கோயில்களில் நாள்தோறும் நடைபெறுகின்ற பூசை நித்திய பூசை எனப்படும். திருக்கோயிலில் நாள்தோறும் நடைபெறும் நித்திய பூசையானது அபிடேகம், ஆடை, அலங்காரம் சாத்துதல், சந்தனம், மலர்கள் சாத்துதல், தூபம், தீபம், திருநீறு அணிவித்தல், குடை, கண்ணாடி, சாமரம், விசிறி முதலிய காட்டுதலோடு கீதவாத்யம் வாசிக்கச் செய்தல், நைவேத்தியம் செய்தல் என்னும் நிலையில் அமையும்.

### நைமித்ய பூசை

நைமித்ய பூசை எனப்படுவது ஏதாவதொரு காரணம் அல்லது சிறப்பைக் கருதிச் செய்யப்படும் பூசை முறையாகும். இவை பிரதோசம், மாதப்பிறப்பு, வருடப்பிறப்பு, அமாவாசை, பவுர்ணமி, ஏகாதசி, கார்த்திகை, பூசம், ஆவணி அவிட்டம், சூரிய, சந்திர கிரகணம், தீர்த்தவாரி, மாசிமகம், திருவாதிரை போன்ற குறிப்பிட்ட நாட்களில் நடைபெறுவது நைமித்ய பூசையாகும். இவை தவிர உலக நன்மை கருதி அவ்வப்போது செய்யப்படுகின்ற சிறப்பு அபிடேக ஆராதனைகளும் இதனுள் அடங்கும்.

### காமிக பூசை

காமிக பூசை என்பது மக்கள் தாம் எண்ணிய காரியம் நிறைவேறிய பின்னர் இறைவனுக்குச் செய்யும் முறையாகும். ஒரு மனிதன் தனக்குத் திருமணம் நடந்த பிறகு, குழந்தை பிறந்த பிறகு, வேலை கிடைத்த பிறகு என தான் எண்ணிய காரியங்கள் நிறைவேறிய பின்னர் இத்தகைய பூசை முறையை மேற்கொள்கிறான்.

### பஞ்ச பருவ வழிபாடுகள்

தமிழகத்திலுள்ள அனைத்துத் திருக்கோயில்களிலும் நாள், வாரம், பட்சம், மாதம், வருடம் என ஐந்து வகைகளில் வழிபாடுகளும் விழாக்களும் நடைபெறுகின்றன. அவ்வாறு நடைபெறும் வழிபாட்டினைப் ‘பஞ்ச பருவ வழிபாடுகள்’ என அழைக்கின்றனர். அவை:

1. நாள் வழிபாடு
2. வார வழிபாடு
3. பட்ச வழிபாடு (மாதமிருமுறை)

4. மாத வழிபாடு

5. வருட வழிபாடு என்பனவாகும்.

## நாள் வழிபாடு

திருக்கோயில்களில் நாள்தோறும் சூரியன் உதிப்பதற்கு முன்னர் தோன்றி சூரியன் மறைந்த பின்னரும் நடைபெறுவது நாள் வழிபாட்டு முறையாகும். ஆலயங்களில் பொருள் வசதி, இடவசதி, பக்தர்களின் வருகை, நிருவாகிகளின் ஈடுபாடு போன்ற காரணங்களுக்கு ஏற்ப வழிபாடுகளின் எண்ணிக்கை அமைகிறது. பொதுவாக ஆறுகால வழிபாடே முக்கிய ஆலயங்களில் நடைபெறுகின்றன. “சூர்யோதயத்திற்கு முன்பு மூன்றே முக்கால் நாழிகை முதல் சூர்யோதயம் வரை உள்ளதை உசத் காலம் என்றும் சூர்யோதயத்திலிருந்து ஏழரை நாழிகை மணியளவைக் கால சந்தி என்றும் கால சந்தி முடிவிலிருந்து மூன்றே முக்கால் நாழிகை காலம் உபசந்தி எனவும் உபசந்தி முடிவு முதல் ஒரு யாமப் பொழுது உச்சிக்காலம் எனவும் சூரிய அத்தமனத்திற்கு முன்புள்ள மூன்றே முக்கால் நாழிகை சாயரட்சை எனவும் சூரிய அத்தமனத்தையடுத்த மூன்றே முக்கால் நாழிகை இரண்டாம் காலம் எனவும் இதையடுத்த மூன்றே முக்கால் நாழிகை அர்த்தசாமம் என்றும் காலவரை நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது. உசத் காலம் ஆறு காலத்தில் சேராது”[12]

## ஆலயங்களில் நடைபெறும் நித்திய பூசைகள் எட்டு வகைப்படும்

| | | |
|---|---|---|
| “பகலில் 4 இரவில் 4 | - | உத்தம உத்தமம் |
| பகலில் 4 இரவில் 3 | - | உத்தம மத்தியமம் |
| பகலில் 4 இரவில் 2 | - | உத்தம அதமம் |
| 5 கால வழிபாடு | - | மத்திய உத்தமம் |
| 4 கால வழிபாடு | - | மத்திய மத்தியமம் |
| 3 கால வழிபாடு | - | மத்திய அதமம் |
| 2 கால வழிபாடு | - | அதம உத்தமம் |
| 1 கால வழிபாடு | - | அதம மத்தியமம்”[13] |

ஆதிசொக்கநாதர் திருக்கோயிலில்,

| | | |
|---|---|---|
| காலசந்தி | - | காலை 8.00 மணி |
| உச்சிக் காலம் | - | பகல் 11.30 மணி |
| சாயரட்சை | - | மாலை 5.00 மணி |
| அர்த்த சாமம் | - | இரவு 8.30 மணி |

என நான்கு காலப் பூசை நடைபெறுகின்றது.

புட்டுசொக்கநாதர் திருக்கோயிலில்,

| | | |
|---|---|---|
| காலசந்தி | - | காலை 8.00 மணி |
| அர்த்த சாமம் | - | இரவு 8.00 மணி |

என இரண்டு காலப் பூசை நடைபெறுகின்றது. இக்கோயிலில் அர்த்த சாமம், தாலாட்டுப் பூசை என்றும் அழைக்கப்படுகிறது.

ஏடகநாதர் திருக்கோயிலில்,

| | | |
|---|---|---|
| திருவனந்தல் | - | காலை 6.30 மணி |
| காலசந்தி | - | காலை 9.00 மணி |
| திரிகால சந்தி | - | காலை 9.45 மணி |
| உச்சிக் காலம் | - | பகல் 12.00 மணி |
| சாயரட்சை | - | மாலை 6.00 மணி |
| அர்த்த சாமம் | - | இரவு 8.00 மணி |

என்னும் ஆறு காலப் பூசை நடைபெறுகின்றது. பூசை முறையானது ஒவ்வொரு தலங்களிலும் ஒவ்வொரு நேரத்தில் நடைபெறுகின்றன. இப்பூசை முறையானது மக்களின் வருகைக்கேற்ப ஒவ்வொரு தலத்திலும் மாறுபடுவதைக் காணமுடிகிறது. பழங்காலம் முதலே நாள்தோறும் பூசை முறைகளை செய்து வந்ததை,

**“நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும்”**[14]

**“நாட்பலி மறந்த நரைக்கண் இட்டிகை”**[15] என்பன போன்ற பாடலடிகள் விளக்கும். இவற்றில் ‘நாட்பலி’ என்பது காலை வேளையில் இறைவனுக்குச் செய்த வழிபாட்டினைக் குறிக்கும். மாலை வேளையில் பூசை நிகழ்த்தியதை,

**“மழுவா ணெடியோன் றலைவ னாக**
**மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்**
**வாடாப் பூவின் இமையா நாட்டத்து**
**நாற்ற உணவின் உருகெழு பெரியோர்க்கு**
**மாற்றரு மரபி னுயிர்பலி கொடுமார்**
**அந்தி விழவிற் றூரியங் கறங்க”**[16]

என்று மதுரைக்காஞ்சி பாடல் சுட்டுகிறது. இதன் வழி பண்டைக்காலம் தொட்டே காலை, மாலை என இரு வேளைகளில் வழிபடும் வழக்கமிருந்ததை அறிய இயலும்.

### திருவனந்தல்

இப்பூசை திருஏடகநாதர் கோயிலில் மட்டும் நடைபெறுகிறது. திருக்கோயில் நடைத்திறப்பு செய்ததும் காக்கும் கடமையைச் செய்யும் பைரவர் சன்னதியில் தீபாராதனை செய்யப் பெறுகின்றது. பின்னர் பள்ளியறையின் கதவுகளைத் திறந்து மந்திரஉரு ஏற்றப்பட்ட கும்பநீரினால் உட்புறம் முழுவதையும் தூய்மை செய்து பின்னர் கும்ப நீரினால் உற்சவ மூர்த்திக்கும் அம்மனுக்கும் அபிடேகம் செய்து சுவாமியைக் கருவறையில் சேர்க்கின்றனர். பின்பு தீருஏடகநாதருக்கும் ஏலவார்குழலி அம்மனுக்கும் தீபாராதனை செய்யப்பெற்றுப் பின்பு மற்ற தெய்வங்களுக்கும் தீபாராதனை செய்யப்படுகின்றது.

நைவேத்தியமாக வெண்பொங்கல் படைக்கப்பட்டு தீபாராதனை செய்து கொடிமரத்திற்கு அருகிலுள்ள மகா பலிபீடத்தில் வைத்துப் பின்பு பிரசாதமாக வழங்கப்படுகிறது.

இப்பூசையின் போதே இக்கோயிலில் வளர்க்கப்படும் பசுவினால் ‘கோபூசையும்’ நடத்தப்படுகிறது. பசுவையும் கன்றையும் நீராட்டி அதற்கு மாலை அணிவித்து குங்குமத்தால் திலகம் இட்டு கொடிமரம் வரை அழைத்து வந்து தீபாராதனை காண்பித்து அரிசியும் வெல்லமும் படைக்கின்றனர். பசுவை இலக்குமியின் வடிவமாகக் கருதுவதாலும் பசுவின் ஒவ்வொரு பகுதியிலும் தேவர்கள் வசிக்கிறார்கள் என்ற நம்பிக்கையினாலும் இப்பூசை நடத்தப்படுகிறது.

மக்கள் திருவனந்தல் பூசையின் போது கொடிமரம், பசு ஆகியவற்றை வலம் வந்து மந்திரங்களை உச்சரித்துக் கொண்டே சென்று கீழே கொடிமரத்தின் முன்பு விழுந்து வழிபட்டுப் பின் சூரியனைக் கிழக்குக் கோபுர வாயில் வழியாக வழிபட்டு சூரிய வழிபாடு செய்கின்றனர்.

### காலசந்தி

காலசந்தியை சிறுகாலசந்தி, பெருங்காலசந்தி, காலசந்தி என்று மூன்று காலங்களாகப் பிரித்துரைக்கும் ஆகமம் திருஏடகநாதர் திருக்கோயில், ஆதிசொக்கநாதர் திருக்கோயில், புட்டுசொக்கநாதர் திருக்கோயில் என்ற இம்மூன்று கோயில்களிலும் ஒரே காலசந்திப் பூசை மட்டுமே செய்யப்படுகின்றது.

காலசந்தி பூசையில் முதலில் சூரியன், சந்திரன் பின்பு விநாயகர், முருகன், தட்சிணாமூர்த்தி, துர்க்கை, நவக்கிரகங்கள் போன்ற பரிவார தெய்வங்களுக்கு

அபிடேகம் நடைபெறுகிறது. பின்னர் சுவாமிக்கும் அம்மனுக்கும் அபிடேகம் நடத்தப் பெற்று தீபாராதனை செய்யப்படுகின்றது.

காலசந்தி பூசையின் போது சுத்தன்னம் (வெள்ளைச் சோறு) நைவேத்தியமாகச் செய்து பலியிடப்படுகின்றது. "நைவேத்தியம் பயபக்தியோடும் சுத்தமாகவும் செய்யப்படுதல் வேண்டும் என்று ஆகமங்கள் கூறுகின்றன. நைவேத்தியம் சமைப்பவர்கள் சிவதீட்சை பெற்றவர் களாயிருத்தல் வேண்டும். தினந்தோறும் நீராடித் தோய்த்துலர்ந்த ஆடை தரித்து நித்தியக் கடன்களை முடித்து தர்ப்பை தரித்தவர்களாக மடைப்பள்ளியில் நிவேதனப் பொருட்களை விதிப்படி பக்குவம் செய்தல் பாசகர்களின் கடமை என்று ஆகமங்கள் எடுத்துரைக்கின்றன"[17] காலசந்திபூசை சண்டிகேசுவரருக்கு மட்டும் செய்யப்படுவதில்லை. பூசை முடிந்ததும் சுத்தன்னம் திருக்கோயிலுள்ள பக்தர்களுக்கு வழங்கப்படுகின்றது.

### உச்சிக்காலம்

உச்சிக்காலத்தின் போது திருஏடகநாதர் கோயிலில் கருவறையில் இருக்கும் அம்மனுக்கும் சுவாமிக்கும் மற்ற பரிவாரத் தெய்வங்களுக்கும் அபிடேகம் நடத்தப்படுகிறது. ஆதிசொக்கநாதர் கோயிலில் சுவாமிக்கும் அம்மனுக்கும் மட்டும் அபிடேகம் நடத்தப்படுகிறது. இரண்டு கோயில்களிலும் நிவேதனமாகத் தயிர்அன்னம் படைக்கப்பட்டு தீபாராதனை நடத்தப்படுகிறது. ஆனால் புட்டுசெக்கநாதர் கோயிலில் உச்சிக்காலப் பூசை நடைபெறுவதில்லை. உச்சிகாலப்பூசை நடைபெற்றவுடன் கோயில்களில் திருக்காப்பிடப்படும்.

### சாயரட்சை

சாயரட்சை பூசையைச் சாயங்காலப் பூசை என்றும் கூறுவர். பிரதோசம் நடைபெறும் காலம் சாயங்காலம் என்பதால் பிரதோச காலப்பூசை என்றும் கூறுவர். ஆதிசொக்கநாதர் கோயில், திருஏடகநாதர் கோயில் ஆகிய இரு கோயில்களிலும் சுவாமிக்கும் அம்மனுக்கும் மற்ற பரிவாரத் தெய்வங்களுக்கும் அபிடேகம் நடைபெற்று நைவேத்தியமாகச் சுண்டல் மற்றும் புளியோதரை படைக்கப்படுகிறது. புட்டுத்தோப்பில் இத்தகைய பூசை நடைபெறுவதில்லை.

### அர்த்தசாமம்

அர்த்தசாமப் பூசையை ஆறாவது காலப்பூசை, பள்ளியறைப் பூசை என்றும் கூறுவர். கருவறையிலுள்ள சுவாமிக்கும் அம்மனுக்கும் அபிடேக, ஆராதனை நடைபெறுகிறது. பின்னர் உற்சவமூர்த்திக்கு தீபாராதனைக் காட்டப்பட்டு மங்கல வாத்தியங்கள் முழங்க உற்சவர் சிவிகையில் வைத்துத் தூக்கி வரப்பட்டு அம்மன்

சன்னதிக்குக் கொண்டு வரப்படுகிறார். பின்னர் அம்மனுக்கும் தீபாராதனை செய்து அம்மனையும் சுவாமியையும் பள்ளியறையில் அமர்த்தி நிவேதனமாகப் பால், அப்பம் போன்றவை படைக்கப்பட்டு தீபாராதனை காண்பிக்கப்படுகிறது.

பின்னர் சண்டிகேசுவரர், பைரவர் பூசையோடு அர்த்தசாமப்பூசை நிறைவடைகிறது. பைரவர் சன்னதியில் பூசையை முடித்து அவரிடம் பள்ளியறைத் திறவுகோலை வைத்துப் பாதுகாக்கும்படி ஒப்படைத்து விட்டு வருவர். ஆதிசொக்கநாதர் கோயிலில் நிவேதனமாக சம்பா அன்னம் (மிளகு, சீரகம், நெய் சேர்த்து) படைக்கப்படுகிறது. புட்டுசொக்கநாதர் கோயிலில் இதனைத் தாலாட்டுப் பூசை என்று அழைக்கின்றனர். தாலாட்டுப் பூசையில் பால் படைக்கப்படுகிறது. திருஏடகநாதர் கோயிலில் சம்பா அன்னம், சர்க்கரைப் பொங்கல், அப்பம், வடை, சுண்டல். பால் போன்றவை படைக்கப்படுகிறது.

### பைரவர் பூசை

இப்பூசை காவல் தெய்வமான பைரவருக்கு நடத்தப்படுகின்றது. இரவு திருக்கோயிலின் திறவுகோல்களை பைரவரிடம் கொடுத்துப் பொறுப்பை ஒப்படைப்பதாகக் கூறுகின்றனர். இப்பூசை பூசைக்காலங்களில் ஒன்றாகச் சேர்க்கப்படவில்லை. இப்பூசையின் போது ஒலி எழுப்பப்பட்டு அன்றைய கால பூசைகள் முடிவுற்றதாக அறிவிக்கப்படுகிறது.

இப்பூசைமுறைகள் விழாக்காலங்களில் சூழ்நிலைக்கேற்ப நிகழும் ஆறுகாலப் பூசையில் காலங்களுக்கேற்ப மந்திரங்கள் ஓதி வழிபாடு செய்கின்றனர். இத்தகைய வழிபாட்டுக் காலங்களில் இறைவனை வணங்குபவர்கள் துன்பங்களிலிருந்து விடுபடுவர் என்பதனை,

**“காலை தொழ அற்றைவினைக் கட்டகலும் கட்டுச்சி**
**வேலை தொழ இப்பிறப்பில் வெந்துயர்போம்**
**மாலையினில் வந்து சிவன் தாளை வந்தித்தால் ஏழ்பிறப்பில்**
**வெந்துயர மெல்லாம் விடும்”**[18]

என்னும் பாடல் விளக்கும்.

### வார வழிபாடு

வாரம் ஒருமுறை நடைபெறும் வழிபாடு வார வழிபாடு எனப்படும். வார நாட்களில் ஏதேனும் ஒரு நாளைத் தேர்வு செய்து மக்கள் வழிபாடு செய்து வருகின்றனர். மக்கள் தங்களின் வசதிக்கேற்ப ஒரு குறிப்பிட்ட நாளைத் தேர்வு செய்து திருக்கோயில் சென்று வழிபாடு செய்து வருகின்றனர். வார நாட்களில் வியாழக்கிழமை

தட்சிணாமூர்த்திக்கும் வெள்ளிக்கிழமை துர்க்கை அல்லது சக்திக்கும் சனிக்கிழமை நவக்கிரக வழிபாடும் செய்து வருகின்றனர். இவற்றுள் திங்கட்கிழமை சிவனுக்கு உகந்த நாள். இந்நாள் சோமவாரம் எனப்படும். இந்நாளில் சிவாலயங்களில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன. வெள்ளிக்கிழமைகளில் அம்மனுக்குச் சிறப்பு வழிபாடு நடைபெறுகின்றது.

### பட்ச வழிபாடு (மாதமிருமுறை)

பட்ச வழிபாடு என்பது மாதமிருமுறை வரும் வளர்பிறை, தேய்பிறை போன்ற காலங்களில் நிகழும் வழிபாடாகும். இவ்வழிபாட்டினைத் திதியின் அடிப்படையில் செய்கின்றனர். அவை:

திரியோதசி - சிவ வழிபாடு (பிரதோச வழிபாடு)

சதுர்த்தி - விநாயகர் வழிபாடு

சட்டி - முருக வழிபாடு

என்பன.

வார வழிபாடு நடைபெறும்போது பக்தர்கள் சிவபுராணம் மற்றும் திருவாசகப் பாடல்களைப் பாடி வழிபாடு செய்கின்றனர்.

பல்வேறு வழிபாட்டு முறைகளில் பாட்டு வழிபாட்டு முறையும் ஒன்றாகும். ‘அருச்சனை பாட்டேயாகும்’ என்ற திருமூலரும்,

**“வேட்டவி யுண்ணும் விரிசடை நந்திக்குக்**
**காட்டவும் நாமிலங் காலையும் மாலையும்**
**ஊட்டவி யாவன வுள்ளங் குளிர்விக்கும்**
**பாட்டவி காட்டுதும் பாலவியாமே”**[19]

என்று முழுமுதற் சிவத்தின் உள்ளம் குளிர்விக்கும்படியாக ஊட்டும் அவி செந்தமிழ்த் திருப்பாட்டுகளாகும் என்கிறார்.

மாணிக்கவாசகரும்,

**“சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்**
**சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்**
**செல்வர் சிவபுராணத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்**
**பல்லோரும் ஒத்தப் பணிந்து”**[20]

என்றுரைப்பது சிவபெருமானின் திருவடிக்கீழ் நின்று திருப்பாடல்களைப் பாடி வழிபடுவதன் சிறப்பினைப் புலப்படுத்தும்.

"கைகளை உச்சியின் மேல் ஏறக் குவிந்தவராய்க் கசிந்த உள்ளத்துடன் திருமுறைத் திருப்பாட்டு பொழிந்து சிவபெருமானை வழிபாட்டால் சிவபெருமான் உள்ளத்தின் கண் வெளிப்பட்டு உறைவான்."[21] என்பதற்கேற்ப ஆய்விற்குட்பட்ட மூன்று திருக்கோயில்களிலும் அம்மனுக்கு உகந்த வெள்ளிக்கிழமை மற்றும் சிவனுக்கு உகந்த திங்கட்கிழமை போன்ற கிழமைகளில் மாலை வழிபாட்டின் போது உலக நன்மைக்காக மக்கள் கூடி வழிபடுகின்றனர்.

## பிரதோச வழிபாடு

பிரதோசம் என்ற வடசொல்லுக்குப் பாவங்களைப் போக்கி மேன்மை நிலையை அடையச் செய்தல் என்பது பொருளாகும். 'பிர' என்பது மேன்மை எனவும், 'தோசம்' என்பது பாவம் என்றும் பொருள்படும். இவ்வழிபாடானது மாதந்தோறும் வருகின்ற திரியோதசி நாட்களில் வருகின்ற கிருட்ண பட்சம், சுக்கில பட்சம் திதிகளில் மாலைவேளையில் நடைபெறுகின்றது. இந்த பிரதோச வேளையில் சிவன், பார்வதி, நந்தியம் பெருமான், திருமால், நான்முகன், திருமகள், கலைமகள் முதலிய கடவுள்களை எல்லாத் தேவர்களும் முனிவர்களும் திருக்கயிலை சென்று வணங்குகின்றனர் என்று சிவபுராணங்களின் கருத்தின் அடிப்படையில் இவ்வழிபாடு நடைபெறுகிறது"[22] என்கிறார் பரசுராமபட்டர்.

பிரதோச வழிபாட்டின் போது நந்திக்கு முதலில் அபிடேகம் நடத்தப்பெறுகிறது. பிறகுதான் மூலவருக்கும் அம்மனுக்கும் அபிடேகம் நடத்தப்பெற்று நிவேதனம் படைக்கப்பட்டுத் தீபாராதனை நடைபெறுகிறது. பின்னர் உற்சவமூர்த்தியை காளை வாகனத்தில் ஏற்றி சுவாமி சன்னதி திருச்சுற்றினை வலமாக மும்முறை வலம் வருகின்றனர். வலம் வரும்போது மூன்றாவது சுற்றில் வேதபாராயணம் பாடப்பட்டு எட்டு திக்குகளிலும் தீபாராதனை காட்டப்படுகிறது. கம்பத்தடி பக்கத்திலுள்ள பலிபீடத்தில் சுத்தஅன்னம் பலியிடப்படுகிறது. திருஏடகநாதர் திருக்கோயிலில் திருச்சுற்றினை ஒருமுறையும் வெளிப்பிரகாரத்தை இருமுறையும் சுவாமி வலம் வருகிறது. மற்ற இரு கோயில்களிலும் வாகனத்தில் உற்சவரை ஏற்றி வலம் வரும் வழக்கம் இல்லை.

## பிரதோச வழிபாடு தோற்றம்

அமுதம் பெறும் நோக்கத்துடன் அசுரர்களும் தேவர்களும் இணைந்து வாசுகி என்ற பாம்பைக் கயிறாகவும் மந்தர மலையை மத்தாகவும் கொண்டு பாற்கடலைக் கடைந்தனர். அப்பொழுது வேகம் தாங்காமல் வாசுகியின் வாயிலிருந்து வெளிப்பட்ட ஆலமும் (நஞ்சு) கடலிலிருந்து தோன்றிய ஆலமும் இணைந்து ஆலால விசமாக

உலகை அழிக்கக் கிளம்பியது. சிவபெருமான் அதனை உண்டு தனது கண்டத்தில் நிறுத்தியதால் சிவபெருமான் நீலகண்டரானார். இந்நிகழ்ச்சி ஏகாதசியன்று மாலையில் நடந்தது.

தேவர்கள் தொடர்ந்து பாற்கடலை ஏகாதசி இரவு முழுவதும் கடைந்து துவாதசியன்று காலையில் வெளிப்பட்ட அமுதத்தை உண்டு களித்தனர். மறுநாள் திரியோதசியன்று சிவபெருமானை வணங்காமல் தவறு செய்ததையுணர்ந்து தேவர்கள் மன்னிப்புக் கேட்டனர். திரியோதசி மாலையில் சிவபெருமான் நந்திதேவரின் இரு கொம்புகளுக்கிடையே நின்றவாறு அம்மனும் தேவரும் மகிழுமாறு நடனம் புரிந்தார்."[23] இதுவே பிரதோச வழிபாடு தோற்றம் பெற்றதற்கான காரணமாகும்.

### பிரதோச காலம்

சூரியன் மறைவதற்கு முன்புள்ள மூன்றே முக்கால் நாழிகையும் மறைவதற்குப் பின்புள்ள மூன்றே முக்கால் நாழிகையும் இணைந்த காலமே பிரதோச காலமாகும். இது மாலை 4.30 மணி முதல் 6.30 மணி வரையிலுள்ள காலம் ஆகும். மாதந்தோறும் வளர்பிறையில் வரும் சனிக்கிழமைகளில் நடைபெறுவதே மகா பிரதோசம் அல்லது உத்தமப் பிரதோசமாகும். பகலில் நல்ல முறையில் காரியங்களை நிறைவேற்றியதற்கு நன்றியாகவும் இரவாகிய ஒடுக்கத்திற்கு முன்னேற்பாடாகவும் நடைபெறும் வழிபாடு பலவித நன்மைகளை அளிக்கின்றது. சீவராசிகள் பகலில் இயங்கி இரவில் ஒடுங்குவது போல் நமது சிந்தனையும் இரவில் ஒடுங்க வேண்டும் என்னும் கருத்தைப் பிரதோசம் தெரிவிக்கிறது.

### நித்திய பிரதோச காலம்

சூரியன் மறையும் நேரத்தில் ஒன்றரை மணியும் இரவு தொடங்குவதற்கு முன் ஒன்றரை மணி நேரமும் ஆகிய மூன்று மணிநேரமும் பிரதோச காலமாகும். இது நித்திய பிரதோச காலமாகும்.

### மாதப் பிரதோச காலம்

இது ஒவ்வொரு மாதமும் வளர்பிறை திரியோதசி தினத்தன்று வரும் பிரதோச நேரத்தையும் தேய்பிறை திரியோதசி தினத்தன்று வரும் பிரதோச நேரத்தையும் குறிக்கும்.

### உத்தம மகாப் பிரதோசம்

சிவபெருமான் நஞ்சை உண்ட தினம் சனிக்கிழமை ஆகும். அந்தக் கிழமைகளில் வரும் பிரதோசம் மிகவும் சிறப்பானதாகும். சித்திரை, வைகாசி, ஐப்பசி, கார்த்திகை ஆகிய மாதங்களில் வளர்பிறையில் சனிக்கிழமைகளில் திரியோதசி

திதியன்று வரும் பிரதோசம் உத்தம மகா பிரதோசமாகும். இது மிகவும் சிறப்பு பெற்ற தினமாகும். சனிப்பிரதோச காலத்தில் ஒருமுறை சிவன் ஆலயத்தில் வழிபட ஒரு வருடம் சிவனை வழிபட்ட பயன் கிடைக்கும். இதன் பயனால் அச்சம், குழப்பம், பிணிகள், பய உணர்வு, மனநலம், உடல்நலம் ஆகியவை நலம் பெற்றுத் திகழும். பிரதோச நாளில் பகல் முழுவதும் சிவனை நினைத்து வழிபட்டு சிவனுக்குத் தீபம் ஏற்றிச் சிவபுராணத்தை உச்சரித்துக் கொண்டு சிவனுக்கும் நந்திதேவருக்கும் அபிடேகம் செய்யும் போது நந்திதேவருக்கு அருகம்புல் மாலையும் அரிசி மாவினால் அகல் செய்து நெய்விளக்கு ஏற்றினால் சகல நன்மைகளும் பெற்றுத் திகழ்வர் என்பது நம்பிக்கையாகும்.

### மத்திம மகா பிரதோசம்

சித்திரை, வைகாசி, ஐப்பசி, கார்த்திகை ஆகிய மாதங்களில் தேய்பிறை திரியோதசியுடனான சனிக்கிழமைகளில் வரும் பிரதோசக் காலங்கள் மத்திம மகா பிரதோசங்கள் என அழைக்கப்படுகின்றன.

### அதம மகா பிரதோசம்

ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி, மார்கழி, தை, மாசி, பங்குனி ஆகிய மாதங்களில் வரும் வளர்பிறை மற்றும் தேய்பிறை திரியோதசியுடன் கூடிய சனிக்கிழமைகளில் வரும் பிரதோசங்கள் அதம மகா பிரதோசங்கள் என்று அழைக்கப்படுகின்றன.

### அபிடேகத்தின் பயன்

பூசைகளில் சிறந்தது பிரதோச பூசை. அதன் பயன் மிகுதி. பிரதோச காலத்தில் சிவலாயத்தில் மழைக்காக ஒதுங்கினாலும் நாம் செய்த வினைகள் அகலும். சிவபெருமானுக்குத் தூய நீரில் திருமுழுக்காட்டினாலும் நன்மையுண்டு. பசும்பால்- அதனினும் நன்மை; தயிர்- அதனினும் ஆயிரமடங்கு நன்மை; நெய்- பதினாயிரம் மடங்கு நன்மை; கருப்பஞ்சாறு- லட்சம் மடங்கு நன்மை; இளநீர்- கோடி மடங்கு நன்மை; சந்தனக் குழம்பு- எல்லையற்ற நன்மையைத் தரும்."[24]

### பிரதோச காலத்தில் நந்திக்கே முதலிடம்

நந்திதேவர் சிவபெருமான் ஆலயங்களில் தலைவராக விளங்குபவர். 'சிவாய நம' என்னும் மகா மந்திரத்தின் வடிவம் தான் நந்திதேவர். சிவபெருமானின் வாகனமாகத் திகழ்கின்ற நந்திதேவரை முதலில் தரிசிக்க வேண்டும். கயிலாயத்தில் நந்திதேவரின் அனுமதி பெற்ற பிறகே தேவர்களும் முனிவர்களும் சிவபெருமானைத் தரிசிக்க முடியும். பிரதோச காலத்தில் நந்திதேவரின் இரு கொம்புகளுக்கிடையே

நின்று சிவபெருமான் நடனம் புரிகிறார். இதன் காரணமாகத்தான் பிரதோச காலத்தில் நந்திக்கு முதலில் அபிடேகம் நடத்தப்பட்டு முதலிடம் வழங்கப்படுகிறது. பிரதோச காலத்தில் நந்திதேவருக்கு அருகம்புல் மாலை அணிவிக்கப்பட்டு சிறப்பிக்கப்படுகிறது.

### சோமசூக்தப் பிரதட்சிணம்

சிவபெருமான் கருவறையில் இருந்து புறப்பட்டு பிரதட்சிணமாக (வலமாக) நவக்கிரக மூலையை அடைவார். பின் அவ்விடத்திலிருந்து புறப்பட்டு அப்பிரதட்சிணமாகக் கொடிமர நந்தியருகே வருவார். முதலில் நந்திக்கும் பின் சிவபெருமானுக்கும் தீபாராதனை காட்டப்படும். அங்கிருந்து சிவன் மீண்டும் பிரதட்சிணமாக வந்து சண்டிகேசுவரர் சன்னதியில் நின்று மகா தூப தீபச் சிறப்புகளை ஏற்றுக் கொள்கிறார். மீண்டும் புறப்பட்டு அப்பிரதட்சிணமாகப் புறப்பட்ட இடத்திற்கு வந்து சேருகிறார். இதே போல் மூன்று முறை பிரதட்சிணமாகவும் அப்பிரதட்சிணமாகவும் இறைவன் வலம் வரும் இந்த முறைக்கே சோம சூக்தப் பிரதட்சிணம் என்று பெயர்.

பக்தர்களும் சிவலிங்கத்தையும் நந்தியம் பெருமானையும் வணங்கி வழக்கம்போல் பிரதட்சணமாக (சுவாமிக்கு வலமாக) ஆலயத்தில் வலம் வரும்போது சுவாமி அபிடேகத் தீர்த்தம் விழும் கோமுகித் தொட்டியைக் கடக்காமல் அப்படியே வந்தவழியே திரும்பி அப்பிரதட்சணமாகச் சன்னதிக்கு வந்து சிவலிங்கத்தையும் நந்தியம்பெருமானையும் வணங்க வேண்டும். மீண்டும் கோமுகி தொட்டி வரை சென்று திரும்பி வர வேண்டும். இவ்வாறு பிரதோச காலத்தில் மூன்று முறை வலம் வந்தால் அநேக அசுவமேதயாகம் செய்த பலன் கிட்டும் என்பர்.

### சதுர்த்தசி

அமாவாசை, பௌர்ணமி நாட்களை அடுத்துவரும் நான்காவது நாள் சதுர்த்தி ஆகும். ‘சதுர்’ எனும் வடமொழிச் சொல் நான்கு எனப்பொருள்படும். பதினைந்து நாட்கள் கொண்ட தொகுதியில் நான்காவது நாளாக வருவதால் இந்த நாள் சதுர்த்தி என்று அழைக்கப்படுகிறது. முப்பது நாட்களைக் கொண்ட மாதத்தில் அமாவாசைக்கு அடுத்த சுக்கில பட்சம் எனப்படும் வளர்பிறைக் காலத்தின் நான்காம் நாள் சதுர்த்தி என்றும் முழுநிலவிற்கு அடுத்த கிருட்ண பட்சம் எனப்படும் தேய்பிறைக் காலத்தின் நான்காம் நாள் சங்கடஹர சதுர்த்தி என்றும் அழைக்கப்படுகிறது. ஆவணி மாதம் முழுநிலவு நாளின் பின்னர் வரும் சங்கடஹர சதுர்த்தி மகா சங்கடஹர சதுர்த்தி எனவும் அழைக்கப்படுகிறது.

## சங்கடஹர சதுர்த்தி

'சங்கடம்' என்றால் துன்பம். 'ஹர' என்றால் அறுத்தல். அதாவது துன்பங்களிலிருந்து விடுதலை செய்தல் ஆகும். எனவே சங்கடஹர சதுர்த்தியன்று விரதம் இருந்து விநாயகரை வழிபட்டால் துன்பங்களிலிருந்து விடுதலை அடையலாம். ஆவணி மாதம்வரும் மகாசங்கடஹர சதுர்த்தியில் துவங்கி அடுத்த ஆண்டு ஆடி மாதத்தில் வரும் சங்கடஹர சதுர்த்தி வரை பன்னிரெண்டு சதுர்த்திகள் விரதம் இருப்பது மிகவும் சிறப்பாகும். விநாயகர் சதுர்த்திக்கு முன்னதாக வரும் சங்கடஹர சதுர்த்தி, மஹா சங்கடஹர சதுர்த்தி எனப்படும். அன்று விரதம் இருந்தால் ஒரு வருட சங்கடஹர சதுர்த்தி விரதப் பலனை அடைய முடியும்.

## விரதப் பலன்கள்

"விநாயகர் ஒருமுறை கயிலையில் ஆனந்தமாகத் திருநடனம் செய்து கொண்டிருந்தபோது அங்கே வந்த சந்திரன், விநாயகரின் பெருத்த தொந்தியையும் துதிக்கையையும் அவற்றைத் தூக்கிக் கொண்டு அவர் ஆடுவதையும் பார்த்து பெரிதாகச் சிரித்தார். சிரித்ததைக் கண்ட விநாயகர் சந்திரனின் கலைகள் தேய்ந்து போனவை, தேய்ந்தவையாகவே இருக்கும் எனக் கூறவே, மனம் வருந்திய சந்திரன் அதற்குப் பரிகாரமாகவும் தன்னுடைய தவற்றை நீக்கவும் சதுர்த்தி தினத்தன்று விரதம் இருந்து விநாயகரின் அருளைப் பெற்றார்."[25]

இந்த விரதத்தைக் கடைப்பிடித்து "அங்காரகன் என்னும் செவ்வாய் நவக்கிரகங்களில் ஒன்றாகும் பேறைப் பெற்றார்."[26] எனவே செவ்வாய் கிழமைகளில் வரும் சதுர்த்தி அங்காரக சதுர்த்தி என்று போற்றப்படுகின்றது. அன்றைய தினம் விநாயகரை வழிபடுவதால் அங்காரகனுடைய அருளையும் பெறலாம்.

மேலும் "'தாண்டகா' வனத்தில் வசித்து வந்த 'விப்பிரதன்' எனும் வேடன் காட்டு வழியே வருபவர்களிடம் வழிப்பறியும் வழிப்போக்கர்களைக் கொலையும் செய்து வந்தான். அவனை நல்வழிப்படுத்த எண்ணிய 'முத்கலர்' என்னும் முனிவர் அவனுக்குச் சங்கடகர சதுர்த்தி விரதம் பற்றியும் விநாயகரின் மூலமந்திரம் போன்றவற்றையும் உபதேசித்தார். அன்று முதல் மூலமந்திரத்தை இடைவிடாது உச்சரித்து வந்த விப்ரதன் உருவமே மாறி அவனின் நெற்றிப் பொட்டில் இருந்து துதிக்கை போலத் தோன்ற ஆரம்பித்து அவனும் விநாயகரைப் போன்ற வடிவம் பெற ஆரம்பித்தான். 'ப்ருகண்டி' என அழைக்கப்பட்ட அவனுக்கு விநாயகரின் தரிசனமும் கிடைக்கவே அவனைப் பார்த்தாலே கிடைக்கும் புண்ணியத்தைப் பெற தேவலோகத்தில் இருந்து தேவேந்திரன் தன் விமானத்தில் ஏறி, பூவுலகு வருகிறான். ப்ருகண்டியை பார்த்து விட்டுத் திரும்பும் பொழுது அவனின் விமானம் மண்ணில் புதையுண்டு போகிறது.

அப்போது சங்கடகர சதுர்த்தி விரதம் இருந்தவர்கள் தங்கள் விரத பலனைக் கொடுத்தால் விமானம் கிளம்பும் எனத் தெரியவர, அவ்வாறே விரத பலனைப் பெற்றுக் கொண்டு விமானம் மூலம் தேவலோகம் அடைகின்றான் தேவேந்திரன்.''[27] என்னும் கதை சதுர்த்தி வழிபாட்டின் சிறப்பினைப் புலப்படுத்தும்.

மூன்று சிவன் கோயில்களிலும் வளர்பிறையில் வரும் சதுர்த்தி அன்றும் தேய்பிறையில் வரும் சங்கடஹர சதுர்த்தி அன்றும் விநாயகருக்கு மாலை ஆறு மணிக்கு மேல் அபிடேகம் நடத்தப்பெற்று கொழுக்கட்டை நிவேதனமாகப் படைக்கப்பட்டு தீபாராதனை காண்பிக்கப்படுகிறது. பின்பு ஓதுவார்கள் விநாயகர் 'பாமாலை' பாடுகிறார்கள்.

## மாத வழிபாடு

கிருத்திகை, மாதப்பிறப்பு, சப்த கன்னியர் வழிபாடு, திருவிளக்குப் பூசை என்பன மாதம் ஒருமுறை வரும் வழிபாட்டுத் தினங்களாகும். கிருத்திகை அன்று முருகனுக்கும் மாதப்பிறப்பு அன்று சிவனுக்கும் அம்மனுக்கும் சிறப்பு அபிடேக, ஆராதனை நடைபெறுகிறது. சப்த கன்னியர் வழிபாடு சப்த கன்னியருக்கும் திருவிளக்குப் பூசை அம்மனுக்கும் நடைபெறுகிறது.

## திருவிளக்குப் வழிபாடு

திருவிளக்குகள் இறைவனின் உறைவிடமாகத் திகழ்கின்றன. இறைவனின் திருஉருவத்தை அலங்கரிப்பதைப் போல திருவிளக்கும் அலங்கரிக்கப்படுகின்றது. கோயில்களிலும் வீடுகளிலும் குத்துவிளக்கேற்றி விட்டு அதன்பின்னரே பூசை முதலான காரியங்களைத் தொடங்குவார்கள்.

இக்குத்துவிளக்கின் சிறப்பினை ''குத்துவிளக்கின் அடிப்பாகம் தாமரை மலரை ஒத்த சிறப்புடையது. அது பிரம்ம பாகம் எனப்படும். சிவனின் ஐந்து முகங்களான ஈசானம், வாமதேவம், சத்யோ ஜாதகம், தத்புருசம், அகோரம் ஆகியவற்றைத் தீபத்தின் ஐந்து முகங்கள் குறிப்பிடுகின்றன. உச்சிப்பாகம் கோயிலின் கலசமாகும். எண்ணெய் அல்லது நெய் பரவும் பாகம் எங்கும் பரவியுள்ள பரம்பொருளாகும். திரியிலிருந்து தோன்றும் சோதி மகாலட்சுமியாவாள். அச்சோதியிலிருந்து தோன்றும் பிரகாசம் சரசுவதி ஆகும்.''[28] என்பர் வேங்கடவன்.

தீபமானது வாழ்வில் ஒளி அளிக்கும் உன்னதத் தன்மையானது. அதனால்தான் அதிகாலையிலும் அந்திமாலையிலும் தீபமேற்றி இறைவழிபாடு செய்வதை நெறியென வகுத்துத் தந்துள்ளனர் நம் முன்னோர்கள். தீபமேற்றி இறைவழிபாடு செய்வதுடன் தீபத்தையும் சேர்த்தே வழிபடுகின்றனர். தீபத்திலே துர்க்கா, இலக்குமி, சரசுவதி என்று

மூன்று சக்திகளும் உள்ளன. தீப ஒளி புற இருளை அகற்றுகிறது. தீப பூசை உள்ளத்தின் இருளைப் போக்குகிறது. மனத்தில் உள்ள கவலைகளைப் போக்குகிறது.

அவ்வகையில் திருவிளக்கு வழிபாட்டையும் அதன் பலன்களையும் முதன்முதலாக உரைப்பவர் திருமூலராவார். இதனை,

**"விளக்கினை ஏற்றி வெளியே அறிவில்**
**விளக்கினில் முன்னே வேதனை மாறும்**
**விளக்கை விளக்கும் விளக்குடை யார்கள்**
**விளக்கின் விளங்கும் விளக்கவர் தாமே"**[29]

என்னும் பாடல் உணர்த்தும். விளக்கின் சுடர்களை ஏற்றுங்கள். இருளற்ற வெளியை அறிந்து கொள்ளுங்கள். விளக்கின் முன்னே வேண்டினால் உடல் உள்ள வேதனைகள் அனைத்தும் அறவே ஒழிந்து விடும். விளக்கை விளக்குகின்ற அறிவுத் தெளிவுடையவர்கள் அந்த விளக்கில் விளங்குகின்ற சுடரைப் போன்றவர்களாவர். சுடர் இருளகற்றும் மற்றொரு சுடர் எரியத் துணைபுரியும். அதுபோல, விளங்கிய அறிவுடையவர்கள் மற்றவர்களது அறியாமை இருளை அகற்றுவர். தம்மைப்போல மற்றவர்களும் அறிவுத் தெளிவு பெறத்துணை செய்வர் என்ற இப்பாடலின் விளக்கம் சுடர் அறிவுடையவர்க்குப் பொருந்தும் என்பதைக் காட்டுகிறது.

திருக்கோயில்களில் தீப வழிபாடு கூட்டு வழிபாடாக மேற்கொள்ளப் பெறுகிறது. இதன்மூலம் கூட்டுப் பிரார்த்தனை நடைமுறைப் படுத்தப்பட்டு உலகம் நன்மையடைகிறது. கோயில்களில் வெள்ளிக்கிழமைகளிலோ அல்லது விசேட நாட்களிலோ திருவிளக்குப் பூசை நடைபெறுகிறது.

## இறைவனுக்குரிய எண்ணெய் வகைகள்

ஒவ்வொரு இறைவனுக்கும் உரிய எண்ணெய் தனித்தனியாக உள்ளது.

| | |
|---|---|
| விநாயகர் | - தேங்காய் எண்ணெய் |
| துர்க்கை | - ஐவகை எண்ணெய் |
| நாராயணன் | - நல்லெண்ணெய் |
| மகாஇலக்குமி | - நெய் |
| பிற தேவதைகள் | - நல்லெண்ணெய் |

## எண்ணெய்களின் பயன்கள்

### நெய்

நெய் விளக்கு ஏற்றுவது மிகவும் சிறந்தது. சகல செல்வங்களையும் தரும். வீட்டில் இலக்குமி கடாட்சம் உண்டாகும்.

### நல்லெண்ணெய்

துன்பம் விலகும்.

### விளக்கெண்ணெய்

புகழ், உடல் சுகம், சொந்தங்கள் சேர்தல், தம்பதி சுகம் ஆகியவை உண்டாகும்.

கடலை எண்ணெய் ஏற்றக்கூடாது, கடன் ஏற்படும். நெய், இலுப்பை எண்ணெய், வேப்பெண்ணெய், விளக்கெண்ணெய், தேங்காய் எண்ணெய் ஆகிய இவ்வைந்தும் கலந்து தீபம் ஏற்றி ஒரு மண்டலம் (48 நாள்) வழிபட அம்மனின் அருள் உண்டாகும். நெய், இலுப்பை எண்ணெய், வேப்பெண்ணெய் இவை மூன்றும் கலந்து தீபமிடுவதால் செல்வம் உண்டாகும்.

### முகங்கள்

| | |
|---|---|
| ஒரு முகம் ஏற்றுவது | - மத்திம பலன் |
| இரு முகம் ஏற்றுவது | - குடும்ப ஒற்றுமை பெருகும் |
| மூன்று முகம் ஏற்றுவது | - புத்திர சுகம் தரும் |
| நான்கு முகம் ஏற்றுவது | - பசு, பூமி இவற்றைத் தரும் |
| ஐந்து முகம் ஏற்றுவது | - செல்வத்தைப் பெருக்கும் |

### தீபமேற்றும் திசைகள்

**கிழக்கு:** இத்திசையில் தீபம் ஏற்றி வழிபடத் துன்பம் ஒழிந்து கிரகங்களின் தாக்கம் குறையும்.

**மேற்கு:** கடன் தொல்லை, சனியின் தாக்கம், கிரகங்களின் தாக்கம் அகலும்.

**வடக்கு:** திரண்ட செல்வமும் மங்களமும் உண்டாகும். திருமணத் தடை நீங்கும். சுபகாரியங்கள் உண்டாகும்.

**தெற்கு:** இத்திசையில் தீபம் ஏற்றினால் அது பாவச் செயலாகும்.

### திரி

எரிபொருளான எண்ணெயின் எரியாற்றலை வெளிப்படுத்தும் சாதனம் திரியாகும். விளக்கின் ஆழத்திற்குத் தகுந்தாற் போல் திரி அமைந்திருக்க வேண்டும். இலவம் பஞ்சுத் திரி பயன்படுத்தலாம். சிவப்பு நிறத்துணித் திரியைப் பயன்படுத்தினால் திருமணத்தடை நீங்கும். மகப்பேறு உண்டாகும். செல்வங்கள் பெருக மஞ்சள் அல்லது வெள்ளை நிறத்துணித்திரிகள் ஏற்றவை. நூலிழைகளைத் திரிகளாகப் போடும்பொழுது அவை 21 அல்லது 16 அல்லது 14 அல்லது 7 இழைகளாக இருப்பது நல்லது. தாமரைத்தண்டு திரி, வாழைத்தண்டு திரி என திரிகளை பல வகைகளில் இட்டு தீபமேற்றலாம்.

### திருவிளக்கின் வகைகள்

மக்கள் முதன்முதலில் மண்ணால் செய்த விளக்குகளைப் பயன்படுத்தி வந்தனர். வெண்கலம், பித்தளை, வெள்ளி முதலிய உலோகங்களால் செய்த விளக்குகள் பிற்காலத்தில் பயன்படுத்தப்பட்டன. ஐம்பொன்னால் செய்யப்பட்ட விளக்குகளும் உண்டு.

திருவிளக்கைத் தரையில் வைக்கக்கூடாது. மனைப்பலகை மீதோ, தட்டுகள் மீதோ அல்லது வாழை இலைகள் மீதோ வைக்க வேண்டும். பலகையின் மேல் கோலமிட்டிருக்கவேண்டும். திருவிளக்குகளிலிருந்து வரும் ஒளி இருளை நீக்குவதுடன் நம் வாழ்வின் இருளை நீக்கி ஒளி ஏற்றுகிறது.

புட்டுசொக்கநாதர் கோயிலில் ஒவ்வொரு முழுநிலவு நாளன்றும் நூற்றியெட்டு விளக்குப் பூசை நடைபெறுகிறது. தைப்பூசம் போன்ற சிறப்புமிக்க நாட்களிலும் விளக்குப்பூசை நடைபெறுகிறது.

திருஏடகநாதர் கோயிலில் ஒவ்வொரு மாதம் கடைசி வெள்ளிக்கிழமை அன்றும் விளக்குப்பூசை நடைபெறுகிறது. அன்று மாலை ஆறுமணி அளவில் அம்மன் சன்னதி முன்பு சுமங்கலிப் பெண்கள் குத்துவிளக்கு ஏற்றி அம்மன் நாமங்கள் நூற்றியெட்டை உச்சரித்து விளக்கைப் பூவால் அர்ச்சனை செய்து நிவேதனமாகப் பொங்கல் படைத்து தீபாராதனை காட்டி உலக நன்மைக்காகவும் குடும்ப நன்மைக்காகவும் வேண்டிக்கொள்வர்.

### திருவிழாக்கள்

திருவிழாக்கள் எல்லா நாட்டுப் பண்பாடுகளிலும் முக்கிய இடம் பெறுகின்றன. மக்கள் தங்கள் கவலைகளை மறந்து உற்சாகமாக இருப்பதற்காகத் திருவிழாக்களைக் கொண்டாடுகின்றனர்."[30] தமிழ்நாட்டில் கோயில்கள் மிகுதியாக

இருப்பதால் சமயச் சார்பான திருவிழாக்கள் (Religious Festivels) மிகுதியாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன.

மிகப்பழங்காலத்திலிருந்தே திருவிழாக்கள் கொண்டாடப்பட்டு வந்துள்ளன. ‘‘விழாக்கள் என்பன ஆதிமக்கள் ஒன்று சேர்ந்து நடத்தும் கூட்டுச் சடங்கிலிருந்து தோன்றியனவாகும். ஆதிமக்கள் தனிநபருக்கோ, குழுவினருக்கோ தீங்கான நெருக்கடி உண்டாகும் போது உள்ளக்கிளர்ச்சி அமைதியடைவதற்காகவும் சடங்குகளில் கலந்து கொள்வது வழக்கமாயிருந்தது’’[31] என்று விழாக்களின் தோற்றம் பற்றிக் கலைக்களஞ்சியம் குறிப்பிடுகின்றது.

## திருவிழா

திரு என்ற சொல் ‘‘செல்வம், அழகு, ஒளி, பொலிவு, தெய்வத்தன்மை, நல்வினை’’[32] என்ற பலபொருள்களைக் கொண்டுள்ளது. ‘விழா’ என்பது கொண்டாட்டம், ஆனந்தம், மகிழ்ச்சி, இன்பம், உல்லாசம், களிப்பு, மக்கள், உளமகிழ்தல் எனப் பல பொருள் தருகிறது. ஆகவே திருவிழா என்பது அழகு பொருந்திய ஆனந்த நிகழ்வு எனப்படுகிறது.

“‘விழா’ எனும் சொல்லின் அடிச்சொல் ‘வீழ்’ என்பதாகும். வீழ் என்பது விழைவு, விருப்பம் எனப் பொருள்படுகிறது. மக்கள் விழைவுடனும் விருப்பத்துடனும் கொண்டாடுவது விழாவாகும். இதனை மக்கள் தங்கள் வாழ்வில் களைப்பைப் போக்கிக் கொள்ளவும் இன்பமும் மகிழ்ச்சியும் பெறுவதற்குத் திருவிழாக்கள் பயன்படுகின்றன’’[33] என்கிறார் அ. தட்சிணாமூர்த்தி.

உழைத்துக் களைத்த மனிதன் ஓய்வு நேரப் பொழுதுபோக்காகவும் மனமகிழ்விற்காகவும் சமுதாய ஒற்றுமைக்காகவும் பண்பாட்டுப் பதிவாகிய விழாக்கள் மகிழ்வோடு கொண்டாடப்படுகின்றன. மக்கள் வாழ்வில் சோர்வினை போக்கி இன்பமும் புத்துணர்வும் தருவன விழாக்கள். ஒரு சமுதாயத்தின் வளர்ச்சி, மறுமலர்ச்சி ஆகியவற்றை காலங்காலமாகப் போற்றிக் கொண்டாடுகின்ற விழாக்களின் வழி அறிந்து கொள்ள முடிகின்றது. அகப்புறத் தூய்மைக்கும் வித்திடும் வகையில் விழாக்கள் அமைகின்றன.

மக்களோடு இரண்டறக் கலந்து விட்ட விழாக்கள் குறித்து, ‘‘விழாக்களையும் பண்டிகைகளையும் விலக்கி விட்டால் இந்தியாவில் குறிப்பிடும்படியாக ஒன்றுமில்லை. பாரதக் கலாச்சாரத்தையும் ஒருமைப்பாட்டையும் இறையுணர்வையும் இலக்கியச் சிறப்பையும் இவை தாம் கட்டிக் காத்து வருகின்றன’’[34] என்கிறார் பா.ராதேயன்.

விழாக்களினால் தனிமனித மற்றும் சமூக உணர்வுகள் மேம்படும். புதிய உறவுகளின் தோற்றத்தினால் சமூகப் பிணைப்பு ஏற்படும்.

பண்டைக்காலத்தில் விழாக்கொண்டாடியது பற்றிச் சிலப்பதிகாரமும், மணிமேகலையும் குறிப்பிடுகின்றன.

**“பசியும் பிணியும் பகையும் நீங்கி**

**வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி”**[35]

என்று இந்திரவிழாக் கொண்டாடியது பற்றிச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது.

**“பசியும் பிணியும் பகையும் நீங்கி**

**வசியும் வளனும் சுரக்க என வாழ்த்தி**

**அணிவிழா அறைந்தனன் அகநகர் மருங்கென்”**[36]

என்று மணிமேகலை குறிப்பிடுகின்றது. பகை நீங்க அறைவோன் அகநகருக்குள் பசி, பிணி, பகை நீங்க வேண்டும் என்றும் மழையும் வளமும் பெருக வேண்டும் என்றும் முரசு முழங்கி விழாவினை அறிவிக்கின்றான். இன்றைய கால கட்டத்திலும் பெரும்பாலான விழாக்கள் பசி, பிணி, பகை நீங்குவதற்காகவும் ஊர்செழிக்கவும் மழையும் வளமும் பெருகவும் கொண்டாடப்பட்டு வருகின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

“மக்கள் பலர் கூடித் தெய்வங்களின் பொருட்டுச் செய்யும் சிறப்பே விழாவாகும். விழா, விழவு, சாறு என்றும் குறிக்கப்படும்.”[37]

பண்டைத் தமிழ் இலக்கியங்கள் விழாவினை “விழவு, விழா, சாறு என்ற சொற்களால் சுட்டிச் சென்றுள்ளன. இவற்றில் விழவு என்ற சொல் மிகுதியாகவும் சாறு என்ற சொல் அடுத்த நிலையிலும் விழா என்ற சொல் அருகியும் பயின்று வந்துள்ளன.”[38]

சிற்றூர்களிலும் பேரூர்களிலும் மக்கள் விழாக் கொண்டாடி மகிழ்ந்த செய்தியைச் சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன. ‘‘சாறு கொள் ஊர்’’[39] என்று ஊரில் கொண்டாடிய விழா பற்றிக் குறுந்தொகை கூறுகின்றது. ‘‘விழவுடை வியல் நகர்’’[40] என்று அகநானூறு சுட்டுகின்றது.

‘‘பேரூர் கொண்ட ஆர்கலி விழவு’’[41] என்று பேரூரில் நடைபெற்ற விழா குறித்துக் குறுந்தொகை எடுத்துக் கூறுகின்றது. விழாக்கள் இடையறாது, எப்போதும் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருந்தன என்பதை,

“சாறு அயர் மூதூர்”[42] என்று சிறுபாணாற்றுப்படை எடுத்துரைக்கின்றது. மேலும்,

“முழவுக் கண் துயிலாது முடுக்கரும் வீதியும்
விழவுக்களி சிறந்த வியனுளாங் கண்”[43]

என்று வீதிகளில் இசைக்கருவிகள் இடையறாது முழங்கிக் கொண்டிருந்தன என்றும் மக்கள் களிப்புடன் விழாவில் பங்கு பெற்று மகிழ்ந்தனர் என்றும் சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது. விழா தொடங்குவதற்கு முன், விழாவை அறிவிக்கும் முறை முற்காலத்தில் இருந்தது என்பது பற்றி இரட்டைக் காப்பியங்கள் எடுத்துரைக்கின்றன.

“வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசம்
கச்சை யானைப் பிடர்த்தலை யேற்றி
வால் வெண் களிற்றரசு வயங்கிய கோட்டத்துக்
கால்கோள் விழவின் கடைநிலை சாற்றித்
தங்கிய ளெள்கைத் தருநிலைக் கோட்டத்து
மங்கல நெடுங்கொடி வானுற வெடுத்து”[44]

என்று சிலப்பதிகாரம் யானையின் மீது அமர்ந்து முரசு முழக்கி விழாவின் முதலும் முடிவும் அறிவித்துக் கொடியேற்றிய செய்தியைக் குறிப்பிடுகின்றது.

“வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசம்
கச்சை யானைப் பிடர்த்தலை ஏற்றி
ஏற்றுஉரி போர்த்த இடியுறு முழக்கிற்
கூற்றுக்கண் விளிக்கும் குருதி வேட்கை
முரசுகடிப் புகூஉம் முதுகுடிப் பிறந்தோன்”[45]

என்று தொல்குடிப்பிறந்தோனான வள்ளுவன் விழாத் தொடங்குதல் குறித்து முரசு முழக்கி அறிவிப்புச் செய்ததை மணிமேகலை குறிப்பிடுகின்றது. மேலும் விழாவின் போது மக்கள் செய்ய வேண்டிய பணிகள் குறித்தும் மணிமேகலை குறிப்பிடுகின்றது.

“தோரண வீதியும், தோமறு கோட்டியும்
பூரண குடும்பமும், பொல்பாலிகைகளும்
பாவை விளக்கும், பலவுடன் பரப்பு மின்
காய்குலைக் குமுகும், வாழையும் வஞ்சியும்
பூக்கொடி வல்லியும், கரும்பும் நடுமின்
பத்தி வேதிகைப் பசும்பொன் தூணத்து

முத்துத் தாமம் முறையொடு நாற்றுமின்

விழவுமலி மூதூர்வீதியும், மன்றமும்

பழமணல் மாற்றுமின் புதுமணல் பரப்புமின்

கதலிகைக் கொடியும் காழூன்று விலோதமும்

மதலை மாடமும், வாயிலும் சேர்த்துமின்"[46]

என்பதில் வீதிகளில் தோரணங்கள் கட்டி அழகுபடுத்தப்பட்டுள்ளன. கோயில் வாயில்களில் பூரண கும்பங்களையும் பொற்பாலிகைகளையும் பாவை விளக்குகளையும் மற்றும் பல மங்கலப் பொருட்களையும் வைக்க வேண்டும் என்று வள்ளுவன் முரசு அறைகின்றான். காய்குலைக் கமுகு, வாழை, வஞ்சி, பூக்கொடி வல்லியுடன், கரும்பும் நட்டு வைக்க வேண்டும் என்கின்றனர். விழாக் கொண்டாடப்படும் நகர வீதிகளில் பழைய மணலை மாற்றிவிட்டுப் புதுமணல் பரப்புங்கள் என்று முரசறைவோன், விழாவில் மக்கள் மேற்கொள்ள வேண்டிய பணிகள் குறித்து விழாவறைகின்றான். இன்றும் திருக்கோயில்களில் கொண்டாடப்படும் விழாக்களின் போது பச்சைப் பந்தலிடுவதையும் குலைக் கமுகு, வாழை முதலியவற்றை நட்டு, மாவிலைத் தோரணம் கட்டிக் கோயிலை அலங்கரிப்பதைக் காணலாம். கோயில் வளாகங்களில் பழைய மணலை மாற்றிப் புதிய மணலைப் பரப்புகின்றனர்.

வளர்பிறை மற்றும் முழுமதி நாட்களில் பழந்தமிழர்கள் விழாக் கொண்டாடியது பற்றி நற்றிணையும்[47] சிலப்பதிகாரமும்[48] குறிப்பிடுகின்றன. இன்றும் திருக்கோயில்களில் கொண்டாடப்பெறும் விழாக்கள் வளர்பிறையிலும் முழுநிலவு நாளிலும் கொண்டாடப்பட்டு வருகின்றன.

விழாக்கள் மக்கள் விழைந்து கொண்டாடியதால், 'விழைவு' என்றும் பின்னர் 'விழவு' என்றும் மாறி இன்று விழா என்று அழைக்கப் பெறுகிறது.

பண்டிகை, உற்சவம் ஆகிய சொற்களும் திருவிழாவினைக் குறிக்கின்றது. எனினும் "குமார தந்திரம் முதலான ஆகமங்களில் உற்சவம் என்ற சொல்லின் பொருள் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. 'உத்' என்பது படைப்பையும் 'ச' என்பது காத்தலையும் 'வ' என்பது அழித்தலையும் குறிக்கும். இவற்றுள் மறைத்தல், அருளல் என்பதும் அடங்கும். ஆகவே உற்சவம் என்பது இறைவனின் ஐந்தொழிலைக் குறிக்கின்றது"[49] என்கிறார் எஸ்.பி. சபாரத்தினம்.

## திருவிழாத்தத்துவம்

திருக்கோயில்களில் அமைந்திருக்கும் இறைவனுக்கு நாள்தோறும் செய்யப்பெறும் பூசை 'நித்தியம்' என்றும் விழாக்காலங்களில் செய்யப்படும் பூசை

‘நைமித்யம்’ என்றும் அழைக்கப்படுகின்றன. நித்தியப் பூசையில் ஏதேனும் குறைபாடுகள் இருந்தால் அவை நைமித்ய பூசையில் சரி செய்யப்படுகிறது. இப்பூசையின் மூலம் இறைவன் மனம் குளிர்ந்து மக்களின் எண்ணங்களை நிறைவு செய்கின்றான் என்பது மக்களின் நம்பிக்கை. எனவே மக்கள் இறைவனுக்குத் திருவிழா எடுத்து வழிபடுகின்றனர். இறைவன் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் எனும் ஐந்தொழில்களைப் புரிகின்றான். இவ்வைந்து தொழில்களும் பத்து முதல் நாற்பத்தெட்டு நாட்கள் வரை திருவிழாக்காலங்களில் நடைபெறுகின்றன.

இறைவனுக்குரிய ஐந்தொழில்களும் திருவிழாக்களில் அமைந்திருத்தலை “மண் எடுத்தல், முளையிடுதல், கொடியேற்றம் என்பவை படைத்தல் தொழிலையும் வாகனங்கள், யாகம், பலியிடுதல் முதலியன காத்தல் தொழிலையும் தேர்த்திருவிழா, பாரிவேட்டை முதலியன அழித்தல் தொழிலையும் மௌனமாக நடத்தும் விழா மறைத்தல் தொழிலையும் மட்டையடி. திருவூடல் போன்றவை அருளல் தொழிலையும் குறிக்கின்றது”[50] என்பர் ஆறுமுகநாவலர். இப்பொதுவான விழாத் தத்துவமானது சிவபெருமானுக்குரிய விழாவின் தத்துவமாக விளங்குகின்றது.

## ஆகமங்கள்

கோயில்களில் தெய்வ உருவங்களைப் பிரதிட்டை செய்தல், வேள்வியும் விழாவும் எடுத்தல் முதலிய முறைகளைக் குறிக்கும் நூல்களுக்கு ஆகம நூல்கள் என்று பெயர். சைவ, வைணவ ஆகமங்களின் அடிப்படைத் தத்துவம் ஒன்றாகும். மனிதன் தான் உடுப்பதும் உண்பதும் கேட்பதும் காண்பதும் களிப்பதும் இறைவனின் அருளால் எனக் கருதினான். எனவே அவையனைத்தையும் இறைவனுக்குப் படைத்த பின்னரே தான் கொண்டான். இதுவே ஆகமங்களின் அடிப்படைத் தத்துவமாகும். ஆண்டுதோறும் பல்வேறு விழாக்களை எடுக்கும் முறையையும் ஆகம நூல்கள் குறிக்கின்றன.

## சிவாகமங்கள்

முழுமுதற் கடவுளான சிவனால் அருளிச் செய்யப்பட்டது சைவமாகும். சிவனால் ஆக்கப்பட்டதால் அப்பெயர் பெற்றது. சிவபிரானால் அருளிச் செய்யப்பட்ட முதல் நூல் சிவாகமங்கள். ஆகமம் ஆன்மாக்கள் மோட்சம் அடையச் செய்விப்பது என்று பொருள்படும். இவை சிவனால் தன்னுடைய பஞ்சமுகங்களிலிருந்து தோற்றுவிக்கப்பட்டன. சிவாகமங்களைச் சிவபிரான் உமாதேவியார் கேட்கக் கூறியருளியதாகச் சேக்கிழார் கூறுவர்.

**“எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர்தம் விரும்பும்**

**உண்மையாவது பூசனை எனவுரைத்தருள**

**அண்ணவா் தமை அருச்சனை புரிய ஆதரித்தாள்**

**பெண்ணின் நல்லவளாகிய பெருந்தவக் கொழுந்து"**[51]

இவ்வாகமம் நான்கு பாதங்கள் உடையன. அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பதாகும். சிவாலயங்களில் நிகழும் கிரியைகளையும் ஆகமங்களே விரிவாகக் கூறுகின்றன.

திருக்கோயிலுக்கு நிலத்தைத் தோ்ந்தெடுப்பதிலிருந்து மண்டலாபிடேகம் வரையிலுள்ள கிரியைகளுக்கெல்லாம் ஆகமமே பிரதானம். அதன் பிறகு நிகழும் நித்திய, நைமித்திய பூசைகளுக்கும் ஆகமமே கருவி நூலாகும்.

சிவ தீட்சைபெற்றும் சிவாச்சாரியாா்களாக அபிடேகம் செய்விக்கப்பெற்றும் பணிபுரியும் அா்ச்சகா்களை **"**ஆகமசீலா்கள்**"**[52] என்று சுந்தரமூா்த்திநாயனாா் அழைத்துச் சிறப்பிக்கிறாா்.

ஆகமநெறியில் அமைக்கப்பட்ட சிவாலயங்களில் சென்று வழிபாடுகளைச் செய்வதால், இரு வினைகள் அகலும். மக்களேயன்றி தேவா்களும் மண்ணுலகிற்கு வந்து சிவபிரானை வழிபட்டு வினைகளை அகற்றினா் என்பது மக்கள் நம்பிக்கையாகும்.

### சிவனை வழிபடும் முறைகள்

**"நிலைபெறுமாறு எண்ணிதியேல் நெஞ்சே நீவா**
**நித்தமும் எம்பிரானுடைய கோயில் புக்குப்**
**புலா்வதன் முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்**
**பூமாலை புனைந்தேற்றிப் புகழ்ந்துபாடித்**
**தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச்**
**சங்கரா சயபோற்றி போற்றி என்றும்**
**அலைபுனல் சோ் செஞ்சமையெம் ஆதி என்றும்**
**ஆரூரா என்றென்றும் அரற்றா நில்லே"**[53]

என்று ஆலயவழிபாட்டை வலியுறுத்தி திருநாவுக்கரசா் குறிப்பிடுகின்றாா்.

சிவாலய வழிபாட்டிற்குச் செல்லும் முன் நீராடி, தூயதாய் ஆடை அணிந்து, கையுறையாகப் பூவும் நீரும் பொருளும் கொண்டு சென்று, திருச்சுற்றை வலம் வந்து, கொடிமரம், பலிபீடம், விடையேறு (நந்தி) ஆகியன வணங்கி, சிவலிங்கம் வீற்றிருக்கும் கருவறையை அணுகி விழுந்து வணங்கிக் கையுறைப் பொருளைச் சமா்ப்பிக்க வேண்டும். சிவ வழிபாட்டிற்குப் பிறகு அம்மன் சன்னதியை வலம் வந்து கருவறைத்

திருச்சுற்றில் தட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், விநாயகர், சுப்பிரமணியர், துர்க்கை, சண்டிகேசுவரர் ஆகியோரை வணங்கி நவக்கிரகங்களையும் வலமாக வந்து பிற தெய்வக் கருவறைகளையும் கண்டு வணங்கி, மீண்டும் பலிபீடம், விடையேறு ஆகியன கண்டு பஞ்சாங்கமாகவோ, அட்டாங்கமாகவோ நிலம் தோய விழுந்து மண்டபத்தில் சிறிது நேரம் அமர்ந்து சிவனை நினைந்து எழுந்து புறப்பட்டுச் செல்ல வேண்டும். சிவாகமங்கள் 28 வகைப்படும். இதில் பெரும்பாலான கோயில்களில் காமிகம், காரணம், மகுடம் என்ற ஆகமங்களே நடைமுறையில் உள்ளன. ஆகமம் என்ற சொல் 'இறைப்பேரின்பத்தை அடையச் செய்யும் நூல்' எனப்படுகிறது.

**"மன்னு மாமலை மகேந்திரமதனில்**

**சொன்ன ஆகமம் தோற்றுவித்தருளியும்"**[54]

என்று மாணிக்கவாசகர் குறிப்பிடுகிறார்.

**"அண்டர் தமக்கு ஆகமநூல் மொழிம் எம்மாதியை"**[55]

என்று தேவாரம் எடுத்துரைக்கின்றது. ஆகமங்களை உமாதேவியருக்கு உரைத்ததை,

**"இணையிலா இடைமா மருதில் எழு**

**பணையிலாகமம் சொல்லும் தன் பங்கிற்கே"**[56]

என்று திருநாவுக்கரசர் கூறுவர்.

"ஆகமம் என்பது சமய நடவடிக்கைகளை வைதீக முறையில் புனிதப்படுத்துகின்ற ஒரு மொழிதல் அல்லது சொல்லாடல் (Discourse) ஆகும். தெய்வ விக்கிரகங்களைச் செய்வதற்கும் அவற்றை உரிய இடத்தில் உரிய முறையில் வைப்பதற்கும் கோயிலைக் கட்டுவதற்கும் மற்றும் வைதீக மரபில் சடங்குகள், பூசனைகள் செய்வதற்கும் ஆசாரங்களை மேற்கொள்வதற்கும் மற்றும் ஊர்களை, வாழிடங்களைத் திட்டமிடுவதற்கும் இந்த ஆகமங்கள் முன்னிறுத்தப்படுகின்றன."[57] பெரிய புராணத்தில் பல இடங்களில் ஆகமம் என்ற சொல் காணப்படுகிறது.

கோயில்கள் எந்த ஆகமத்தை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளதோ அதன் அடிப்படையிலேயே நித்திய, நைமித்திய, காமிக பூசைகள் நடைபெறவேண்டும் என்பது ஆகமவிதி. எனவே அதன் அடிப்படையிலேயே திருவிழாக்கள் கொண்டாடப்படுகின்றன.

ஆதிசொக்கநாதர் கோயில், புட்டுசொக்கநாதர் கோயில் ஆகிய இருகோயில்களிலும் காரண, காமிக ஆகமமுறைப்படியும் திருஏடகநாதர் கோயிலில் காமிக ஆகமமுறைப்படியும் பூசைகள் நடைபெறுகின்றன.

## திருவிழாக்களின் வகைகள்

திருவிழாக்கள் என்பது பழமையையும் சமய பெரியவர்களின் வாழ்வியல் நிகழ்வுகளையும் புராண நிகழ்வுகளையும் இறைவனோடு தொடர்புடைய நிகழ்வுகளையும் குறிக்கின்றது.

## சிவ வழிபாட்டு முறைகள்

திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவனை வழிபடும் முறைகள் அபிடேகம், அலங்காரம், அர்ச்சனை, நைவேத்தியம், ஆராதனை, உற்சவம் எனப்படும்.

## அபிடேகம்

அபிடேகம் தொடங்கும் போது முதலில் நறுமணப் பொருள் கலந்த எண்ணெய்யை இறைவனின் திருமேனியில் பூசும்போது மேனி முழுவதும் படுமாறு கையால் அள்ளி எடுத்துப் பூச வேண்டும். பின் அந்த எண்ணெய் பசப்பு நீங்குமாறு திருமஞ்சனப்பொடி கலந்த நீரால் அபிடேகம் செய்ய வேண்டும். அப்பொழுது திருமேனியைத் தேய்த்து கழுவுமாறு அபிடேகம் செய்ய வேண்டும். ஒவ்வொரு திரவியமாக அபிடேகம் செய்ததும் பூ சாத்தி. பழம், தாம்பூலம் நிவேதனமாக வைத்துக் கர்ப்பூர ஆரத்தி செய்யவேண்டும். பின்னரே அடுத்த அபிடேகத்தைத் தொடங்க வேண்டும் என்பது அபிடேக முறையாகும். பூசைகளில் அபிடேகம் என்பதே மிகச் சிறப்பானதாகும்.

பக்தர்கள் பால், தயிர், வெண்ணெய், நெய், மோர் முதலானவற்றைக் கொண்டு சிவபெருமானுக்குத் திருமுழுக்காட்டலாம் என்று திருமூலர் கூறுகின்றார்.

**"ஆனைந்தும் ஆட்டி அமரர் களைத்தொழத்**
**தானந்த மில்லாத் தலைவன் அருளது**
**தேனுந்து மாமலர் உள்ளே தெளிந்ததோர்**
**பானரங் குணமும் படைத்து நின்றானே"**[58]

மலருக்குள் மணம் நிறைந்திருப்பது போலச் சிவபெருமான் தோன்றி அருள்புரிவான் என்கிறார் திருமூலர்.

## அபிடேகப் பொருள்களும் அதன் பலன்களும்

இறைவனின் அபிடேகத்திற்குப் பயன்படுத்துகின்ற பொருள்களுக்கேற்பப் பலன்கள் உண்டாகின்றன.

| | |
|---|---|
| நீர் | - சாந்தி உண்டாகும் |
| வாசனைத் திரவியம் | - ஆயுள் வலிமை |
| சந்தனம் | - செல்வம் உண்டாகும். திருமகள் அருள் கிடைக்கும் |
| பால் | - ஆயுள் விருத்தி |
| தயிர் | - புத்திர விருத்தி |
| நெய் | - மோட்சம் உண்டாகும் |
| தேன் | - குரல் வளம், சுகம் |
| சர்க்கரை | - பகை அழித்தல் |
| வாழைப்பழம் | - பயிர் விருத்தி |
| பலாப்பழம் | - உலக வசியம் |
| மாம்பழம் | - அனைத்துப் பலனும் கிடைக்கும் |
| மாதுளம் பழம் | - பகை நீக்கம், கோபம் அழிவு |
| எலுமிச்சை | - மருத்துவ நிவாரணம் |
| இளநீர் | - அரச பதவி கிட்டும் |
| கோரோசனை | - தீர்க்காயுள் |
| பச்சைக் கற்பூரம் | - அச்சம் நீங்கும் |
| பன்னீர் | - ஆரோக்கியம் உண்டாகும் |
| சந்தனம் | - மேலானப்பதவி |
| அன்னம் | - ஆயுள், ஆரோக்கியம், விருத்தியுண்டாகும் அரசவாழ்வுதரும் |
| திருமஞ்சனப்பொடி | - கடன் நீங்கும் நோய் நீங்கும் |
| திருநீறு | - மங்களம் உண்டாகும் |
| நல்லெண்ணெய் | - சுகம் தரும் |
| பஞ்சகவ்யம் | - பாவத்தைப் போக்கும் |
| பஞ்சாமிர்தம் | - செல்வம் தரும் |
| கருப்பஞ்சாறு | - உடல்நலம் தரும் |

**அருச்சனை**

பக்தர்கள் கோயில்களில் தங்கள் குடும்பத்தினர் பெயர்களுக்கு அருச்சனை செய்து வழிபடுவதைப் பெரிதும் விரும்புகின்றனர். மலர் தூவி, இறைவன் பெயர்களை

ஒவ்வொன்றாகக் கூறி அருச்சிக்கும் முறையைத் தமிழ்நாட்டிலுள்ள பெரும்பாலான கோயில்களில் காணலாம்.

அருச்சிக்கும் போது ‘சிவாய நம’ என்று இறைவன் பெயர்களைக் கூறுதல் வேண்டும். அருச்சனையின் போது பக்தன் இறைவனை ஒருவழிபட்டு வழிபடுகின்றான். இதுதான் வழிபாட்டில் மிகச்சிறந்தது என்கிறது ஆதிசங்கரர் இயற்றிய சிவானந்தலஹரி, “அருச்சனையில் ஈடுபடுபவனின் மனம் இறைவனின் பாதத் தாமரையில் படிகின்றது. வாய்அவன் புகழ் பாடுவதில் ஈடுபடுகின்றது. கரங்கள் இரண்டும் அவனை அருச்சித்தலில் தொழில்படுகின்றன. அவன் புகழ் கூறும் ஒவ்வொரு நாமமும் காதில் விழும்போது காது அதைக் கேட்டுப் பெரும்பயன் எய்துகின்றது. அவனைத் தியானிப்பதில் புத்தி செல்கின்றது. இரு கண்களும் அவன் திருக்கோலத்தின் வைபவத்தினால் ஈர்ப்புண்டு அதன் வயமாகி அசைவற்று நிற்கும்.”[59]

அருச்சனையின் இறுதியில் வேதமந்திரங்கள் கூறி மலர்களால் அருச்சனை செய்தல் மரபாகும். பூக்களைக் கொண்டு இறைவனை வழிபடும் முறைகளிலிருந்துதான் ‘பூசை’ என்ற சொல் உண்டாயிற்று.

### மலர்கள்

ஒவ்வொரு காலப் பூசைக்கும் உரிய பூக்களை ஆகம நூல்கள் விதித்துள்ளன. நறுமணம் இல்லாதவை, அதிகமான நறுமணமுள்ளவை, புழு தீண்டியவை, வாடியவை, தகாதவர்கள் தீண்டியவை, அசுத்தமான பாத்திரத்தில் சேர்க்கப்பட்டவை, பூமியில் விழுந்தவை ஆகிய மலர்கள் பூசைக்கு விலக்கப்பட்டவையாகும். மொட்டுகளில் சண்பக மொட்டு தவிரப் பிற மலர்களின் மொட்டுகள் ஆகாது.

### தூபம் (திருப்புகை)

தூபத்தின் சேர் பொருளைக் காரணாகமம் கூறியுள்ளது. சந்தனம் 7 பங்கு, சாம்பிராணி 6 பங்கு, குங்கிலியம் 5 பங்கு, குங்குமப்பூ 4 பங்கு, கோரைக்கிழங்கு 3 பங்கு, அகரு 2 பங்கு, பச்சைக்கற்பூரம் 1 பங்கு சேர்த்துக் கொஞ்சம் நெய்யுடன் கூட்டிப்போடும் தூபத்திற்கு சீதாரிதூபம் என்று பெயர்.

### அருச்சனை முறை

மூன்று கோயில்களிலும் சிவலிங்கத்திற்கு அட்டடோத்திர அருச்சனை. ஆயிரம் திருநாம அருச்சனையும் வில்வஇலை அருச்சனையும் செய்யப்படுகின்றது. பக்தர்கள் திருக்கோயிலில் அருச்சனைக் கட்டணம் செலுத்தி, அருச்சனை செய்கின்றார்கள்.

அருள்மிகு மீனாட்சிஅம்மனுக்கும் அருள்மிகு ஏலவார்குழலி அம்மனுக்கும் அம்மனின் ஆயிரம் திருநாமங்களைக் கூறி அருச்சனை செய்யப்படுகிறது. அப்போது தாமரை, கருங்குவளை, செங்கழுநீர், நெய்தல், பலா, தும்பை, மகிழ், சுரபுன்னை, மல்லிகை, செண்பகம், பாதிரி, செவ்வந்தி போன்ற பல்வேறு வகையான நறுமணமிக்க மலர்கள் கொண்டு பயன் படுத்தப் பெறுகிறது.

## அலங்காரம்

மலர்களாலும் ஆடை அணிகலன்களாலும் இறைவனை அழகு செய்வது அலங்காரம் எனப்படுகிறது. ஆடைகள் பட்டாலும் பஞ்சாலும் ஆனதாக இருக்க வேண்டும். வெண்ணிற ஆடை, மஞ்சள்நிற ஆடை, செந்நிற ஆடை ஆகியவற்றைச் சிவபெருமானுக்கு அணிவிக்கலாம். ஆபரணங்கள் எல்லாம் பொன்னாலும் வெள்ளியாலும் நவரத்தினங்களாலும் அமைக்கப் பட்டவையாக இருக்க வேண்டும். அணியப்படும் பூ மாலைகள் பல வகையாக அமையலாம். ஆரம், சரம், தொங்கல் என மாலைகள் விதவிதமாகக் கட்டி அணிவிக்கலாம். அரும்புகளும் அலர்ந்த மலர்களும் இடையிடையே சேர்த்து மாலை கட்டும்போது சரிகை முதலிய அலங்காரப் பொருள்களில் அழகுபடுத்துவதும் உண்டு.

## நைவேத்தியம் (நிவேதனம்)

நைவேத்தியத்திற்கு அன்னம் சமைத்தற்குரிய இடம் மடைப்பள்ளி எனப்படும். ‘மடுத்தல்’ என்றால் ‘சமைத்தல்’ என்று பொருள். நைவேத்தியத்திற்கு சுத்தஅன்னம் சிவபெருமானுக்குச் சிறப்பு வாய்ந்ததாகும். இதனை ‘சுத்தோதனம்’ என்பர். தயிர்அன்னம், எள்அன்னம், வெண்பொங்கல், சர்க்கரை பொங்கல் போன்றவை படைக்கப்படுகிறது. இக்காலத்தில் புளி அன்னம், எலுமிச்சை அன்னம் போன்றவையும் படைக்கப்படுகிறது. அன்னம் தவிர தாம்பூலம், பழம், தேங்காய் போன்றவையும் நிவேதனப் பொருட்களாகப் படைக்கப்படுகின்றன. தேங்காயைக் குடுமியுடன் உடைத்துப் பின்னர் குடுமி களைந்து நிவேதிக்க வேண்டும். யானையானது விளாம்பழத்தினுடைய சாரத்தை எவ்வாறு உட்கொள்கின்றதோ, அவ்வாறே இறைவனும் மந்திரத்துடன் நிவேதிக்கப்படுகின்ற பொருட்களை ஏற்றுக் கொள்கின்றார். திரைபோட்டு நிவேதனம் செய்ய வேண்டும். திரைபோட்ட பிறகு தரிசனம் கூடாது.

## பிறதெய்வங்களுக்குரிய நிவேதனங்கள்

அம்மனுக்குச் சித்ரா அன்னம் வைத்து நிவேதனம் செய்வது சிறப்பாகும். சித்ரான்னம் என்பது சர்க்கரை அன்னம், தேங்காய் அன்னம், புளி அன்னம், எலுமிச்சை அன்னம், எள் அன்னம், தயிர் அன்னம் என்று பலவகை அன்னங்களைத் தயாரிப்பதாகும். வாழ்க்கையில் மகிழ்ச்சி, கோபம், சுகம், துக்கம் எல்லாம்

கலந்திருக்கும் என்று உணர்த்தவே சித்ரான்னம் செய்யப்படுகின்றது. நவக்கிரகங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு அன்னம் சிறப்பானதாகும்.

| | | |
|---|---|---|
| ஞாயிறு | - | பால் பாயாசம் |
| திங்கள் | - | வெண்பொங்கல் |
| செவ்வாய் | - | எள்ளோரை |
| புதன் | - | புளி அன்னம் |
| குரு (வியாழன்) | - | தயிர் அன்னம் |
| சுக்கிரன் (வெள்ளி) | - | சுத்த அன்னம் |
| சனி | - | எள் அன்னம் |
| ராகு | - | உளுந்து அன்னம் |
| கேது | - | சித்ரான்னம் |

என்று ஆகமங்கள் குறித்தாலும் மூன்று திருக்கோயில்களிலும் இங்ஙனம் படைக்கப் படுவதில்லை. சிவபெருமானுக்குரிய நைவேத்தியமே இவர்களுக்கும் நிவேதிக்கப் பெறுகிறது.

**ஆராதனை**

நைவேத்தியத்திற்குப் பின்னர் தீபாராதனை நடைபெறும். தீபாராதனையின் போது தீப ஒளியில் இறைவனைத் தரிசிக்கும் போது மனம் ஒரு நிலைபடும் என்பது நம்பிக்கை. பலவகையான தீபங்களை இறைவனுக்கு காண்பிக்கும்போது மேளதாளம், மணியொலி, சங்கநாதம் முதலிய ஒலிகள் ஒலிக்கப்படுகிறது. இவை தீயசக்திகளை விரட்டி வழிபடுபவரை மெய்மறக்கச் செய்கின்றது. ஒவ்வொரு வகை தீபமும் ஒவ்வொரு அதிதேவதைகளின் அடையாளமாகும்.

**தீப வகைகளும் அதிதேவதைகளும்**

| | | |
|---|---|---|
| தூபம் | - | அக்கினி |
| மகாதீபம் | - | சிவம் |
| நாகதீபம் | - | கேது |
| மிருகதீபம் | - | விட்ணு |
| கும்பதீபம் | - | ருத்திரன் |
| பஞ்சமுகதீபம் | - | பஞ்சமூர்த்திகள் |
| நட்சத்திரதீபம் | - | இருபத்தேழு நட்சத்திரங்கள் |

| | | |
|---|---|---|
| மேருதீபம் | - | பன்னிரு சூரியா் |
| பதினொரு அடுக்கு | - | பதினொரு ருத்திரா் |
| ஐந்து அடுக்கு | - | பஞ்சமூா்த்திகள் |
| மூன்று அடுக்கு | - | மும்மூா்த்திகள் |
| ஒரு அடுக்கு | - | சிவன் |

இவ்வகைத் தீபங்கள் காட்டப்பட்டபின் சில உபசார சடங்குகள் செய்யப்பெறும். மங்கலப் பொருள்களான கண்ணாடி, குடை, சாமரம், விசிறி, கொடி, ஆலவட்டம் முதலியவை காட்டப்பெறும். இந்த மங்கலப் பொருள்களுக்கும் அதிதேவதைகள் உள்ளனா்.

| | | |
|---|---|---|
| கண்ணாடி | - | சூரியன் |
| குடை | - | சந்திரன் |
| சாமரம் | - | மகாலட்சுமி |
| விசிறி | - | வாயு |
| கொடி | - | அயன்(நான்முகன்) |
| ஆலவட்டம் | - | தேவகன்னியா் |
| திருநீறு | - | சிவன் |
| கற்பூரம் | - | அக்கினிதேவன் |

இவை அனைத்தும் இறைவனுக்குக்காட்டியவுடன் இறுதியில் கற்பூரதீபம் காட்டுவது என்பது கற்பூரம் போன்று எரிந்து எவ்வித மிச்சமும் இல்லாமல் இறைவனுடன் ஒன்றுவதே தீப ஆராதனையின் தத்துவம். தீப ஆராதனையின் முடிவில் எல்லாத் தீபங்களையும் பூரண கும்பத்தில் சமா்ப்பிக்க வேண்டும். இப்பூரண கும்பம் எல்லாத் தீபங்களுக்கும் இருப்பிடமாகும்.

## தூபதீபம்

கிரியாசக்தியின் வடிவம் தூபம். இத்தூபத்தால் ஆராதனை செய்தவா்கள் ஆணவம் அகன்று அறியாமையினின்று நீங்குவாா்கள். ஞான விளக்கமாக இருப்பது தீபம்.

தீபதூபம் காட்டி நிவேதனத்தைப் படைத்து வழிபடுவது வழக்கத்தில் உள்ளது. நிவேதனப் பொருள்களைச் சுற்றித் தூபதீபம் காட்டி இறைவனை ஏற்றுக் கொள்ளச் செய்தல் இதன் தத்துவமாகும்.

தூபக்காலின் முகத்தில் அக்னியும் தண்டத்தில் சிவனும் பாதத்தில் பிரம்மாவும் அதிபதிகளாக உள்ளார்கள். தூபமானது உத்தம, மத்திமம், அதமம் என மூன்று வகைப்படும். அகில், பொடி, குங்கிலியம், சந்தனப் பொடி, கர்ப்பூரப் பொடி, தேன் சேர்த்துத் தூபமிடுவது உத்தம தூபம். குங்கிலியமும் நெய்யும் சேர்த்துத் தூபமிடுவது மத்திமம். குங்கிலியம் மட்டும் வைத்துத் தூபமிடுவது அதமம்.

தீபாராதனைச் செய்யும்போது மூன்று முறை இறைவன் முன்காண்பிக்கப் பெறும். முதல்முறை உலக நலனுக்காகவும் இரண்டாவது முறை அவ்வூர் மக்களின் நலனுக்காகவும் மூன்றாம் முறை ஐம்பெரும் பூதங்களினால் எவ்வித இடையூறும் இல்லாமல் இருப்பதற்காகவும் காண்பிக்கப்படுகிறது.

## உற்சவம்

உற்சவமூர்த்தியை அலங்கரித்து மேளதாளங்களுடன் கோயிலைச் சுற்றியுள்ள வீதிகளில் வீதியுலா வரச் செய்து வழிபடுவது உற்சவம் எனப்படும். சுவாமி வீதிகளில் திருவுலா வருவது மூவுலகங்களையும் காக்கவும் கோயிலுக்கு வந்து வழிபட இயலாதவர்களுக்காகவும் ஆகும். அவர்களெல்லாம் திருவுலாவின் போது சுவாமியை வணங்குதல் வேண்டும். பூசை நடைபெறும் போதும் திருவுலாவின்போதும் சுவாமியை வணங்காமல் இருப்பது இறைவனை இகழ்வதாகும்.

## ஆண்டுவிழாக்கள்

| | ஆதி சொக்கநாதர் | புட்டு சொக்கநாதர் | திருஏடக நாதர் |
|---|---|---|---|
| சித்திரை மாதப் பிறப்பு | ✓ | ✓ | ✓ |
| சித்ரா பவுர்ணமி | - | ✓ | ✓ |
| திருக்கல்யாணம் | - | ✓ | - |
| வைகாசி விசாகம் | ✓ | - | ✓ |
| ஆனித் திருமஞ்சனம் | - | ✓ | ✓ |
| ஆடிப்பூரம் | ✓ | ✓ | ✓ |
| விநாயகர் சதுர்த்தி | ✓ | ✓ | ✓ |
| ஏடு எதிரேறிய திருவிழா | - | - | ✓ |
| புட்டுத் திருவிழா | - | ✓ | - |
| நவராத்திரி | ✓ | ✓ | ✓ |
| ஐப்பசி அன்னாபிடேகம் | ✓ | ✓ | ✓ |

| | | | |
|---|---|---|---|
| கார்த்திகை தீபம் | ✓ | ✓ | ✓ |
| கந்த சட்டித் திருவிழா | ✓ | - | ✓ |
| முருகன் திருக்கல்யாணம் | - | - | ✓ |
| சங்காபிடேகம் | ✓ | ✓ | ✓ |
| திருவாதிரை | ✓ | ✓ | ✓ |
| திருப்பள்ளி எழுச்சி | | ✓ | ✓ |
| அட்டமி பிரதட்சணம் | - | - | ✓ |
| தைப்பூசம் | - | - | ✓ |
| மகாசிவராத்திரி | ✓ | ✓ | ✓ |
| பங்குனி உத்திரம் | - | - | ✓ |

சித்திரை வருடப்பிறப்பு

தமிழர்களது காலக்கணிப்பு முறையின்படி ஒரு ஆண்டுக்குரிய பன்னிரெண்டு மாதங்களில் சித்திரை முதலாவது மாதமாகக் கருதப்படுகிறது. தமிழ்மாதங்கள் சூரிய மாதங்கள் எனப்படுகின்ற சூரியனுடைய இயக்கத்தை அடிப்படையாக வைத்தே கணிக்கப்படுகின்றன.

ஒன்பது கோள்களைக் கொண்டே உலக இயக்கம் நடைபெறுகிறது. நவகோள்களில் முதன்மையானது சூரியன். இந்தச் சூரியன் சித்திரை மாதத்தில் ராசிகளின் முதல் ராசியான மேசத்தில் தொடங்கி, பங்குனி வரை பன்னிரெண்டு ராசிகளுக்கும் பயணித்து மறுபடியும் சித்திரையில் மேசராசியில் தொடங்குகிறது. இதுவே சித்திரை வருடப்பிறப்பு ஆகும். இதுவே புதிய ஆண்டின் தொடக்கம் ஆகும்.

இதனால் சித்திரை மாதம் முதல் நாளை, உலகத் தமிழர்கள் அனைவரும் தமிழ் வருடப் பிறப்பாகக் கொண்டாடுகின்றனர். சித்திரை மாதம் பிறந்ததும் இளவேனில் காலம் எனப்படும், வசந்த காலம் தொடங்குகிறது. வசந்த காலத்தில் பூக்கள் பூத்துக் குலுங்குகிறது. மாமரத்திலும் வேப்பமரத்திலும் பூக்கள் பூத்துக்குலுங்குவது மனித வாழ்க்கை இனிப்பும் கசப்பும் கலந்தே இருக்கும் என்பதைக் காட்டுகிறது. வருடப்பிறப்பு அன்று மக்கள் தங்கள் உணவில் இனிப்பும் கசப்பு மற்றும் அறுஞ்சுவைகளையும் சேர்த்துக் கொள்வர்.

சித்திரை வருடப்பிறப்பன்று மூன்று கோயில்களிலும் சிவபெருமானுக்கும் அம்மனுக்கும் காலையில் சிறப்புப்பூசை செய்யப்படுகிறது. திருஏடகநாதர் கோயிலில் அன்று கொடிமரத்துக்கும் அபிடேகம் நடத்தப்படுகிறது. அன்று மாலையில் ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் பஞ்சாங்கம் வாசிக்கப்படுகிறது. இதன்மூலம் அந்த ஆண்டில், நவக்கிரக ஆதிக்கத்தால் உலகத்துக்கும் மக்களுக்கும்

நிகழவிருக்கும் பலன்களை அறிந்து கொள்ளலாம். அந்த வருடம் நடைபெறவிருக்கும் திருவிழாக்களையும் மக்கள் அறிந்து கொள்கின்றனர்.

**சித்ராபவுர்ணமி**

அசுவினி முதல் ரேவதி வரையிலான இருபத்தேழு நட்சத்திரங்களில் பதினான்காவதாக வரும் சித்திரை நட்சத்திரம், சித்திரை மாதம் பவுர்ணமி தினத்துடன் கூடிவரும் தினம் சித்ராபவுர்ணமி என்று அழைக்கப்படுகிறது. இத்தினத்தில் தான் சிவபெருமானால் சித்திரத்தில் உருவாக்கப்பட்ட சித்திரகுப்தன் தோன்றினார் என்று கூறப்படுகிறது. சித்திரா பவுர்ணமி அன்று சிவாலயங்களில் சிறப்புப்பூசை நடைபெறுகிறது.

புட்டுசொக்கநாதர் கோயிலில் அன்றைய தினம் சிவனுக்குச் சிறப்பு அபிடேக ஆராதனையும் மாலையில் அம்மனுக்கு விளக்குப் பூசையும் நடைபெறுகிறது.

திருஏடகநாதர் கோயிலில் பஞ்சமூர்த்திகள் எழுந்தருளி காலை, மாலை என இரு வேளைகளிலும் வீதியுலா வருவர்.

**திருக்கல்யாண விழா**

இறைவன் நித்திய கல்யாண ரூபம் ஆவார். நமக்கு ஓர் ஆண்டு என்பது தேவர்களுக்கு ஒருநாள் ஆகும். ஆகையால் நாம் ஆண்டுக்கொரு முறை திருக்கல்யாணம் நடத்துவது தினமும் நடத்துவதாகக் கருதப்படுகிறது. தினமும் நடப்பதற்குக் காரணம் சிவனிடமிருந்து சக்தி பிரியாமல் இருந்து அம்மை அப்பராகி போக வடிவம் கொண்டு அருள் செய்வதால், நம் நன்றியைக் காட்டுவதற்காகவேயாகும்.

இறைவன் போகி, யோகி, வேகி என மூன்று வடிவங்களிலிருந்து மக்களுக்கு அருள்புரிகின்றான். இதனை,

> **"போகியாய் இருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்**
> **யோகியா யோக முத்தி உதவுதல் அதுவும் ஓரார்**
> **வேதி ஆனாற்போல் செய்த வினையினை வீட்டல் ஓரார்**
> **ஊகியா மூடரெல்லாம் உடம்பரின் ஒருவன் என்பர்"**[60]

என்ற சிவஞான சித்தியார் பாடல் விளக்கும்.

இறைவன் போகவடிவில் வாழாமல் போனால் உலக உயிர்கள் அனைத்தும் போகியாய் வாழ முடியாது. எனவே மக்களுக்கு போக வாழ்க்கையை உணர்த்துவதன் பொருட்டு இறைவனின் திருக்கல்யாண விழா நடைபெறுகிறது.

திருக்கோயில்களில் திருக்கல்யாண விழா நிகழ்ச்சி, திருவிழா நாட்களில் இருந்து மாறுபட்டது. இது நடைமுறைகளை அனுசரித்தும் ஆகம முறைப்படியும் நடைபெறும்.

புட்டுசொக்கநாதர் கோயிலில் சித்திரைமாதம் வளர்பிறை துவாதசி அன்று மாலையில் சொக்கநாதருக்கும் மீனாட்சிஅம்மனுக்கும் சுவாமிக்கும் மாலைமாற்றி சொக்கநாதர் சார்பில் அம்மனுக்கு மாங்கல்ய தானம் செய்யப்படுகிறது. அன்று காலையில் மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் திருக்கல்யாணம் நடைபெறுகிறது. மற்ற இருகோயில்களில் கல்யாண நிகழ்வு சிவனுக்கு இல்லை.

திருஏடகநாதர் கோயிலில் கந்தசட்டி விழாவின் ஆறாம் நாள் காலையில் முருகனுக்குத் திருக்கல்யாணம் நடைபெறுகிறது. மாலையில் சூரசம்காரம் நடைபெறுகிறது.

## வைகாசி விசாகம்

வைகாசி மாதத்தில் பூரணச்சந்திரனும் விசாக நட்சத்திரமும் கூடிவரும் நாள் வைகாசி விசாகம் எனப்படுகிறது.

சூரபத்மனால் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் பெரும் துன்பம் ஏற்பட்டது. சூரபத்மனை அடக்க சிவனிடம் சென்று அனைவரும் முறையிட்டனர். உடனே சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து ஒரு தீப்பொறி ஆறு கூறுகளாகத் தோன்றிச் சரவணப்பொய்கையை அடைந்தது. அப்பொறிகள் ஆறு குழந்தைகளாக அவதரித்தன. இத்தினமே விசாகநாளாகும். முருகப்பெருமான் அவதாரம் செய்தநாள் வைகாசி விசாக தினமாகும். ஆகவே இத்தினத்தை முருகன் திருத்தலங்களிலும் சிவத்தலங்களிலும் மிகவும் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர்.

ஆதிசொக்கநாதர் கோயிலில் காலையில் முருகனுக்குச் சிறப்பு அபிடேகம், ஆராதனை நிகழ்கிறது. மாலையில் மலர் அலங்காரம் செய்த பல்லக்கில் முருகன், வள்ளி தெய்வானையுடன் வீதியுலா வருகிறார். திருஏடகநாதர் கோயிலில் பஞ்சமூர்த்திகள் (சிவன்,அம்மன்,விநாயகர், முருகன்,சண்டிகேசுவர்) வைகை ஆற்றில் எழுந்தருளி தீர்த்தவாரி நடைபெறுகிறது. அதனுடன் பக்தர்களும் பால்குடம் எடுக்கிறார்கள். மாலையில் பஞ்சமூர்த்திகள் வீதியுலா நடக்கிறது.

## ஆனித் திருமஞ்சனம்

ஆனித் திருமஞ்சனம் என்பது சிவாலயங்களில் நடராசருக்கு ஆனி மாதத்தில் அபிடேகம் செய்யப்படும் நாளாகும். ஆனி மாதம் உத்திர நட்சத்திரத்தன்று இது கொண்டாடப்படுகிறது. திருமஞ்சனம் எனும் சொல்லுக்கு திருமேனிக்கு நறுமண

எண்ணெய் பூசுதல் என்று பொருள். நடராசருக்கு ஆண்டுக்கு ஆறுமுறை சிறப்பு அபிடேகம் நடைபெறும். மூன்று நட்சத்திரத்திலும் (சித்திரை- திருவோணம், ஆனி- உத்திரம், மார்கழி- திருவாதிரை) மூன்று கிருஷ்ணபட்ச சதுர்த்தி தினங்களிலும் (ஆவணி, புரட்டாசி, மாசி) நடைபெறும்.

சிவாலயங்களில் நடராசருக்கு நடத்தப்படும் அபிடேக விழாக்களில் சிறப்பான விழாக்கள் இரண்டு. ஒன்று மார்கழித் திருவாதிரை மற்றொன்று ஆனி உத்திர நட்சத்திரத்தன்று நடக்கும் திருமஞ்சனம். இவ்விரு நாட்களில் மட்டுமே அதிகாலையில் அபிடேகம் நடக்கும். மற்ற நாட்களில் மாலை நேரத்தில் அபிடேகம் நடத்தப்படும். ஆனித் திருமஞ்சன விழா சிதம்பரத்தில் கொண்டாடப்படுகிறது. ஆனித் திருமஞ்சனவிழாவை சிதம்பரத்தில் ஆரம்பித்து வைத்தவர் பதஞ்சலி மகரிசி.

புட்டுசொக்கநாதர் திருக்கோயிலிலும் திருஏடகநாதர் திருக்கோயிலிலும் காலை ஆறுமணி அளவில் நடராசருக்கு எண்ணெய் சாத்தப்பட்டு அபிடேக ஆராதனை நடைபெறுகிறது.

### ஆடிப்பூரவிழா

ஆடி மாதத்தில் வரும் பூரநட்சத்திரத்தன்று பார்வதி தேவி பூப்படைந்த தினமாகக் கருதப்படுகிறது. அன்றுதான் ஆண்டாள் அவதரித்து துளசி மாடத்தினருகில் பெரியாழ்வாரால் கண்டெடுக்கப்பட்டார். உமாதேவி பிறந்த தினமாகவும் கருதப்படுகிறது. இதனால் இந்நாள் சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. அன்று அம்மனுக்கு சேலை, தாம்பூலம், வளையல், குங்குமச்சிமிழ், சீப்பு, கண்ணாடி, மஞ்சள் போன்றவை முறத்தில் வைக்கப்படுகிறது. நிறைநாழி வைத்து அதன்மேல் தாம்பூலம் வைக்கப்படுகிறது. புட்டு, தீபம் போன்றவை வைத்து அம்மனுக்கு சிறப்புப் பூசை (பூப்புனித நீராட்டு விழா) செய்யப்படுகிறது.

மூன்று கோயில்களிலும் ஆடிப்பூரம் சிறப்பாக நடைபெறுகிறது. காலையில் அம்மனுக்கு சிறப்பு அபிடேக ஆராதனையும் மாலை ஆறுமணி அளவில் புட்டு, நிறைநாழி வைத்து தாம்பூலம், வளையல் போன்ற மங்களகரமான பொருள்கள் வைத்து பூசை நடைபெறுகிறது. புட்டுசொக்கநாதர் கோயிலில் அம்மனுக்கு வளைகாப்பு நடத்தப்படுகிறது. ஊஞ்சல் வைபவமும் நடைபெறுகிறது. ஆடிப்பூர விழா மொத்தத்தில் அம்மனுக்குரிய சிறப்பு நாளாகும். அன்று அம்மனுக்குச் சந்தனக்காப்பும் நடைபெறுகிறது.

### விநாயகர் சதுர்த்தி

ஆவணி மாதம் அமாவாசை முடிந்த நான்காம் நாள் சுக்கிலபட்ச சதுர்த்தி அன்று விநாயகர் சதுர்த்தி விழா கொண்டாடப்படுகிறது. இந்நாளில் விநாயகர்

அவதரித்தார் என்ற கூறப்படுகிறது. அன்று அனைத்து விநாயகர் ஆலயங்களிலும் சிவாலயங்களிலும் வீடுகளிலும் இவ்விழா கொண்டாடப்படுகிறது. இந்நாளில் மஞ்சள், சந்தனம், களிமண், சாணம் ஆகிய பொருள்களில் விநாயகர் உருவம் செய்து வழிபடுகின்றனர். விநாயகருக்கு அன்று ஆலயங்களில் சிறப்பு அபிடேக, அலங்காரம், தீபாராதனை நடைபெறுகிறது. மூன்று கோயில்களிலும் விநாயகர் சதுர்த்தி விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

## புட்டுத்திருவிழா

புட்டுசொக்கநாதர் கோயிலில் ஆவணிமாதம் பூராட நட்சத்திரம், தனுர் லக்கணத்தில் மதியம் புட்டுத்திருவிழா ஆரம்பமாகிறது. இத்திருவிழா ஒருநாள் திருவிழாவாகும். இதற்கு மீனாட்சி அம்மன் கோயிலிலிருந்து சிவபெருமான் பிரியாவிடையுடனும் திருவாதவூரிலிருந்து மாணிக்கவாசகரும் திருப்பரங்குன்றத்திலிருந்து முருகன், வள்ளி, தெய்வானையுடன் வந்து இங்கு எழுந்தருள் செய்வார்கள். இதனால் மீனாட்சிஅம்மன் கோயில் மற்றும் திருப்பரங்குன்றத்தில் அந்நேரத்தில் நடை சாத்தப்படும்.

புட்டுசொக்கநாதர் கோயில் அருகில் உள்ள ஆற்றங்கரை ஓரத்தில் அமைந்த முப்பத்தாறுகால் மண்டபத்தில் இறைப்படிமங்கள் வந்து தங்கும். மீனாட்சிஅம்மன் கோயில் பட்டர்கள் கூலியாள் மற்றும் மன்னர் வேடமும் புட்டுசொக்கநாதர் பட்டர் வந்திக்கிழவி வேடமும் பூணுவர். அதன் அருகில் அமைந்துள்ள சிவலிங்கத்துடன் கூடிய மேடை மீது குளம் போன்ற அமைப்பு ஆறாகக் கருதப்பட்டு அங்கு வைகை ஆறு கரை அடைக்கும் நிகழ்வு நடைபெறுகிறது. பின்பு ஒவ்வொரு மண்டகப்படியாக(இறைவன் பக்தர்களுக்கு காட்சி கொடுக்குமிடம்) வந்து தங்கிச் சிவபெருமான் மக்களுக்குக் காட்சியளிப்பார்.

பின்பு மாலை ஆறு மணி அளவில் 36 கால் மண்டபத்தில் வந்திக்கிழவிக்கும் மாணிக்கவாசகருக்கும் மோட்சம் கொடுக்கும் நிகழ்ச்சி நடைபெறும். அதன் பின் சிவபெருமான், முருகப்பெருமான், மாணிக்கவாசகர் ஆகியோர் புறப்பட்டுச் சென்று அவரவர் கோயிலை அடைவர். புட்டுக்கு மண்சுமக்கும் நிகழ்ச்சியை நினைவுபடுத்தும் விதமாக இக்கோயிலில் வருடாவருடம் இத்திருவிழா நடைபெறுகிறது.

இந்நிகழ்வின் நிறைவாக புட்டுப்பிரசாதம் மக்களுக்கு வழங்கப்படுகிறது. இத்தலத்தில் புட்டுக்கு மண்சுமந்தலீலை நடைபெற்றதற்கு ஆதாரமாக இத்திருவிழாவும் வந்திக்குத் தனி விமானத்துடன் கூடிய தனிச் சன்னதியும் அமைந்திருப்பதும் சான்றாகும்.

## ஏட்டுத் திருவிழா

திருஏடகநாதர் கோயிலில், திருஞானசம்பந்தர் ஆற்றிலிட்ட ஏடு வைகை ஆற்றில் அதன் போக்கில்(மேற்கே) செல்லாமல் எதிரே(கிழக்காக) சென்று திருவேடகம் என்னும் ஊரில் கரையேறியது. அதனை நினைவுபடுத்தும் விதமாக ஆவணி மாதம் அவிட்ட நட்சத்திர முழுநிலவு நாளில் ஒவ்வொரு வருடமும் ஏடு எதிரேறிய திருவிழா கொண்டாடப்படுகிறது.

அன்று காலையில் சுவாமிக்கும் அம்மனுக்கும் சிறப்பு அபிடேக ஆராதனைகள் நடைபெறுகிறது. பின்பு பஞ்சமூர்த்திகள் அருகில் இருக்கும் வைகை ஆற்றுக்கு அவரவர் வாகனங்களில் எடுத்துச் செல்லப்பட்டு தீர்த்தவாரி நடைபெறுகிறது. மாலை ஆறு மணியளவில் விநாயகர் முன் செல்ல நின்றசீர்நெடுமாறன் மற்றும் அமைச்சர் குலச்சிறையார் குதிரை வாகனத்திலும் சுவாமி, அம்மன் காளை வாகனத்திலும் ஞானசம்பந்தர் பல்லக்கிலும் வீதியுலா வருவர். ஞானசம்பந்தர் கையில் தங்கத்தினால் செய்யப்பட்ட ஏடு வைத்திருக்கிறார். அப்பொழுது ஓதுவார்கள், சமணர்களுக்கும் ஞானசம்பருக்கும் நடந்த புனல் வாதத்தினைப் பற்றி மக்களுக்கு எடுத்துக்கூறி சிவபெருமானின் பெருமைகளைப் பாடுவார்கள். இங்கு ஏடு கரையேறியதற்கான ஆதாரமாக இத்திருவிழாவும் திருஞானசம்பந்தருக்கு தனிக்கோயிலும் அமைந்துள.

## நவராத்திரி

‘நவராத்திரி’ என்றால் ஒன்பது இரவுகள் என்பது பொருள். நவராத்திரி விழா புரட்டாசித் திங்களில் வளர்பிறை பிரதமைத் திதியில் நடைபெறுகிறது. பெண்களுக்காகவே நடத்தப்படும் விழாவாக நவராத்திரி விழா திகழ்கிறது. ‘சக்தியில்லையேல் சிவமில்லை’ என்பது பழமொழி. சக்தியைப் பெருமைப்படுத்துகின்ற விழாவாக இவ்விழா கருதப்படுகிறது. இதனை “பெண் தெய்வத்தை முன்னிறுத்தி வழிபாடாற்றும் விழாவாகவே அனைவரும் கொண்டாடுகின்றனர். எனவே இவ்விழாவிற்கும் பெண் தெய்வத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு”[61] என்று குறிப்பிடுகிறார் அ.மு.பரமசிவானந்தம். மேலும், “உலகில் உள்ள உயிர்கள் அனைத்தையும் படைத்தவள் பராசக்தி. அவள்தான் படைத்த உயிர்வர்க்கங்கள் அனைத்தும் இன்பமுடன் வாழ்கின்றனவா என்பதனைக் காண்பதற்காக பூவுலகிற்கு வருவாள் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் இவ்விழா கொண்டாடப்படுகிறது”[62] என்கிறார் பரசுராமப்பட்டர். இவ்விழாவானது முதல் மூன்று நாட்கள் துர்க்கா தேவியையும் நடுமூன்று நாட்கள் இலட்சுமி தேவியையும் இறுதி மூன்று நாட்கள் சரசுவதி தேவியையும் வழிபட்டு பத்தாம் நாள் விஜயதசமி விழாவாகக் கொண்டாடப்படுகிறது. இந்த நவராத்திரி நாளில் கோயிலில் அம்மனுக்குச் சிறப்பு

அபிடேக, அலங்காரங்கள் நடைபெறுகிறது. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு அலங்காரத்தில் அம்மன் கொலு மண்டபத்தில் வீற்றிருக்கிறாள்.

## நவராத்திரி புராணக்கதை

ஒரு காலத்தில் மகிடாசுரன் என்ற ஓர் அரக்கன் பராசக்தியின் அருளால் சத்துருவின் பலத்தைப் பெறும் வலிமையையும் பல சாம்ராஜ்யங்களை அடக்கியாளும் சக்தியையும் பெற்று, நல்லவர்கள் பலருக்குத் துன்பங்கள் பல செய்து வந்தான். அதனைப் பொறுக்க முடியாத தேவர்கள், நாரதமுனிவர் உபதேசத்தில் பார்வதிதேவியை நோக்கித் தவம் செய்தனர். தேவியை நோக்கித் தவம்புரிய, தவச்சாலையில் உள்ள யாக குண்டத்தில் தேவி லலிதையெனும் பரமேசுவரியாகத் தோன்றித் தேவர்களது இடுக்கண்களை அகற்றுவதாகக் கூறி அருள்புரிந்தாள். அந்த லலிதையை காமேசுவரராகிய பரமேசுவரன் திருமணம் செய்து கொண்டார். அவருடைய அனுமதியோடு அவள் போருக்குப் புறப்பட்டாள். அசுரனது தம்பியர் விசுக்ரன், விடங்கன் என்பவர்கள் வந்து எதிர்த்தனர். தேவி தன்னிடத்தில் தோன்றிய துர்க்கையை அனுப்ப அவள் அவர்கள் இருவரையும் விழுங்கினாள். அதன்பின் லலிதாதேவியை எதிர்த்த மகிடாசுரனை சம்கரித்துத்(வதம் செய்து) தேவர்களது இடுக்கண்களை அகற்றினாள்."[63] இந்நிகழ்ச்சியே நவராத்திரியின் சிறப்பு எனப் பாகவதம் கூறுகின்றது.

## இச்சா சக்தி

'மங்கல வடிவமானவள், கருணையானவள்' என்று குறிப்பிடப்படும் துர்க்கை வடிவம், நமது இதயத்திலுள் ஆணவம், பேராசை போன்ற தன்மைகளை அகற்றி நமது உடல் உறுதியுடனும் வலிமையுடனும் விளங்கச் செய்கிறது. அதனால் துர்க்கை வடிவம் இச்சா சக்தி எனப்படுகிறது.

## கிரியா சக்தி

மகாஇலக்குமியின் வடிவம் கிரியாசக்தி ஆகும்.

## ஞானசக்தி

கலைமகளாகிய சரசுவதி, ஞானசக்தி என்று அழைக்கப்படுகிறாள். நவராத்திரி நாட்களில் ஒன்பதாம் நாள் இரவு சரசுவதிக்கென்று சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. இது 'சரசுவதி பூசை' என்று அழைக்கப்படுகிறது. சரசுவதியின் வடிவம் நமது அறியாமையை அகற்றி அறிவையும் குணத்தையும் வளர்க்கிறது.

மேற்சுட்டிய இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி ஆகிய மூன்று சக்திகளும் சேர்ந்து பராசக்தியாக மாறி மகிசாசுரன் என்ற அசுரனை அழித்தாள். அதனால் சக்தி,

‘மகிசாசுரமர்த்தினி’ என்று அழைக்கப்படுகிறாள். மகிசாசுரனுடன் ஒன்பது நாள் போரிட்டு பத்தாவது நாள் தேவி வெற்றிபெற்றதால் பத்தாம் நாள் வெற்றித் திருநாள் (விசயதசமி) என்று கொண்டாடப்படுகிறது.

### வன்னிமரத்தில் அம்பு போடுதல்

நவராத்திரியின் பத்தாம் நாள் விசயதசமி. அன்று சிவன் கோயில்களில் ‘பரிவேட்டை உற்சவம்’ என்ற ஒன்று நடைபெறுகிறது. அன்று இறைவன் எழுந்தருளி வன்னிமரத்தில் அம்பு போடுவது வழக்கம். “இதன் உட்கருத்து நெருப்பு அடங்கிய வன்னிமரம் ஆத்மாவுடன் கூடிய மனித உடலாகவும் அம்பு ஞானமாகவும் வேட்டையில் அம்பு விடுவதை ஞானஉபதேசமாகவும் கொள்ள வேண்டும் என்பதாகும்.”[64] ஆதிசொக்கநாதர் கோயில் மற்றும் திருஏடகநாதர் கோயில்களில் அம்பு போடும் விழா கொண்டாடப்படுகிறது.

### கொலு

“கொலு வைப்பது என்பது அத்வைதத் தத்துவத்துடன் தொடர்புடையது. ஒரே ஆத்மா, சரீரங்கள் வெவ்வேறு என்றுரைப்பது அத்வைதம்”[65] என்கிறார் இராமலெட்சுமணன். பலபடிகளில் பலவிதமான பொம்மைகளை அடுக்குகிறோம். அவையெல்லாம் ஒரே மூலப்பொருளான களிமண்ணால் ஆனவை. அனைத்திலும் ஒரே ஆத்மாவான அன்னை பராசக்தி குடியிருக்கிறாள் என்று சொல்லப்படுகிறது.

எத்தனை படிகள் கொலுவில் வைத்தாலும் கீழ்ப்படியில் ஓரறிவு ஜீவராசி முதல் படிப்படியாக ஆறறிவு மனிதர் வரை வைத்து அதற்கு மேல் பற்றற்ற முனிவர்கள் மகான்கள் போன்றவரும் அதற்குமேல் தேவர்கள் போன்றவர்களை வைத்து இறுதியாக மேல்படியில் இறைவனை வைக்கிறோம். இது ஓரறிவு பெற்ற உயிர்கள் முதல் அனைவரும் படிப்படியாக உயர்ந்து இறுதிநிலையில் இறைவனை அடைவதை உணர்த்துவதாக அமைகிறது.

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் கொலு வைக்கப்படுகிறது. அம்மன் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு அலங்காரத்தில் காட்சியளிக்கிறாள். துர்க்கை, மகிசாசுரமர்த்தினி, சாமுண்டி என அலங்காரம் செய்யப்படுகிறது. ஒவ்வொரு நாளும் புட்டுக்கு மண்சுமந்த திருவிளையாடல், வளையல் விற்ற திருவிளையாடல் போன்றவைகளும் நிகழ்த்தப்படுகிறது.

## கந்தசட்டித் திருவிழா

ஐப்பசி மாதம் வளர்பிறை (சுக்கிலபட்ச பிரதமை) முதல் சட்டி திதி ஈறாக உள்ள ஆறுநாட்களும் கந்தசட்டிக் காலமாகும். இந்த ஆறு நாட்களையும் மக்கள் விரத நாட்களாகக் கருதுகின்றனர்.

## கந்தசட்டி விரதம் தொடர்பான புராணக்கதை

"காசிப முனிவருக்கும் மாயையெனும் அரக்கிக்கும் புதல்வர்களாய்ப் பிறந்த சூரன், சிங்கமுகன், தாரகன் எனும் அசுரர்கள் கடுந்தவம் புரிந்து சிவபெருமானிடம் வரங்கள் பெற்று வீரகேந்திரம், ஆஸ்ரபுரி, மாயாபுரி எனும் இடங்களில் வாழ்ந்து வந்தனர். அவர்கள் தேவர்கள் முதலிய நல்லோர்களுக்குப் பலவித தீங்குகளைச் செய்து வந்தனர். அவர்களை அழிக்க எவராலும் முடியாது போயிற்று. தேவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி இறைவன் முருகனாய்த் தோன்றி அவனோடு ஆறுநாட்கள் போர் தொடுத்தனன். அந்த ஆறுநாட்களும் தேவர்கள் முதலிய அனைவரும் உணவு அருந்தாமல் முருகனையே தியானம் செய்து வந்தனர்.

சூரன் தம்பியர் முருகன் சேனையால் அழிந்ததன் பின்பும் சூரன் ஆணவ மல முதிர்ச்சியோடு முருகனை எதிர்த்து நின்று அமர்(போர்) புரிந்தான். அமரில் அவனது ஆணவ மலம் சிறிது அகன்றது. தன் ஆற்றல் அனைத்தையும் திரட்டி முருகனுடன் போரிட்டான். ஒரு மாமரமாகி சூரன் கடலினுள் மறைந்தான். இதனை அறிந்த முருகன் அவனைக் கொல்ல வேலாயுதத்தை விடுத்தார். வேல் அவனை இருகூறாக்கியது. எனினும் அவன் இறக்கவில்லை. சூரன் சேவலும் மயிலுமாகி முருகனை எதிர்த்தான். அவன்மீது முருகனின் அருட்கண்ணோட்டம் விழுந்தது. முருகன் சேவலைக் கொடியாகவும் மயிலை வாகனமாகவும் கொண்டான்.

## விழாத் தத்துவம்

முருகன் சூரனை வதை செய்வது ஆணவ மலத்தின் ஒடுக்கத்தினைக் காட்டுகின்றது. முருகன் பதியையும் தேவர்கள் பசுக்களையும் சூரன் அகங்காரத்தையும் சிங்கமுகன் குரோதத்தையும் தாரகன் மோகத்தையும் உணர்த்துகின்றனர். இத்தத்துவங்களை உணர்ந்து கொள்வதன் பொருட்டு ஆண்டுக்கு ஒருமுறை கந்தர் சட்டி விழா கொண்டாடப்பட்டு வருகின்றது."[66]

## சட்டி விரதப்பலன்

ஐப்பசி அமாவாசையில் தொடங்கி ஆறுநாட்கள் மக்கள் நோன்பு இருப்பர். முருகனுக்குச் சிறப்பு வழிபாடுகள் செய்து பின்பு உணவு உட்கொள்வர். நெடுங்காலம் குழந்தை இல்லாமல் முருகனை வழிபாடு செய்து குழந்தை பெற்ற செய்தியை,

**“குன்றக் குறவன் கடவுள் பேணி**

**இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்”**[67]

என்று ஐங்குநுறூறு விளக்கும். சட்டியில் இருந்தால் அகப்பையில் வரும் என்பது பழமொழியாகும். சட்டியில் விரதமிருந்தால் கருப்பையில் குழந்தை உண்டாகும் என்பது இதன் பொருளாகும். (அகப்பை – கருப்பை). குழந்தை பாக்கியம் மட்டுமின்றி எண்ணிய நற்பலன்கள் எல்லாம் அடையலாம் என்பது மக்கள் நம்பிக்கை.

ஆதிசொக்கநாதர் கோயிலில் சட்டி விரதத்தின் ஆறுநாட்களும் முருகனுக்குச் சிறப்பு அபிடேக, ஆராதனை நடைபெற்று ஆறாம் நாள் முருகன் மயில் வாகனத்தில் புறப்பட்டுச் சென்று அருகில் உள்ள பெரிய விநாயகர் கோயில் முன்பு சூரசம்காரம் நடைபெறுகிறது.

திருஏடகநாதர் கோயிலில் கோயிலின் முன்பு சூரசம்காரம் நடைபெறுகிறது. காலையில் முருகனுக்குத் திருக்கல்யாணம் நடைபெறுகிறது. அன்று மாலை முருகனுக்கு சந்தனக் காப்பும் இராச அலங்காரமும் செய்யப்படுகின்றது. உற்சவ மூர்த்தி மயில் வாகனத்தில் திருச்சுற்றில் மூன்று முறை வலம் வந்து பக்தர்களுக்கு அருள்பாலிப்பர்.

**அன்னாபிடேகம்**

கல்லினுள் தேரை முதல் கருப்பை உயிர்வரை எண்ணாயிரம் கோடி உயிர்களுக்கு உணவு அளிப்பவர் சிவபெருமான். அதனை நினைவு கூர்ந்து நன்றி செலுத்தும் விதமாக ஆண்டுதோறும் ஐப்பசி மாத முழுநிலவு நாளில் அனைத்துச் சிவாலயங்களிலும் அன்னாபிடேகம் நடத்தப்படுகிறது.

சிவபெருமானுக்கு சுத்த அன்னத்தைக் கொண்டு அபிடேகம் செய்வது இந்த நாளின் சிறப்பாகும். இந்த அன்னாபிடேக நாளன்று சிவாலயங்களில் கருவறையிலுள்ள சிவபெருமானுக்கு அபிடேக ஆராதனை முடித்த பின்னர் சமைத்த சுத்த அன்னத்தைக் கொண்டு அபிடேகம் செய்யப்படுகிறது. லிங்கத் திருமேனி மறையுமளவுக்கு அன்னம் குவிக்கப்பட்டு இனிப்புகள், பழங்கள் நிவேதனத்துக்கு வைக்கப்பட்டு சிறப்புத் தீபாராதனைகள் நடைபெறும்.

ஆகாயத்தில் உள்ள காற்றின் துணையுடன் தீ எரிகிறது. நிலத்தில் விளைந்த அரிசி, நீரில் மூழ்கி, தீயில் வெந்து அன்னமாகிறது. எனவே ஐம்பெரும்பூதங்களின் சேர்க்கையாக அன்னம், அபிடேகத்தின் போது இறைவனிடம் அடைக்கலமாகிறது. இதன்மூலம் ஐம்பெரும்பூதங்களும் இறைவனிடம் அடைக்கலம் என்பது தெளிவாகிறது.

ஐப்பசி மாதம் முழுநிலவு நாளுக்கு ஒரு சிறப்பு உண்டு. அன்றுதான் சந்திரன் தனது சாபம் முழுமையாகத் தீர்ந்து பதினாறு கலைகளுடனும் முழுப்பொலிவுடனும் திகழ்கின்றான். சந்திரன், அசுவினி முதல் ரேவதி வரையிலான தனது நட்சத்திர மனைவியருள் ரோகிணியிடம் மட்டும் தனி அன்பு செலுத்தி மற்றவர்களிடம் அன்பு காட்டாமல் இருந்ததால், மாமனார் தட்சனால் உடல் தேயட்டும் என்ற சாபம் பெற்றான். அதனால் சந்திரன் தேய்ந்து கொண்டே சென்றான். அவன் மிகவும் வருந்தியதால் திங்களூரில் சிவனை வணங்கினால் சாபவிமோசனம் கிடைக்கும் என்றார் தட்சன். உடனே அவன் திங்களூர் வந்து சிவனை நோக்கி தவம் செய்யத் துவங்கினான். முழுவதும் தேய்வதற்கு மூன்று நாட்கள் முன்னதாக சிவபெருமான் தோன்றி அந்த தேய்ந்த பிறையைத் தனது தலையில் அணிந்து கொண்டார். சந்திரன் அன்று முதல் வளர்ந்தாலும் தட்சனது சாபத்தால் வளர்வதும் தேய்வதுமாக இருந்தான். இப்படி தேய்வதைக் கிருட்ணபட்சம் (தேய்பிறை) என்றும் வளர்வதைச் சுக்லபட்சம் (வளர்பிறை) என்றும் வழங்கினர்.

சந்திரனது ஒளி தினமும் தேய்ந்து முழுவதும் மறைந்து பின் படிப்படியாக வளரும். ஒவ்வொரு முழுநிலவு அன்றும் சந்திரன் முழுவதுமாக வளர்ந்தாலும் ஐப்பசி மாதம் மட்டுமே முழுப் பொலிவுடன் திகழ்கின்றான்.

அறிவியல் ரீதியாகவும் ஐப்பசி(அக்டோபர்) மாதத்தில்தான் நிலவு பூமிக்கு மிக அருகில் வந்து தனது முழு ஒளியையும் பூமியை நோக்கி வீசுகிறது என்கிறது வானவியல் ஆய்வு. நவக்கிரகங்களில் சந்திரனுக்கு உரிய தானியம் அரிசி. இதை உணர்ந்த முன்னோர்கள் அந்த மாதத்தில் இறைவனுக்கு அன்னாபிடேகம் செய்வது சிறப்பு என்று கண்டறிந்து அதனை நடைமுறைப்படுத்தினார்கள்.

அன்னாபிடேகம் உச்சிக்கால பூசையின் போது ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் நடைபெறுகிறது. அன்று சிவலிங்கத்தின் மீது சாத்தப்பட்ட அன்னத்தை எடுத்துச் சென்று கோயில் குளத்திலோ அல்லது ஆற்றிலோ கரைக்கின்றனர். நீரில் வாழும் புழு, பூச்சிகள், மீன்கள் மற்ற நீர்வாழ் உயிரினங்கள் எல்லாமும் உணவு பெற வேண்டும் என்ற நோக்கத்துடன் நீரில் கரைக்கப்படுகிறது.

## கிருத்திகை

கிருத்திகை அல்லது கார்த்திகை நட்சத்திரம் முருகனுக்குரிய நட்சத்திரம் ஆகும். முருகன் பிறந்தது விசாக நட்சத்திரம் என்று சொல்லப்பட்டாலும் கார்த்திகைப் பெண்கள் அறுவர். முருகனை வளர்த்த காரணத்தால் கார்த்திகை நட்சத்திரம் முருகனுக்குரிய சிறப்பான நட்சத்திரம் ஆயிற்று.

கார்த்திகைப் பெண்கள் முருகனை வளர்த்ததால் கார்த்திகேயன் என்றும் அழைக்கப்படுகிறான். மாதந்தோறும் வரும் கார்த்திகை தினத்தில் முருகனுக்குச் சிறப்பு அபிடேக ஆராதனை நடைபெறுகிறது.

ஆதிசொக்கநாதர், திருஏடகநாதர் ஆகிய கோயில்களில் காலையில் முருகனுக்கு அபிடேகம், ஆராதனை நடைபெறுகிறது. மாலையில் மயில் வாகனத்தில் முருகன், வள்ளி, தெய்வானையுடன் எழுந்தருளி வீதியுலா வருகிறார். புட்டுசொக்கநாதர் கோயிலில் முருகனுக்கு அபிடேக, ஆராதனை மட்டும் நடைபெறுகிறது. எழுந்தருள் கிடையாது.

## கார்த்திகைத் திங்கள்

கார்த்திகை மாதம் திங்கள் கிழமை மிகவும் சிறந்ததாகும். இந்நாளில் சிவ ஆலயங்களில் 108, 1008 சங்காபிடேகங்கள் நடைபெறும். கார்த்திகை மாதத்தில் சிவபெருமான் அக்னிப்பிழம்பாக இருப்பதால் அவரைக் குளிர்விக்கும் பொருட்டு சங்காபிடேகம் செய்யப்படுகிறது.

“சோமன் என்றால் உமையுடன் கூடிய சிவன் என்று பொருள். சந்திரன் என்ற பொருளும் உண்டு.”[68] சந்திரன் தோன்றியது கார்த்திகை மாதம் சுக்லபட்ச அட்டமி திதியில் தான். சந்திரன் நவக்கிரகங்களில் ஒருவர் ஆனார். அன்றைய தினம் கார்த்திகை சோமவாரம் ஆகும். சந்திரன் சிவபெருமானிடம் சோமவாரம் தோறும் பூசை செய்து விரதம் இருப்பவர்களுக்கு வேண்டியதை அருள வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். சிவபெருமானும் அவ்வாறே அருளினார். எனவே பக்தர்கள் கார்த்திகை மாதம் திங்கட்கிழமையன்று விரதம் கடைப்பிடிக்கின்றனர். அன்று அனைத்துச் சிவன் கோயில்களிலும் சிறப்பு அபிடேக ஆராதனை நடைபெறுகிறது.

## சங்காபிடேகம்

இறைவனுக்குச் செய்யப்படும் அபிடேகங்களில் சிறந்தது கும்பாபிடேகம் முடிந்து மறுநாள் செய்யப்படும் மகாஅபிடேகம். அதனினும் சிறந்தது சங்காபிடேகம். சிவாலயங்களில் ஒவ்வோர் ஆண்டும் கார்த்திகை மாதம் வரும் திங்கட்கிழமைகளில் நாற்பத்தியெட்டு முதல் ஆயிரத்தெட்டு சங்குகளில் நீர் நிரப்பி அதனை முறைப்படி மந்திரம் சொல்லி(ஆவாகனம் செய்து) அந்நீரைச் சிவலிங்கத்திற்கு அபிடேகம் செய்வது சங்காபிடேகமாகும்.

## சங்குகள் வைக்கும் முறை

நூற்றியெட்டு அல்லது ஆயிரத்தெட்டு சங்குகளையும் இறைவன் சன்னதியின் முன் பன்னிரண்டு இராசி குண்டலங்களாகப் பிரித்து, ஒவ்வோர் இராசி

குண்டலங்களிலும் ஒன்பது சங்குகள் வீதம் பன்னிரெண்டு இராசியிலும் 108 சங்குகள் வைத்து எட்டுத்திக்குகளுக்கும் எட்டு பிரதான சங்குகளையும் நடுவில் வலம்புரி, இடம்புரி என்ற இரு சங்குகளை 'சிவசக்தி' என அமைத்தல் வேண்டும்.

வலம்புரி, இடம்புரி சங்குகளைச் சுவாமியும் அம்பாளுமாகப் பாவித்துப் பிரதிட்டை செய்தல் வேண்டும். இவ்வாறு அமைக்கப்பெற்ற 118 சங்குகளிலும் 1+1+8=10=1 'எல்லாம் ஒருவனே' என்ற தத்துவப்படியும் அமைத்தல் வேண்டும். 1008 சங்குகளை அடுக்கும்போது 'சிவலிங்க' வடிவத்தில் அடுக்குவார்கள். சங்குகளை அடுக்கும்போது அதன் அடிப்பகுதியில் முதலில் நெல்லும் பின்பு அதன்மேல் அரிசியும் இட்டு அடுக்கப்பட்டுகிறது. இரண்டு கும்பக் குடங்களையும் சங்குகளையும் யாக குண்டத்தின் எதிரில் அமைத்தல் வேண்டும்.

**பூசை முறை**

சங்குகள் ஒவ்வொன்றும் 'ஓம் ஓம்' என்று ஒலித்துக் கொண்டிருக்கும். யாக குண்டத்தைச் சுற்றி மந்திரம் ஓத அம்மந்திரம் தீர்த்தத்தில் கலக்கின்றது. தர்ப்பைப்புல் மூலம் தெய்வ சக்தியையும் மாவிலையிலுள்ள துவர்ப்பு சக்தியையும் தீர்த்தம் ஈர்த்துக் கொள்கின்றது. வேத மந்திரங்களை ஓதி ஒவ்வோர் இராசி மண்டலத்திற்கும் எட்டுத் திசைகளிலுள்ள சங்குகளுக்கும் வலம்புரி, இடம்புரி சங்குகளுக்கும் பூசைகள் செய்தல் வேண்டும்.

அதன் பின்னர் யாக குண்டத்தை ஆகவணீயம், தட்சிணாக்கினீயம், காருகாபத்தியம் என்னும் முத்திரையில் அமைத்து ஆல், அரசு, அத்தி, மா, பலா, வெள்ளெருக்கு, வன்னி, நாயுருவி, தர்ப்பை முதலிய சுள்ளிகளால் யாகம் வளர்த்து, நவதானியம், வாசனாதி திரவியம், கனிவகைகள், தேன், தேங்காய், பீதாம்பரம், இலவங்கம், தாம்பூலம், பொரி முதலியவற்றோடு நெய் ஊற்றி ஒரே சோதிப்பிழம்பாக இறைவனுக்கு அக்கினி மூலமாகக் கொடுத்து பலிபோட்டு, தூபதீபநிவேதனம், கற்பூர ஆரத்தி முதலியவற்றைச் செய்து உலகம் தீங்கின்றி வாழும் பொருட்டு வேண்டிக் கொண்டு ஒவ்வொரு சங்குத் தீர்த்தத்தாலும் இறைவனை முறையாக அபிடேகம் செய்வித்தல் வேண்டும். பின்பு இறைவனுக்கு அலங்காரம் செய்து பலவகையான தீபங்கள் ஏற்றி தீபாராதனை செய்தல் வேண்டும்.

சங்காபிடேகத்தைக் காண்போரும் சங்காபிடேகத் தீர்த்தத்தைப் பருகுவோரும் எல்லா வகையான நோய்களிலிருந்தும் விடுபட்டு நன்மை அடைவர்.

திருஏடகநாதர் கோயிலில் கார்த்திகை மாதம் திங்கள் கிழமைகளில் முதல் மற்றும் மூன்றாவது வாரத்தில் 108 சங்காபிடேகமும் இரண்டாவது மற்றும் நான்காவது

வாரத்தில் 1008 சங்காபிடேகமும் நடைபெறுகிறது. மற்ற இரு கோயில்களிலும் 108 சங்காபிடேகம் மேற்கொள்ளப்பெறுகிறது.

## திருக்கார்த்திகை தீபவிழா

மனிதன் தன்னால் உற்பத்தி செய்யமுடியாத இயற்கையாகவே தோன்றிய நெருப்பையும் ஞாயிற்றையும் மின்னலையும் கண்டு அஞ்சினான். நெருப்பின் பயன்பாட்டை அறிந்து கொண்ட மனிதனுக்கு நெருப்பை ஆக்கும் வழி ஆரம்பத்தில் தெரியவில்லை. காட்டுத் தீயைக் கண்டு அஞ்சி வழிபடத் தொடங்கிய மனிதன் காலப்போக்கில் அதன் ஆக்க, அழிவுச் சக்திகளை மனதில் கொண்டு வணங்கத் தொடங்கியதன் தொடர்ச்சியே கார்த்திகை தீபத்திருவிழாவாக வளர்ந்தது.

## கார்த்திகை விழாவின் தொன்மை

தீப வழிபாடு என்பது தொன்று தொட்டுக் கொண்டாடி வரும் திருவிழாக்களுள் ஒன்றாகும். இதனைத் திருக்கார்த்திகை எனவும் கார்த்திகை விளக்கு எனவும் கார்த்திகை விளக்கீடு எனவும் பல பெயர்களில் வழங்குவர். திருஞானசம்பந்தர் கார்த்திகை தீபத்தினை ‘விளக்கீடு’ என்னும் சொல்லால் குறிப்பிடுகிறார். இவர் தொல் கார்த்திகைத் திருநாள் என்று குறிப்பிடுவதால் இவரது காலத்திற்கும் முன்பும் இவ்விழாக் கொண்டாடப்பட்டது என்பதை அறியலாம். இதனை,

**“வளைக்கை மடநல்லார் மாமயிலை வண்மறுகில்**
**துளக்கில் கபாலீச் சரத்தான் தொல் கார்த்திகை நாள்**
**தளந்தேந் திளமுலையார் தையலார் கொண்டாடும்**
**விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்”**[69]

என்னும் பாடலடிகள் விளக்கும்.

முழுமதிநாளில் கார்த்திகை தீபவிழா கொண்டாடப்பட்டதையும் இந்நாளில் விளக்கேற்றி வழிபட்டதையும் வீடுகளும் தெருக்களும் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டமையும்,

**“மழைக்கால் நீங்கிய மாசு விசும்பில்**
**குறுமுயல் மறுநீறங் கிரை மதிநிறைந்து**
**அறுமீன் சேரும் அகவிருள் நடுநாள்**
**மறுகுவிளக் குறுத்து மாலை தூக்கிப்**
**பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய**
**விழவுடன் அயர வருகதில் அம்ம”**[70]

என்னும் அகநானூற்று பாடலடிகளால் அறிய முடிகிறது.

**“கார்த்திகைச் சாற்றில் கழி விளக்கைப் போன்றனவே**

**போர்க்கொடித் தானைப் பொருபுளனீர் நாடன்**

**ஆர்த்து அமர் அட்ட களத்து”**[71]

என்ற களவழி நாற்பது பாடல் அடிகளால் கார்த்திகை திருநாளின் பழமையை அறிய முடிகிறது.

## அறிவியல் உண்மை

கார்த்திகை என்பது நட்சத்திரத்திற்கும் மாதத்திற்கும் விழாவிற்கும் உரிய பெயர். கார்த்திகை நட்சத்திரம் ஆறு நட்சத்திரங்களின் கூட்டம். மேசத்தில் கால் பகுதியும் ரிசபத்தில் முக்கால் பகுதியும் அமைந்துள்ள இந்த நட்சத்திரக் கூட்டம் குத்து விளக்குப் போல் காட்சி தரும். மாதத்திற்கு ஒருமுறை சந்திரன் இந்த நட்சத்திரத்திற்கு அருகில் வரும் போது அந்த நாள் கார்த்திகை என்னும் பெயரால் வழங்கப்படுகிறது.”[72]

பன்னிரண்டு தமிழ் மாதங்களுள் ஒரு மாதத்தின் பெயர் கார்த்திகை. இம்மாதத்தில் பவுர்ணமி, கார்த்திகை நட்சத்திரங்களுடன் சேர்ந்து வருகின்ற நாளைப் பெரிய கார்த்திகை என்று கூறுகிறார்கள்.”[73]

கார்த்திகை திருநாளில் சிவன் கோயில்களில் ‘ருத்ர தீபமேற்றி’ சொக்கப்பனைக் கொளுத்துவர். உலர்ந்த பனைமரம் ஒன்றைக் கோயிலின் அருகில் ஊன்றி அதனைச் சுற்றி பனைஓலையைக் கூடாரம் போல் அமைத்துக் கொளுத்துவதற்கு சொக்கப்பனை என்று பெயர். கோயிலில் பூசை நடந்த பிறகு கோயிலின் குருக்கள் சொக்கப்பனைக்கு பூசை நடத்தி கற்பூர தீபத்தால் எரியூட்டுவார். சொக்கப்பனை எரிகின்றபோது சொக்கன் (சிவன்) ஒளிபிழம்பாய்த் தோன்றுகிறார் எனக்கருதும் மக்கள் எரிந்த சாம்பலை வயல் வெளிகளில் தெளிக்கின்றனர்.

திருக்கார்த்திகை திருநாளில் மூன்று கோயில்களிலும் கோயில் முழுக்க விளக்கேற்றி பின்பு சொக்கப்பனை கொளுத்துகின்றனர்.

## மார்கழி திருப்பள்ளியெழுச்சி

சிவத்திருத்தலங்களிலும் வைணவத்திருத்தலங்களிலும் மார்கழி மாதம் திருப்பள்ளி எழுச்சித் திருவிழா கொண்டாடப்படுகின்றது. தமிழ் மாதங்களில் மிகவும் சிறப்பு வாய்ந்த மாதம் மார்கழியாகும். அதனால் தான் கண்ணன் கீதையில் ‘‘மாதங்களில் நான் மார்கழி’’ என்று குறிப்பிடுகிறார்.

இம்மாதத்தில் அதிகாலையில் உடல் நலத்திற்கு நன்மை விளைவிக்கும் தூய காற்றை நல்கும் ஓசோன் படலம் பூமிக்கு அருகில் வரும். காற்றில் உள்ள நன்மை தரும் அளவும் அதிகம் இருப்பதால், அதிகாலையில் விழித்து மக்கள் நன்மைபெறும் வகையில் நம் முன்னோர்களால் மார்கழி மாதம் வழிபாட்டிற்கு மிகவும் சிறந்த மாதமாகக் கருதப்பட்டது.

மூன்று கோயில்களிலும் மார்கழி மாதம் அதிகாலை நாலரை மணி அளவில் திருப்பள்ளியெழுச்சி நடைபெறுகிறது. அதில் திருவெம்பாவை ஓதப்பெறுகிறது.

## திருவாதிரை விழா

'திரு' என்னும் அடைமொழி பெற்ற நட்சத்திரம் திருவாதிரையும் திருவோணமும் ஆகும். அவற்றுள் திருவாதிரை விழா சிவபெருமானுக்கும் திருவோணத் திருவிழா திருமாலுக்கும் உரியதாகும். திருவாதிரைத் திருவிழா மார்கழித் திங்கள் முழுநிலவை ஒட்டிவரும் திருவாதிரை நட்சத்திரத்தன்று கொண்டாடப்படுகிறது. திருவாதிரை நட்சத்திரம் இருபத்தேழு நட்சத்திரங்களில் ஆறாவது நட்சத்திரம் ஆகும்.

திரு + ஆ + திரை = திருவாதிரை. 'திரு' என்பது அடைமொழி, 'ஆ' என்பது ஆன்மா, 'திரை' என்பது மறைத்தல் எனப் பொருள்படுகிறது. எனவே திருவாதிரை என்பது ஆன்மாவை மறைத்தல் எனப் பொருள்படுகிறது.

"அம்பலவாணரின் ஆனந்த நடனம் அஞ்ஞான இருளை விலக்கி மெஞ்ஞான அருள் ஒளியை வெளிப்படுத்துகிறது. உலகம் இயங்குவதை உணர்த்தும் இந்நடனத்தை ஆடலரசன் பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஆகிய தவசிகள் முன்னிலையில் ஆடிய நாளே திருவாதிரையாகும்."[74] என்று திருவாதிரை குறித்து உரைக்கப்படுகிறது.

## இலக்கியத்தில் திருவாதிரை

திருவாதிரைத் திருநாள் சிவனுக்குரிய சிறந்த நாளாகக் கொண்டாடப்படுகிறது. சங்க இலக்கியங்கள் சிவபெருமானை 'ஆதிரை முதல்வன்'[75] எனவும், 'அரும் பெறல் ஆதிரையான்'[76] எனவும் குறிப்பிடுகின்றது.

மார்கழித் திங்கள் திருவாதிரை நாளில் பலநூல்களைக் கற்றுத்தேர்ந்த அந்தணர்கள் சிவனுக்குத் திருவிழா கொண்டாடியதை,

**"மாயிருந் திங்கள் மறுநிரை ஆதிரை**

**விரிநூல் அந்தணர் விழவு தொடங்க"**[77]

என்னும் பரிபாடல் அடிகள் விளக்கும்.

## புராண வரலாறு

சிவபெருமானின் ஆனந்த தாண்டவத்தைக் காண ஆதிசேடன் பூவுலகில் பதஞ்சலி முனிவராகப் பிறந்து தவம் செய்தார். அவருடைய உடல் அமைப்பு தலைப்பகுதி மனித உடலும் இடுப்புக்குக்கீழே பாம்புத் தோற்றமும் கொண்டதாக இருந்தது. பல ஆண்டுகள் தவம் புரிந்த பின்பு சிவபெருமான், திருவாதிரை தினத்தன்று சிதம்பரத்தில் பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஆகிய முனிவர்கள் முன்னிலையில் ஆனந்த தாண்டவம் புரிந்து தரிசனம் கொடுத்தார். திருவாதிரை நாளில் நடராசருக்கு நிவேதனமாக களி படைக்கப்படுகிறது. ‘களி’ என்பது ஆனந்தம் என்று பொருள். அறியாமை அகன்று ஆன்மா, ஆனந்த நிலை அடையும் நிலையாகும். திருநடனம் புரிந்து முனிவர்களுக்குச் சிவபெருமான் தரிசனம் தந்ததால் இது ‘ஆருத்ரா தரிசனம்’ என்றும் அழைக்கப்படுகிறது.”[78]

மூன்று கோயில்களிலும் திருவாதிரைத் திருநாளில் நடராசருக்கும் சிவகாமி அம்மனுக்கும் சிறப்பு அபிடேகம் செய்யப்பட்டு, ‘களி’ நிவேதனமாகப் படைக்கப்படுகிறது.

## அட்டமி பிரதட்சணம்

மார்கழி மாதம் தேய்பிறை அட்டமி திதியில் அட்டமி பிரதட்சண விழா நடைபெறுகிறது.

ஒருமுறை சிவபெருமான் கயிலாயத்தில் அனைத்து உயிர்களுக்கும் உணவு வழங்கிக் கொண்டிருந்தார். அதனைப் பார்த்த பார்வதிதேவி சிவனைப் பரிசோதிக்க விரும்பி சிறு எறும்பைப் பிடித்து ஒன்றும் இல்லாத குவளையில் அடைத்து வைத்தார். பின்பு குவளையைத் திறந்து பார்த்தபோது, அச்சிறு எறும்பு ஒரு அரிசியைத் தின்று கொண்டிருந்தது. அதனைக் கண்டு வியந்த பார்வதிதேவி தன் செயலுக்கு வருத்தம் தெரிவித்து, சிவபெருமானிடம் மன்னிப்பு வேண்டினார். அந்த நிகழ்வு மார்கழி அட்டமி திதியில் நடந்தது. இதனையே அட்டமி பிரதட்சண விழாவாக சிவாலயங்களில் கொண்டாடுகிறார்கள். உலகில் உள்ள உயிர்கள் அனைத்திற்கும் இறைவனால் படியளக்கப்படுகிறது என்ற மெஞ்ஞானக்கருத்தை விளக்குவதே இவ்விழாவின் உட்கருத்தாகும்.

திருஏடகநாதர் திருக்கோயிலில் இவ்விழாநாளில் காலையில் சிவன், அம்மன், விநாயகர், முருகன், சண்டிகேசுவரர் என்ற பஞ்சமூர்த்திகளும் அவரவர் வாகனங்களில் எழுந்தருளி வீதியுலா செல்வார்கள். அப்பொழுது பக்தர்கள் அரிசியைத் தூவியபடி செல்கின்றனர். எறும்புகளுக்கும் சிறு சிறு உயிர்களுக்கும் உணவு வழங்கும் விழாவாக இவ்விழா கொண்டாடப்படுகிறது.

## தைப்பூச விழா

தைப்பூசத் திருவிழாவானது ஆண்டுதோறும் தை மாதம் பௌர்ணமி பூச நட்சத்திரத்தன்று நடைபெறுகின்றது. இவ்விழாவானது முருகப் பெருமானுக்குரிய விழாவாக இருந்தாலும் சிவாலயங்களிலும் நடைபெறுகின்றது. இவ்வாறு நடைபெறுவதனை, "சிவனும் முருகனும் ஒன்றே என்று சைவர்கள் உடன்படுகின்றனர். இதனை உணர்த்துவதற்காகவே சிவாலயங்களில் கொண்டாடப்பெறும் எல்லாத் திருநாளையும் முருகன் ஆலயங்களிலும் கொண்டாடுகின்றோம். இதனாலேயே சிவனுக்குரிய திருநாளாகிய தைப்பூசம் முருகனுக்கும் உரியதாயிற்று"[79] என்பர். இது ஒருநாள் நடைபெறும் விழாவாகும். இவ்விழாவினைப் பற்றி "தைத்திங்கள் பௌர்ணமியன்று பூச நட்சத்திரத்தில் தான் உமாதேவி தனது மகன் முருகப் பெருமானுக்கு சூரபத்மனை அழிப்பதற்கு சக்திவாய்ந்த வேலினை அளித்தா"[80] என்பர் கே.கே. பிள்ளை.

தைப்பூசவிழாநாளில் திருஏடகநாதர் திருக்கோயிலில் பஞ்சமூர்த்திகள் வைகை ஆற்றில் எழுந்தருளி தீர்த்தவாரி நடைபெறுகிறது. பின்பு மாலையில் திருவீதியுலாவும் நடைபெறுகிறது. சிறப்பு அபிடேக, அலங்கார, தீபாராதனையும் பஞ்சமூர்த்திகளுக்கு நடைபெறுகிறது.

## சிவராத்திரி விழா

சிவராத்திரி விழா ஒவ்வோர் ஆண்டும் மாசிமாதம் கிருட்ணபட்சம் தேய்பிறையில் நிகழக் கூடியது. சிவம் என்றால் 'மங்களம்', இராத்திரி என்றால் 'இரவு'. எனவே இவை மங்களமான இரவு என்று கருதப்படுகிறது. இச்சிவராத்திரி விழாவிற்குப் பல்வேறு கதைகள் கூறப்பெறுகிறது.

### பார்வதிதேவி வழிபட்ட இரவு

"மகாபிரளயம் ஏற்பட்ட காலத்தில் அனைத்து உயிர்களும் ஒடுங்கி ஒரு பேரமைதி நிலவியது. எங்கும் இருள். சிவன் தியானத்தில் ஆழ்ந்திருந்தார். ஒடுங்கியுள்ள உயிர்கள் அனைத்தும் மீண்டும் தோன்ற போகின்றன என்பதைப் பார்வதிதேவி உணர்ந்தாள். அப்பொழுது மீண்டும் தோன்ற போகின்ற உயிர்கள் பந்த பாசம் என்ற வினைத்துயர் நீங்கி சிவானந்த முக்தி பெற வேண்டும் என்று நினைத்த அன்னை அந்த இரவின் நான்கு சாமங்களிலும் சிவபெருமானை வழிபடுகிறாள். இதுவே மகா சிவராத்திரி."[81]

ஆலகாலவிடம்(நஞ்சு)

தேவர்கள் கடைந்த பாற்கடலில் ஆலகாலவிடம் தோன்றியது. அந்த விடத்தினைச் சிவபெருமான் உண்டு உலகைக் காப்பாற்றிய நாளே மகாசிவராத்திரி நாளாகும். இது சிவபெருமானுக்கு விரதமிருந்து வழிபடுவதற்குரிய சிறந்த நாளாகும்.

தவநிதி என்ற முனிவர் சிவாலயத்தில் தங்கி வழிபாடு செய்து வந்தார். ஒருநாள் வேடன் ஒருவன் மான் ஒன்றை வேட்டையாடித் துரத்தி வந்தான். அந்த மான் ஆலயத்தில் சிவவழிபாடு செய்து கொண்டிருந்த தவநிதி முனிவரைத் தஞ்சமடைய, அவரும் அதற்கு அபயமளித்தார். கோபமுற்ற வேடன் முனிவரைத் தாக்க முயன்றான். பக்தர்களைக் காக்கும் சிவபெருமான் புலிவடிவம் எடுத்து வேடனைத் துரத்தினார். வேடனும் பயந்து கோயிலில் உள்ள வில்வமரத்தில் ஏறி அமர்ந்து கொண்டான். புலி உருவிலிருந்த சிவபெருமான் மரத்தடியிலேயே நிற்க வேறு வழியின்றி வேடனும் மரத்திலேயே தங்கிவிட்டான். பசி மயக்கத்தாலும் அச்சத்தினாலும் புலியை அந்த இடத்திலிருந்து விரட்ட வேண்டும் என்ற எண்ணத்தினால் வில்வ இலைகளைப் பறித்து கீழே புலி உருவிலிருந்து சிவபெருமான் மீது ஒவ்வொன்றாகப் போட்டுக்கொண்டே இருந்தான் வேடன். அன்று மகாசிவராத்திரி என்று தெரியாமலேயே இரவு முழுவதும் சாப்பாடு, தூக்கம் எதுவுமின்றி சிவபெருமானை வழிபட்ட புண்ணியம் அவனுக்கு கிடைத்ததால் சிவபெருமான் அவனுக்கு மோட்சம் அளித்தார்.''[82]

''பிரமனும் திருமாலும் ஒரு சமயம் தாம் தான் தலைவன் எனத் தருக்கப்பட்டபோது அவர்களுக்கு உண்மையை உணர்த்தி அருள்புரிய இறைவன் லிங்கத் திருமேனி உருவில் சோதிப் பிழம்பாக நின்றார். இத்திருமேனியை அவர் கொண்ட காலம் சிவராத்திரி என்று பெரியபுராணம் கூறுகிறது.''[83] அனற்பிழம்பாக அண்ணாமலையார் தோன்றிய காட்சி மூன்றே முக்கால் நாழிகையளவு நிகழ்ந்தது. இக்காட்சியைத் தேவர்கள் அனைவரும் கண்டு வணங்கினர். இக்காலம் லிங்கோத்பவர் காலம் எனப்படுகிறது. இது இரவு காலத்தில் நிகழ்ந்தமையால் மகாசிவராத்திரி எனவும் அழைக்கப்படுகிறது.

மகாசிவராத்திரி நாளன்று நித்திய பூசையின் பின்னர் நான்கு யாமத்திலும் சிறப்பு அபிடேக ஆராதனைகளுடன் நான்கு காலப் பூசை நடைபெறுகின்றது.

முதல் யாமத்தில் பஞ்சகவ்வியம் (பால், தயிர், நெய், சாணம், கோமியம்) கொண்டு சிவலிங்கத்துக்கு அபிடேகம் செய்து செம்பட்டு ஆடை அணிவித்து, அரிசி அட்சதை இட்டு பொன்னாபரணம் சாற்றி. வில்வ இலை, தாமரை மலர்களால் அருச்சித்து, பச்சை கர்ப்பூரம், சந்தனம் சேர்ந்த தூபம் காட்டி, பூ தீபம் காட்டி, வில்வப்பழம், பலவகை அன்னம் நைவேத்தியம் செய்ய வேண்டும்.

இரண்டாம் யாமத்தில் பஞ்சாமிர்தத்தினால் அபிடேகம் செய்து மஞ்சள் ஆடை சாற்றி அட்சதை இட்டு மரகத ரத்தினாபரணம் அணிவித்து, துளசி, வில்வ இலைகள், சண்பகம், தாமரை மலர்களால் அருச்சித்து, அகிற்புகை காட்டி, நட்சத்திர தீபம் காட்டி, பலாப்பழம் மற்றும் பாயசன்னம் நைவேத்தியம் செய்து வழிபடவேண்டும்.

மூன்றாவது யாமத்தில் தேன் அபிடேகம் செய்து, வெண்பட்டு அணிவித்து கோதுமை அட்சதை இட்டு, மாணிக்காபரணம் சாற்றி, வில்வம், அருகு இலைகளாலும், செங்கழுநீர், அத்தி, பிச்சி பூக்களாலும் அருச்சித்து, கஸ்தூரி கலந்த சந்தனம், பச்சை கர்ப்பூர தூப காட்டி, பஞ்சமுக தீபம் காட்டி, மாவும் நெய்யும் சேர்ந்த பலகாரங்களைப் படைத்து சாமவேதம் ஓதி சிவனை வழிபட வேண்டும்.

இறுதி யாமத்தில் கருப்பஞ்சாறு அபிடேகம் செய்து நீலப்பட்டு அணிவித்து அரிசி, உளுந்து, பயிறு போன்றவற்றை அட்சதையாக இட்டு முத்தாபரணம் சாற்றி விளாஇலை, நந்தியாவர்த்தம், நீலோத்பலம் போன்ற நறுமண பூக்களைச் சாற்றி, புனுகு சேர்ந்த சந்தனம், குங்குமப்பூ தூபம் காட்டி, வில்வ தீபம் காட்டி, சுத்தன்னம், கோதுமை, சர்க்கரை, நெய் சேர்ந்த உணவு வகைகளையும் பலவகை பழங்களையும் படைத்துப் பூசையை நிறைவு செய்து கொள்ள வேண்டும்.

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் நான்கு காலப் பூசை நடைபெற்று கோயில் வருமானத்திற்கேற்ற வகையில் அபிடேக, ஆராதனை நடைபெறுகிறது.

### பங்குனி உத்திரம்

பங்குனி மாதத்தில் முழுநிலவு உத்திர நட்சத்திரத்தில் சேரும் நாள் உத்திரத் திருவிழாவாகக் கொண்டாடப்படுகிறது. இந்நாளில் இறைவன், இறைவி திருக்கல்யாண விழா விமரிசையாக நடைபெறும். ஆண், பெண் இருவரும் இணைந்தால் இவ்வுலகில் மகிழ்ச்சி நிலவும் என்ற தத்துவத்தையுணர்த்தவே இவ்விழா நடைபெறுகிறது."[84] இந்நாளில் சிவன்- பார்வதி, இராமா்- சீதை, முருகன்- வள்ளி போன்ற தெய்வங்களுக்கு திருமணம் நடந்ததாகப் புராணங்கள் கூறுகின்றன. இந்நாளில் சில சைவத் திருத்தலங்களில் பெருந்திருவிழாவும் திருக்கல்யாண விழாவும் வெகுசிறப்பாக நடைபெறுகின்றது.

அசுரா் குலத்தை அழித்து, தேவா்களுக்கு நன்மை செய்த முருகப்பெருமானுக்கு, இந்திரன் தன் மகள் தேவசேனையைப் பங்குனி உத்திர நட்சத்திரத்தில் திருமணம் செய்து கொடுத்தார். இதனால் அனைத்து முருகன் தலங்களிலும் இந்நாள் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

பங்குனி உத்திர நாளன்று காலையில் பஞ்சமூர்த்திகள் அவர்களுக்குரிய வாகனத்தில் எழுந்தருளி வைகை ஆற்றில் தீர்த்தவாரி நடைபெறுகிறது. பின்பு

மாலையில் அலங்கரிக்கப்பட்ட வாகனங்களில் பஞ்சமூர்த்திகள் வீதி உலா வருவார்கள். இவ்விழா திருஏடகநாதர் கோயிலில் மட்டும் நடைபெறுகிறது. மற்ற இரு கோயில்களில் நடைபெறவில்லை.

## வாராகி அம்மன் வழிபாடு

திருஏடகநாதர் கோயிலில் உள்ள வாராகி அம்மனுக்கு பஞ்சமி திதியன்று சிறப்புப் பூசைகளும் வழிபாடுகளும் நடைபெறுகிறது.

சப்த கன்னியரில் ஒருவரான வாராகி அம்மன் மிகவும் சக்தி வாய்ந்தவள். வாராகி அம்மன் பராசக்தியின் மறுவடிவம் என்று சொல்லப்படுகிறது. பஞ்சமி திதியன்று வாராகி அம்மனுக்கு சிறப்பு அபிடேகங்கள் நடத்தப்படுகிறது. வாராகி அம்மனுக்கு உகந்த செவ்வரளி, மல்லிகை போன்ற மலர்கள் கொண்டு வழிபாடு செய்யலாம். பெண்கள் நினைத்தது நிறைவேற குங்கும அர்ச்சனை செய்து பிரார்த்தனை செய்வார்கள். பூசணிக்காயை சமமாக வெட்டி அதில் நல்லெண்ணை இட்டு விளக்கேற்றுவார்கள்.

தேய்பிறை பஞ்சமி திதிநாளில், வாராகி தேவியை வணங்கி வழிபட்டால் எதிரிகள் தொல்லை ஒழியும். எதிர்ப்புகள் விலகும். தடைப்பட்ட காரியங்கள் நடந்தேறும். வழக்கு முதலான காரியங்களில் வெற்றி கிடைக்கும்.

## குடமுழுக்கு விழா

குடமுழுக்குவிழாவை 'பெருஞ்சாந்தி' என்றும் கூறுவர். 'கபாலீச்சரம் அமர்ந்தான் பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய்' என்ற திருஞானசம்பந்தரின் பாடல் அடியிலிருந்து இதனை அறிந்து கொள்ளலாம்.

குடமுழுக்கில் முக்கித்துவம் பெற்று விளங்கும் கும்பம், சிவவடிவமாகும். கும்பத்தின் மீதுள்ள உடை- தோல்; மேலே பூசிய செம்மண்- இரத்தம்; கும்பத்து மண்- ஊன்; தர்ப்பை- எலும்பு; மேலே சுற்றிய நூல்- நரம்பு; கும்பத்தில் இடும் பொன்- வீரியம்; மந்திரம்- உயிர்; கீழிட்ட நெல் முதலிய தானியம்- ஆசனம் என்று ஆகமங்கள் குறிப்பிடுகின்றன.

கும்பத்தை முதலில் கோயிலில் உள்ள பிம்பத்தின் (திருமேனி) அருகில் வைத்து தருப்பை, மாவிலை முதலியவற்றைக் கொண்டு மந்திரங்களை ஓதி, பிம்பத்தில் விளங்கும் மூர்த்தியைக் கும்பத்தில் எழுந்தருளச் செய்வார்கள். எழுந்தருளச் செய்தலை 'ஆவாகனம்' என்று கூறுவார்கள். பிறகு அக்கும்பத்தை மங்கள முழக்கத்துடன் யாகசாலைக்கு எடுத்துச் செல்வார்கள்.

யாகசாலையானது 36 தத்துவ வடிவமானதும் சிவனின் அட்டமூர்த்த வடிவமானதுமாகும். யாகசாலையில் ஒன்பது குண்டங்களில் ஒன்பது அக்கினி வளர்க்கப்பெறும். சாதாரணமாக நாள்தோறும் ஆசவனீயம், தட்சிணாக்கினீயம், காருகபத்தியம் என்னும் மூன்று அக்கினிகள் வளர்க்கப்பெறும். இதனை,

**"மூன்று வகை குறித்த முத்தீச் செல்வத்து"**[85]

என்று திருமுருகாற்றுப்படை கூறுகின்றது.

குண்டங்கள் முக்கோணம், நாற்கோணம், அர்ச்சந்திர வடிவம் முதலிய ஒன்பது வடிவங்களில் காணப்படும். அவ்வாறு வடிவமைக்கப் பெறுவதற்குக் காரணங்கள் உண்டு. குண்டங்களைச் சுற்றி முறுக்கிய பசுந்தர்ப்பைகளைப் பரப்பி ஆல், அரசு முதலிய சுள்ளி விறகுகளைக் குண்டத்திலிட்டு அதற்குரிய மந்திரங்களைச் சொல்லி, நெய் ஊற்றித் தெய்வங்களை மனதில் தியானித்து அக்கினி வளர்ப்பார்கள்.

இவ்வாறு மந்திரம், கிரியை, தியானம் ஆகிய மூன்றினாலும் வளர்க்கப்படும் அக்கினியிலிருந்து எழும் புகையும் வேதஒலி, சிவாகம ஒலி, தமிழ்மறை ஒலி ஆகியவற்றுடன் இறைவனது திருவருட் சக்தியைத் தூண்டிக் கும்பத்தில் விளங்கச் செய்வார்கள். அப்போது அக்கும்பம் தெய்வீக சக்தி நிரம்பியதாக விளங்குகின்றது.

மின்சாரத்தைச் செலுத்த செப்புக்கம்பி முதலியன தகுதியுடையன போல, சிவசக்தியைச் செலுத்தத் தருப்பை, மாவிலை ஆகியவை தகுதியுடையனவாக விளங்குகின்றன. யாகசாலையில் நடைபெற வேண்டிய கிரியைகள் முடிந்தவுடன் மீண்டும் தெய்வீக சக்தியைக் கோயிலில் உள்ள பிம்பத்தினிடத்தில் சேர்க்க சக்தி வாய்ந்த தருப்பையின் வழியாக அச்சக்தியைப் பிம்பத்தில் சேர்ப்பித்துக் கும்பத்தில் உள்ள நீரினால் விமான கலசங்களிலும் பிம்பத்திலும் அபிடேகம் செய்வார்கள். இதனையே கும்பாபிடேகம் என்றும் குடமுழுக்குப் பெருவிழா என்றும் கூறுவார்கள்.

## மகாபிடேகம்

கும்பாபிடேக விழா நிகழ்ந்த பின்னர் மகாபிடேகம் நடைபெறும். இறைவனைப் பிம்பத்திலிருந்து கும்பத்திலும் கும்பத்திலிருந்து பிம்பத்திலும் எழச் செய்த களைப்புத் தீருவதற்காக மிகுதியான அபிடேகத் திரவியங்களால் அபிடேகம் செய்து, பக்குவமான நிவேதனங்களால் நிவேதித்து உபசரித்தலுக்கு மகாபிடேகம் என்று பெயர். இதனை 'மகா அவிர் நிவேதனம்' என்றும் கூறுவர்.

## யாகசாலை நிகழ்வுகள்

கும்பாபிடேகப் பெருவிழாவிற்காக அமைக்கப்படுகின்ற யாகசாலையில் சில கிரியைகள் நடைபெறும். அவை: அனுக்ஞை, விக்னேசுவர பூசை, வாஸ்துசாந்தி, மிருத்சங்கிரணம், அங்குரார்ப்பணம், இரட்சாபந்தனம், கலாகர்ஷணம் ஆகியவையாகும்.

### அனுக்ஞை

கும்பாபிடேகத்தின் பொருட்டு இறைவனிடம் அருள்பெறுதல்.

### விக்னேசுவர பூசை

கும்பாபிடேகப் பணி இடையூறு இன்றி நடைபெறுவதற்காக விநாயகரை வழிபடுதல்.

### வாஸ்துசாந்தி

நற்காரியங்கள் நடைபெறுவதற்காக வாஸ்துபுருடனின் தொந்தரவு இல்லாமல் இருப்பதற்காக பிரம்மா முதலிய தேவர்களை வேண்டுவதுடன், அவ்வாஸ்து புருடனுக்கு சாந்தி செய்தல்.

### மிருத்சங்கிரணம்

முளைப்பாலிகையின் பொருட்டுப் பூமிதேவி, சப்த சமுத்திரம், இந்திரன், பிரம்மா முதலிய தேவர்களை வழிபட்டு மண் எடுத்தல்.

### அங்குரார்ப்பணம்

அங்குரார்ப்பணம் என்பது பாலிகை தெளித்தல். இது செய்யப்படும் யாகத்தின் பலாபலன்களை அறிவிப்பதாகும்.

### இரட்சாபந்தனம்

இரட்சாபந்தனம் என்பது கும்பாபிடேகம் நடத்தும் ஆசாரியருக்குக் காப்பணிதல். இது ஆசாரியனை தீட்டுகளினின்று காப்பாற்றுகிறது.

### கலாகர்சணம்

பிம்பத்திலுள்ள இறைசக்தியை தங்கநூல் வழியாக இழுத்தல்.

## மண்டலாபிடேகம்

கும்பாடேகத்திற்கு முன் பிம்பத்திற்குக் காப்பு நாண் அணிவதுண்டு. கும்பாபிடேகம் நிகழ்ந்த நாளிலிருந்து 45 நாட்கள் சிறப்பான அபிடேக ஆராதனைகள் நிகழ்ந்து, 45- வது நாள் அந்தக் காப்பு நாணை அகற்றுவார்கள். இதனையே மண்டலாபிடேகம் என்று அழைக்கிறார்கள். இம்மண்டலாபிடேகத்தோடு குடமுழுக்குக் கிரியை நிறைவேறுகிறது.

## கும்பாபிடேகம் நடத்தும் காலம்

குடமுழுக்கு என்பது கோயில் கட்டி முடித்தவுடனோ அல்லது கோயில்களை புதுப்பித்த பின்போ நடைபெறுகின்றது. இவ்விழாவானது எல்லா விழாக்களையும் விட மிகச் சிறப்பானதாகக் கொண்டாடப்படுகிறது. கோயில்களில் கும்பாபிடேகம் 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை நடத்த வேண்டும். ஆனால் சில கோயில்களில் 20 அல்லது 40 ஆண்டுகளுக்கு ஒருமுறை கூட கோயிலின் பொருளாதார வசதிக்கேற்ப நடைபெறுகிறது.

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களில், ஆதிசொக்கநாதர் கோயில், திருஏடகநாதர் கோயில் ஆகிய இரண்டு கோயில்களிலும் தொடர்ச்சியாக அட்டபந்தன கும்பாபிடேகம் நடைபெறுகிறது.

ஆதிசொக்கநாதர் கோயிலில் 1990, 2003, 4.9.2016 ஆகிய வருடங்களில் கும்பாபிடேகம் நடைபெற்றுள்ளது. அதற்கு முன் எப்பொழுது நடைபெற்றது என்ற குறிப்புகள் கிடைக்கவில்லை.

திருஏடகநாதர் கோயிலில் 8.6.1930-ஆம் ஆண்டு வைகாசி மாதம் 26-ஆம் நாள் ஞாயிற்று கிழமை, 10.7.1970-ஆம் ஆண்டு ஆனி மாதம் 26-ஆம் நாள் வெள்ளி கிழமை, 2.7.2001-ஆம் ஆண்டு ஆனி மாதம் 18-ஆம் நாள், 28.6.2017-ஆம் ஆண்டு ஆனி மாதம் 12-ஆம் நாள் புதன் கிழமை ஆகிய வருடங்களில் கும்பாபிடேகம் நடைபெற்றுள்ளது. இக்கும்பாபிடேகம் தொடர்பான கல்வெட்டுக்கள் திருவேடகநாதர் கோயிலில் காணப்படுகின்றன.

புட்டுசொக்கநாதர் கோயிலில் 1889-ஆம் ஆண்டு கும்பாபிடேகம் நடைபெற்றுள்ளது. அதற்குப் பிறகு கும்பாபிடேகம் நடத்தப்படவில்லை.

தொகுப்புரை

- ஆதிசொக்கநாதர், புட்டுசொக்கநாதர் கோயில்களில் காரண, காமிக ஆகம முறைப்படியும் திருஏடகநாதர் கோயிலில் காரண ஆகமப்படியும் பூசைகள் நடைபெறுகின்றன. நாள் வழிபாடாக, ஆதிசொக்கநாதர் கோயிலில் நான்கு காலப் பூசையும் புட்டுசொக்கநாதர் கோயிலில் இரண்டு காலப் பூசையும் திருஏடகநாதர் கோயிலில் ஆறு காலப் பூசையும் நடைபெறுகின்றன.

- மூன்று கோயில்களிலும் திங்கள், செவ்வாய், வியாழன், வெள்ளி, சனிக் கிழமைகளில் சிறப்பு வழிபாடு நிகழ்த்தப்படுகிறது.

- மாதமிரு முறை நடைபெறும் விழாக்களில் பிரதோச விழா மூன்று கோயில்களிலும் சிறப்பாகக் கொண்டாடப் பெறுகிறது.

- ஆண்டு விழாக்கள் இம்மூன்று கோயில்களிலும் தடையில்லாமல் நடைபெறுகிறது. சித்திரை வருடப்பிறப்பு, வைகாசி விசாகம், ஆனித் திருமஞ்சனம், ஆடிப்பூரம், ஆவணி மாதம் புட்டு சொக்கநாதர் கோயிலில் நடைபெறும் புட்டுத்திருவிழா, திருஏடகநாதர் கோயிலில் நடைபெறும் ஏட்டுத்திருவிழா, புரட்டாசி நவராத்திரி விழா, ஐப்பசி அன்னாபிடேகம், கார்த்திகை தீபவிழா, சங்காபிடேகம், மார்கழி திருவாதிரை, திருப்பள்ளி எழுச்சி, தைப்பூசம், மகாசிவராத்திரி, பங்குனி உத்திரம் போன்ற விழாக்களில் சிறப்பு வழிபாடும் பூசை முறைகளும் நிகழ்த்தப் பெறுகின்றன.

- மூன்று கோயில்களிலும் அபிடேகம், அலங்காரம், அருச்சனை, நைவேத்தியம், ஆராதனை, உற்சவம் ஆகிய ஆறு முறைகளில் தெய்வங்கள் வழிபடப்பெறுகின்றனர்.

- பத்துநாட்கள் கொண்டாடப்படும் கொடியேற்றத்துடன் கூடிய விழாக்கள் எதுவும் இக்கோயில்களில் நடைபெறுவதில்லை. திருஏடகநாதர் கோயிலில் முன்பு நடைபெற்றதாகவும் ஆனால் தற்பொழுது நடைபெறுவது இல்லை என்றும் கூறப்படுகிறது. அதனால் தான் இக்கோயிலில் மட்டும் கொடிமரம் காணப்படுகிறது.

- கும்பாபிடேகம் பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை ஆதிசொக்கநாதர் கோயில் மற்றும் திருஏடகநாதர் கோயில்களில் நிகழ்த்தப் பெறுகிறது. புட்டுசொக்கநாதர் கோயிலில் பொருளாதாரமின்மை காரணமாக 1889-ஆம் ஆண்டுக்குப் பிறகு கும்பாபிடேகம் நடைபெறவில்லை.

**சான்றெண் விளக்கம்**

1. Tamil Laxicon, Vol.6, p.3545.
2. பா.ரா.சுப்பிரமணியன், கிரியாவின் தற்காலத் தமிழகராதி, ப.909.
3. இரா.சீனிவாசன், சக்தி வழிபாடு, ப.2.
4. Swami Harshananda, All about Hindu Temples, p.1.
5. திருநாவு.,தேவா., பா.10.
6. தொல்.அகத்., நூற். 5.
7. சிலப்., 11: 64-66.
8. இரா.சாரங்கபாணி, வழிபாட்டு முறைகள், ப.27.
9. இரா.கணபதி, அம்மா, ப.151.
10. மணிமே., 1: 20-23.
11. கே.ஏ.பக்கிரிசாமி பாரதி, திருக்கோயில் நுண்கலைகள், ப.6.
12. சிவாச்சாரியார் சிவாகம நித்திய பூஜா விதி என்னும் ஸ்ரீ பரார்த்த நித்திய பூஜா விதி, ப.40.
13. ஆர்.சுப்பிரமணியம், பரார்த்த பூஜை, ப.65.
14. அகநா., .213: 2-7.
15. அகநா., 287: 2-6.
16. மதுரைக்., 455-460.
17. கா.கைலாசநாத குருக்கள், சைவத்திருக்கோவிற் கிரியை நெறி, ப.197.
18. திருமந்திரம், பா.1793.
19. மேலது, பா.1824.
20. திருவா., 8001. 92-95.
21. உ.த.கோவிந்தசாமி, ஆலயங்களின் வரலாறு, ப.117.
22. நேர்காணல், பா.பரசுராமப்பட்டர், நாள்: 5.7.2018.
23. வெ.நாராயணசுவாமி, பிரதோச வழிபாடு, ப.17.
24. நாகை.சி.அருண்குமார், பிரதோச மகிமை, ப.36.
25. ந.க.மங்கள முருகேசன், விநாயகர், ப.70.
26. மேலது, ப.70.
27. மேலது, ப.71.
28. வேங்கடவன், பூஜைக்குரிய பொருள்களும் பலன்களும், பக்.157-158.

29. திருமந்திரம், 7: 10: 5.

30. பெ.சுப்பிரமணியன், தமிழர் திருவிழாக்களும் பண்பாடும், ப.1.

31. கலைக்களஞ்சியம், தொகுதி.9, ப.417.

32. Tamil Laxicon, Vol.III, p.1896.

33. அ.தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.307.

34. பா.ராதேயன், இந்திய விழாக்கள், ப.8.

35. சிலப்., 5: 72-73.

36. மணிமே., 1: 70-72.

37. மு.சண்முகம்பிள்ளை, சங்கத் தமிழரின் வழிபாடும் சடங்குகளும், ப.220.

38. க.கணபதி, மு.நூ., பக்.52-53.

39. குறுந்., 41: 1- 2.

40. அகநா., 206: 1.

41. குறுந்., 223: 1.

42. சிறுபா., அடி. 201.

43. சிலப்., 5. 187-188.

44. மேலது, 141-146.

45. மணிமே., 1: 27-31.

46. மேலது, 43-53.

47. நற்., 348: 4.

48. சிலப்., 5: 64.

49. எஸ்.பி.சபாரத்தினம், சைவ ஆகமங்கள் ஓர் அறிமுகம், பக்.70,71.

50. கே.ஆறுமுக நாவலர், இந்து மத இணைப்பு விளக்கம், ப.145.

51. பெரிய.புரா., 1128.

52. சுந்தரர்.தேவா., 8204.

53. திருநாவு.தேவா., 1379.

54. திருவாசகம், 8002. 9-10.

55. திருநாவு.தேவா., 8083.

56. திருநாவு.தேவா., 5377.

57. தி.சு.நடராஜன், தமிழின் பண்பாட்டு வெளிகள், ப.77.

58. திருமந்திரம், 1800.

59. கா.கைலாசநாத குருக்கள், மு.நூ., ப.202.

60. ஸ்ரீ அருணந்தி நாயனார், சிவஞான சித்தியார், 50: 196.

61. அ.மு.பரமசிவானந்தம், தமிழ் நாட்டு விழாக்கள், பக்.53-54.

62. நேர்காணல், பா.பரசுராமப்பட்டர், நாள்: 5.7.2018.

63. கே.ஆறுமுகநாவலர், மு.நூ., ப.150.

64. நேர்காணல், பா.பரசுராமப்பட்டர், நாள்: 5.7.2018.

65. இராம லெட்சுமணன், நவராத்திரி வழிபாடு, ப.59.

66. மேலது, ப.156.

67. ஐங்குறு., 257: 1-2.

68. சி.என்.நாச்சியப்பன், விரத பூஜையின் பலன்கள், ப.65.

69. திருஞா.தேவா., தலமுறை, ப.692.

70. அகநா., 141: 6-11.

71. களவழி நாற்., 17:

72. ஜானகி ரங்கா, இந்திய நாட்டுத் திருவிழாக்கள், ப.178.

73. அ.இராகவன், தமிழ் நாட்டுத் திருவிளக்குகள், ப.65.

74. நஜன், தமிழர் பண்டிகைகளும் பண்பாடும், பக்.125-127.

75. பரிபா., 8: 6.

76. கலி., 150: 20.

77. பரிபா., 11: 77-78.

78. நஜன், மு.நூ., ப.81.

79. சீர்காழி வி.இராம்தாஸ், விழாக்களும் விரதங்களும், ப.104.

80. K.K.Pillai, The Sucindram Temple, p.233.

81. p.v.Jagadisa Ayyar, South Indian Festivities, Madras, p.43.

82. p.v.Jagadisa Ayyar, op.cit., p.44.

83. எஸ்.நாராயணசுவாமி, சிவாலயத்திருமேனிகள், ப.501.

84. நஜன், மு.நூ., ப.116.

85. திருமுருகா., 181.

# இயல் - 4

## திருக்கோயில்களின் நிருவாகம்

ஆலயங்கள் சிறிய அளவிலான வழிபாட்டு இடங்களிலிருந்து பெரிய அளவு சமுதாய மையங்களாக உயர்ந்த காலம் வரை அதன் தேவைகளைக் கவனிக்கப் பணியாளர்கள் தேவைப்பட்டனர். கொடையாக வழங்கப்பட்ட நிலம், பொன் ஆகியவை அதிகரிக்க அதிகரிக்க அவற்றைப் பாதுகாக்க வேண்டிய அவசியம் அதிகரித்தது. சமூகத்தில் ஆலயங்களின் பங்கு அதிகரித்ததால் அவற்றின் நிருவாகத்தில் அதிகக் கவனம் செலுத்த வேண்டியதாயிற்று. அதனால் கோயில்களில் பணியாளர்களை மன்னர்கள் நியமிக்கத் தொடங்கினர். தமிழகத்தில் மன்னர் ஆட்சி முடிவிற்கு வந்ததன் பின் இருபதாம் நூற்றாண்டில் அறநிலையத்துறை என்ற அமைப்பு உருவாக்கப்பட்டு, அதன் கீழ் கோயில்களின் நிருவாகம் செயல்பட்டது. அவ்வகையில் ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் உள்ள நிருவாகச் செய்திகளைக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

### மன்னர்கள் கண்காணிப்பில் கோயில்கள்

வெகு காலமாகவே ஆலயங்களும் மடங்களும் அரசர்களின் நேரடிக் கண்காணிப்பில் செயல்பட்டன. அதிகாரிகள், சிற்றரசர்கள் ஆகியோர் மூலம் கொடைகள், திருப்பணிகள், விழாக்கள் ஆகியன சீரிய முறையில் நடைபெற்றன. ஆலய நிருவாகத்தில் ஏற்பட்ட ஒழுங்கீனங்களைக் களையவும் ஆலயத்திற்குச் சேர வேண்டிய பொருட்களைக் களவாடியவர்களைத் தண்டிக்கவும் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளைப் பல கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

### நிருவாகம்

தமிழகத்தில் உள்ள கோயில்கள் அனைத்துமே புராதனமானவைகள். பேரரசர்கள், குறுநில மன்னர்கள், சிறு சிறு பாளையக்காரர்கள் மற்றும் செல்வந்தர்கள் ஆகியோரது பக்திச் சின்னங்களாக இந்த ஆலயங்கள் விளங்குகின்றன.

திருக்கோயில்களின் தோற்றத்திற்குரிய வரலாற்றோடு தொடர்புடையது நிருவாகம். ‘‘மக்களின் வாழ்வில் தங்கள் பணிகளை நிறைவேற்றிக் கொள்ள ஒரு முறையான அமைப்பு தேவைப்படுகிறது. அதனை நிருவாகம் என்று சொல்லலாம். அமைப்பின் அதிகாரத்தையும் பொறுப்பையும் விளக்கி அவைகளின் மாற்றங்களைப் பற்றியும் எடுத்து குறிக்கோளை நல்ல முறையில் நிறைவேற்றும் பணிகளை உடையவர்களின் செயல்பாடுகளையும் திறமைகளையும் விளக்குவதே நிருவாகம் எனப்படும்’’[1] என்பர்.

## திருக்கோயில்கள் சார்ந்த சட்டங்கள்

தமிழகத்தில் ஆங்கிலேயர் கால ஆலயக்கண்காணிப்பு முறை நமது பாரம்பரியத்தை மதித்து வகுத்ததேயாகும். இங்கிலாந்தில் 1853-இல் "சேரிட்டபிள் டிரஸ்ட்ஸ் சட்டம்" என்ற சட்டம் அவர்களது அற நிறுவனங்களுக்காக ஏற்பட்டது. அதன்படி அற நிறுவனங்கள் யாவும் "சேரிட்டி கமிசனர்கள்" என்ற ஆணையர்களின் ஆளுகைக்குள் கொண்டு வரப்பட்டன. அரசின் நேரடிக் கவனம், மேற்பார்வை, செயல்படுத்தும் கடமை ஆகிய துறைகளால் அறக்கட்டளைகள் பாதுகாக்கப்பட்டன. இதன் சிறப்பு என்னவென்றால், பொதுவாக அறக்கட்டளைகளைச் செயல்படுத்துவதில் அவற்றின் நிறுவனர் எழுதிவைத்த சாசனப்படிதான் நிபந்தனைகளுக்கு உட்பட்டுச் செயல்படுத்த இயலும். நிபந்தனைகள் மீறப்படுமானால் நீதிமன்றம் அவற்றைத் தடை செய்யலாம். அறக்கட்டளையை விரிவு படுத்தவும் அறங்காவலர்களுக்கு அதிகாரம் இல்லை. ஆனால் ஆங்கிலேயரது இந்தச் சட்டம் அறக்கட்டளைகளை விரிவுபடுத்தவோ, அதன் பொது நன்மையைக் கருதி நிபந்தனைகளை மாற்றவோ "சேரிட்டி கமிசனர்களுக்கு" அதிகாரம் வழங்கியது. மேலும் அறக்கட்டளை வருமானத்தை மட்டும் செலவு செய்வதற்கு அறங்காவலர்களுக்கு அதிகாரம் உண்டு என்ற நிலையை மாற்றி அதன் மூலதனத்தையே தேவையான முறையில் பயன்படுத்தலாம் என்ற உத்தரவு வழங்க சேரிட்டி கமிசனர்களுக்கு அதிகாரம் வழங்கியது.

இந்தச் சட்டத்தை அப்படியே பின்பற்றி நம் நாட்டில் தயார் செய்யப்பட்டது தான் இந்து சமய அறநிலையங்களின் சட்டம். இந்தச் சட்டம் 30.09.1951-லிருந்து அமலுக்கு வந்தது.

முந்திய 1927-ஆம் வருடத்திய 2-வது சட்டத்தில் அறநிலையங்கள் என்ற தொடர் கிடையாது. மேலும், அந்தச் சட்டத்தின் படி அமைந்த வாரியம் நீக்கப்பட்டு அதன் அதிகாரங்கள் யாவும் அரசின் துறைகளில் ஒன்றான இந்து சமய அறநிலையத் துறையின் ஆணையர் வசம் ஒப்படைக்கப்பட்டது.

ஆனால் இந்தச் சட்டம் பலகோணங்களில் தாக்குதலுக்கு உள்ளானது. அரசின் நேரடிப்பார்வையால் ஆலயங்களையும் அற நிலையங்களையும் கொண்டு வரும் போது அவற்றுள் மடங்கள், மடங்களைச் சார்ந்த கோயில்கள், அற நிறுவனங்கள் மற்றும் மடாதிபதிகள் தங்களது சமய உரிமை பறிக்கப்படுவதாகவும் சமயச்சார்பற்ற அரசு இவ்விதக் கட்டுப்பாட்டை ஏற்படுத்துவது அரசியல் சாசனத்திற்கு விரோதம் என்றும் வழக்குகள் தொடர்ந்தனர். இவற்றின் முடிவு உச்சநீதிமன்றத்தின் மூலம் சட்டத்தின் பல பிரிவுகள் செல்லாது என்று அறிவிக்கப்பட்டது. மடாதிபதிகளின் சமயக் கொள்கைகளுக்கும் செயல் முறைகளுக்கும் பாதுகாப்பு வழங்கப்பட்டது.

அவர்களது ஆலயங்களையும் அறக்கட்டளைகளையும் பழக்க வழக்கத்திற்கு உட்பட்டு அவர்களே பாதுகாப்பது எனவும் தணிக்கை போன்ற அரசின் கட்டுப்பாட்டை அவர்கள் கடைப்பிடிப்பதென்றும் உரைத்தது. பாத காணிக்கைகளை அவர்கள் ஏற்றுக்கொண்டு கணக்கு வைத்துச் செலவு செய்வதென்றும் வரையறை செய்யப்பட்டது. இவற்றில் பல செய்திகள் உச்ச நீதி மன்றத்தால் 1954-இல் முடிவு செய்யப்பட்டன. அரசு ஏற்கும் மேற்பார்வைக்கு ஆலய நிதிகளிலிருந்து வரி என்று பெறாமல் ‘சகாயத்துகை’ என்றும் ‘தணிக்கைக்கட்டணம்’ என்றும் பெறுவது எனச் சட்டத்தில் திருத்தம் செய்ய வேண்டியதாயிற்று.

1951-ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்ட சட்டம் மற்றொரு திருத்தத்திற்கு உட்பட வேண்டிய காரணம் ஏற்பட்டது. 1953-இல் ஆந்திர மாநிலச் சட்டம் ஏற்பட்டு விட்டது. 1951-இல் ஏற்பட்ட சட்டம் தமிழ்நாடு, ஆந்திரம் இரண்டுக்கும் பொதுவாக அமைக்கப்பட்டு இருந்ததால், ஆந்திரம் விலகியதும் மீண்டும் சட்டத்திருத்தத்திற்கு உள்ளாகியது. திருமலை (திருப்பதி) நமது தமிழகத்தை விட்டு விலகியது. அதனைப் பற்றிய சட்டப்பகுதியும் நீக்கப்பட்டது. 1951-ஆம் வருடத்தில் சட்டத்தில் ஏற்பட்ட மற்ற திருத்தங்கள் எல்லாம் நிருவாகச் சீரமைப்பிற்காக ஏற்பட்டவையே ஆகும்.

கோயில்கள் என்றால் என்ன என்பதும் கோயில்களை வகைப்படுத்துவதும் அவற்றிற்கான அறங்காவலர்களை பரம்பரை மற்றும் பரம்பரை இல்லாதவர்கள் என்று வகைப்படுத்துவதும் எல்லாவற்றையும் அரசு கண்காணிக்க ஆணையர் தலைமையில் ஒரு நிருவாகத்துறை அமைவதும் தான் 1959-ஆம் வருடம் ஏற்படுத்தப்பட்ட 22-வது சட்டமான இந்து சமய அறக்கட்டளைகள் சட்டம் ஆகும். இச்சட்டம் தான் அறக்கட்டளைகள் சட்டம் ஆகும். இச்சட்டம் தான் தற்பொழுது அமலில் உள்ளது.

கோயில்களைச் சட்டத்திற்கு உட்பட்டவை என்றும் உட்படாதவை என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். சட்டத்திற்கு உட்படாத கோயில்கள் மீது அரசுக்கு எந்த அதிகாரமும் கிடையாது. சட்டத்திற்கு உட்பட்ட கோயில்கள் மீது தான் அரசு சட்ட விதிகளைப் பிரயோகிக்க இயலும். ஆனால் தமிழ்நாட்டில் இருக்கும் அல்லது தோன்றும் கோயில்கள் அனைத்தும் சட்டத்திற்கு உட்பட்ட கோயில்களாகவே முதலில் கருதப்படும். ஒரு கோயில் சட்டத்திற்கு உட்படாதது அதாவது தனியார் கோயில் என்று கூறுபவர்கள் அறநிலையத்துறை அதிகாரிகளுக்குச் சட்டப்படி மனுச் செய்து அப்படி ஒரு உத்தரவைப் பெற வேண்டும். அப்படிப் பெறாத வரை யாரும் உரிமை கொண்டாடி அதனை நிருவகிக்க முடியாது.

தமிழகத்தில் சிற்றூர் முதல் பேரூர் வரை உள்ள திருக்கோயில்களில் நிருவாகப் பொறுப்புகள் கீழ்க்கண்ட வகைகளில் அமையும்.

1. அறநிலையத்துறைக்கு உட்பட்ட நிருவாகம்.
2. இனத்தார் நிருவாகம்
3. ஊர் பொதுமக்களால் நிருவகிக்கப்படும் நிருவாகம்
4. பரம்பரை நிருவாகம்
5. மடங்களின் நிருவாகம் என்பன.

இவை தவிர அதிக வருமானம் உள்ள கோயில்களின் பாதுகாப்பின் கீழ் சிறுசிறு கோயில்கள் கொண்டு வரப்பட்டுள்ளது. அவ்வாறு மதுரை மீனாட்சிஅம்மன் கோயிலின் உபகோயிலாக அருள்மிகு ஆதிசொக்கநாதர் திருக்கோயில் அமைந்துள்ளது.

அருள்மிகு புட்டுசொக்கநாதர் திருக்கோயில் இனத்தார் நிருவகிக்கும் கோயிலாக அமைந்துள்ளது. திருஏடகநாதர் திருக்கோயில் அறநிலையத்துறை நிருவாகிக்கும் கோயிலாகும்.

### அலுவலர்கள்

தமிழகச் சட்டம், ஆலயம், மடம் ஆகிய இரண்டு சமய நிறுவனங்களுக்காக ஏற்பட்டதாகிறது. இவற்றைப் பாதுகாப்பது அரசின் கடமை ஆகும். ஆலயங்களைச் சார்ந்தும் மடங்களைச் சார்ந்தும் ஏற்படும் அறக்கட்டளைகளும் சட்டத்தினுள் அடங்கும். அரசின் முக்கியப் பொறுப்பு பொருட்பாதுகாப்பு, இரண்டாவது சமயப் பழக்க வழக்கமான வழிபாட்டை யாரும் சிதைவுறச் செய்திடாமல் தடுத்தல், இவற்றின் அடிப்படையில் ஏற்பட்ட விதிமுறைகளே சட்டத்தின் பல பிரிவுகளாக அமைந்துள்ளன. இச்சட்டத்தின் படி அமைந்ததே இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை ஆகும்.

அறநிலைய ஆட்சித்துறையின் தலைவர் மாநிலம் முழுவதற்கான ஆணையர் ஆவார். இவருக்குக் கீழ் மண்டலங்களுக்கு இணை ஆணையர்களும் மாவட்டம் தோறும் துணை மற்றும் உதவி ஆணையர்களும் உள்ளனர். இவர்களின் பணி ஆலய அறங்காவலர்கள் ஆலயங்களைச் சட்டத்திற்கு உட்பட்டு நிருவகிக்கச் செய்வதேயாகும். அறங்காவலர்களுக்கு உதவியாக அரசு, செயல் அலுவலர்களை நியமிக்கிறது. ஆகவே அறங்காவலர்களும் செயல் அலுவலர்களும் ஆலய நிருவாகத்தின் அடிப்படைப் பணியாளர்கள் ஆவர்.

கோயில்களின் வருமானத்திற்கேற்ப அவை பிரிக்கப்பட்டு அவற்றிற்குரிய செயல் அலுவலர் நியமிக்கப்படுகிறார். இவ்வித வருமானத்தின் அடிப்படையிலேயே உதவி ஆணையர், துணை ஆணையர் மற்றும் ஆணையரின் நேரடிக் கண்காணிப்பு அமைக்கப்பட்டுள்ளது.

ஆலயங்கள் மற்றும் அறக்கட்டளைகளின் அறங்காவலர்கள் அறநிலையச் சட்டத்தின் படி நியமிக்கப்படுகின்றனர். வருமானத்தின் அடிப்படையில் உதவி ஆணையரின் மேற்பார்வைக்கு உட்பட்டு ஆலயங்களுக்கு உதவி ஆணையரும் துணை ஆணையர் மேற்பார்வைக்கு உட்பட்டவைக்குத் துணை ஆணையரும் ஆணையரின் மேற்பார்வைக்கு உட்பட்டவைகளுக்கு ஆணையரும் நியமிக்கப்படுவர். தற்சமயம் ஒரு குறிப்பிட்ட வருமானத்திற்கு மேற்பட்ட ஆலயங்களுக்கு அறங்காவலர்களை அதிகாரம் அரசின் ஆணையின் மூலம் அரசே நியமிக்கிறது. அறங்காவலர்களைத் தேர்வு செய்யும் பணிக்கு மாவட்டம் தோறும் ஒரு மண்டலக் குழுவையும் அரசு நியமித்துள்ளது. இக்குழுவின் பரிந்துரைப்படி நியமனம் செய்யப்படுகிறது. இவ்வித நியமன விதிகள் பரம்பரை அறங்காவலர் உள்ள ஆலயங்களுக்குப் பொருந்தாது.

## கோயில் அலுவர்கள்

ஆலயங்களில் முற்காலத்தில் பணியாற்றி வந்த பணியாளர்களின் பெயர்கள் கல்வெட்டுகளில் இடம் பெற்றுள்ளன. "தேவகன்மி, ஸ்ரீகாரியம், ஆராய்ச்சி, மேநாயகம், கண்காணி. கரணத்தான்"[2] ஆகிய பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ள போதிலும் அவர்களின் பணிகள் பற்றிய விவரங்கள் தெளிவாக இல்லை. இது போலவே "ஆர்யபோகம் மாணிகள், பதியிலார் திருக்கள், நட்டுவர், கரணர், மெய்மட்டு, மோர்வியன், வங்கியன், வாத்தியம் வாசிப்போர்"[3] ஆகிய பணியாளர்கள் பற்றிய விவரங்கள் திருவையாறு சிவாலயக் கல்வெட்டுகளில் கிடைத்துள்ளன. திருவரங்கத்தில் வழக்கிலிருந்த நிருவாக முறை, பணியாற்றிய பணியாளர்கள், இம்முறைகளில் இராமானுஜர் ஏற்படுத்திய சட்ட திட்டங்கள் ஆகிய தகவல்களைக் கோயிலொழுகு என்ற நூல் தெரிவிக்கிறது.

நகரத்தாருக்குரிய கோயில்களில் பணியாற்றிய தேவ கன்மிகள் ஸ்ரீகாரியஞ் செய்வார்கள், ஸ்ரீமகேஸ்வரக் கண்காணி, வயிராவி, பண்டாரம், குடிநீங்காக் காராண்மை, பிரமாதிராயன், கோபுரக்கணக்கு, நியாய பரிபாலர், கனக பரிபாலர் போன்ற பணியாளர்களின் கடமைகள் கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ளன."[6] தற்காலத்தில் கோயில்களின் வசதிக்கும் பக்தர்களின் வருகைக்கும் ஏற்ப ஆலயப் பணியாளர்களின் எண்ணிக்கை அமைகிறது.

ஆதிசொக்கநாதர் கோயில், அருள்மிகு மதுரை மீனாட்சி சொக்கநாதர் கோயிலின் உபகோயிலாகச் செயல்பட்டு வருவதால் மீனாட்சி அம்மன் கோயில் அலுவலகத்தில் பணியாற்றுபவர்களே ஆதிசொக்கநாதர் கோயிலின் வெளித்துறை நிருவாகத்தையும் கவனித்து வருகின்றனர்.

புட்டுசொக்கநாதர் கோயில் இனத்தார் நிருவாகத்தால் நிருவகிக்கப்படுவதால் இதன் நிருவாகத் தலைவராக இ.மாணிக்கம் என்பவர் பணியாற்றி வருகிறார்.

திருஏடகநாதா் கோயில் அறநிலையத்துறை கட்டுப்பாட்டில் உள்ளது. அறநிலையத்துறை சார்பாக இக்கோயிலில் மூன்றாம்நிலைச் செயல் அலுவலராக ஆ.இளஞ்செழியன் என்பவர் பணியில் உள்ளார். இது தவிர பரம்பரை அறங்காவலராக எஸ்.எல்.சேவுகன் செட்டியார் என்பவர் உள்ளார்.

இப்பணியாளர்கள் திருக்கோயிலின் ஆண்டுக்கான உத்தேச வரவு, செலவுக் கணக்குகளை முன் கூட்டியே தயாரித்தல், ஆண்டு முடிவில் தணிக்கை செய்யப்பட்ட வரவு, செலவுத் திட்டத்தைத் தயாரிக்க ஏற்பாடு செய்தல், வழிபாடு, விழாக்கள் ஆகியவற்றிற்கான செலவுகளைக் கணக்கிட்டு மேலதிகாரியிடம் அனுமதி பெறல், ஆலயத்திற்குரிய வரவை உரிய முறையில் முதலீடு செய்தல், பணியாளர்களைக் கண்காணித்தல் போன்ற முக்கியப் பணிகளைக் கவனித்து வருகின்றனர்.

### எழுத்தர்

எழுத்தர் என்பவர் நிருவாக அலுவலருக்கு உதவியாக இருப்பவர். இவர் வரவு, செலவுக் கணக்குகளை பதிவேடுகளில் பதிவு செய்து பாதுகாத்து வைப்பவர். வரவு செலவுத் திட்டங்களைத் தயாரிக்க நிருவாக அலுவலருக்கு உதவியாக இருப்பார். ஆதிசொக்கநாதர் கோயிலில் ஆ.பகவதி என்பவரும் புட்டுசொக்கநாதர் கோயிலில் க.முத்துவேல் என்பவரும் திருஏடகநாதர் திருக்கோயிலில் கு.முத்துவேல் என்பவரும் எழுத்தராக உள்ளனர்.

### உள்துறைப் பணியாளர்கள்

ஆதிசொக்கநாதர் திருக்கோயில், புட்டுசொக்கநாதர் திருக்கோயில், திருஏடகநாதர் திருக்கோயில் ஆகிய கோயில்களில் வழிபாடுகள், அத்துடன் தொடர்புடைய செயல்கள் ஆகியவற்றை உள்துறைப் பணியாளர்கள் கவனித்துக் கொள்கின்றனர்.

### அர்ச்சகர்

சிவபூசை செய்பவர் சிவாச்சாரியார் எனப்படுவார். இவர்களைக் குருக்கள், பட்டர் என்றும் அழைக்கின்றனர். ஆலயத்தின் பணிகளில் முக்கிய பங்கு அர்ச்சகருக்கே உரியது. ஆலயங்களில் முறைப்படி வழிபாடுகள் நடைபெற வேண்டியதன் அவசியத்தை,

> **"சாற்றிய பூசைகள் தப்பிடில் தானே**
> **முன்னவனார் கோவில் பூசைகள் முட்டிடின்**
> **மன்னர்க்குத் தீங்குள; வாரி வளங்குன்றும்**
> **கன்னம்களவு மிகுந்திடும் காசினி"**[6]

என்னும் பாடல் புலப்படுத்தும்.

கோயில்களில் முறைப்படிப் பூசைகள் நடத்துவது, பக்தர்களின் விருப்பத்திற்கேற்ப அருச்சனைகள் புரிவது, விசேட அபிடேகங்கள், பூசைகள் ஆகியவற்றிற்கு ஏற்பாடு செய்வது, விழாக்களுக்கு ஏற்பாடு செய்வது, ஆகியவை அர்ச்சகர்களின் கடமையாகும். ஒவ்வொரு காலப் பூசைக்கு முன்னர் தெய்வத் திருவுருவங்களை நீராட்டுதல், மலர் மாலைகள், ஆடை, கவசம் ஆகியவற்றை அணிவித்தல், தீபத்தை இறையுருவங்களுக்கு முன் காட்டித் தீபாராதனை செய்தல், மலர் போன்றவற்றைத் தூவி உரிய மந்திரங்களைக் கூறி அருச்சனை செய்தல், இறைவனுக்குரிய மந்திரங்களைக் கூறி இறைவனின் அனுக்கிரகத்தை நாடுதல் ஆகிய செயல்களை முறையாக நடத்துவதே அர்ச்சகருக்குரிய கடமைகளாகும்.

பக்தர்கள் விரும்பினால் அவர்கள் கொடுக்கும் தேய்காய், பழம், வெற்றிலை, பாக்கு, ஊதுபத்தி, மலர் ஆகியவற்றை இறைவனுக்குச் சமர்ப்பணம் செய்து, அருச்சனை செய்தல், தியான மந்திரங்களைக் கூறி இறைவனின் அருளை நாடுதல் ஆகிய செயல்களை முறையாக நடத்துவதே அர்ச்சகருக்குரிய கடமைகளாகும்.

அருச்சனை செய்வோரின் நலனை நாடி இறைவனின் திருநாமங்களை உச்சரித்து அருச்சனை நடத்துவதும் உண்டு. இத்தகைய பணிகளை ஆதிசொக்கநாதர் கோயிலில் கோ.சுவாமிநாதன் என்பவரும் புட்டுசொக்கநாதர் கோயிலில் எஸ்.சிவசங்கர் என்பவரும் திருஏடகநாதர் திருக்கோயிலில் த.ரா.செண்பகப்பட்டர், பா.பரசுராமப்பட்டர் போன்றோரும் ஆற்றி வருகின்றனர்.

## பரிசாரகர்

நித்திய வழிபாடுகளில் அர்ச்சகருக்குத் துணையாகப் பரிசாரகர் பணியாற்றுகிறார். பூசைக்கு முன் இறைவன் திருமேனிகளை நீராட்டி அலங்காரம் செய்வது, எண்ணெய் விட்டுத் தீபங்களை ஏற்றுவது, நைவேத்தியப் பொருட்களை மடைப்பள்ளியில் சமைப்பது, அபிடேகத்திற்கு நீர் எடுப்பது, பக்தர்கள் விசேடமாக நைவேத்தியம் செய்ய விரும்பினால் நைவேத்தியங்கள் தயாரிப்பது ஆகியனவே பரிசாரகருக்குரிய கடமைகள் ஆகும். ஆதிசொக்கநாதர் கோயிலில் சி.மீனாட்சி சுந்தரம் என்பவரும் திருஏடகநாதர் கோயிலில் நா.கணேசன் என்பவரும் பரிசாரகர்களாகப் பணிபுரிகின்றனர்.

“வசதியுள்ள கோயில்களில் சமையல் தொடர்புடைய பணிகளைப் புரிய சுயம்பாகு என்ற பணியாளரும் இறையுருவங்களை நீராட்ட திருமஞ்சனம் எடுக்கிறவர்கள் என்ற பணியார்களும் பூசைப்பொருட்களை விநியோகம் செய்ய விநியோகம் செய்வார் என்ற பணியாளர்களும் பணியிலிருப்பதுண்டு.”[7]

மூன்று கோயில்களிலும் பூசையுடன் தொடர்புடைய செயல்களை அர்ச்சகர், பரிசாரகர் ஆகிய இருவருமே செய்கின்றனர்.

## ஓதுவார்

முதலாம் இராசராசசோழன் தஞ்சை பெரிய கோயிலில் பதிகங்களை இசைக்க 48 பேர்கள் அடங்கிய 'திருப்பதியம் பாடுவோர்' என்ற குழுவினரையமைத்தான்.''[8] பல கோயில்களில் வேத பாடசாலை, தேவார பாடசாலை ஆகியன நிறுவப்பட்டுள்ளன. பூசைகள் நடைபெறும் போது தேவாரம் போன்ற பக்திப்பாடல்களை இசையுடன் பாட ஓதுவார்கள் எனப்படுபவர் நியமிக்கப்படுகிறார்கள். மூன்று கோயில்களில் திருஏடகநாதர் திருக்கோயிலில் மட்டும் பாலமுருகன் என்பவர் ஓதுவாராக நியமிக்கப்பட்டுள்ளார்.

## காவலர்கள்

மூன்று கோயில்களிலும் காவல் வேலை புரிய காவலாகள் உள்ளனர். பொதுவாக ஆலயத்தின் கதவுகளைத் திறப்பது, மூடுவது, காவல் புரிவது ஆகியனவே இவர்களது பணிகள். அது தவிர மணியடித்தல், அருச்சனைசீட்டு விற்பனை செய்வது என்பதும் இவர்களது வேலையாக உள்ளது.

## கணினி உதவியாளர்

தற்காலத்தில் அனைத்தும் கணினிமயமாக்கப்பட்டு விட்டதால் வரவு, செலவு கணக்குகள் அனைத்தையும் கணினியில் பதிவு செய்வதற்காக அமைக்கப்படுபவரே கணினி உதவியாளர் ஆவார். திருஏடகநாதர் கோயிலில் போ.பிருந்தா என்பவர் கணினி உதவியாளராக உள்ளார். ஆதிசொக்கநாதர் கோயில் கணக்குகள் அனைத்தும் அருள்மிகு மீனாட்சிஅம்மன் கோயில் கணினியில் பதிவுசெய்யப்பட்டு வருகிறது. புட்டுசொக்கநாதர் கோயிலில் கணினியில் வரவு செலவு கணக்குகள் எழுத்தராலேயே பதிவு செய்யப்படுகிறது.

## துப்புரவாளர்கள்

ஆலயத்தின் வெளிப்புறங்களைக் கூடத் தூய்மையாகப் பராமரிப்பதன் அவசியத்தை உணர்ந்த திருநாவுக்கரசர் உழவாரத் திருப்பணியை மேற்கொண்டார். இம்மூன்று கோயில்களிலும் மூன்று பெண்மணிகள் துப்புரவாளர்களாகப் பணிபுரிகின்றனர்.

## திருக்கோயில் சொத்துக்கள்

சொத்து என்பது ஒருவனுடைய உடைமையைக் குறிப்பது மட்டுமன்று அவ்வுடமை மேல் ஒருவன் கொண்டாடும் உரிமையையும் குறிக்கிறது. அவ்வுரிமைக்குரிய சொத்துகள் இரண்டு வகைப்படும். அவை:

1. **அசையும் சொத்துகள்**
2. **அசையாச் சொத்துகள்**

## அசையும் சொத்துகள்

அசையும் சொத்துகள் என்பது பணம், பொன் நகைகள், காணிக்கைப் பொருட்கள் போன்றவற்றைக் குறிக்கும். ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் பணம், நகைகள் போன்ற அசையும் சொத்துகள் உள்ளன. இவை அறங்காவலர், இனத்தார், மக்கள் போன்றவர்களால் வழங்கப் பட்டவையாகும்.

பக்தர்கள் விரும்பும் பொருட்களைக் காணிக்கையாக அளித்து வழிபடும் முறை இம்மூன்று கோயில்களிலும் உண்டு என்பதால் அவை அசையும் சொத்துக்களாக விளங்குகின்றன.

## அசையாச் சொத்துக்கள்

அசையாச் சொத்துக்கள் என்பது நிலம், வீடுகள், குளம், தோட்டம் போன்றவற்றைக் குறிக்கும்.

ஆதிசொக்கநாதர் திருக்கோயிலுக்கு என்று தனியான சொத்துக்கள் எதுவும் இல்லை. மதுரை மீனாட்சிஅம்மனின் உபக்கோயில் என்பதால் அதனைச் சார்ந்தே இக்கோயில் அமைந்துள்ளது.

புட்டுசொக்கநாதர் திருக்கோயிலுக்கென்று ஆறு ஏக்கர் நிலம் உள்ளது. இதில் இரண்டரை ஏக்கரில் கோயில், 36 கால் மண்டபம் போன்றவை அமைந்துள்ளன. மீதம் உள்ள மூன்றரை ஏக்கர் காலிமனை கோயிலின் பின்புறம் அமைந்துள்ளது. கோயிலுக்குச் சொந்தமாக இரண்டரை ஏக்கர் விவசாய நிலமும் உள்ளது.

திருஏடகநாதர் திருக்கோயிலுக்கு 88 ஏக்கர் விவசாய நிலம் திருவேடகத்தைச் சுற்றி சிறுசிறு கிராமங்களில் அமைந்துள்ளது. இரண்டு ஏக்கரில் வீட்டடி மனை திருவேடகக் கோயிலைச் சுற்றியும் இருபத்தொரு வீடுகள் கோயிலை ஒட்டிய அக்ரகாரத் தெருவிலும் அமைந்துள்ளன.

## கட்டளைகள்

வழிபாடு சிறப்புடன் நடைபெறுவதற்கு அறக்கொடையாளர்கள் பல கட்டளைகளுக்கு அறக்கொடைகளை வழங்கியுள்ளனர். பூசைகளும் திருவிழாக்களும் தவறாது நடைபெறுவதற்கு கொடையாளர்கள் உதவி வருகின்றனர். பலதரப்பட்ட மக்கள் கட்டளையில் பங்கு கொள்வதன் மூலம் கோயிலுக்கும் சமூகத்திற்கும் உள்ள நெருங்கிய தொடர்பினை அறிய முடிகிறது. இம்மூன்று கோயில்களிலும் நாள் வழிபாட்டிலும் திருவிழாக்களிலும் மக்கள் பெரும் ஈடுபாடு காட்டி வருகின்றார்கள் என்பதைக் கட்டளைகள் மூலம் அறிய முடிகின்றது.

## கோயில் அமைந்துள்ள நிலப்பரப்பு

ஆதிசொக்கநாதர்கோயில் 1092-சதுரஅடி கொண்ட நிலப்பரப்பை உடையது. புட்டுசொக்கநாதர் கோயில் இரண்டரை ஏக்கர் நிலப்பரப்பும் திருஏடகநாதர் கோயில் 0.68.5 கெக்டர் பரப்பும் கொண்டுள்ளது.

## கோயிலின் வருவாயினங்கள்

கோயிலின் பாதுகாப்பும் நிருவாகமும் பணியாளர்களைப் பணியில் அமர்த்துவதும் திருவிழாக்களும் வழிபாடுகளும் வருவாயை அடிப்படையாகக் கொண்டே நடைபெறுகின்றன.

ஆதிசொக்கநாதர் கோயிலில் மக்கள் வழங்கும் நன்கொடை, உண்டியல் வருமானம் தவிர மீனாட்சி அம்மனின் உபகோயில் என்பதால் அங்கிருந்தும் இக்கோயிலுக்கு வழிபாடு, திருவிழாக்காலங்களுக்குச் செலவு செய்யப்படுகிறது.

புட்டுசொக்கநாதர் கோயில் இனத்தார் கோயில் என்பதால் அவர்கள் வழங்கும் நன்கொடை, மக்கள் வழங்கும் நன்கொடை, உண்டியல் வருமானம், நிலம் போன்றவற்றிலிருந்து வரும் வாடகை போன்றவற்றால் பணியாளர்களின் ஊதியம், வழிபாடு, திருவிழாச் செலவினங்களைக் கவனித்துக் கொள்ளமுடிகிறது.

திருஏடகநாதர் திருக்கோயிலில் நிலம், வீடு போன்றவற்றிலிருந்து வரும் வருமானம், மக்கள் நன்கொடை, உண்டியல் வருமானம் போன்றவற்றால் கோயில் செலவினங்கள் மேற்கொள்ளப் பெறுகிறது.

## கல்வெட்டுச் செய்திகள்

திருஏடகநாதர் கோயிலில் பாண்டியர்களில் மாறவர்மன் மகனாகிய திரிபுவனச் சக்கரவர்த்தி சுந்தர பாண்டியன், சடாவர்மனாகிய திரிபுவனச் சக்கரவர்த்தி பராக்கிரம பாண்டியன், சடாவர்மனாகிய திரிபுவனச் சக்கரவர்த்தி விக்கிரம பாண்டியன்,

சடாவர்மனாகிய திரிபுவனச் சக்கரவர்த்தி ஸ்ரீ வல்லபதேவன் இவர்கள் காலங்களிலும் கிருஷ்ணதேவ மகாராயர் காலத்தில் சகம்-1448-இல் பொறிக்கப்பெற்ற கல்வெட்டு என மொத்தம் பதினான்கு கல்வெட்டுக்கள் இக்கோயிலின் மதில் சுவர்களில் காணப்படுகின்றன. இவை தொல்பொருள் துறையினரால் படியெடுக்கப்பட்டு பாதுகாக்கப் பெறுகின்றன.

மாறவர்மனாகிய திரிபுவனச் சக்கரவர்த்தி சுந்தரபாண்டியன் சோணாட்டைக் கைப்பற்றி, முடிகொண்ட சோழபுரத்தில் விஜயாபிடேகமும் வீராபிடேகமும் செய்து கொண்டவன் என்றும் அவனே சோணாடு வழங்கிய சுந்தரபாண்டியனென்றும் கோனேரின்மை கொண்டான் என்னும் பட்டம் பெற்றவன் என்றும் இக்கோயில் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.

மாறவர்மன் சுந்தரபாண்டியனது ஏழாம் ஆண்டில் இக்கோயிலுக்கு நிலம் தரப்பட்டுள்ள செய்தி இக்கல்வெட்டில் காணப்படுகிறது.

திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் மாறவர்மன் சோணாடு வழங்கியருளிய சுந்தரப்பாண்டியரது எட்டாமாண்டில் திருவேடகமுடையார்க்கு நிலம் தரப்பட்டிருக்கின்றது.

மாறவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி சோணாடு வழங்கியருளிய வீரசுந்தரபாண்டியரது (கி.பி.1216-35) ஒன்பதாமாண்டில் பாகனூர் கூற்றத்துத் திருவேடகமுடைய நாயனார் கோயிற்கு நிலம் வழங்கப்பட்டிருக்கிறது.

மாறவர்மன் கோணாடு கொண்டு முடி கொண்ட சோழபுரத்து வீராபிடேகம் செய்து கொண்ட முதற் சுந்தரப்பாண்டியனது பதினான்காம் ஆண்டில் கோயிலுக்கு நிலம் வழங்கப்பட்டிருக்கிறது.

கோனேரின்மை கொண்டான் காலத்தில் இவ்வூர்த் திருஞானசம்பந்தர் திருமடத்திற்கு இருபது துறவிகட்குச் சோறு போடுவதற்கு நிலம் கொடுக்கப்பட்டிருக்கின்றது.

திரிபுவனச் சக்கரவர்த்தி பராக்கிரம பாண்டியனது பதினான்காமாண்டில் பலகைக்கல் ஒன்று கோயிலுக்கு வழங்கப்பட்டுள்ளது.

கிருஷ்ணதேவமகாராயர் ஆட்சியில் சகம் 1448-இல் சின்னப்ப நாயக்கர் இசைவு பெற்றுப் பச்சைப் பெருமாள் பச்சைக்கண்டியத் தேவர் சில நிலங்களைத் தானமாகக் கொடுத்துள்ள செய்தியை கல்வெட்டு குறிப்பிடுகிறது.”[9]

இவ்வாறு பலமன்னர்களின் ஆட்சிக்காலத்தில் திருஏடகநாதர் திருக்கோயிலுக்கு நிலங்கள் தானமாகக் கொடுக்கப்பட்டுள்ளதை மேற்சுட்டிய செய்திகள் புலப்படுத்தும்.

## தொகுப்புரை

- ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களில் ஆதிசொக்கநாதர் கோயில் மதுரை மீனாட்சிஅம்மன் கோயிலின் உபகோயிலாக அமைந்துள்ளதால் இக்கோயிலின் வரவு, செலவுகளை அக்கோயிலின் நிருவாகமே ஏற்றுக்கொண்டுள்ளது.
- புட்டுசொக்கநாதர் கோயில் இனத்தார் நிருவாகத்தின் கீழ் நிருவகிக்கப்படுகிறது. தற்பொழுது அதன் நிருவாகத் தலைவராக இ.மாணிக்கம் என்பவர் உள்ளார்.
- திருஏடகநாதர் திருக்கோயில் அறநிலையத்துறையின் கட்டுப்பாட்டில் உள்ளதால் இக்கோயிலின் மூன்றாம் நிலைச்செயல் அலுவலராக ஆ.இளஞ்செழியன் என்பவர் நியமிக்கப்பட்டுள்ளார். பரம்பரை அறங்காவலராக எஸ்.எல்.சேவுகன் செட்டியார் என்பவர் உள்ளார்.
- நித்திய வழிபாடு மற்றும் மாதத் திருவிழாக் காலங்களில் செய்யப்படும் செலவுகள், கோயில் பணியாளர்கள் ஊதியம், மராமத்து, கும்பாபிடேகம், மின்சாரக்கட்டணம் போன்றவை இக்கோயில்களுக்குரிய செலவினங்களாக அமைகின்றன. இவை அனைத்தும் கோயில் வருவாயிலிருந்தே செலவு செய்யப்படுகிறது.
- புட்டுசொக்கநாதர் கோயில், திருஏடகநாதர் கோயில் ஆகியவற்றில் தனியே கோயிலுக்கென்று அசையாச் சொத்துக்கள் உள்ளன. திருஏடகநாதர் கோயிலில் மன்னர்கள் காலத்தில் கோயிலுக்கென்று தனியே சொத்துக்கள் எழுதிவைத்துள்ளார்கள் என்ற கல்வெட்டு குறிப்புகளும் காணப்படுகின்றன. ஆனால் ஆதிசொக்கநாதர் கோயிலுக்கு என்று தனியாகச் சொத்துக்கள் இல்லை.

**சான்றெண் விளக்கம்**

1. கோ.முத்துசாமி பிள்ளை, கோயிற் களஞ்சியம், ப.154.
2. s. ponnusamy- Thyagaraja Temples, Tiruvarur, Madras, 1972, pp.56-57.
3. சு.இராஜகோபால், திருவையாறு, ப.109.
4. ந.ரா.முருகவேள், திருவரங்கம் கோயில், திருவரங்கம், 1972, ப.39.
5. வ.தேனப்பன், ஒன்பது நகரக் கோயில்கள், ப.257.
6. நஜன், ஆலயங்களும் ஆகமங்களும், ப.12.
7. வ.தேனப்பன், ஒன்பது நகரக் கோயில்கள், பக். 193-196.
8. இரா.நாகசாமி, இராஜராஜன், ப.15.
9. Annual Report on South Indian Epigraphy for the year 1905. No.677-689.

# இயல் - 5

## திருக்கோயில்கள் உணர்த்தும் பண்பாடு

பண்டைக் காலந்தொட்டுத் தமிழர்களின் வாழ்வில் ஊடுருவிப் பரந்து நிலைத்தவை கோயில்கள் ஆகும். இக்கோயில்களை ஆராய்வதன் மூலம் தமிழர்களின் பண்பாட்டைப் புரிந்து கொள்ள முடியும். பண்பாடு என்பது மனித வாழ்க்கையைச் செம்மைப்படுத்துவது ஆகும். மனிதன் தனக்கு மேல் ஒரு இறை சக்தி இருப்பதாகக் கருதி அதற்குப் பயந்து தனது வாழ்க்கையை ஒழுங்குபடுத்திக் கொண்டான். கோயில்கள் கலைகளை வளர்க்கும் கலைக்கூடமாகவும் பொருளாதார நிலைக்களன்களாகவும் பண்பாட்டுப் பெட்டகமாகவும் விளங்கின. மன்னர்கள் தங்களது கலை ஆர்வத்தை கோயில்கள் மூலம் நிறைவேற்றிக்கொண்டனர். மனிதன் திருவிழாக்களை நடத்தி ஒற்றுமையை வளர்த்துக் கொண்டான். அவ்வகையில் கோயில்கள் வெளிப்படுத்தும் பண்பாட்டுக் கூறுகளை எடுத்துரைப்பது இவ்வியலின் நோக்கமாகும்.

### பண்பாடு – விளக்கங்களும் வரையறையும்

உலகில் மக்கள் இனம் தோற்றம் பெற்று இன்று வரை வந்துள்ள வளர்ச்சி நிலைகளுக்கு, அடிப்படையாக அமைவது பண்பாடு ஆகும். அவரவர் நிலத்தின் தன்மைக்கும் பருவ நிலைக்கும் ஏற்றவாறு உலகம் முழுவதும் பல்வேறு பண்பாடுகள் உருவாகி நிலவி வருகின்றன.

“பண்படுவது பண்பாடு, பண்படுதல், சீர்ப்படுதல் அல்லது திருந்துதல், திருந்திய நிலத்தைப் பண்பட்ட அல்லது பண்படுத்தப்பட்ட நிலமென்றும் திருந்திய தமிழைப் ‘பண்பட்ட செந்தமிழ்’ என்றும் திருந்திய உள்ளத்தைப் பண்பட்ட உள்ளமென்றும் சொல்வது வழக்கம்.”[1]

“ஆங்கிலத்தில் கல்சர் என்று சுட்டுவதற்கு நேராகவே ‘பண்பாடு’ என்பது ஆளப்படுகின்றது. இச்சொல்லை இப்பொருளில் முதன்முதலில் ஆண்ட பெருமை டி.கே.சிதம்பரநாத முதலியாருக்கே உரியது என்பர். பண்படு என்னும் சொல்லிலிருந்து அமைத்துக் கொள்ளப்பட்டது இச்சொல்லாகும்.”[2]

தெ.பொ.மீனாட்சி சுந்தரனார், பண்பாடு என்ற சொல்லுக்கு “பெரும்பாலும் சிறந்த வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைகின்ற உள்ளப் பாங்கின் வெளிப்பாட்டையே பண்பாடு என்கிறோம். அந்த வெளிப்பாடு சுவையுணர்வாகவும் நடையுடை பாவனைகளாகவும் தோன்றும். அப்பண்பாடில்லாதவனைக் காட்டுமிராண்டி என்கிறோம்.

வாழ்வின் பலபல போக்குகள் அமைந்த பல்வேறு நிலைகளையும் இந்தப் பண்பாடென்பது குறிக்கும். உடலைப் பற்றிய நன்னிலை மனத்தைப் பற்றிய தூய்மைநிலை, பேச்சின் இனிமை இவையெல்லாம் பண்பாட்டில் அடங்கும்''[3] என்று விளக்குவர்.

''பண்பாடு என்பது குறிப்பிட்ட ஒரு மக்கட்கூட்டம் தனது சமூக வரலாற்று வளர்ச்சியினடியாகத் தோற்றுவித்துக் கொண்ட பௌதிகப் பொருள்கள், ஆத்மார்த்தக் கருத்துக்கள், மதநடைமுறைகள், சமூகப் பெறுமானங்கள் ஆகிய யாவற்றின் தொகுதியேயாகும். ஒரு கூட்டத்தினரின் பண்பாடு என்பது அக்கூட்டத்தினரின் தொழில் நுட்ப வளர்ச்சி உற்பத்தி முறைமை, உற்பத்தி உறவுகள், கல்வி, விஞ்ஞானம், இலக்கியம், கலைகள். நம்பிக்கைகள் ஆகியவற்றின் தொகுதியாகும்''[4] என்பார் கா.சிவத்தம்பி.

''பண்பாடு என்பது தேங்கிப் போனதோ, நிலையானதோ அல்ல. அது தொடர்ந்து வளர்கதியில் மாறிவருகிறது. மனிதன் தனது முழு மனிதாயப் பரிமாணங்களையும் மேலெழுந்து எட்டுவதைச் சாத்தியமாக்கும் உரிமைகளையே பண்பாடு''[5] என்பர் எரிதழல்.

''உலகத்தில் உயிரினங்கள் பலவாகக் காணப்படினும் மக்கள் இனத்திற்கே பண்பாடு என்பது பொருந்துவதாக எண்ணுகின்றனர். பண்பாடு என்பது பொதுவாக நாகரிகத்தில் அடங்கியதாகும். காலப்போக்கில் மக்கள் தம் மனநல ஆக்கமே பண்பாடாகப் பெறுகிறது எனலாம்''[6] என விளக்குவார் எஸ்.வைத்தியலிங்கன்.

''பண்பாடு என்பது அகப்பண்பாடு, புறப்பண்பாடு என்று இருவகைப்படும். உணவு, உடை, உறையுள் முதலிய அடிப்படையில் காணக்கூடியது புறப்பண்பாடு. இது ஒரு வகையில் இன்றைய நாகரீகத்திலே அடங்கும். அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை, மெய்யுணர்வு, தெய்வ நம்பிக்கை, அருள், புலனடக்கம், நன்றி, சீலம் முதலிய அடிப்படையில் உணரலாவது அகப்பண்பாடு என மேலும் விளக்குவர்.''[7]

ஈ.பி.டெய்லர், ''பண்பாடு என்பது மனிதன் சமுதாயத்தில் ஓர் உறுப்பினன் என்ற நிலைமையில் அறிவு, நம்பிக்கை, கலை, சட்டம், நீதிகள், பழக்க வழக்கங்கள், ஆற்றல்கள் முதலியவை பற்றிப் பெற்ற ஒருவித வாழ்க்கை முறையாகும்''[8] என்பார்.

''பண்பாடு என்பது மக்களால் ஆக்கப்பெற்ற கருவி, இந்த ஊடகத்தைக் கொண்டே மக்கள் அவர்களின் தேவைகளை நிறைவு செய்து கொள்கின்றனர்''[9] என்பார் மாலினோசுக்கி.

‘‘தலைமுறை தலைமுறையாக மக்கள் குழுவாகச் சேர்ந்து கற்ற நடத்தை முறைகளும் பழக்க வழக்கங்களும் மரபுகளும் சேர்ந்து ஒரு தொகுதியே பண்பாடு’’[10] என்பார் இலப்பியர்.

“பண்பாடு என்பது மக்கள் அனைவரும் கூட்டாகச் சேர்ந்து செயற்படும் போது உண்டாகும் நடத்தை முறைகளின் சேர்மமாகும். இது அந்தந்தச் சமூகத்திற்கு மட்டுமே உரியது. இது உயிரியல் நிலையில் மரபுரிமையாக வராதது”[11] என்பார் ஆடம்சன் ஓபல்.

இவ்வாறாகப் பண்பாடு என்பதற்குப் பல்வேறு விளக்கங்கள் கூறப்படுகின்றன. பண்பாடு என்னும் கருத்து இலக்கியவியல், வரலாற்றியல், உளவியல், சமுதாயவியல், மானிடவியல் போன்ற பலதுறைகளில் பலநிலைகளில் பயன்படுத்தப்படுவதால் இது பற்றிய வரையறையும் பலவாறாக உள்ளது. ‘‘இதைப் பற்றிய வரையறை 160க்கும் மேல் உள்ளன’’[12] என்று வாழ்வியல் களஞ்சியம் குறிப்பிடுகின்றது.

சமூகத்தின் மரபு காரணமாக மனிதன் மீது வந்து சேர்கிற தவிர்க்க முடியாத வாழ்வியல் பண்புகளையும் காலமாற்றத்திற்கு ஏற்பப் புதிதாக உருவாக்கிக் கொள்ளக்கூடிய வாழ்வியல் பண்புகளையும் பண்பாடு என வரையறை செய்து கொள்ள இயலும்.

## கோயில் பண்பாடு

தமிழர்களின் மேம்பட்ட வாழ்விற்கு ‘கோயில் பண்பாடு’ பெரிதும் காரணமாக அமைந்துள்ளது. கோயில்கள் மக்கள் வாழ்வில் பின்னிப் பிணைந்து நிலைத்தன. எனவே தான் தமிழர்கள், கோயிலைச் சுற்றிலும் குடியிருப்புப் பகுதிகளை அமைத்துக் கோயிலோடு நிலைத்து வாழும் முறையைக் கையாண்டனர்.

தமிழர்கள் கோயில்களோடு கொண்டுள்ள தொடர்பால், சமய வாழ்க்கை பல சிறப்புக் கூறுகளைப் பெற்றிருந்தது. தமிழர்களின் பண்டைக் கலைகளும் இலக்கிய வளங்களும் வழிபாடு போன்ற செயல்பாடுகளும் பக்தி நெறியையும் சமயப் பண்பாட்டையும் உயர்த்துவனவாகும். பண்டைக்காலந்தொட்டுத் தமிழர்களின் வாழ்வில் ஊடுருவிப் பரந்து நிலைத்தவை கோயில்கள் ஆகும். தமிழ் இலக்கியங்களில் ஒரு பெரும்பிரிவான பக்தி இலக்கியங்கள் கோயில்களால் வளர்க்கப்பட்டவை என்பது குறிப்பிடத்தக்கது.

மனதை ஒன்று படுத்தி, சிந்தனைகளைச் சிதறவிடாது, ஒரு ஏகாந்தமும் அமைதியும் கிட்டுமாறு இருந்தால்தான் இறைவனை அடையமுடியும் என்பது தமிழரின் நம்பிக்கையாகும். இந்த ஏகாந்தமும் அமைதியும் ஏற்படும் வகையில் தான் தமிழர்களின் கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளன. இறைனை அடைவதற்குப் பாசங்கள்

தடையாகும். பாசங்கள் அறுபடின் இறைபதம் எளிதில் கிட்டும். எனவே தான் தமிழர்களின் கோயில்கள் அனைத்திலும் ஆசைகளைப் பலியிடப் பலிபீடங்கள் அமைத்தனர்.

எங்கெல்லாம் அழகுணர்ச்சி இருக்கின்றதோ அங்கெல்லாம் இறைமை இருக்கும் என்பது தமிழர்களின் நம்பிக்கையாகும். எனவே தான் தமிழர்களின் கோயில்கள் கலைவளம் மிக்கனவாக அமைக்கப்பட்டன.

கோயிலோடு தொடர்புடையவர்களின் மனநிலை, ஆர்வம், பண்பாடு இவைகளுக்கு ஏற்ப வழிபாடு அமைகிறது. சாத்வீகப் பண்புடையவர்கள் தொடர்பு கொண்டுள்ள சைவ, வைணவக் கோயில்களில் அமைதி வழிபாடும் சிறுதெய்வக் கோயில்களில் பலி முதலியன நேர்ந்து வீர வழிபாடும் நடத்துவதை இதற்குச் சான்றாகக் கூறலாம்.

தான் விரும்புகின்றவர்களுக்குத் தான் பெரிதாக விரும்பியவற்றையே கொடுக்கும் பண்பு தமிழர்களுக்கு உண்டு. மக்களைத் துன்பத்திலிருந்து காப்பாற்றக் கூடியது, இறை சக்தி ஒன்றே என்பது தமிழர்களின் நம்பிக்கையாகும். நோய்க்கு ஆட்படாமலும் இயற்கை வளந்தரவும் மக்கட்பேறு முதலிய உண்டாகவும் இறைவனை முழுமையாக நம்பினர். மேலும் இறைவனை உண்மையாக நம்புகின்ற போது புறச் செயல்கள் ஏதும் தம்மை பாதிக்காது என்ற நம்பிக்கையின் விளைவாக தம்மையே வருத்திக் கொள்கின்ற நேர்த்திக் கடன்களில் ஈடுபட்டனர். தொன்று தொட்டு வரும் தமிழர்களின் சமய நம்பிக்கையில் பேரின்ப வீடுபேறு அடைய இம்மையில் சிற்றின்பங்களைத் துறந்து தியாகங்கள் பல செய்து. தம்மையே வருத்திக் கொள்வது தலையாயது. அகத்தை ஒருமைப்படுத்துவதோடு புறத்தையும் ஒருமைப்படுத்தச் சில சோதனைகளை மேற்கொண்டனர். இதன் விளைவாக வந்த நேர்த்திக் கடன்களே தீமிதித்தல், அலகு குத்திக் கொள்ளுதல், காவடி எடுத்தல், அங்கப் பிரதட்சணம் போன்றவை. அதோடு ஒரு பேரின்பத்தை அடைய வேண்டும் என்ற ஆர்வம் ஏற்படும்போது துன்பத்தையும் இழப்பையும் தாங்குகின்ற ஒரு மனநிலை ஏற்பட வேண்டும் என்ற தத்துவத்தை நேர்த்திக் கடன்கள் விளக்குகின்றன.

விழாக்கள் முழுக்க முழுக்க சமயத் தொடர்பான ஒன்றாக இருப்பினும் அவற்றில் தமிழர்களின் பல பண்பாடுகள் வெளிப்படுகின்றன. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற பொதுவுடைமைப் பண்பாடு தமிழர்களுக்கே உரியதாகும். விழாக்கள் பொருட்டு வேறு ஊர்களிலிருந்து வருவோரையும் உறவினர்களையும் நண்பர்களையும் அரவணைத்து உபசரித்து உறவு கொண்டனர். இவை தமிழர் பண்பாட்டை விளக்குவதாக அமைகிறது.

## நம்பிக்கைகள்

தொன்று தொட்டு வழிவழியாக வருகின்ற சிந்தனைகளும் அனுபவங்களும் நம்பிக்கையின் வழியே தோன்றின. நம்பிக்கைகள் மனித இனத்தோடு ஒன்றிய பொருண்மையாகக் கருதப்படுகின்றது. இத்தகைய நம்பிக்கைகள் அறிவின் முதிர்ச்சியாலும் அனுபவ உண்மைகளாலும் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளன. மக்களின் வாழ்வானது நம்பிக்கையின் பாற்பட்டதாக உள்ளது. ஒவ்வொரு இனத்தின் பண்பாட்டு நிலைக்கேற்றவாறு காலம், இடம், சமுதாயச் சூழல் இவற்றின் மரபிற்கேற்ப நம்பிக்கைகளின் வெளிப்பாடு அமைகின்றது. ஏதாவது ஒரு நிகழ்வின் மீது ஈடுபாடு கொண்ட மனிதன் அதனை நம்பிக்கையெனக் கருதினான்.

காலம்காலமாகக் காரண காரியங்களின் அடிப்படையில் உருவாகிய கருத்துருவாக்கமானது நாளடைவில் நம்பிக்கையாக உருப்பெற்றது. மனிதன் அச்ச உணர்வினை அடிப்படையாகக் கொண்டு தோன்றியவை நம்பிக்கை என்ற கருத்தும் நிலவுகின்றது. அச்சத்தின் காரணமாக மனிதன் இயற்கையின் தோற்றத்தினையும் செயல்பாடுகளையும் தனது வாழ்வியல் நடப்புகளோடு இணைத்து நோக்கிய நிலையில் நம்பிக்கைகள் தோற்றம் கொண்டன. ‘‘நன்மையின் மீதுள்ள ஆர்வமும் தீமையின் மீது ஏற்படும் அச்சமும் நம்பிக்கையின் அடிப்படைகளாகும்.’’[13]

“பெரும்பான்மையான நம்பிக்கை என்பது அறிவிற்கு அப்பால் ஒருவரின் அல்லது ஒன்றின் மீது மிகுந்த பற்றாலும் கூடிய விருப்பினாலும் உண்டாகும் உளம் சார்ந்த வெளிப்பாடு என்று வரையறுக்கப்படுகின்றது. பழமையான அனைத்து இனங்களிடத்தும் பெரும்பான்மையான நம்பிக்கைகள் நிலவி வருகின்றன.

நம்பிக்கைகளின் உருவாக்கம் குறித்து மனித வாழ்வில் நிகழும் ஊறுகளுக்குக் காரணம் கற்பிக்க இயலாத நிலையில் மனித மனம் சிலவற்றைப் படைத்துக் கற்பித்துக் கொள்கின்றது. அவையே நம்பிக்கைகளாக உருப்பெறுகின்றன’’[14] என்பர் க.காந்தி.

“அச்ச உணர்வினை அடிப்படையாகக் கொண்டு தோன்றியவையே நம்பிக்கைகள் என்று கருத முடிகின்றது. இயற்கையின் புதிரான செயல்களை மனித மனங்களால் கண்டுணர முடிவதில்லை. இந்நிலையில் மனித மனம் அதனை ஏற்று கொள்கின்றது. நம்பிக்கை என்பது ஒரு உணர்ச்சி. இது எண்ணத்தின் இயக்கத்தோடு கலந்து வரப்பெற்று நிலைத்த போது அது ஒரு மனநிலை என்று சொல்லப்படுகின்றது. அந்த மனதில் தொடர்ந்து நீடித்த உரமடைந்த போது உள்மனத்தின் உதவியைப் பெறுகின்றது. இந்த நிலையில் அதற்கு மகத்தான சக்தி உண்டாகின்றது’’[15] என்று அ.ஜெகதீசன் நம்பிக்கை குறித்து விளக்கம் அளிக்கின்றார்.

நம்பிக்கை என்ற சொல் 'நம்பு' என்பதன் பகுதி அடியாகப் பிறந்ததாகும். நம்பு என்ற சொல் விருப்பம் என்னும் பொருளில் கருதப்படுவதை,

**"நயந்து நாம் விட்ட நகைமொழி நம்பி"[16]**

என்ற பாடலடி காட்டுகின்றது. ஏதேனும் ஒரு நிகழ்வினையோ அல்லது பொருளையோ உண்மை என உணருகின்ற நிலையில் அதன் மீது நம்பிக்கை உண்டாகின்றது. "நம்பிக்கை ஒரு செயலின் காரணமாகவும் மரபு வழியாகச் சந்ததி, பின் சந்ததி ஆகியோரால் பின்பற்றப்படும் வழக்கமாகவும் உள்ளது என்று வாழ்வியற் களஞ்சியம்"[17] பொருள் தருகின்றது.

இத்தகைய நம்பிக்கையாகத் தோன்றிக் காலப்போக்கில் சமூகத்தால் ஏற்று கொள்ளப் படுகின்ற நிலையில் சமூக நம்பிக்கையாகத் தோற்றம் கொள்கின்றது. பழக்கமானது கால ஓட்டத்தில் வழக்கமாக மாறுவது போல மக்களின் மனதில் தோன்றும் நம்பிக்கை காலப்போக்கில் பண்பாடுகளாகப் பரிணமிக்கத் தொடங்கின. நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்படுகின்றன. மனிதனின் தன்னல உணர்வும் சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன"[18] என்பர்.

அறிவு அல்லது உணர்வின் அடிப்படையில் ஒன்றின் மேல் ஈடுபாடு கொள்கின்ற நிலையே நம்பிக்கை எனப்படுகின்றது. தமிழரின் நம்பிக்கைகள் பரந்துபட்டவை காலங்காலமாக மக்களிடையே வழக்கில் பயின்று வருபவை. இலக்கியங்களில் கூறப்பெற்றுள்ள நம்பிக்கைகளை விடத் தனிமனித வாழ்வில் கருதப்படுகின்ற நம்பிக்கைகளே பலதரப்பட்டவைகளாக உள்ளன.

## திருக்கோயில்களும் நம்பிக்கைகளும்

பண்டுதொட்டு இன்றுவரை கோயில்களும் மக்கள் வாழ்வும் பிரிக்கமுடியாத வகையில் அமைந்துள. பலகிராமங்களில் கோயிற்கிணறுகளே மக்கள் உயிர்வாழ்வதற்கு உதவும் தண்ணீரைக் கொடுப்பதைப் பார்க்க முடிகின்றது. கோயில்களில் உள்ள குளங்கள் ஊரின் நீர்ப்பஞ்சத்தை நீக்குவதற்காக அமைக்கப்பட்டுள்ளது. கோயில்களில் வழங்கப்படும் உணவு பலகுடும்பங்களுக்கும் யாத்திரிகர்களுக்கும் பக்தர்களுக்கும் பசியைப் போக்கும் மருந்தாகப் பயன்படுகிறது.

ஊர்தோறும் உள்ள கோயில்களில் பலர் பணியாற்றுகின்றனர். சில ஊர்களில், கோயில் பணியைவைத்தே பல குடும்பங்கள் வாழ்வு நடத்துகின்றன. கோயிலின் பொருளாதாரம் இத்தகைய பல பணியாளர் குடும்பங்களைத் தாங்கும் நிலையில் உள்ளது. இங்ஙனம் பொருளாதார நிலைக்களனாக மட்டுமின்றிக் கோயில்கள் கலைவளர்க்கும் கல்லூரிகளாகவும் விளங்கின. விளங்குகின்றன. இசையும், இயலும்,

நாடகமும் கோயிலில் இடம்பெற்றன. தேவாரம் போன்ற இனிய சமயப்பாடல்களை இசை பொருந்தப்பாடும் பல ‘ஓதுவார்கள்’ கோயில்தோறும் இசைபாடுகிறார்கள். இதனால் கலைப்பண்பாடு வளர்கிறது. பண்பாடு கல்விப்பண்பாடு, கலைப்பண்பாடு, சமூகப்பண்பாடு எனப்பல நிலைகளில் அமையும்.

திருக்கோயில் மண்டபங்கள் கலைகளை வளர்க்கவும் திருச்சுற்றுகள் நாடக சாலைகளாகவும் அரங்கேற்று மண்டபங்களாகவும் விளங்கின. ஆயிரங்கால் மண்டபம் போன்றவை ஊர்மக்கள் திருமணம் போன்ற சுப நிகழ்ச்சிகள் நடத்தவும் பயன்பட்டன. இன்றும் நடுத்தரமக்கள் பெரிய மண்டபத்திற்குக் கட்டணம் செலுத்தித் திருமணம் போன்ற நிகழ்ச்சிகள் செய்ய முடியாத நிலையில் கோயில்களில் நடத்தப்படுகின்றன.

கலையையும் பொருளாதாரத்தையும் சமயத்தையும் வளர்த்ததோடமையாது கோயில்கள் நாட்டில் நலத்துறையும் சுகாதாரத்தையும் கூட வளர்த்தன. கோயில்களில் தயாரிக்கப்படும் உணவு நோயற்று வாழ வழிகாட்டும் வகையில் தயாரிக்கப்படுகின்றன. பெரும்பாலும் மிளகும் நெய்யும் பயன்படுத்தப்படுகின்றது. இவை உடம்பிற்கு நல்ல ஆரோக்கியத்தைத் தருகின்றன. மக்கள் நலம் கெடுக்காத நல் உணவுக் களஞ்சியங்களாகக் கோயில்கள் விளங்குகின்றன.

திருஏடகநாதர் கோயிலில் 20-ஆம் நூற்றாண்டில் தேவகோட்டை நகரத்தார்கள் வேதபாடசாலை அமைத்து வேதக் கல்வியைக் கற்றுத் தந்தனர். தண்ணீர் பந்தல் அமைத்து தாகத்தைத் தீர்த்துள்ளனர். தற்பொழுது அரசாங்கம் நடத்தும் அன்னதானக் கூடம் திருஏடகநாதர் கோயிலில் அமைந்துள்ளது. அங்கு தினமும் நூறு பேருக்கு உணவு வழங்கப்பெறுகிறது. இச்செயல் உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர் என்னும் பண்டை மரபைப், பண்பாட்டைப் பேணுவதாக உள்ளது.

கோயில் அமைப்பு ஊர் எல்லையில் உள்ளாகவோ அன்றி வெளியில் அமைந்திருப்பினும் அது சற்று உயர்ந்த காற்றோட்டமான இடத்திலேதான் இருக்கும். காற்றுப்புகக்கூடிய புறத்தாழ்வாரங்களும் சாளரங்களும் அகன்ற வாயில்களும் அணி செய்கின்றன. விமானத்தில் இருக்கும் செம்பாலாகிய கலசங்கள் இயற்கையின் விளைவுகளைத் தடுக்க உதவுகின்றன.

கோயில்களில் நடைபெறும் விழாக்கள் நாட்டில் பகையும் பிணியும் பசியும் நீங்குவதற்காகவே கொண்டாடப்பெற்றன. இன்றும் கொண்டாடப்பெற்று வருகின்றன.

திருவிழாக் காண வருகின்ற மக்களுக்கு நீரும் மோரும் அளிக்கத் தண்ணீர்ப்பந்தர்கள் அமைத்தல் தமிழ்ப்பண்பாட்டின் ஒரு கூறாக உள்ளது.

அக்காலத்தில் பிணி நிலவக் கூடாது என்ற அடிப்படையிலேயே விழாக்களும் விரதங்களும் அமைந்துள்ளன. இவை நீங்குவதோடு நாட்டில் மழைபெய்து வளம்

கொழிக்க வேண்டும் எனவும் விழாச் செய்கின்றனர். இப்படியே கோயில்களும் கோயில்களில் நாள்தோறும் நடைபெறும் பூசைகளும் விழாக்களும் மக்கள் வாழ்வுடன் இணைந்து காணப்படுகின்றன.

## சமுதாயமும் சமயமும்

தனி மனிதர்களை உறுப்பினர்களாகக் கொண்ட ஓர் அமைப்பே சமுதாயம் எனப்படும். தனிப்பட்டவர்களின் கூட்டமைப்பு, உரிமை மற்றும் ஒற்றுமை உணர்வு, ஏகதேசம் நிரந்தர இயல்பு முதலான சிறப்புக் கூறுகளைக் கொண்டது சமுதாயம் என்று பி.சி.டெப் என்ற சமூகவிலறிஞர் விளக்கம் தருகின்றார்.[19]

“சில வாழ்நாள் பல்பிணிச் சிற்றறிவினராகிய மக்கட்குலத்தார் தமது குறைவுடைய அறிவினை மட்டும் துணையாகக் கொண்டு அமைத்துக் கொள்ளும் உலகியல் வாழ்க்கை முறைகளை விட நாடு, மொழி, இனம் என்ற வேற்றுமைகளுக்கு இடம் தராது எல்லா உயிர்களுக்கும் உரிய தனி முதற்பொருளாயும் எல்லா உயிர்களுக்கும் உயிராக நின்று உலகை இயக்கியருளும் தெய்வம் ஒன்று உண்டு என்ற தெளிவுடையராய்த் தெய்வத்தின் திருவருள் வழி அடங்கி நின்று எல்லா உயிர்களும் வையத்துள் வாழ்வாங்கு வாழும் வண்ணம் சமயம் என்று மேற்கொள்ளத்தகும் சிறப்புடையது. உயர்திணை எனச் சிறப்பிக்கப்பெறும் மக்கட்குலத்தார் அறத்தின் விதிநிலைபெற்றுப் பொருள் ஈட்டித் தாமும் பிறரும் இன்பமுடன் இனிது வாழ்தல் வேண்டித் தமது வாழ்க்கையில் தவறாது கடைபிடிப்பதற்கு அமைத்துக் கொண்ட ஒழுக்க நெறியே சமயம் என்ற பெயரால் அழைக்கப்பெறுகின்றது”[20] என வெள்ளை வாரணனார் விளக்கம் தருகிறார்.

சராசரி மனித வாழ்க்கையை உயிர்ப்புள்ள தாக்கி முழுமையாக்கும் உணர்வின் தேவையில் தோன்றியதே சமயம்”[21] என்பது வை.இரத்தின சபாபதியின் கருத்தாகும்.

சமயம் என்பது வாழ்க்கை முறை. அதாவது மனிதனை நெறிப்படுத்தி, அவன் உள்ளத்தைப் பக்குவப்படுத்தும் கருவியாகத் திகழ்கின்றது. குறை நீக்கத்துக்கும் நிறை நலம் பெறுவதற்கும் சமயம் இன்றியமையாதது ஆகும”[22] என்று குன்றக்குடி அடிகளார் விளக்குவார்.

சமுதாயமும் சமயமும் ஒன்றை ஒன்று பிரிக்க முடியாததாக அமைந்துள்ளது. ஒரு சமுதாயம் ஒழுக்கத்துடனும் சிறப்புடனும் அமைய வேண்டுமெனில் சமயம் இன்றியமையாததாக உள்ளது.

## இறைவழிபாடு

ஆதித்தமிழர்கள் இயற்கையால் விளங்குகின்ற பஞ்சபூதங்களைத் தான் முதலில் வழிபட்டனர். இயற்கை வழிபாட்டிலிருந்து தான் உருவ வழிபாடு அமைந்தது. வழிபாட்டு முறை குறித்து இரா.சாரங்கபாணி தமது நூலில், "முதலில் மரங்களை வழிபட்டனர். பின் மர நிழலில் தூணை நிறுத்தி இறைஞ்சினர். .தூண்- கந்து எனப்படும். கந்து இலிங்கமாயிற்று. இங்ஙனம் மரவழிபாடு வளர்ந்து கடவுள் வழிபாட்டிற்கு இடமளித்தது. ஆலமர் சிவவழிபாட்டிற்கும் கடம்பமர் கடவுள், முருக வழிபாட்டிற்கும் கானமர் செல்வி கொற்றவை வழிபாட்டிற்கும் இடம் தந்து சமய வளர்ச்சிக்குத் துணைபுரிகின்றன."[23]

சங்க இலக்கியங்களில் தெய்வ வழிபாடு இருந்தாலும் குறிப்பிட்ட சமயத்தைச் சார்ந்ததாக இல்லை. இக்கருத்தினை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழிலக்கியங்களில் சமயம் என்ற சொல்லே இல்லை எனலாம். அதற்கு பிற்பட்ட நூல்களில் தான் சமயம், மதம் என்ற சொற்கள் காணப்படுகின்றன. எனவே சங்க காலத்து மக்களுக்கு கடவுள் நம்பிக்கை இருப்பினும் அவர்கள் சிவன், திருமால் போன்ற கடவுள்களை வழிபட்டாலும் சைவ சமயம், வைணவ சமயம் போன்றவை வேரூன்ற வில்லை. சமயம் அல்லது மதம் என்பது வடநாட்டிலிருந்து சமணர்களாலும் பௌத்தர்களாலும் கொண்டு வரப்பட்டது. அதற்கு முன்பு குறிப்பிட்ட மதமோ, சமயமோ இல்லை எனலாம்.

ஒவ்வொரு நிலத்திற்கும் தலைமைக் கடவுள் உள்ளன. மாயோன், சேயோன், வேந்தன், வருணன் ஆகியோர் தொல்காப்பியத்தில் இடம்பெறுகின்றனர். சங்க நூல்களில் பதிவாகியுள்ள கடவுள் வழிபாட்டிற்கு,

**" …… ஆ புறம் தீண்டும்**
**நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து"**[24]

என்ற பாடலடிகள் சான்றாக அமைகின்றன.

## வழிபாட்டுத் தத்துவம்

இறைவனுக்குப் பஞ்ச பூதங்களும் பணியும் என்பதைக் காட்டுவதற்காகவும் மனிதன் பஞ்ச பூதங்களையும் பயன்படுத்தி இறைவனையே வணங்க வேண்டும் என்பதைக் காட்டுவதற்காகவும் பூசைகள் நடக்கின்றன. நீர் என்ற பூதத்தின் அடையாளகமாகச் சுவை உணர்வைக் குறிக்கும் உணவுப் பொருட்களை இறைவனுக்கு படைக்கின்றோம்.

மண் என்ற பூதம் மணத்தை நுகரும் பலன்களோடு தொடர்புடையது ஆகும். அதற்கு அடையாளமாகச் சந்தனத்தையும் சாம்பிராணிப் புகையையும் இடுகிறோம்.

காற்று என்ற பூதம் தொடு உணர்ச்சியோடு தொடர்புடையது ஆகும். இதற்கு அடையாளமாக மலரிடுதல், சாமரம் வீசுதல் போன்ற வழிபாடுகளைச் செய்கிறோம்.

ஆகாயம் என்ற தத்துவம் ஒலியோடு தொடர்புடையது. இதற்கென மணி அடித்தல், சங்கு ஊதுதல் ஆகிய சடங்குகள் செய்யப்படுகிறது.

தீ என்ற தத்துவம் கண்பார்வையுடன் தொடர்புடையது. இதற்கெனக் கற்பூரம், தீபம் ஆகியவற்றை ஏற்றி தீபாராதனை செய்யப்படுகிறது. இப்படி ஐம்புலன்களால் பஞ்ச பூதங்களைப் பயன்படுத்தி, கோயில்களிலும் வீடுகளிலும் இறைவனை வழிபடுகிறோம். அப்படி எங்கும் நிறைந்த பரம்பொருளை அனைத்திற்கும் சாட்சியாக வைத்து வழிபடுகிறோம். உலக இயக்கம் பஞ்ச பூதங்களினால் நடக்கிறது. பஞ்ச பூதங்களும் இறைவனின் படைப்பே ஆகும்.

## வழிபாட்டு முறைகள்

இறை வழிபாட்டின் மூலகர்த்தா ஆதிமனிதன்தான். அவன் உருவ வழிபாட்டையோ, ஆகம முறையினையோ, வழிபாட்டு முறையையோ அறிந்திருக்க வில்லை. இயற்கை வழிபாட்டிற்கு பிறகு முன்னோர் வழிபாடு ஏற்பட்டது. பின்னர் சூரிய வழிபாடு, சந்திர வழிபாடு உண்டாயிற்று. பின்னர் உருவ வழிபாடு தோன்றியது. நாகரிக முதிர்ச்சியினால் மனிதன், மற்ற உயிரினங்களை விட மேம்பட்டவனாக உயர்ந்து, சமூக வாழ்க்கையை மேற்கொண்ட போதுதான் உருவ வழிபாடும் சடங்குகளும் சம்பிரதாயங்களும் தோன்றியிருக்க வேண்டும்.

கூட்டு வழிபாட்டு முறைகள் தோன்றியபோதே கோயில்களும் கோயில்கள் தோன்றிய பின்னரே ஆகம நெறிமுறைகளும் தோன்றியிருக்கிறது. அதன் பின்னர்ப் பூசைமுறைகள் வளர்ச்சி அடைந்திருக்கிறது. பூசைக்கு எனப் பல பொருள்களைத் தேர்வு செய்து பயன்படுத்தி இருக்கிறார்கள். அபிடேகப் பொருள்கள், அருச்சனைப் பொருள்கள், நிவேதனப் பொருள்கள் எனப் பலவற்றைக் காரணகாரியங்களுடன் தேர்ந்தெடுத்து பூசைக்குப் பயன்படுத்தி வந்தனர்.

எந்தெந்தப் பொருள்கள் எந்தெந்தத் தெய்வத்திற்கு உகந்தது என்றும் எவை எவை விலக்கப்பட்ட வேண்டும் என்றும் வரையறுத்துப் பூசைமுறைகளை ஒழுங்குபடுத்தினர். இந்தப் பூசைமுறைகள் அந்தந்தத் திருத்தலத்திற்கு ஏற்றபடி பூசைமுறைகள் வேறுபடுகின்றன.

## கல்வெட்டுகளில் ஆலய வழிபாட்டுச் செய்திகள்

கி.பி. 600- இல் காஞ்சியை ஆண்ட முதலாம் மகேந்திரவர்மப்பல்லவன் காலத்தில் தான் கல்வெட்டுகளில் ஆலயங்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

கி.பி. 900 முதல் 1250 வரையுள்ள கல்வெட்டுகளில், ஆலய நிர்மாணம், நித்திய வழிபாடு, திருவிழா, திருப்பணி ஆகிய பலவற்றை அறியமுடிகிறது. கோயில்களில் இறைத்திருமேனிகளைப் பிரதிட்டை செய்வதும் கோயில் மேல் விமானத்தில் செப்புக்கலசம் வைத்துக் கும்பாபிடேகம் செய்யும் வழக்கங்களும் தொன்று தொட்டு நடந்து வருகின்றன. “பிரதிட்டை செய்த கணபதியாருக்கு பூதி பராந்தகன் கற்றளி எடுத்துச் சிறப்புச் செய்தான் எனறு கல்வெட்டுகள் குறிப்பிடுகிறது.”[25]

தினந்தோறும் செய்து வந்த வழிபாட்டு முறைகளைப் பற்றி செய்திகளையும் கல்வெட்டுகள் கூறுகின்றன. சிறுகாலைச் சந்தி, உச்சியம் போது சந்தி, இரவுச் சந்தி என மூன்று பூசைகள் நடந்து வந்தன. இவை தவிர அர்த்தயாம சந்தியும் திருப்பள்ளியெழுச்சியும் நிகழ்ந்து வந்தன. திருப்பள்ளியெழுச்சியின் போது ஆழ்வார்கள், நாயன்மார்கள் பாடிய பதிகங்களைப் பாடுவதுண்டு. முச்சந்திகளில் ஆண்டவனுக்குக் திருமஞ்சன நீராட்டல் உண்டு. இத்தகு நீரிலே செண்பகமொட்டு, ஏலஅரிசி, இலாமிச்சவேர் முதலியவை போடப்பட்டதை, ‘ராசராசேச் அரவமுடையார் ஆடியருளும் திருமஞ்சன நீரிலும், தண்ணீர் மீதிலும் இடம்பெறும் செண்பக மொட்டுக்கும் ஏலமரிசிக்கும் இலமிச்சத்துக்கும் வேண்டும் நிபந்தம்”[26] என்னும் இராசராசன் கல்வெட்டு உரைக்கும்.

### கோயில்கள் பண்பாட்டு உறைவிடம்

கோயில்கள் பண்பாட்டு உறைவிடமாக விளங்குகின்றன. மக்களிடையே கோயில் தொடர்பாக எழுந்த நம்பிக்கையே பண்பாடாக மாறியது. மக்கள் தங்களை இறைவன் துன்பத்திலிருந்து மீட்டெடுப்பார் என்று கருதி இறைவனுக்குப் பல்வேறு நேர்த்திக்கடன்களைச் செய்து வழிபடுகின்றனர்.

### ஆதிசொக்கநாதர் கோயில்

குபேரன் தன்னிடம் உள்ள செல்வம் மேன் மேலும் பெருக இத்தலத்தில் சிவனை பிரதிட்டை செய்து வழிபட்டார் என்பதால் இங்குள்ள சிவனை வழிபட்டால் செல்வம் பெருகும் என்பது மக்கள் நம்பிக்கையாகும். இதுவே மக்களிடையே தொன்று தொட்டு பண்பாடாக மாறியுள்ளது.

### புட்டுசொக்கநாதர் கோயில்

புட்டுசொக்கநாதர் கோயிலில் மாணிக்கவாசகருக்கும் வந்திக்கும் சிவன் மோட்சம் கொடுத்தார் என்பதால் இங்கு வந்து சிவனை வழிபட்டால் மக்கள் தங்களுக்கு மோட்சம் கிட்டும் என நம்புகின்றனர்.

பக்தர்கள் தங்களது வறுமை நீங்கி செல்வம் பெருகுவதற்கும் இழந்த பொருட்களை மீட்பதற்கும் குழந்தை பாக்கியம் பெறுவதற்கும் நவகிரகங்களால் ஏற்படும் தொல்லைகள் தீரவும் இங்குள்ள இரட்டைகால பைரவரை வணங்குகின்றனர்.

## திருஏடகநாதர் கோயில்

### திருமணத்தடை

திருமணஞ்சேரியில் திருமணத்தடை உள்ள ஆண், பெண்களுக்கு பரிகாரப்பூசை செய்வது போல இங்கும் பரிகாரப்பூசை செய்யப்படுகிறது. ஏலவார்குழலி அம்மனுக்கு மாலை அணிவித்து அதை ஆணோ, பெண்ணோ அவர்கள் கழுத்தில் அணிந்து அம்மன் சன்னதியை ஒன்பது முறை சுற்றி வந்து பின்பு அதை வீட்டிற்கு எடுத்துச்சென்று நாற்பதெட்டு தினங்கள் தொடர்ந்து வழிபட்டு வர திருமணத்தடை நீங்கப்பெற்று விரைவில் திருமணம் நடக்கும் என்பது அங்கு கடைப்பிடிக்கப்பட்டு வரும் மரபு. திருமணத்திற்குப் பின் தம்பதிகள் இருவரும் இங்கு வந்து சுவாமி, அம்மனை வழிபடுகின்றனர்.

### தீர்த்தங்கள்

திருஏடகநாதர் கோயிலில் இரண்டு தீர்த்தங்கள் உள்ளன. ஒன்று பிரமதீர்த்தம். மற்றொன்று கோயிலுக்கு அருகில் ஓடும் வைகை நதி. இங்கு இறந்தவர்களின் ஆன்மா மோட்சம் அடைய வேண்டி அத்தியைக் கரைக்கின்றார்கள். இறந்தவர்களுக்கு தர்ப்பணம் கொடுக்கும் வழக்கமும் இங்குள்ளது. மேலும் பிறவியை முடித்த உயிர்கள் நற்கதி அடைவதற்காக மோட்சதீபம் ஏற்றும் வழக்கமும் இந்தக் கோயிலில் உள்ளது.

### வயிற்று வலிதீர்க்கும் சட்டைநாதர்

சட்டைநாதர் என்ற சித்தர் சமாதியான இடம் பற்றிப் பல கருத்துக்கள் உண்டு. இவர் திருவேடகம் வந்த பொழுது செல்லும் வழியெல்லாம் லிங்கங்கள் பூமிக்குள் பதிந்திருப்பதைப் பார்த்து தரையில் கால் வைப்பதற்கே அஞ்சினார். அவரைச் சிறுவர்கள் தூக்கிச் சென்று கோயிலுக்குள் விடுவார்கள். அவர்களுக்கு ஆற்று மணலைப் பண்டமாக மாற்றி தருவார். சட்டைநாதர் நீராகாரத்தில் நோயினைப் போக்கினார். இப்போதும் நீராகாரம் கொண்டு வந்து கோயிலின் தென்பகுதியில் உள்ள சட்டைநாதர் முன்பு வைத்து திருநீறிட்டு குடித்தால் வயிற்று வலி தீருமென்று பக்தர்கள் நம்புகின்றனர். ஆடி அமாவாசையன்று சித்தருக்குக் குருபூசை நடக்கிறது.

### வாராகி பூசை

திருமணம் ஆகாதவர்கள் இங்குள்ள வாராகி அம்மனுக்கு காய்கறி, பழங்கள், அரிசி போன்றவற்றைப் படைத்து வெள்ளிக்கிழமை ராகு காலத்தில் வழிபட்டால் திருமணத்தடை நீங்கும் என்பது நம்பிக்கை. மேலும் வாராகி அம்மனை பஞ்சமி

திதியில் வழிபட்டால் எதிரிகள் அழிவர். வழக்குகளில் வெற்றி பெறுவர். இது போன்று மக்களிடம் தோன்றும் நம்பிக்கையே பண்பாடாக மாறி தொடர்ந்து கடைபிடிக்கப் பெற்று வருகிறது.

### அபிடேகம்

அபிடேகம் என்பது இறைவனைப் பால், பன்னீர், பழங்கள் கொண்டு நீராட்டுவது ஆகும். இறைவனுக்கு உருவம் கொடுத்த மனிதன் அதற்கு தன்னைப்போல் நீராட்டவும் உணவு படைக்கவும் செய்து, அதனை மகிழ்விக்கச் செய்தான். அவ்வாறு இறைவனுக்குச் செய்யப்படும் ஒவ்வொரு வித அபிடேக ஆராதனைகளுக்கும் தனித்தனிப் பலன்கள் உண்டு.

இறைவன் அமர்ந்திருக்கும் பீடம், தாமரை போன்ற வடிவம் உடையது. நம்முடைய இதயமும் அதே வடிவம் கொண்டது தான். எனவே நமது இதயத்தில் குடியிருக்கும் இறைவனுக்கு இந்த அபிடேகங்கள் செய்யும் போது அது நம் உள்ளத்தையும் குளிர்விக்கிறது.

மேலும் இறைவனின் திருமேனி மூலிகைகளாலும் மந்திரங்களாலும் உருவேற்றப்பட்டது. இந்த அபிடேகத்தினால் அந்த சக்திகளும் அதனுள் கலந்து விடுகிறது. இந்த அபிடேகத்தை நாம் தலை மற்றும் கண்களில் ஒற்றுவதாலும் கொஞ்சம் பருகுவதாலும் நம் உடலுக்குள் அந்த சக்திகள் நுழைகிறது. இதன் காரணமாக உடல் மட்டுமல்லாமல் உள்ளமும் நல்ல பலத்தையும் ஆரோக்கியத்தையும் பெறுகிறது. திருக்கோயில் வழிபாட்டில் அபிடேகத்திற்குப் பயன்படும் பொருட்கள் அனைத்தும் தமிழர்களின் பண்பட்ட, அறிவு சார்ந்த நிலையைப் புலப்படுத்துகின்றன.

### எண்ணெய்

சிலைகள் கல்லால் ஆனவை. எனவே அவற்றின் பளபளப்புக் குறையாமல் இருக்க நல்லெணணெய் காப்பு சாத்துவது வழக்கம். முதலில் தைலம் அபிடேகம் செய்யுமுன் வாசனையூட்டப்பட்ட எண்ணெயை இரு கைகளாலும் அள்ளி எடுத்து இறைவனின் உருவம் முழுவதும் நன்கு பூசி, தலை, இரு கண்கள், கை நகங்கள், கால் நகங்கள், காதுத்துவாரங்கள் ஆகிய இடங்களில் எண்ணெய் நன்கு புகும்படி 'சாத்தி' இறைவனின் கை கால்களை மெல்ல வருடிப் பின்னர் சந்தனாதி எண்ணெயினால் திரு உறுப்புகள் அனைத்தும் தோயும் படி அபிடேகம் செய்வதும் இவ்வாறு எண்ணெய் 'சாத்தும்' வேளை இறைவனுக்குச் சிரமந் தோன்றாதிருக்க இருமருங்கிலும் விசிறிகளால் வீசுவதும் சாமரங்களை இரட்டச் செய்தலும் அபிடேக வேளைகளில் கடைபிடிக்கப்படும் மரபாகும். நல்லெண்ணெய் குளிர்ச்சியைத் தரும்.

## நீா்

தினமும் காலையில் கோயில் திறக்கப்பட்டதும் விளக்கேற்றி வைத்து அதன்பிறகு ஆற்று நீரில் அல்லது கிணற்று நீரில் அபிடேகம் செய்வது வழக்கத்தில் உள்ளது. முதலில் எண்ணெய் காப்பு சாா்த்தி அதன் பின்னா் நீராபிடேகம் செய்வது வழக்கத்தில் உள்ளது. நீரானது உடலைச் சுத்தம் செய்யப் பயன்படுகிறது.

## ஆற்றுநீரும் அருவி நீரும்

கோயில்கள் பெரும்பாலும் ஆற்றங்கரையில் அமைந்திருக்கும் அல்லது அருவிக் கரையில் அமைந்திருக்கும். இவைகள் பெரும்பாலும் மலைப் பகுதியிலிருந்து வருகிறது. இங்கிருந்து வரும் நீரானது பலவித மூலிகைகள் மீது பட்டு அவற்றையும் அடித்துக் கொண்டு வருகிறது. மூலிகைகளில் ஊறி வரும் தண்ணீா் படுவதால் நோய்கள் குணமாகின்றன. உயரப் பகுதிகளிலிருந்து விழும் நீா் ஒருவித விசையுடன் உடலில் படுவதால் இரத்த ஓட்டம் தூண்டப்பட்டு உடலெங்கும் இரத்தம் நல்லமுறையில் பரவும்.

சுத்தமான மூலிகை கலந்த நீரால் அபிடேகம் செய்யும் பொழுது சிலை சுத்தம் அடைவதுடன் குளிா்ந்த நிலையும் அடைகிறது. பொதுவாக அபிடேகம் செய்வது என்பது இறைவனைக் குளிரவைப்பதற்காகத் தான். தண்ணீரால் சிலையை அபிடேகம் செய்வதால் சிலையின் மின் கடத்தும் திறன் அதிகரிக்கிறது.

ஆறோ அருவியோ அருகில் இல்லையெனில் பெரும் வசதியமைந்த கோயில்களில் அா்ச்சகா் முதலியோா் ஆற்றிற்குச் சென்று, அபிடேகத்திற்காக நீரைக் குடத்தில் நிரப்பி, அதனை யானை மீது ஏற்றிக் கொடி, குடை முதலிய விருதுகளுடன் தினந்தோறும் கோயிலுக்குக் கொண்டு வருவா். இவ்வாறு நதி தீா்த்தம் கிடைக்காத இடத்தில் கிடைக்கக்கூடிய வேறுநீா் நிலையங்களிலிருந்து சேகரிக்கப்பட்ட நீரினை மந்திர ரூபமாகப் புனிதமாக்கி அபிடேகத்திற்கும் பூசைக்கும் பயன்படுத்தும் மரபு உண்டு.

## கும்பநீா்

பூரண கும்பத்தை மனித உடலாகப் பாவித்து யாக சாலையில் வைத்து யாகமும் பூசையும் செய்யப்படுகின்றன. தா்ப்பை, மாவிலை முதலியவைகளைக் கொண்டு மந்திரங்களைச் சொல்லிப் பிம்பத்தில் விளங்கும் இறைவனைக் கும்பத்தில் எழுந்தருளுமாறு வேண்டிக்கொள்ள வேண்டும். அதற்கு ‘ஆவாகனம்’ என்று பெயா். கும்பத்தில் இருக்கும் நீா் கெடாது இருக்க கிராம்பு, ஜாதிக்காய், பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ முதலிய திரவியங்கள் போடப்படுகின்றன. கும்பத்தை உபசாரங்களுடன் யாகசாலையில் பிரதிட்டை செய்து யாகம் வளா்ப்பா்.

இறைவனை அக்கினியால் எழுந்தருளச் செய்து, அக்கினியில் இருந்து கும்பத்தில் எழுந்தருளச் செய்வார்கள். இந்த கும்பநீரை இறைவனுக்கு அபிடேகம் செய்வார்கள். கும்பாபிடேக காலங்களில் கோபுர கலசத்திற்கு அபிடேகம் செய்வார்கள். இந்தக் கும்பநீரைத் தலையில் தெளித்துக் கொண்டால் வியாதிகளும் நீங்கும்.

உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களும் நீரிலிருந்தே உண்டாகின்றன. பிரளய காலத்தில் மீண்டும் தண்ணீரிலேயே ஐக்கியமாகி விடுகின்றன என்று வேதங்கள் கூறுகின்றன. எனவே அபிடேகத்தில் நீர் முக்கியத்துவம் பெறுகிறது.

**பால்**

வழிபாட்டின் போது பாலாபிடேகம் செய்யப்படுகிறது. திருவிழா நாட்களில் குடம் குடமாகப் பால் அபிடேகம் செய்யப்படுகிறது. பால் அபிடேகம் செய்வதால் நல்ல மழைபொழியும் பசுக்கள் அதிக அளவில் பால் சுரக்கும் கால்நடைகள் செழிக்கும் இறையருள் கிடைக்கும் எடுத்த காரியங்கள் நிறைவேறும் நல்ல செய்திகள் கிடைக்கும் என்பது மக்களின் நம்பிக்கை.

**தயிர்**

குழந்தைப் பேறு இல்லாத தம்பதிகள் தயிரை அபிடேகம் செய்வதால் மக்கட்பேறு உண்டாகும் என்று நம்பப்படுகிறது. தயிர் உடலைக் குளிர்ச்சியாக வைக்க உதவுகிறது.

**இளநீர்**

இளநீர் சூட்டைத் தனித்து குளிர்ச்சியைத் தரவல்லது. சூட்டினால் ஏற்படும் நோய்களைத் தீர்க்கக் கூடியது. இறைவனுக்குக் குளிர்ச்சி பொருந்திய இளநீரை அபிடேகம் செய்வதால் இறைவனது மனதைக் குளிரச் செய்யலாம் என்பது நம்பிக்கை.

இளநீர் மருத்துவ குணமுடையது. குரும்பை இளநீராக மாறும்பொழுது அதற்கு மூன்று கண்கள் உண்டாகின்றன. அப்பொழுது முதல் இளநீர் வழிபாட்டுக்கு உரிய பொருளாக மாறுகிறது. இளநீரைப் பயன்படுத்தும் முன்பாக அதன் பக்குவ நிலையை அறிந்து பயன்படுத்த வேண்டும். இதே போல் பக்குவமுடைய மனமே இறைவனை வழிபடத்தக்கதாகும்.

**பன்னீர்**

சுத்தமான பன்னீரால் அபிடேகம் செய்வதால் சிலைக்கு ஒருவித மனத்தைக் கொடுக்கும். பன்னீர் குளிர்ச்சியைத் தரவல்லது.

சந்தனம்

மரங்களில் அதிக மணம் உள்ளது சந்தன மரமாகும். சந்தனத்தை உடலில் பூசிக் கொண்டால் வேனல் கட்டி, வேர்க்குரு போன்றவை வருவதில்லை. உடலுக்கு குளிர்ச்சியைத் தரும்.

விருந்தினர்களை வரவேற்பதிலும் வீட்டில் நடைபெறும் சுபநிகழ்ச்சிகளிலும் சந்தனம் முக்கிய இடம் வகிக்கிறது. இதே அடிப்படையில் இறைவனுக்கு மரியாதை செய்யும் பொருட்டுச் சந்தன அபிடேகம் செய்யப்படுகிறது. சந்தனத்தை அபிடேகம் செய்யும்பொழுது மின்கடத்தும் திறன் சிலையில் அதிகரிக்கிறது. சந்தனம் வாசனை தருகிறது. தெய்வச் சிலை மேலும் மெருகேறுகிறது.

மஞ்சள்

கோயில்களிலும் வீடுகளிலும் மஞ்சள் நீரால் ஆரத்தி, அபிடேகம் நடைபெறுகிறது. கோயில்களில் பால்குடம் போன்ற நேர்த்திக்கடன்கள் செய்யும்பொழுது வழியெங்கும் பக்தர்கள் தலையில் மஞ்சள் நீர் ஊற்றுவார்கள். இவ்வாறு எல்லாக் காரியங்களிலும் மஞ்சள் முக்கிய இடம் பெற்றுள்ளதற்கானக் காரணம் அது ஒரு கிருமி நாசினி ஆகும். மஞ்சள், கார்ப்புச்சுவையும் கசப்புச்சுவையும் கொண்டதாகும். உடலுக்கு தோற்றத்தையும் ஒளியையும் கொடுக்க வல்லது. அதனால் மஞ்சள், அபிடேகப் பொருளாகப் பயன்படுகிறது.

எலுமிச்சை

இறை வழிபாட்டில் எலுமிச்சை மிகமுக்கிய இடம்பெற்றுள்ளது. எலுமிச்சை அபிடேகப் பொருள் மட்டுமல்லாமல் பூசைக்கும் பயன்படுகிறது. மனிதன் எப்பொழுதும் எந்த சூழலிலும் ஒரே குணத்தைக் கொண்டு இருக்க வேண்டும் என்ற தத்துவத்தை எலுமிச்சை நமக்கு உணர்த்துகிறது.

நாம் ஒருவரைச் சந்திக்கும் பொழுது எலுமிச்சைப் பழத்தைக் கையில் கொடுத்து வணங்குகிறோம். அதற்கு உட்பொருள் ஒன்று உள்ளது. எலுமிச்சம் பழத்தைப் போல் நமது நட்பு மாறாமல் நிலையாக இருக்கவேண்டும் என்ற அடிப்படையில் ஒருவருக்கொருவர் எலுமிச்சம் பழத்தைக் கொடுத்து நட்பைப் பலப்படுத்திக் கொள்கிறோம்.

இறைவனுக்கும் நமக்கும் உள்ள தொடர்பு ஆண்டவனுக்கும் பக்தனுக்கும் உள்ள தொடர்பாகும். இத்தொடர்பு நின்று நிலைத்து முடிவில் பக்தனுக்கு வீடு பேற்றை அளிக்கும். அதனால் இறைவழிபாட்டில் எலுமிச்சை அதிக அளவு பயன் படுத்தப்படுகிறது. மக்கள் எலுமிச்சை பழத்தில் விளக்கேற்றியும் மாலையாகத்

தொடுத்தும் அபிடேகம் செய்தும் தமக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பைப் பலப்படுத்திக் கொள்கிறார்கள்.

### பஞ்சகவ்வியம்

பஞ்சகவ்வியம் என்பது உலர்ந்த கட்டைகளை எவ்விதம் தீயானது எரித்துச் சாம்பலாக்குமோ அவ்விதம் ஒருவனது நோய்களையும் பாவங்களையும் நீக்கவல்லது. பசுவின் மூத்திரத்தில் வருணனும் சாணத்தில் அக்னியும் தயிரில் வாயுவும் பாலில் சோமனும் (சந்திரன்) நெய்யில் சூரியனும் வசிக்கிறார்கள். இவர்களின் அருள் இருந்தால் நீங்காத நோயும் வராத செல்வமும் பெறாத அருளும் இல்லை எனலாம்."[27]

சிவனுக்கு மிக விருப்பமான அபிடேகப் பொருள் பஞ்சகவ்வியமாகும். சிவராத்திரியன்று நடைபெறுகின்ற நான்கு காலப்பூசையில், முதல் காலத்திற்குரிய முதல் பூசையில் முக்கிய மிகப் பயன்படும் அபிடேகப் பொருள் பஞ்சகவ்வியமாகும்.

### திருநீறு

சிவபக்தர்கள் தரிக்கும் முக்கிய சின்னங்களில் திருநீறும் ஒன்றாகும். ஆன்மாக்களைக் காத்து இரட்சிப்பதால் 'இரட்சை' எனவும் தீவினைகளை நீறுபடுத்துவதால் திருநீறு எனவும் அழியாத செல்வத்தைக் கொடுப்பதால் விபூதி எனவும் அறியாமையை அழித்து ஞானத்தைத் தருவதால் 'பசிதமெனவும்' பெயர் பெற்றுள்ளது.

### திருநீற்றின் வகைகள்

திருநீற்றைக் கற்பம், அனுகற்பம், உபகற்பம் என்று மூன்று வகையாகப் பிரிப்பர்.

### கற்பம்

அட்டமி, சதுர்த்தி, பவுர்ணமி, அமாவாசை என்று ஏதாவது ஒரு திதியில் பசுமாட்டின் சாணத்தை கீழே விழாமல் தாமரை இலையில் ஏந்த வேண்டும். பின் மந்திரங்களை உச்சரித்துக் கொண்டே பஞ்ச கவ்வியத்தைவிட்டு பிசைந்து உருட்டி ஹோமம் செய்யும் அக்கினியில் நெல் பதருடன் வைத்து எடுத்த திருநீற்றை புதிய துணியில் வைத்து வடிகட்டி எடுத்துப் புதிய பாத்திரத்தில் நிரப்பி காயத்ரி மந்திரத்தைச் சொல்லி மலர் வைத்து வணங்கி பின்னர் வெள்ளைத் துணியில் சுற்றி வைக்க வேண்டும்.

### அனுகற்பம்

சித்திரை மாதத்தில் காட்டிற்குச் சென்று அங்கு கிடைக்கும் சாணத்தை எடுத்து வந்து இடித்து பஞ்ச கவ்வியத்தைச் சேர்த்து நன்கு கலந்து உருட்டி மந்திரங்களைச் சொல்லித தயாரிப்பது அனுகற்பம் எனப்படும்.

### உபகற்பம்

பெரிய காடுகளில் தீப்பற்றியதால் உண்டாகும் சாம்பலை எடுத்துப் பஞ்ச கவ்வியத்தைச் சேர்த்து உருட்டித் தயார் செய்யும் திருநீறு உபகற்பம் எனப்படும். எல்லாவித திருநீறுகளைத் தயாரிக்கும் போதும் மந்திரங்களைத் தவறாமல் சொல்ல வேண்டும்.

### பலன்கள்

சகல நன்மைகளையும் தரும் திருநீறு முடிசான்ற மன்னனும் முடிவில் பிடிசாம்பல் ஆகிவிடுவா் என்று வாழ்க்கையின் நிலையாமைத் தத்துவத்தை நமக்கு உணர்த்துகிறது.

திருஞானசம்பந்தா் மன்னன் கூன்பாண்டியனுக்கு வந்த வெப்பு நோயைத் திருநீறு அணிவித்து குணமாக்கினாா் என்றும் திருநாவுக்கரசா் வெப்பு நோயும் சிவபெருமானை நினைத்து அவா் சகோதரி திலகவதியாா் அணிவித்ததால் குணமானது என்றும் பெரிய புராணம் குறிப்பிடும். திருநீறு அணிவதால் தலையில் இருக்கும் அதிகப்படியான நீா் உறிஞ்சப்படுகிறது.

**“முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு**

**சத்தியமாவது நீறு தக்கோா் புகழ்வது நீறு”**[28]

என்று திருநீற்றின் புகழை ஞானசம்பந்தா் கூறுவா். திருநீற்றை அணிவது மூலம் தீவினைகள் சூழாது என்ற நம்பிக்கை தமிழ் மக்களிடையே காணப்படுகிறது. மனநோய்கள் முதலியன திருநீறு அணிவதால் மறைகின்றன. மந்திரங்களை உச்சரித்தும் தீபாராதனை செய்தும் உருவேற்றிய பின்னா், அத்திருநீற்றை நெற்றியில் பூசிக்கொள்வதின் மூலமும் நீரில் கலந்து அருந்துவது மூலமும் நன்மை உண்டாகும் என்று நம்பப்படுகிறது.

### அபிடேக திருநீறு

சிவலாயங்களில் சிவபெருமானுக்கு பிரதோசம் போன்ற தினங்களில் அபிடேகம் செய்யும் பொழுது திருநீறு முக்கிய இடம் பெறுகிறது. அபிடேக திருநீறு அணிவதால் சகல நன்மைகளும் உண்டாகும். ஆரோக்கியம் உண்டாகும். நீண்ட ஆயள்

கிடைக்கும். அபிடேகம் முடிந்தவுடன் திருநீறு அபிடேகம் செய்வதால் சிலைகளில் உள்ள மற்ற பொருள்களினால் உண்டாகும் நீர்த் தன்மை உறிஞ்சப்பட்டு தூய்மை பெறுகிறது.

சைவ சமயத்திற்குரிய முக்கியமான சாதனங்கள் மூன்று. அவை: திருநீறு, உருத்திராட்சம், ஐந்தெழுத்து மந்திரம். இவற்றுள் ஐந்தெழுத்து உள்ளத்தில் இருப்பது. திருநீறும் உருத்திராட்சமும் உடம்பில் உள்ளவை. உருத்திராட்சம் பெரிதும் ஆண்கள் அணியக்கூடியது. திருநீறே ஆண், பெண் என்ற பேதமின்றி அனைவருக்கும் உரியதாக விளங்குகிறது.

## அறிவியல் உண்மை

அபிடேகம் செய்யும்பெழுது சிலைகளில் ஏற்படும் வேதியியல் மாற்றம் குறித்து குற்றாலம் பராசக்தி கல்லூரியில் ஒரு ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. கற்சிலை ஒன்றைத் தேர்வு செய்து அதற்கு எண்ணெய் காப்புச் சார்த்தி அதன் பின்னர் தண்ணீர், பால், தேன், தயிர், குங்குமம், திருநீறு முதலியவற்றால் அபிடேகம் செய்யப்பட்டது. அப்பொழுது அச்சிலையின் மேல் ஊற்றப்பட்ட ஒவ்வொரு அபிடேகப் பொருளுக்கும் மின் கடத்தும் திறன் மாறுபடுவது பதிவு செய்யப்பட்டது.

| “பொருள் | மின்னோட்டம் | சிலையின் மின்கடத்தும் திறன் |
|---|---|---|
| தண்ணீர் | .028 | 2.8 |
| வெண்ணெய் | .022 | 2.2 |
| பால் | 0.2 | 20 |
| தயிர் | 0.7 | 70 |
| சந்தனம் | 0.15 | 15 |
| தேன் | 0.10 | 10 |
| குங்குமம் | 0.036 | 3.6 |
| பட்டுத்துணி | 0.025 | 2.5 |
| கற்பூரம் | 0.007 | 0.7 |
| பூ | 0.018 | 1.8 |
| அபிடேகத்திற்கு முன் | | |
| உலர்ந்த நிலையில் சிலை | 0.001 | பின் 0.1 |

தயிர், பால், தண்ணீர். சந்தனம் ஆகியவற்றால் அபிடேகம் செய்யும் பொழுது மின்கடத்தல் திறன் அதிகரிக்கிறது. எண்ணெய், தேன், திருநீறு, குங்குமம் ஆகியவற்றால் அபிடேகம் செய்வதால் மின்கடத்தும் திறன் குறைந்தாலும் நிலையாக உள்ளது.

ஒரு திரவத்தின் மதிப்பு அதிகரிப்பது அதன்மின்னோட்டம் அதிகரிப்பதையே குறிக்கும். குங்குமம், சந்தனம், மஞ்சள், தண்ணீர் ஆகியவை அதிக மதிப்புள்ளவை. இவற்றைக் கொண்டு அபிடேகம் செய்வதால் கருவறையில் உள்ள மண்டலத்தில் எதிர் மின்னோட்டம் அதிகரிக்கும். அபிடேகப் பொருள்களின் பி.எச். மதிப்பும் அளவிடப்பட்டுள்ளது.

| பொருள் | பி.எச்.மதிப்பு |
| --- | --- |
| தண்ணீர் | 5.0 |
| பால் | 6.0 |
| தயிர் | 4.0 |
| சந்தனம் | 5.5 |
| தேன் | 2.5 |
| எண்ணெய் | 3.0 |
| குங்குமம் | 7.0 |
| மஞ்சள் | 4.0 |
| பாலும் தேனும் கலந்தவை | 4.0 |

அபிடேகம், அருச்சனை செய்து தீபாராதனை காட்டும் பொழுது காற்று மண்டலத்தில் எப்படி மாறுபாடு ஏற்படுகிறது என்று சோதனை செய்யப்பட்டது. காற்று மண்டலத்தில் ஒருமின் தேக்கியை அமைத்து அதற்கு குறிப்பிட்ட மின்னூட்டம் கொடுத்து அதை அளந்து கொண்டார்கள். தூபம், தீபம் காட்டும் பொழுது காற்று மண்டலத்தில் ஏற்படும் மாறுபாட்டால் மின்தேக்கி, மின்னூட்டம் மாறுபடுவது சோதனை மூலம் தெரிய வருகிறது."[29]

மேலும் ஈரப்பதம் உள்ள காற்று மண்டலத்தில் பிராணவாயுவின் அழுத்தம் அதிகரிக்கிறது. அந்தக் காற்று மண்டலம் பிராணவாயு மூலக்கூறுகளை அதிக அளவில் பெறுவதால் அக்காற்று உடலுக்கு நன்மை பயக்கும். மேலும் ஒலியின் திசைவேகம் ஈரப்பதம் மிக்க காற்றில் அதிகமாக இருக்கும் என்பது அறிவியல் உண்மை. எதிர் மின்னூட்டமும் ஈரப்பதமும் உள்ள காற்று மண்டலமும் கருவறைக்குள் அமைந்துள்ளது. அந்தக்காற்று மண்டலத்தில் 'ஓம்' என்ற பிரணவ ஒலியுடன் அர்ச்சனை செய்யப்படும் பொழுது அவ்வொலி சிலையில் பட்டு

எதிரொலிக்கிறது. இதனால் அக்காற்று மண்டலம் பெரும் அலைவும் ஓத்ததிர்வும் பெறுகிறது. இக்காற்று மண்டலத்தில் அயனியாக்கப்பட்ட மூலக்கூறுகள் எதிரேயுள்ள பக்தர்களை அடையும்பொழுது அவர்களது உடலுக்கும் உள்ளத்திற்கும் நன்மை அளிக்கும். இது அறிவியல் உண்மையாகும்.

இவ்வாறு பூசையின் போது பக்தர்கள் பலன் பெறுவதால் ஆறுகாலபூசை, ஆராதனை முதலியவை தினம் செய்யப்படுகின்றன. இவ்வதிர்வுகள் சிலைக்கு அடியில் உள்ள தாமிரத் தகட்டில் ஆற்றலாகச் சேமிக்கப்படுகிறது. இந்த ஆற்றல் பக்தர்களுக்குத் தொடர்ந்து கிடைத்துக் கொண்டே இருக்கும்.

கோயில் பிரதிட்டை செய்யப்பட்ட சிலைகளின் சக்தி பன்னிரெண்டு ஆண்டுகள் வரை இருக்கும். அதனால் தான் மீண்டும் கும்பாபிடேகம் செய்து சிலைகளுக்குப் புது சக்தி உண்டாக்கப்படுகிறது. அதன் பிறகு பூசையும் அபிடேகங்களும் செய்யச் செய்ய சிலைக்கு அதிகளவு சக்தி உண்டாகிறது.

### நைவேத்தியம் (நிவேதனம்)

இறைவன் அருளால் கிடைத்த உணவுப் பொருள்களை இறைவனுக்குப் படைத்துப்பின்னா் அனைவருக்கும் பிரசாதமாக வழங்குவதே நிவேதனம் எனப்படும்.

நைவேத்தியம் என்றால் அறிவித்தல் எனப்படும். கோயிலில் நைவேத்தியத்தைப் பிறர்க்கு அறிவித்து அளித்தல் என்று பொருள்படும். நமக்குச் சொந்தமான உடைமைகளைப் பொது உடைமை ஆக்குவதே ‘நிவேதனம்’ எனப்படும்.

நிவேதனம் என்பது இறைவனுக்கு உணவு தருவது மட்டுமல்ல, உன் கருணையால் இந்த உணவு கிடைத்திருக்கிறது என்று நன்றியை அறிவித்து விட்டு உண்பது. நாம் உண்ணும் உணவு நம் உழைப்பால் கிடைத்தாலும் அதற்கு வேண்டியதை அளிப்பவன் இறைவன். அவன் முன் வைத்து அவன் அனுமதியுடன் உண்பதுதான் நிவேதனம்.

உணவை உண்பது கா்மம். அதை சுவைப்பது ஞானம். சுவையால் இன்பம் பெறுவது போகம். சுவையை சிவபெருமான் தந்த பிரசாதமாக ஏற்பது யோகம்.

கோயிலுக்குக் கொண்டு செல்லும் எல்லாப் பொருட்களும் வழிபாடு முடிந்து இறைவனுக்கு நிவேதனம் செய்தவுடன் பிரசாதம் என்ற புனித நிலையை அடைகின்றன. அதுபோல எத்தகைய மாசுக்கள் படிந்த மனிதனும் தன்னை மனப்பூர்வமாக இறைவனுக்கு ஒப்படைத்து விட்டால் புனிதத் தன்மை அடைந்து விடலாம் என்பதையே பிரசாதம் குறிக்கிறது.

"நிவேதப் பொருளை மூன்று பங்காக்கி இரண்டு பங்கை நிவேதித்தல் வேண்டும். பாத்திரத்தில் ஒருபங்கு மிச்சமாக இருக்கும். நிவேதிப்பதற்கான வகுக்கப்பட்ட அன்னம் முதலியவற்றை மேலும் எட்டுப்பங்காகப் பிரித்து இருபங்குகள் சிவனுக்கும் ஒன்று சக்திக்கும் ஒன்று கணேசனுக்கும் இன்னொன்று கந்தனுக்கும் ஒன்று பலியிடுவதற்கும் அக்கினி கார்யத்திற்கும் ஒரு பங்கு தேசிகனுக்கும் ஒரு பங்கு பாத்திரசேமமாக இருப்பதற்கும் உரியன என ஆகமத்தில் கூறப்பட்டுள்ளது."[30] பாத்திரசேமமாக இருப்பது பரிசாரகர் முதலியோர்க்கு உரியதாகும்.

## பிரசாதத்தின் காந்தசக்தி

"இந்தியாவின் கோயில்களில் வழங்கப்படும் பிரசாதங்களும் அவற்றின் தன்மையும் நாம் சாதாரணமாக வெளியே காண்பவற்றைக் காட்டிலும் அபாரணமான சக்தி வாய்ந்தவை என்று மற்றவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். இதனை நான் அனுபவப்பூர்வமாகவே உணர்ந்தேன். கோவில்களில் மூலவர் இருந்தாலும் உற்சவத் திருமேனிகள் ஊர் முழுவதும் வீதிகளில் கொண்டு சென்று மக்களுக்குப் பிரசாதம் வழங்கும் முறையும் இந்த அடிப்படையில்தான் ஏற்பட்டது. இந்துக் கோயில்கள் பலவற்றிலும் சிறப்பாகப் பக்தர்கள் ஏராளமாக வந்து கூடும் புகழ்பெற்ற ஆலயங்களில், இந்த சக்தி மிகவும் மேலோங்கி இருக்கிறது. இந்த சக்தி நிரந்தராமாகவும் இருக்கிறது. இதனை நான் சோதனை மூலம் உணர்ந்தேன்.

நான் இந்தியாவின் தென்பகுதியில் உள்ள மதுரைமீனாட்சி ஆலயத்துக்குப் போயிருந்தேன். அப்போது அங்கு எனக்குப் பிரசாதமாக விபூதியும் குங்குமமும் கொடுத்தார்கள். அவற்றை நான் சோதித்துப் பார்த்தபோது காந்தசக்தி அதில் இருப்பதை உணர முடிந்தது. அது எனக்கு அதிசயமாகவே இருந்தது. அதைவிட அதிசயமாக இருந்தது ஒன்றுண்டு. பல ஆண்டுகளுக்குப் பிறகு நான் அந்தப் பிரசாதத்தை மீண்டும் சோதனை செய்து பார்த்தேன். அந்தக் காந்த சக்தி சிறிதும் குறையவே இல்லை. இப்படி ஒரு அதிசயத்தை நான் எந்த நாட்டிலும் கண்டதே இல்லை"[31] என்கிறார் சார்லஸ் டபிள்யூ எலப்பீட்டர் என்ற அறிஞர். அவரது கருத்துகளின்படி நிவேதனப் பொருள்களில் இறைவனின் காந்த சக்தி உண்டாகிறது என்பதும் இதுநின்று நிலைத்திருக்கிறது என்பதும் உண்மையாகிறது. திருநீற்றை நெற்றி மற்றும் உடல் பகுதியில் அணிவதால் உடலில் உள்ள அதிகப்படியான நீர் உறிஞ்சப்படுகிறது. இதனால் உடல் ஆரோக்கியம் உண்டாகிறது.

அதுபோலக் குங்குமம் சுமங்கலிப் பெண்கள் நெற்றியின் உச்சி வகிட்டிலும் புருவ மத்தியிலும் இருப்பதால் பிற ஆண்கள் செய்யும் மெஸ்மரிசம் போன்றவற்றிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ள முடியும் என்பதால் இவை இறைவன் பிரசாதமாக வழங்கப்பட்டு நமது பண்பாட்டு மரபாக மாறி வளர்ந்துள்ளது.

## தீப வழிபாடு

பூசை வேளையில் நிகழும் நிகழ்ச்சியில் தீபாராதனை மிக முக்கியமானதாகும். வழிபடும் மக்கள் பூசை நிகழும் பொழுது ஏனைய பூசைமுறைகளைத்தவற விட்டாலும் தீபாராதனை நடக்கும் பொழுது தீப ஒளியில் இறைவன் திருக்கோலம் கண்டு தரிசிப்பதே பெரும் பேறாகக் கருதுவர்.

தூபதீபங்காட்டி நைவேத்தியம் நிகழ்ந்ததும் தீபாராதனை தொடங்கும். ஒவ்வோர் ஆராதனைக்கும் ஒவ்வொரு காரணம் உண்டு. இறைவன் அகரம் முதலாக க்ஷகரம் முடிவாக 51 அட்சர வடிவாக விளங்குகிறான். அதை விளக்க 'அருங்காலத்தி' என்ற அட்சர தீபத்தைக் காட்டுவார்கள்.

இருபத்தி ஏழு நட்சத்திர வடிவாக இறைவன் விளங்குகிறான் என்பதை உணர்த்தும் பொருட்டு நட்சத்திர தீபம் காட்டுவார்கள். சிவன் ஐந்து மந்திர வடிவாக விளங்குகிறான் என்பதை அறிவிக்க ஐந்து தட்டுகளில் தீபத்தைக் காட்டுவார்கள்.

தீபத்திலே துர்க்கை, இலக்குமி, சரசுவதி என்று சக்திகளும் உள்ளன. தீப ஒளி புற இருளையும் உள்ளத்தின் இருளையும் அகற்றுகிறது. தீய சிந்தனைகள் ஏற்படா வண்ணம் தடுக்கிறது. மனத்தில் உள்ள கவலைகளைப் போக்குகிறது.

இறைவன் எங்கே இருந்தாலும் எந்த வடிவத்தில் இருந்தாலும் சோதி வடிவத்திலே, நம்முடைய மனத்திலே உறைகிறான். ஆகவே தீப வழிபாட்டின் மூலம் உள்ளத்தில் உள்ள சோதியை வழிபடும் பலனைப் பெறலாம்.

திருவிளக்குகள் தெய்வங்களின் உறைவிடமாகத் திகழ்கின்றன. தெய்வச் சிலைகளை அலங்கரிப்பதைப் போல் திருவிளக்கும் அலங்கரிக்கப்படுகின்றன. எனவே பூசை அறையிலும் ஆலயத்திலும் விளக்கைத் தரையில் வைக்கக்கூடாது. மனைப்பலகை மீதோ அல்லது தாம்பாளத்தட்டின் மீதோ வைக்க வேண்டும். பலகையின் மேல் கோலமிட்டிருக்க வேண்டும்.

## தேங்காய் தத்துவம்

இறைவனுக்கு பூசையின் போது தேங்காய் உடைத்து வைக்கப்படுகிறது. தேங்காயை உடைத்து வைப்பது ஒரு சிறந்த உண்மையைத் தெளிவுபடுத்துகின்றது. தேங்காயின் கடினமான மேல் ஓடும் அதனுள்ள வெண்மையான பருப்பும் அதனுள் இனிய இளநீரும் உள்ளன.

உருண்டையான புறஓடு உலகை ஒத்திருக்கின்றது. இரண்டும் கோளவடிவம் உடையது. உலக மாயையைக் குறிப்பது. உள்ளே வெண்மையான பகுதி பரமானந்தத்தைக் குறிக்கின்றது. சீவான்மா மாயையினால் பரமாத்மாவை உணராமல்

பரமானந்த பேற்றினைப் பெறாமல் நிற்கின்றது. மாயையைப் போன்றே புறஓடும் வெள்ளைப் பகுதியையும் இளநீரையும் காணமுடியாமல் மறைத்திருக்கின்றது.

**பழங்கள்**

பழங்களில் உள்ள வைட்டமின் சி, வைட்டமின் டி, கால்சியம், இரும்பு சத்து முதலியவைகள் இயற்கையாக நம்மை நோயினின்றும் காக்கின்றன. நமக்கு ஆரோக்கியத்தையும் தருகின்றன. மலச்சிக்கலை நீக்கும். கொழுப்பு நோய் உண்டாகாது. இரத்த சுத்தி ஏற்படும். உடலுக்கு நல்ல நிறத்தைக் கொடுக்கும் மனிதன் தனக்கு எதுவெல்லாம்நன்மை செய்கின்றதோ அதனையெல்லாம் தனக்குப் பிடித்த இறைவனுக்கும் படைத்தான் என்ற அடிப்படையில் பழங்களையும் இறைவனுக்குப் படைத்தான்.

**அட்சதை**

அட்சதை என்பது சுத்தமான அரிசியில் சிறிது மஞ்சள் சேர்த்து சில துளிகள் நீர் விட்டுக் கலந்து உருவாக்குவது. மஞ்சள் சேர்க்கப்படுவதால் அந்த அரிசி பூசைக்கு உரியதாகிறது.

வடமொழியில் ‘சதம்’ என்றால் பழுது என்று பொருள். ‘அசதை’ என்றால் பழுதற்றது என்று பெருள்படும். பழுதுபடாத அரிசிபோல நமது வாழ்வும் பழுதுபடாமல் இருக்க வேண்டும் என்பது இதன் பொருள் ஆகும். வீட்டிலும் கோயில்களிலும் பூசையின் போது மலர்களைச் சமர்ப்பிப்பது போல அட்சதையைச் சமர்ப்பிப்பதும் உண்டு.

**பூசை மலர்கள்**

இந்து சமய வழிபாட்டு முறையில் வேள்விநெறி, பூசெய் (பூசை) நெறி என்றும் இருவகை நெறி முறைகள் பின்பற்றப்பட்டு வருகின்றன. தீயினை வளர்த்து அதன் வாயிலாக இறைவழிபாட்டை நடத்துவதே ‘வேள்வி நெறி’ ஆகும். வேதக் காலத்திலிருந்து இது சிறப்புமிக்க ஒன்றாகப் போற்றப்பட்டு வருகின்றது. பூவினைக் கொண்டு இறைவனுடைய திருப்பாதங்களைப் போற்றிப் பூசிப்பதே பூசெய் நெறியாகும். பூவினைக் கொண்டு இறைவனை வழிபாடு செய்யும் புனித நெறி பண்டைய வைதீக சமயத்தில் இல்லை. ‘வேள்வி’ நெறியை ‘நிகமம்’ என்னும் வடமொழிப் பெயராலும் பூசைநெறியை ‘ஆகமம்’’ என்னும் சொல்லாலும் சுட்டுவர்.”[32] ஆகம நெறியிலும் வேள்வி இடம் பெற்றது. ஆயினும் தமிழகக் கோயில்களில் பேரளவிற்கு இன்றும் பூசைநெறியாகிய ஆகம வழிபாட்டு முறையே பின்பற்றப்பட்டு வருகிறது.

## ‘பூசை’ ‘பூஜா’ என்னும் சொல்

தமிழில் இறைவழிபாட்டைச் சுட்டும் ‘பூசை’ என்னும் சொல் வடமொழியில் பயன்படுத்தப்பட்ட பொழுது ‘பூஜா’ என்று திரிந்தது. ‘பூசை’ என்னும் சொல் ‘பூ’, ‘செய்’ என்னும் இரண்டு தமிழ்ச் சொற்களின் சேர்க்கையாகும். பூவினைக் கொண்டு செய்யப்படும் வழிபாடு என்பதே இச்சொல்லின் பொருளாகும். பூவினைக் கொண்டு செய்யப்படும் வழிபாடு சிறந்ததோர் பண்பாட்டு அடிப்படையில் தோன்றிய வழிபாட்டு முறையாகும். இப்பேரண்டம் முழுவதும் ஓர் இறையாற்றல் நிறைந்திருப்பதை உணர்ந்து, அந்த மாபெரும் இறையாற்றலோடு மனிதன் தான் கலந்து ஒன்று படவும் மகிழ்ந்து இன்புறவும் பெருவிருப்போடு செய்யப்படும் வழிபாடே ‘பூசை’ ஆகும். இறைவன் பெயர்களை ஒவ்வொன்றாகக் கூறி மலர்தூவி அருச்சித்தல் ஆகம வழக்கு ஆகும்.

## இலக்கியங்களில் ‘பூசெய்’

சிலப்பதிகாரம் குன்றக்குரவையுள் ‘‘பூப்பலி செய்ம்மின்’’ எனக் குறிக்கப் பெற்றுள்ளது. திருநாவுக்கரசர் தேவாரத்தில்,

**‘பூமாலை புனைந்தேத்தி’**[33]

**“தொழுது மலர்தூவித் துதித்து”**[34]

**“புண்ணியம் செய்த நல்ல புனலொடு மலர்தூவி**
**எண்ணுமின் எந்தை நாமம்”**[35]

எனவும் வருமிடங்கள் இதற்குச் சான்றுகளாகும்.

எனவே ‘பூஜை‘ (பூசை) என்னும் வடசொல் ‘பூசெய்’ என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபாக வடமொழியில் இடம்பெற்றுள்ளது.

ஒவ்வொரு தெய்வத்திற்கும் ஒவ்வொரு மலர் சிறந்ததாகக் கருதப்படுகிறது. ஒரு தெய்வத்திற்கு உகந்த பொருள் வேறு தெய்வத்திற்கு உகந்ததாக இராது.

## சிவன்

சிவனுக்கு உகந்தது வில்வம் ஆகும். வில்வ இலையில் இலட்சுமி வாசம் செய்கிறாள். அதனால் வில்வ மரத்திற்கு திருமரம் (ஸ்ரீவிருட்சம்) என்று பெயருமுண்டு. வில்வத்தின் மூன்று இலைகள் சிவபெருமான் ஏந்தியுள்ள திரிசூலத்தின் வடிவத்தையும்

இறைவன் முக்கண்களையும் காட்டுகிற வடிவில் அமைந்துள்ளது. ஒரு வில்வ இலை ஒரு இலட்சம் தங்க மலர்களுக்குச் சமமாகும் என்று கூறப்படுகிறது.

### வில்வத்தின் மகிமை

வில்வத்தினால் இறைவனை அருச்சனை செய்து வழிபடுவது பாவ நீக்கத்திற்கு ஒரு முக்கியமான வழிமுறையாகும். வில்வத்தில் திருமகள் இருப்பதால் அடியவர்கள், செல்வங்கள் எல்லாவற்றையும் இறைவன் திருவடிகளிலேயே அர்ப்பணித்து விடுவதற்குச் சமமாகும். அவன் திருவருளை மட்டுமே வேண்டுகின்ற நிலையை வில்வ இலை அருச்சனை காட்டுகிறது.

ஒரு வில்வதனத்தைச் சிவனுக்கு அர்ப்பணித்தால் சகல பாவங்களும் நீங்கி அனைத்து நன்மைகளும் உண்டாகும். வில்வமரத்தை வளர்ப்பதனால் அசுவமேதயாகம் செய்த பலன் கிடைக்கும். அதனால் ஆயிரம் பேருக்கு அன்னதானம் செய்த புண்ணியம் கிடைக்கும். கங்கை முதலான புண்ணிய நதிகளில் நீராடிய பலன் கிடைக்கும். எல்லா சிவதலங்களையும் வழிபட்டதன் பலன் கிடைக்கும். சிவனுக்குக் கொன்றை மலரும் ஏற்றது.

சிவனுக்குத் தாழம்பூவை விலக்கவேண்டும். பொதுவாகத் தாழம்பூவைப் பூசைக்குப் பயன்படுத்துவதில்லை. பிரமனும் திருமாலும் சிவனின் அடிமுடி தேடியபோது பிரமனுக்காக பொய் சாட்சி சொல்லியதால் தாழம்பூவை சிவபெருமான் தனக்கு உகந்த மலர்களில் இருந்து விலக்கி வைத்தார் என்று புராணங்கள் கூறினாலும் பாம்பு போன்ற நச்சு உயிரினங்கள் தாழம்பூவின் வாசம் அறிந்து வரக்கூடும் என்பதனால் தாழம்பூ பூசைக்குப் பயன்படுத்துவதில்லை.

### துர்க்கை (மலைமகள்)

சிவப்புநிற மலர்கள் துர்க்கைக்கு உகந்த மலர்களாகும். அருகம்புல் சேர்க்கவே கூடாது.

### இலக்குமி (திருமகள்)

செந்தாமரை, செவ்வரளி, ரோசா, சாமந்தி ஆகியவை இவருக்குப் பூசை செய்ய ஏற்ற மலர்களாகும். தும்பைப்பூ விலக்கப்படல் வேண்டும்.

### சரசுவதி (கலைமகள்)

கலைமகளுக்கு ஏற்றது வெண்தாமரை, வெள்ளரளி, முல்லை, மல்லிகை, நந்தியாவட்டை, சம்பங்கி முதலான வெள்ளை நிற மலர்கள் ஆகும். சிவப்புநிற மலர்களால் சரசுவதியை வழிபடக்கூடாது.

### விநாயகர்

விநாயகருக்கு எருக்கம்பூ, அருகம்புல் ஏற்றது.

### கற்பூர ஆரத்தி தத்துவம்

வெண்மையான கற்பூர வடிவம் போலவே ஆன்மாக்களும் இயல்பாகவே வெண்ணிறமான தூய தன்மையினைக் கொள்ளுதல் வேண்டும். கற்பூரமானது அக்கினி பற்றியவுடன் தன் வடிவமாக விளங்காது அவ்வக்கினியொளி மயமாக நிற்பது போல, ஆன்மாக்களும் பிரம்ம ஞானம் பற்றியவுடன் மாயத் தன்மை நீங்கிப் பிரம்மத்துவம் விளக்கம் பெற்று நிற்கும். பின்னர் அக்கற்பூரம் யாதொரு பற்றுமில்லாமல் தம் வடிவம் முழுவதும் கரையப் பெற்று விளங்குதல் போல ஆன்மாக்களும் சகல பற்றுகளும் ஒழிந்து பரமாத்மாவுடன் கலந்து பேரின்ப பெருவாழ்வடையும் என்ற உண்மையை உரைப்பதே கற்பூர ஆரத்தியின் தத்துவம் ஆகும். அதனால் அனைத்து வழிபாட்டுச் சடங்குகளும் நிறைவு பெற்றவுடன் கற்பூரதீபம் காட்டி அதை அடியவர்கள் கண்களில் ஒற்றிக் கொள்வது வழக்கத்தில் உள்ளது.

### வழிபாட்டுத் தத்துவம்

ஆசாரியர் என்றும் பட்டர், குருக்கள் என்றெல்லாம் அழைக்கப்படுகின்றவரிடம் இறைவழிபாட்டிற்குச் செல்லும் பக்தர்கள் தேங்காய், பழம், வெற்றிலை பாக்கு, கற்பூரம் ஆகியவற்றைக் கொண்டு சென்று கொடுக்க வேண்டும் என்பது ஆகம விதி. எனவே வழிபடச் செல்வோர் இவற்றைக் கொண்டு செல்வது வழக்கம். குருக்கள் அவற்றைக் கொண்டு செய்யும் வழிபாடும் ஒரு தத்துவத்தை உணர்த்துகின்றது.

தேங்காயானது வழிபடச் செல்லும் ஆன்மாவைக் குறிக்கும். தேங்காயின் மூன்று கண்களும் ஆன்மாவை மூடி நிற்கும் மும்மலங்களைக் குறிக்கும். மும்மலங்கள் ஆணவம், கன்மம், மாயை என மூன்று கண்களையுடைய ஓடு ஆன்மாவில் ஒட்டியிருக்கும். பாசங்களின் கடினத் தன்மையைக் குறிக்கும் அந்த ஓட்டினுள் அமைந்த வெண்மையானபருப்பு ஆன்மாவைக் குறிக்கும்.

தேங்காயின் ஓடு, கருவியின் துணையின்றிக் கையால் உடைபடுவதில்லை. மிகவும் கடினம் எளிதில் விலக்க முடியாத தன்மையைக் குறிக்கும். அத்தேங்காயை உடைப்பதற்குத் தேவையான கருவி, ஆன்ம விடுதலைக்குத் தேவையான இறைவனது திருவருளைக் குறிக்கும். கருவி கொண்டு தேங்காயை உடைக்கும் குருக்கள், இறைவனுடைய கருணையைக் குறிக்கும்.

பழங்கள் அடியவர்களின் நல்வினைப் பலன்களைக் குறிக்கும். வெற்றிலைப் பாக்கு அவருடைய முக்குணங்களைக் குறிக்கும். தூய வெண் கற்பூரம் இறைவனோடு இரண்டறக் கலக்கும் பக்குவம் வாய்ந்த ஆன்ம நிலையை உணர்த்தும்.

தேங்காய், பழம் முதலியவற்றோடு வழிபடச் செல்லும் அடியவர், தம்மையும் தம் வினைப் பயன்களையும் இறைவனுக்கு அர்ப்பணிக்கச் சென்று மகாமண்டபத்தை அடைந்தவுடன் ஆசாரியர் வந்து அவற்றை ஏற்றுத் தேங்காயை உடைத்து, அனைத்தையும் சுத்தம் செய்து, அதாவது மலங்களை நீக்கி இறைவனுக்கு அர்ப்பணித்து கற்பூரத்தை ஏற்றி இறைவனின் தரிசனத்தையும் அருளையும் இந்த அடியார்க்கு வழங்குவார். மும்மலங்களால் பந்தப்பட்டு நிற்கும் ஆன்மா, உலகைச் சார்ந்து நிற்கும் போது உடைக்கப்பட்ட தேங்காயின் உள்ளிருக்கும் தூய இனிய வெண்பருப்புப் போன்று மலநீக்கம் பெற்றுப் பேரின்பம் பெருதலையும் அந்த ஆசாரியர் உணர்த்துவார். மந்திர உபாசனையையும் அவருக்கு உபதேசிப்பார். இந்நிலையே மந்திரான்ம நிலையாகும்.

## நேர்த்திக் கடன்கள்

நம்பிக்கைக்கும் நேர்த்திக்கடன்களுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. நன்மையின் மீதுள்ள விருப்பையும் தீமையின் பாலுள்ள வெறுப்பையும் இவைகாட்ட வல்லன."[36] நம்பிக்கை வெற்றி பெருமானால் அது நேர்த்திக் கடனாகிறது.

இறைவனுக்கும் பக்தனுக்கும் நடக்கும் ஒரு பண்டமாற்று முறை. நீ இது செய்வாயானால் நான் இது செய்வேன் என நேர்த்திக் கொண்டு செய்வது. இறைவன் உயிர்களிடமிருந்து எதுவும் எதிர்பார்க்கமாட்டார். ஆயினும் மக்கள் தம் மன அமைதிக்காக இறைவனிடம் செய்து கொள்ளும் ஒரு ஒப்பந்தமே நேர்த்திக்கடன்.

ஆயிரமாயிரம் செலவு செய்து அன்னதானம் செய்தலும் அது அனைவருக்கும் சென்று சேராது. ஒருவருக்குத் தனிப்பட்ட முறையில் உறவாலும் பகையாலும் இனத்தாலும் நிறத்தாலும் சமுதாய ஏற்றத் தாழ்வுகள் உண்டு. அன்னதானத்தை வீட்டிலிருந்து செய்யாது, கோயில்மூலம் பிரசாதம் என்ற பெயரால் அளிக்கும்போது அவ்வேறுபாடுகள் மறைகின்றன. அனைவருக்கும் அவ்வுணவு சென்றடைகிறது.

எனவே தான் நேர்த்திக்கடன்கள் பலகோயில்களில் செய்யப்படுகின்றன. நேர்த்திக்கடனாக பெறப்படும் பொருள்கள் இல்லாதவர்களிடம் சென்றடைவதே நேர்த்திக்கடனின் குறிக்கோளாகும். கோயிலில் செய்யப்படும் நிவேதன உணவுகள், அபிடேகப்பால், சந்தனம், திருநீறு போன்ற பொருள்கள் பொது மக்களுக்கு அளிக்கப்பட வேண்டும் என்பதற்காகவே செய்யப்படுகிறது. கடும் சோதனைகளிலிருந்து

மீண்டு, இறைவனுக்குத் தம் மனம் மகிழ்ந்து அளிக்கப்படும் பொருள்களே நேர்த்திக்கடன் பொருள்களாகும். இதனால் மக்களுக்கு மன அமைதி கிடைக்கிறது.

### நேர்த்திக்கடன்

தனக்கு மேலாக ஓர் ஆற்றல் இருக்கிறது என்று ஒவ்வொரு மனிதனும் நம்புகிறான். அவ்வாற்றலே தெய்வம் என்றும் அத்தெய்வத்தின் கருணையாகத்தான் தனது வாழ்க்கையின் எல்லா நிகழ்வுகளும் நடைபெறுகின்றன என்றும் நம்புகின்றான். தனக்கு வேண்டியவற்றைத் தெய்வம் நிறைவேற்றித் தர வேண்டும் என்றும் தான் எண்ணிய செயல்கள் நிறைவேறினால், இன்னது செய்வேன் என்றும் தெய்வத்திடம் வேண்டுகிறான். இத்தகைய நம்பிக்கையின் அடிப்படையில் செய்யப்படுவதே நேர்த்திக்கடனாகும். நேர்த்திக்கடன் என்ற முறை இந்து சமயத்தில் மட்டுமன்றி உலகிலுள்ள அனைத்துச் சமயங்களிலும் வேரூன்றி இருப்பதைக் காணமுடிகிறது.

### நேர்த்திக்கடன் விளக்கம்

நேர்த்திக்கடன் என்பது தெய்வத்திற்கு அளிப்பதற்காக நேர்ந்த கடன் ஆகும். இந்நேர்த்திக்கடனை ‘நேர்தல்’, ‘நேர்ச்சை’, ‘நேர்த்தி’, ‘அங்கீகரித்தல்’, ‘உடன்படல்’, ‘சாமிக்கு நேர்தல்’, ‘வேண்டல்’ என்று தமிழ்ச்சொல்லகராதி குறிப்பிடுகிறது.”[37]

“நேர்த்திக்கடன் என்பதற்கு ‘நேர்ச்சை’, ‘நேமிசம்’, ‘வேண்டுதல்’, ‘தெய்வக்கடன்’ என்ற பல பெயர்கள் வழங்கப்படுகின்றன.. “துன்பம் தீர்ந்தால் இன்னது செய்வேன், நோய் தீர்ந்தால் இன்னது செய்வேன் என மக்கள் தெய்வத்திடம் வேண்டிக்கொள்வதே நேர்த்திக்கடனாகும்.”[38] எனவே நேர்த்திக்கடன் என்பது மக்கள் நம்பிக்கையின் அடிப்படையில் தெய்வத்திற்குச் செய்யப்படும் ஒரு செயலாகும்.

### தெய்வ வழிபாட்டில் நேர்த்திக்கடன்

திட்டமிட்ட வினைகளே ‘சடங்குகள்’ எனப்படுகின்றன. சமயத்தின் பயன்பாட்டிற்காக, சமுதாய உணர்வினை, சமய ஒழுக்கங்களை பாரம்பரியமாகக் கொண்டு பழமையுடன் இணைப்புக் கொண்டு, சமயப்பண்பினைப் பெரிதும் குறிப்பனவாக விளங்குவது சடங்குகள் ஆகும். சமயச்சடங்குகள் எல்லாம் மக்களின் உண்மையான சமய உணர்வுக்குத் துணைசெய்யும் சாதனங்களாகும். இவ்வாறு நம்பிக்கையின் அடிப்படையில் தெய்வத்திற்குச் செய்வதே ‘நேர்த்திக்கடன்’ என்ற சடங்காகும். மக்கள் தாங்கள் அனுபவிக்கும் துன்பங்களுக்கு எல்லாம் தாங்களே காரணம் என்பதை உணர்ந்து அத்துன்பங்களை நீக்க வல்லவன் ‘இறைவன் ஒருவனே’ என்று நம்பினர். இந்த நம்பிக்கையின் அடிப்படையிலேயே தெய்வ விழாக்களில் தங்களின் துயரங்களை நீக்குமாறு தெய்வத்திடம் வேண்டுகின்றனர். தங்களின் வேண்டுதல்கள்

நிறைவேறிவிட்டால் தெய்வத்திற்கு நன்றி செலுத்தும் பொருட்டு நேர்த்திக் கடன்களைச் செய்கின்றனர். இத்தகைய நேர்த்திக்கடன்கள் தெய்வ வழிபாட்டின் வளர்ச்சிக்கு மேலும் வித்திட்டன எனக் கருதலாம். நேர்த்திக்கடன்கள் மூலமே மனிதன் தெய்வ வழிபாட்டில் பல்வேறு வழிபாட்டு முறைகளையும் சடங்குகளையும் ஏற்படுத்தினான். எனவே தெய்வத்திடம் மக்கள் ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காக நேர்ந்து கொண்டு அந்த நோக்கம் நிறைவேறியபின் அத்தெய்வத்திற்குச் செலுத்துவதே நேர்த்திக்கடன்கள் என வரையறைப் படுத்தப்படுகின்றன.

### நேர்த்திக்கடன் செலுத்தப்படுவதன் நோக்கம்

பொதுவாக மக்கள் தெய்வத்திடம் தனி ஒருவரது நலன் கருதியும் குடும்பநலன் கருதியும் பொதுநலன் கருதியும் நேர்த்திக்கடன் செலுத்துவதைக் காணமுடிகிறது.

தனி ஓரவரது நலன் கருதி எடுக்கப்படும் நேர்த்திக்கடன்கள் பெரும்பாலும் குழந்தைப்பேறு வேண்டியும் திருமணம் நடைபெறவேண்டியும் வேலைபெற வேண்டியும் நோய் நீங்க வேண்டியுமே நேர்ந்து கொள்ளப்படுகிறது.

குடும்ப நலன் கருதி குடும்ப உறுப்பினர்களால் எடுக்கப்படும் நேர்த்திக் கடன்கள், வாரிசு கிடைக்க வேண்டியும் குடும்பம் சிறக்க வேண்டியும் நேர்ந்து கொள்ளப்படுகின்றன.

பொதுநலன் கருதி ஊர்மக்களால் எடுக்கப்படும் நேர்த்திக்கடன்கள் மழைபெய்ய, விளைச்சல் பெருக, அம்மை, காலரா போன்ற கொடிய நோய்களிலிருந்து தங்களைக் காக்க வேண்டியும் நேர்ந்து கொள்ளப்படுகின்றன.

மக்கள் தங்களின் வேண்டுதல் நிறைவேறிய பின் நேர்ந்துகொண்ட தெய்வத்திற்கு நேர்த்திக்கடன்களைச் செய்யாமலிருந்தாலோ அல்லது காலம் தாழ்த்திச் செய்தாலோ, நேர்ந்து கொண்டவர்களைத் தெய்வம் தண்டிக்கும் என்று நம்பினர். ஆதலால், நேர்ந்து கொண்ட காலத்திற்குள்ளேயே தங்களது நேர்த்திக் கடன்களை முறையாகச் செய்து விடுகின்றனர்.

### நேர்த்திக்கடன்கள் அளிக்கும் முறை

நோய்களுக்குத்தக்க முறையில் நேர்த்திக்கடன் அளிக்கப்படுகிறது. உடல் உறுப்புகளில் ஏதேனும் குறைபாடுகள் ஏற்படின் அதனை நீக்குவதற்காக அவ்வுறுப்பினைப் போன்று மாதிரிகளை அளிப்பது உண்டு. தலை, கண், கால், கை, வயிறு முதலிய உறுப்புகள் அளிக்கப்படுகின்றன. இவை வெள்ளி, தங்கம், பித்தளை போன்ற உலோகத்தால் செய்யப்பட்டிருக்கும். கண்களில் ஏற்படும் குறைகளைப் போக்குவதற்காக கண்மலரை இறைவன் கண்களில் சாற்றித் தன் கடனை

நிறைவேற்றுவர். தோளில் ஏற்படும் வேனிற்கட்டி., பரு போன்ற நோய்கள் நீங்க உப்பு, மிளகு முதலியன இடப்படுகின்றன.

பிள்ளையில்லாதவர்கள் வேண்டிக்கொண்டு தொட்டில் கட்டுவது மரபாகும். இதனை அம்மன் சன்னிதியிலோ அல்லது தல மரத்திலோ கட்டித் தொங்க விடுவர். திருஏடகநாதர் கோயில் தலமரத்தில் தொட்டில் கட்டும் வழக்கம் உள்ளது. சிலர் வயிற்றுவலி போன்ற நோய்கள் நீங்குவதற்காக மாவிளக்கு இட்டுக் கடவுளை வழிபடுவர்.

### உயிருக்கு உயிர்

உயிருக்கு தீங்கு ஏற்பட்டால் வேண்டிக் கொண்டு உயிருக்கு உயிர் அளித்தல் மரபு. முற்காலத்தில் ஆடு, சேவல் முதலியவற்றை உயிர்ப் பலியாக இடுவது வழக்கம். தற்காலத்தில் அவை உயிரோடு கோயிலுக்கு விடப்படுகின்றன. திருஏடகநாதர் கோயிலில் வேண்டுதலுக்காகப் பசுக்களை உயிரோடு விடும் வழக்கம் உள்ளது.

### காவடி எடுத்தல்

எண்ணற்ற மக்கள் இந்நேர்த்திக் கடனில் ஈடுபடுகின்றனர். விரதம் இருந்தும் காப்புக்கட்டியும் இச்செயலில் ஈடுபடுகின்றனர். காவடி எடுப்பது முருகனுக்கு உரியதாகும். பால்காவடி எடுத்து வந்து அபிடேகம் செய்யப்படும். இது இறைவனைக் குளிர்விப்பதற்காக செய்யும் செயலாகும். அலகுக்காவடி என்பது கம்பிகளால் உடல் முழுவதும் குத்திக்கொண்டு காவடியைச் சுமந்து வருவது ஆகும். சிலர் நாக்கிலும் அன்னத்திலும் வேலைக் குத்திக்கொண்டு வருவதும் வழக்கமாகும். இது தன்னை வருத்திக் கொண்டு இறைவனிடம் வேண்டுவதைக் குறிக்கிறது.

### திருவிழாக்கள்

தமிழர்களின் நாகரிகத்தையும் பண்பாட்டையும் விளக்குவனவற்றுள் திருவிழாக்களும் பண்டிகைகளும் சிறந்த இடத்தைப் பெறுகின்றன. பண்டைக் காலந்தொட்டே விழக்கள் தமிழகத்தில் நடந்து வருகின்றன.

**“மடியா விழவின் யாணர் நன்னாடு”**[39]

என்று வரும் புறநானூற்று அடியில் ‘மடியா’ என்ற சொல் ஆண்டு முழுவதும் என்ற பொருளைத் தருகிறது.

திருஞானசம்பந்தர் திருமயிலாப்பூர் திருப்பதிகத்தில் பல திருவிழாக்களைக் குறிப்பிடுகிறார்.

"ஐப்பசி ஓண விழாவும் ......

காணாதே போதியோ பூம்பாவாய்

விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்

ஆதிரைநாள் காணாதே போதியோ பூம்பாவாய்

ஆதிரை நாள் காணாதே போதியோ பூம்பாவாய்

ஓண விழாக் காணாதே போதியோ பூம்பாவாய்

...... ..... ...... அட்டமிநாள்

...... ..... ..... .....

பொற்றாப்புக் காணாதே போதியோ பூம்பாவாய்

பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய்" [40]

'விழா' என்பதற்கு விழைவு என்று பொருள் கொண்டால் அது இறைவனை நோக்கி மனிதன் விழைவும் செயலைக் குறித்து நிற்கும். இன்பமான காலம், இறைவன் அடியார்களுக்கு வரங்களை அள்ளித்தரும் காலம். விழாக்கள் சமயத்தோடு எந்த அளவுக்கு நெருக்கமான தொடர்பு கொண்டிருக்கிறதோ அதே அளவுக்குச் சமுதாயத்துடனும் தொடர்பு கொண்டிருக்கிறது. நாட்டில் எத்தனை வேறுபாடுகள் இருந்தாலும் அவை திருவிழா நாட்களில் இல்லாமல் செய்கிறது. சாதி, சமயம், பொருள் வேறுபாட்டினையும் திருவிழா நீக்குகிறது. மக்களின் வாழ்வில் சலிப்பினைப் போக்கி இன்பமும் மலர்ச்சியும் புத்துணர்ச்சியும் ஊட்டுவது திருவிழாவாகும்.

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் நடைபெறும் விழாக்கள் அனைத்திலும் மக்கள் சாதி, மதப்பேதம் இன்றி கலந்து கொண்டு இறைவனின் அருளைப் பெருகின்றனர். புட்டுசொக்கநாதர் கோயில் பதினெட்டு ஊர்களைச் சேர்ந்த வாணிபச்செட்டியார் நிருவாகத்தின் கீழ் இருந்தாலும் அங்கு நடக்கும் புட்டுத்திருவிழாவின் போது அனைத்துச் சாதி மக்களும் கலந்து கொள்கிறார்கள். இது மக்களிடையே ஒற்றுமையை வழியுறுத்துவதாக அமைகிறது.

## கோபுரத் தத்துவம்

திருக்கோயிலுள்ள கோபுரம், மனிதனுடைய மயக்கத்தை நீக்கியருள வல்லதாய் விளங்குகின்றது. மக்கள் தம் உடம்பையே தாமாகக் கொண்டு தங்களுடைய ஒழுக்கத்தையும் உலகச் சூழல்களையும் வகுத்துக் கொள்கின்றனர். அதனால் போட்டிகளும் பிணக்குகளும் ஏற்படுகின்றன.

தம் உடம்பையே தாமாகக் கொள்வது மயக்கம். அந்த மயக்கத்தை நீக்கி, 'மனிதன் உடம்பல்ல' 'ஆன்மா' என்று உண்மையை இடைவிடாது உணர்த்தி நிற்பது

கோபுரம். எனவே திருக்கோயிலுக்கு வழிபடச் செல்லும் பக்தர்கள் ஒவ்வொருவரும் திருக்கோபுரத்தைக் கண்டவுடன் 'நான் இந்த உடம்பல்ல, உள்ளிருக்கும் ஆன்மா' என்ற உண்மையை உள்ளத்திற்கு அறிவுறுத்திக் கொள்ளுதல் வேண்டும்.

உடம்பையே தானாகக் கொள்வது பழக்கம். எனவே, அதனை அவ்வளவு எளிதில் தவிர்த்தல் இயலாது. அதனைத் தவிர்க்க கோபுரம் உணர்த்தும் 'நான் ஆன்மா' என்னும் உண்மையை அடிக்கடி நினைவில் கொண்டு வருதல் வேண்டும். அப்போது தான் 'நான் ஆன்மா' என்ற உண்மை நிலை கொள்ள முடியும். பிறரைக் காணும் போது அவர்களையும் உடம்பாகக் கருதாமல் ஆன்மாவாகக் காணும் தன்மையும் உண்டாகும். கோயிலுக்கு வரமுடியாத மக்கள் 'கோபுரதரிசனம் கோடி புண்ணியம்' என்று கோபுரத்தை வழிபடும் வழக்கம் திருஏடகநாதர் கோயிலில் உள்ளது.

## இராசகோபுரம்

திருக்கோயில் உள்ளிருக்கும் கோபுரங்கள் எல்லாவற்றையும் விட இராசகோபுரம் உயர்ந்ததாக இருக்கும். இந்தக் கோபுரத்தைத்தான் 'தூபலிங்கம்' என்று அழைப்பர். தூரத்தில் உள்ளவர்களுக்கு இறைவனை நினைவூட்டவே இது அமைந்திருக்கிறது. நெடுந்தொலைவிலே காணப்படும் இக்கோபுரத்தைக் கண்டு எவன் வணங்குகின்றானோ, அவன் சட்டை நீங்கி அரவம் போல் பாவத்திலிருந்து நீங்குகின்றான்.

இராசகோபுரத்தில் அநேக வடிவங்கள் காணப்படும். மானிட வடிவங்கள், வனவிலங்குகள், பறவைகள் மற்றும் ஏனைய சிற்றுயிர்கள் முதலியவை இருக்கக் காணலாம். இவையெல்லாம் அலங்கார வடிவங்களாகக் கருதக்கூடாது.

இவ்வடிவங்கள் ஆகம விதிப்படியும் இயற்கை நடைமுறையின் புறச் சின்னமாகவும் உள்ளன. உலக உற்பத்தியில் இவையெல்லாவற்றிற்கும் இடமுண்டு என்பது இதன் கோட்பாடு. சிற்றுயிர்கள், பேருயிர்கள், விலங்கினம், மக்களினம், தேவர் கூட்டம் ஆகியவர்கள் எல்லோரும் உலகில் இருக்கின்றார்கள்.

அண்டத்தில் இன்னது இருக்கின்றது. இன்னது இல்லை என்று பாகுபடுத்த முடியாது என்னும் கோட்பாட்டை இராசகோபுரம் விளக்குகின்றது.

இராசகோபுரத்தின் வாயில்கள் ஒற்றைப் படை எண்ணிக்கையில் மூன்று, ஐந்து, ஏழு, பதினொன்று என்று அமைந்திருக்கும். இவ்வாயில்கள் நிலைகள் என்று அழைக்கப்படுகிறது.

சிவாகம வாக்கியத்தின் படி இறைவன் கோபுரத்திலும் விமானத்திலும் வாயிற்படியிலும் மண்டபங்களிலும் பலிபீடத்திலும் மூலலிங்கத்திலும் எப்போதும் வெளிப்பட்டிருக்கின்றார் என்பதால் தூலலிங்கமான கோபுரத்தை வணங்கியே உட்சென்று இறைவனை வழிபடுதல் வேண்டும் என்பது விதி.

தூலலிங்கமான கோபுரத்திற்குள் காலை வைத்தவுடன் சிவகணங்கள் நம்மிடம் வந்து சூழ்ந்து கொள்கின்றன. ஆகையால் அவை திரும்பிச் சொன்று கோபுர வாயிற்படியில் உட்காரும் வரையில் கண்டிப்பாகச் சில நியமங்களைக் கடைப்பிடிக்க வேண்டும். சிவனுக்கு விரைவில் கோபமும் மகிழ்ச்சியும் உண்டாகும். ஆகையால், செய்யக் கூடாத குற்றங்களையெல்லாம் தவிர்த்து, தூய்மையுடன் தரிசனம் செய்தல் வேண்டும்.

## பலிபீடத் தத்துவம்

திருக்கோயிலின் முன் கோபுரம் எளிதில் புலப்படுவது போலவே, மனிதனுக்கு எளிதிற் புலப்படுவது 'தூலஉடம்பு' கோபுரவீதியில் நிகழ்கின்ற தேர்த்திருவிழா முதலிய ஆர்ப்பாட்டங்கள் தூலஉடம்பை ஒட்டி நிகழுகின்ற சிற்றின்ப அனுபவங்கள்.

தூலஉடம்பைத் தானாக எண்ணும் ஆன்மா, 'தூலான்மா' 'தேகான்மா' 'பூதான்மா' என்றெல்லாம் சொல்லப்படும் தூலான்மா நிலையை முன்கோபுரம் உணர்த்துவது போலவே 'அந்தரான்ம' நிலையை உணர்த்துவது மகாபலிபீடம்.

முன்கோபுரத்தை வழிபட்டு உடம்பைத் தானாகக் கொள்ளாது, தான் ஆன்மா என்ற உண்மையை உணர்ந்த நிலையில் கோபுர வாயிலைக் கடந்து உள்ளே செல்லுகின்ற மனிதன், நன்மை தீமைகளைப் பகுத்தறியும் உணர்வினை உடையவன் ஆகின்றான். எனவே, அவன் காமக்குரோத, லோப, மோகம், மதம் போன்ற மிருக இச்சைகளாகிய மிருகங்களைப் பலி கொடுக்கும் பொருட்டுக் கீழே விழுந்து வணங்குகின்றான். இச்சைகளைப் பலி கொடுத்து எழுந்த அவன் அந்தரான்ம நிலையினை உடையவன் ஆகின்றான். இந்த அந்தரான்ம நிலையை உணர்த்துவது மகாபலிபீடம் ஆகும்.

## கொடி மரத்தத்துவம்

மகாபலி பீடத்தின் முன் தன் இச்சைகளைப் பலி கொடுத்து, தான் உடம்புமன்று, தான் இச்சைகளுமல்ல என்ற உண்மையுணர்ந்து பலிபீடத்தை அடுத்து உள்ள கொடிமரத்தைக் காண்கின்றான். அது அந்த அந்தரான்ம நிலையில் இருப்பவனுக்குத் தத்துவான்ம நிலையை உணர்த்தும் சின்னமாக உள்ளது.

பூதான்மா, அந்தரான்மா, தத்துவான்மா ஆகிய மூன்று ஆன்மாக்களும் கொடிமரத்தின் உச்சியில் அடுத்தடுத்து அமைந்துள்ள மூன்று நிலைகள் அமைக்கப்பட்டுள்ளன. அம்மூன்று நிலைகளும் மூன்று ஆன்மா நிலைகளை உணர்த்துவதாகும். இம்மூன்று ஆன்மாக்களில் பூதான்மா பெரிதும் விரும்புவது உண்ணல், உடுத்தல், குடித்தல் முதலிய ஐம்புல நுகர்ச்சிகளும் பெண்ணாசையுமாகும். இவற்றின் பொருட்டு மண், பொன், புகழ் போன்றவற்றை இழக்கத் துணிவர்.

அந்தரான்ம நிலையிலுள்ளோர் மண், பெண், பொன் மூன்றையும் விரும்புவர். ஆனால், மிகவும் விரும்புவது சுக வாழ்க்கையையும் அதற்கு துணைபுரியும் பொன்னையுமாகும். பிறர் மனைவியையும் மண்ணையும் விரும்புவர். ஆனால், அவற்றால் துன்பம் வருமெனில், அவ்விருப்பத்தைச் செயல்படுத்தாது அடக்கிக் கொள்வர். வகுத்தவற்றை இயன்றவரை பின்பற்றுவர்.

தத்துவான்ம நிலையிலுள்ளோர் மிகவும் விரும்புவன புகழும் போற்றுதலுமாகும். புகழுக்காக அறிவைப் பெருக்குவர். தான தருமங்களில் ஈடுபடுபவர். புகழுக்காகப் பொன்னையும் மண்ணையும் இழக்க முன்வருவர். பெண், பொன் ஆசைகளைக் கைவிடுவர். கொடி மரத்தால் பெறப்படுவது இத்தத்துவான்ம நிலை ஆகும்.

கொடிமரம் என்பதை வடமொழியில் ‘துவஜஸ்தம்பம்’ என்று கூறுவார்கள். துவஜம் என்பதற்குத் தருமம் என்று ஆகமங்கள் பொருள் கூறுகிறது. உடம்பில் வீணாதண்டம் போல் மூலாதாரம் முதல் பிரம்மமந்திரம் வரையில் மேனோக்கிச் செல்லும் பரமநாடியாகக் கொடி மரத்தைக் கூறுவர்.

கொடிமரம் போல் உடல்நேராக இருந்து விளங்கும். இடைகலை, பிங்கலை என்னும் இரண்டு நாடிகளின் வழியே சென்று திரும்பும் பிராண வாயுவை நடுநாடியில் நிறுத்த சிறிதும் அசையாமல் தியானிக்கின்ற பிராணவாயு நிற்கும். அது நிற்க, மனமும் நிற்கும். மனம் நிற்க ஐம்பொறிகளும் அவயங்களும் அடங்கும். அவையடங்கவே உலகப் பற்றுக்களெல்லாம் ஒழியும். எனவேதான் கொடிமரம் திருக்கோயில்களில் மூலதானத்துக்கு நேராக நிறுத்தப்பட்டுள்ளது.

திருக்கோயிலில் ஆகம விதிப்படி ஒரு கொடிமரம் அமைக்கப்பட்டிருப்பது, பஞ்ச லிங்கங்களில் இரண்டாவதாகும். இதனருகே பலிபீடம் என்னும் பத்திரலிங்கமும் நந்தியும் அமைக்கப்பட்டிருக்கும்.

இக்கொடிமரம் வெயில், மழையில் அடிபட்டு அசைவற்று எவ்வகையான மாறுதலுமின்றித் தூண்போல் நிற்கின்றது. இது முக்கோண வடிவமான மாயா காரியத்தில் ஈடுபடாமல் தூபருபமாயிருக்கும் பரமாத்ம சொரூபத்தை விளக்குவதாகும். இதன் அருகே பலிபீடம் என்பது பரிவார தேவதைகளுக்குப் பலி (பூசை) போடுமிடம்.

இங்குதான் நாம் விழுந்து வணங்க வேண்டும். இங்கு நான் என்ற அகந்தையை பலிகொடுத்து, தன்னை மறந்து தியானம் செய்ய வேண்டும். இவ்வாறு செய்யும் போது வீடு, மனைவி, மக்கள் ஆகியவற்றைப் பற்றி நினைப்பதை விடுதல் வேண்டும்.

கொடிமரத்தைக் கடந்து உள்ளே சென்ற பின் எந்த இடத்திலும் விழுந்து வணங்குதல் கூடாது.

**வணங்குதல்**

வணங்குதல் என்பது பணிதலாகும். வழிபாடு என்னும் சொல் இன்று தொழுதல், வணங்குதல் என்ற பொருளிலேயே பெரும்பாலும் வழங்கப்படுகிறது. மனித இனத்தில் தோன்றிய அச்சம், குற்ற உணர்வு போன்ற பண்புகளில் பரிணாம வளர்ச்சியே வழிபாட்டு நெறிக்கு வித்திட்டது. இதனால் மனிதனுக்கு அச்சம் வரும் போது வேறு வழியில்லாமல் கண்களை மூடிக் கொண்டான். தரையில் புகலிடம் தேடினான். குப்புற மண்ணில் விழுந்து முகம் புதைத்தான். இப்பழக்கம் வணக்கமாகவும் இயற்கை வழிபாடாகவும் மாறியது. நான் என்னும் அகந்தை உள்ளவன் யாருக்கும் பணிய மாட்டான். நாம் உலகில் எவ்வளவு செல்வம், மேதை, அதிகாரம் பெற்றிருந்தாலும் இறைவனுக்கு எதிரில் அவை ஒரு பொருட்டல்ல. இறைவன் அருளன்றி நம்மால் ஒன்றையும் செய்ய முடியாது என்பதை நன்கு உணர வேண்டும்.

“பக்தர்கள் யான், எனது ஆகிய செருக்கையகற்றிக் கீழே விழுந்து கும்பிடும் போது அறியாமையும் வீழ்கிறது. எழும்போது மெய்யுணர்வு உடன் வருகிறது.”[41]

பணிதலை இருவகைப்படுத்தலாம். அவை: அட்டாங்கப் பணிவு, பஞ்சாங்கப் பணிவு என்பவையாகும். கொடி மரத்தின் முன் வணங்குகின்றவர்களில் ஆடவர் அட்டாங்கப் பணிவு முறையையும் பெண்கள் பஞ்சாங்கப் பணிவு முறையையும் பின்பற்ற வேண்டும்.

**அட்டாங்கப் பணிவு**

அட்டாங்கம் என்பது எட்டு அங்கங்களைக் குறிக்கும். உடம்பிலுள்ள எட்டு அங்கங்கள் தரையில் படுமாறு பணிந்து வணங்குதல் வேண்டும். அவை: தலை, இரண்டு செவிகள், இரண்டு கைகள், இரண்டு கால்கள், முகவாய்க்கட்டை என்பனவாகும். ஆண்கள் இவ்வாறு பணிந்து வணங்குதல் வேண்டும்.

### பஞ்சாங்கப் பணிவு

பஞ்சாங்கம் என்பது ஐந்து அங்கங்களைக் குறிக்கும். அவை: தலை, இரு கைகள், இரு முழங்கால்கள் என்பனவாகும். இவ்வைந்து அங்கங்களும் நிலத்தில் நன்கு படுமாறு பெண்கள் பணிந்து வணங்குதல் வேண்டும்.

கொடிமரத்தின் முன்பணிந்து வணங்குவோர் மூன்று முறையோ, ஏழு முறையோ, ஒன்பது முறையோ, பன்னிரெண்டு முறையோ, பணிந்து வணங்குதல் வேண்டும். ஒருமுறை, இருமுறை பணிந்து வணங்குதல் குற்றமாகும்.

அவ்வாறு பணிந்து வணங்கும் போது மேற்கோ அல்லது தெற்கோ கால் நீட்டல் வேண்டும். கிழக்கோ, வடக்கோ கால் நீட்டுதல் கூடாது. தெற்கு, வடக்கு நோக்கிய திருச்சன்னதிகளில் அட்டாங்க, பஞ்சாங்கப்பணிவு முறையில் வணங்காது கரங்குவித்து வணங்குதல் வேண்டும். தலைமீது இரு கரங்குவித்து வணங்குதல் வேண்டும்.

இம்முறையினால் இரத்த ஓட்டம், இதயத்துடிப்பு, நரம்புகளின் செயல்பாடுகள் ஆகியனவும் சீா்படுவதால் இது சிறந்த உடற்பயிற்சியாகவும் அமைகின்றது என்பது உண்மையாகும்.

### தோப்புக்கரணம் இடுதல்

விநாயகா் சன்னதியில் ‘தோப்புக்கரணம் இடுதல்’ கடைப்பிடிக்கப்படுகிறது. வேறெந்த தெய்வ சன்னதியிலும் தோப்புக்கரணம் இடும் விதிமுறை இல்லை. தோப்புக்கரணம் என்பது வலது கையால் இடது காதும் இடது கையால் வலது காதும் தொட்டுக் கொண்டு கை முட்டுகள் பலமுறை தரையில் தொட்டு வணங்குதல் ஆகும். மற்றொரு முறை, இடதுகால் மேல் ஊன்றி நின்று வலதுகால் இடதுகாலில் முன்பக்கமாக இடது பக்கம் கொண்டு வந்து பெருவிரல் மட்டும் தரையில் தொட்டு நின்றும் இடது கைப் பெருவிரலும் ஆள்காட்டி விரலும் சோ்ந்து வலது காதிலும் வலது கையினை முன்பக்கமாக இடப்பக்கம் கொண்டு வந்து பெருவிரலும் ஆள்காட்டி விரல்களால் இடது காதையும் பிடிக்க வேண்டும். பின்பு குணிந்து வணங்கி நிமிா்வதே தோப்புக் கரணத்தின் முறை. இவ்வாறு செய்வதால் பக்தா்களிடமிருக்கும் தடங்கல்கள், துன்பங்கள் விலகும் என்பது ஐதீகம். இதன் அறிவியல் உண்மை, இது நரம்புகளை உணா்வடையச் செய்யவும் பலப்படுத்தவும் மூளைக்குச் செல்லும் இரத்த ஓட்டத்தை அதிகரிக்கவும் செய்யும் என்பதாகும். இப்பழக்கம் கோயில்களைத் தொடா்ந்து தற்பொழுது பள்ளிகளிலும் கடைப்பிடிப்பதலிருந்து தோப்புக்கரணம் இடுவதின் முக்கியத்துவம் வெளிப்படுகிறது.

## அதிகார நந்தித் தத்துவம்

திருக்கோயிலில் சிவலிங்கம், அதிகாரநந்தி, கொடிமரம், பலிபீடம் ஆகியவை ஒரே வரிசையில் இருப்பதைக் காணலாம். நந்தி சிவபெருமானுக்குரிய வாகனம். அம்மனுக்கு சிங்க வாகனம். வாகனம் எதுவாயினும் அது சீவான்மாவைக் குறிக்கின்றது. இறைவனைப் பார்த்த வண்ணமாக வாகனம் அமைந்திருக்கிறது. கடவுளைச் சென்றடைய வேண்டியது சீவான்மாவின் குறிக்கோள். மனம் எப்போதும் இறைவன் மீதே நாட்டம் கொண்டு இருக்க வேண்டும் என்னும் கோட்பாட்டை வாகனம் விளக்கிக் கொண்டிருக்கிறது. பக்தர்கள் வலம்வரும் போது வாகனத்தையும் சேர்த்துத்தான் வலம் வருதல் வேண்டும். குறுக்கே செல்வது முறையன்று.

திருக்கோயிலில் ஒரே வரிசையில் உள்ள சிவலிங்கம், அதிகார நந்தி, கொடிமரம் ஆகிய மூன்றையும் பதி, பசு, பாசம் என்று சைவ நூல்கள் குறிப்பிடுகின்றன.

நந்தி, கொடிமரத்தை நோக்காமல் சிவலிங்கத்தை நோக்கி விளங்குகின்றது. கொடிமரத்தை நோக்கினால் வேற்றுமைகளும் சிற்றின்ப அனுபவங்களும் துன்பங்களுமே ஆன்மாவுக்குப் புலப்படும். கொடிமரத்தை நோக்காமல் பதியாகிய சிவலிங்கத்தை நோக்குவதால் அண்டத்திற்கு அடிப்படையில் ஒற்றுமையும் பேரின்ப அனுபவும் ஆன்மாவிற்கு உண்டாகும் என்னும் தத்துவம் உணர்த்தப்படுகிறது.

இந்நந்தியின் உத்தரவு பெற்ற பின்பே கருவறையில் எழுந்தருளியுள்ள பதியாகி சிவபெருமானைத் தரிசனம் செய்தல் வேண்டும்.

## திருச்சுற்றுத் தத்துவம்

திருக்கோயில் இராசகோபுரத்தைக் கடந்து உள்ளே சென்றால் திருச்சுற்றுக்கள் உள்ளன. பொதுவாகக் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் இறைவனைத் திருசுற்று மதில் சுவர்கள் மறைத்துக் கொண்டுள்ளன. எல்லாத் திசைகளிலிருந்தும் இறைவனைக் காண முடிவதில்லை. பிரதானவாயில் என்று சொல்லப்படுகின்ற கிழக்கு வாயில் வழியாகவே சென்று வழிபட முடிகின்றது. இறைவனை மறைத்துக் கொண்டிருக்கும் திருச்சுற்று மதில் சுவர்கள், மனிதன் தன்னிடத்தில் உள்ள ஆன்மாவை, தான் ஆன்மா என்ற உண்மையை எளிதில் அறியமுடியாத வகையில் அமைந்தள்ள உடம்பை உணர்த்துகின்றன. மதில் சுவர்கள் இல்லையென்றால் இறைவனை எங்கிருந்தும் எப்பொழுதும் கண்டு வழிபடலாம். உடம்பு இல்லையென்றால், மனிதன் ‘தான் உடம்பல்ல’ ஆன்மாதான் என்ற உண்மையை எப்பொழுதும் நினைவில் கொண்டிருப்பான்.

பிரதான வாயில் என்று சொல்லப்படுகின்ற கிழக்கு வாயில் வழியாகவே இறைவனைக் காண முடிகின்றது. இறைவழிபாட்டின் வாயிலாகவே தான் ஆன்மா என்பதை மனிதன் அறியமுடிகின்றது.

திருச்சுற்று மதில் சுவர்களின் மறைப்பு இறைவனுடைய ஐந்தொழில்கள் முறையில் மறைத்தல் என்னும் தொழிலைக் குறிக்கின்றது.

திருக்கோயில்கள் ஐந்து திருச்சுற்றுக்கள் உள்ள கோயில்களும் மூன்று திருச்சுற்றுக்கள் உள்ள கோயில்களும் ஒரே திருச்சுற்று உள்ள கோயில்களும் உண்டு.

திருக்கோயிலில் உள்ள ஐந்து திருச்சுற்றுக்கள் அன்மையம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞான மயம், ஆனந்த மயம் என்னும் ஐந்து வித கோசங்களையும் குறிக்கின்றன.

திருக்கோயில் உள்ள மூன்று திருச்சுற்றுக்கள் ஐந்து கோசங்களிலான தூல, சூட்சுமம், காரணம் என்னும் மூவகை உடம்புகளைக் குறிக்கின்றது.

கோயிலில் வழிபடுவோர் மூன்று முறை, ஐந்து முறை திருச்சுற்றுக்களைச் சுற்ற வேண்டும் என்பது. மூவகை உடம்புகளையும் ஐந்து வித கோசங்களையும் கடந்து இறைவன் விளங்குகின்றான் என்பதை உணர்த்துகின்றது.

இந்த ஐந்து திருச்சுற்றுக்களையும் கடந்தால் இறைவனது நிலையை அடையலாம் என்னும் உண்மையை உணர்தல் வேண்டும்.

திருக்கோயில் உள்ள ஒரே திருச்சுற்று பொதுவாக உடம்பைக் குறிப்பதாகும்.

### திருச்சுற்று வலம்வருதல்

திருக்கோயிலில் உள்ள திருச்சுற்றுகளில் வலம் வருவதற்கென்று சில நியதிகளும் வலம் வருவதால் உண்டாகும் பலன்களும் உள்ளன.

| | | |
|---|---|---|
| காலையில் வலம் வருதல் | - | நோய் நீங்கும் |
| மாலையில் வலம் வருதல் | - | எல்லாப் பாவங்களையும் அகற்றும் |
| பகலில் வலம் வருதல் | - | விருப்பம் அளிக்கும் |
| அர்த்தசாமத்தில் வலம் வருதல் | - | மோட்சம் உண்டாகும். |
| விநாயகர் | - | ஒருமுறை |
| சூரியன் | - | இரண்டு முறை |
| சிவன் | - | மூன்று முறை |

| | | |
|---|---|---|
| அம்மன் | - | நான்கு முறை |
| நவக்கிரகங்கள் | - | ஒன்பது முறை |

என்று ஒவ்வொரு தெய்வத்திற்கும் ஒவ்வொரு எண்ணிக்கையில் வலம் வருதல் வேண்டும். பிரகாரத்தில் வலம் வரும்போது, பெண்கள் எண்ணெய்க் குடத்தைஎடுத்துச் செல்வது போல் அடிமேல் அடிவைத்து பிறருடன் பேசாமல் செல்லுதல் வேண்டும்.

திருக்கோயிலுள்ள விநாயகர், முருகன், அம்மன் ஆகியோர்தம் திருச் சன்னதிகளைத் தனித்தனியாக வலம் வருதல் கூடாது. சேர்ந்தே பொதுவாக வலம் வருதல் வேண்டும். கொடிமரத்துக்கு வெளியிலுள்ள இடங்களுக்கு இந்த நியதி இல்லை.

அடி தண்டவலம் வருதல் - ஓர் அடிக்கு ஒருமுறை வணக்கம் செய்தவாறு வலம் வருதல்

அங்கம் வலம்வருதல் - உடல் முழுவதும் நிலத்திற்படும் படி படுத்துக் கொண்டே உருண்டு வலம் வருதல்

"சூரிய உதயம் தொடங்கி அர்த்தசாமம் வரையிலோ அல்லது ஒரு சாமம் வரையிலோ அங்கம் வலம் வருதல் செய்தவர், தீவினைகளெல்லாம் நீங்கப் பெற்று முக்தியடைவார்என்று அருணகிரி புராணம் கூறுகின்றது.

நாம் பிறப்பு இறப்பு என்னும் மாயாசக்கரத்தில் சுழன்று வருகின்றோம். மாயாசக்கரமான பலிபீடத்துடன் மூன்று முறை வலம் செய்வது, 'தூல, சூட்சும, காரண உடல்களிலிருந்து என்னை விடுவி' என்று வேண்டுவதாகும் என்று சிவபுராணம் கூறுகின்றது. காசி அன்னபூரணி கோயிலை ஒரு பறவை தற்செயலாக வலம் வந்ததால், இரண்டு கல்பகாலம் சுவர்க்க இன்பத்தை அனுபவித்து பூமியில் அரசனாகப் பிறந்ததாக வரலாறு உண்டு."[42]

வலம் வருதலில் சோம சூக்த வலம் வருதல் என்று ஒருமுறை உண்டு. இதை அன்றாடம் செய்யாவிட்டாலும் பிரதோச காலத்தில் செய்தல் மிகவும் சிறப்பானது. இவ்வலம் வரும் முறையாவது, முதலில் நந்தியைத் தரிசிக்க வேண்டும். அங்கிருந்து வலமாகச் சென்று சோமசூத்ரம்(கோமுகி) என்னும் சிவலிங்க அபிடேகத்தீர்த்தம் விழும் இடத்தைத் தரிசித்து, வந்த வழியாகவே திரும்பி வந்து நந்தியைத் தரிசிக்க வேண்டும். மீண்டும் அங்கிருந்து இடப்பக்கமாகச் சென்று சண்டிகேசரைத் தரிசித்து அதே வழியாகத் திரும்பி வந்து நந்தியின் இரு கொம்புகள் வழியாக சிவலிங்கத்தை தரிசனம் செய்தல் வேண்டும்.

இறைவனின் திருச்சுற்றுக்களைச் சுற்றிவருவதால் இறைவனின் கருணையைப் பெறலாம் என்பதைப் போல் இது உடலுக்கு உடற்பயிற்சியாகவும் அமைகிறது. ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் காலை, மாலை இருவேளைகளிலும் திருச்சுற்றில் வலம் வரும் பழக்கம் பக்தர்களுக்கிடையே உள்ளது. இவ்வாறு தரிசனம் செய்தவர் சகலப்பாவங்களும் நீங்கி இறைவனை எளிதில் அடையலாம்.

## மூலவர் தத்துவம்

மூலவர் என்பவர் கருவறையில் எழுந்தருளியுள்ள சிவலிங்க மூர்த்தியாவார். இவரைத் தரிசிக்கும் முன், துவாரபாலகர்களின் முன் சென்று ‘அடியேன் உட்சென்று இறைவனை வணங்குவதற்கு அனுமதி செய்தருளும் என்று வேண்டிக் கொண்டு கருவறையில் முன்னுள்ள வாயிற்படி வரைதான் செல்ல வேண்டும். கருவறையைக் கர்ப்பக்கிரகம் என்றும் மூலத்தானம் என்றும் சொல்வார்கள். இது பிரதானமூர்த்தியை வைத்து வணங்கும் இடம். இதன் உண்மை, எல்லா உலகங்களையும் படைத்தற்குக் காரணமான மூலக்கடவுளின் இடம் என்பதாகும். இம்மூலமூர்த்தியை வணங்கிக் கொண்டு, உட்பிரகாரத்தில் உள்ள ஒவ்வொரு மூர்த்தியையும் வணங்குதல் வேண்டும்.

தத்துவான்ம நிலையில் அதிகார நந்தியை வணங்கி ஆன்மாவின் கடமையை உணர்ந்த மனிதன், நந்தியின் அருகில் நின்று மூலவரைக் கண்டு வணங்குகின்றான். கருவறையில் காட்சியருளும் மூர்த்தி பக்தனுக்குச் சீவான்ம நிலையை உணர்த்தும் சின்னமாகத் திகழ்கின்றார்.

மூலவரை நோக்கி வழிபடுவதால் உண்டாகும் இந்நினைவின் நிலையே சீவான்ம நிலை. சீவான்ம நிலையை உணர்த்தும் மூர்த்தியாக மூலமுர்த்தி மூலவர் விளங்குகின்றார்.

## மகா மண்டபத் தத்துவம்

அதிகார நந்தியின் அருகில் நின்று மூலவரைக் கண்டு வணங்கியவன், அடுத்துள்ள மகாமண்டபத்திற்குள் செல்கின்றான். அம்மகா மண்டபத்திலிருந்து உள்ளே செல்லச் செல்ல இடம் குறுகலாகவே அமைந்துள்ளது. இந்த அமைப்பு, உண்மையில் ஆன்ம நிலையில் வழிபட வருவோரின் எண்ணிக்கை குறைந்த அளவு என்பதை உணர்த்துவதாகும்.

## கருவறை தத்துவம்

கோயில்களில் கருவறை மட்டும் இன்றும் மின் விளக்கு போடாமல் இருளாகவே உள்ளது. அங்கு தீப விளக்கு ஏற்றித்தான் அந்த காரிருள் நீக்கி நாம் இறைவனை தரிசிக்க முடியும்.

இதற்குக் காரணம் மின்சாரம் என்பது எரிசக்தி. அதை இயற்கையாக நாம் பெறுவதில்லை. தண்ணீரின் மூலமோ நிலக்கரி வாயிலாகவோ அல்லது அணுக்களின் உதவியாகவோ செயற்கையான முறையில் பல கட்டடங்களில் இந்த மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது. இது நல்ல சக்தி மிகுந்த வெளிச்சத்தைக் கொடுத்தாலும் கூட இதன் மின் கதிர்களால் இயற்கையான முறைகளுக்குப் பாதிப்பு ஏற்படுகின்றது.

கர்ப்பக்கிரகத்தில் இருக்கும் இறைவனின் விக்கிரகம் பல மந்திரசக்திகளால் நிறுவப்பட்டுள்ளது. விக்கிரகத்தின் கீழே மூலிகைகளும் பஞ்சலோகங்களும் கலந்த ஒரு அபார சக்தி உள்ளது. இப்படிப்பட்ட ஒரு புனித சக்தி கெட்டுப்போய் விடக்கூடும். மேலும் நாம் வணங்கும் இறைவன் பஞ்சபூத வடிவமானவர். பஞ்ச பூதங்களில் ஒன்றான நெருப்பு என்கிற சோதி வடிவத்தில் தான் மூலவரை நாம் வணங்குகின்றோம். எனவே தான் எண்ணெய் விளக்கின் ஒளியில் அவரைக் காண வேண்டும்.

இதுபோன்ற கனமான இருளில் மெல்லிய விளக்கின் தீப ஒளியில் இறைவனை நாம் தரிசிக்கும்போது நம்மனத்தில் பிற எண்ணங்கள் எதுவும் ஏற்படாமல் தீபம் மட்டுமே நிற்கிறது. அதன் காரணமாக நம் மனம் இன்னும் ஒருநிலைப்படுகிறது. அது இறைவனோடு நம்மை ஒருங்கிணைக்கவும் செய்கிறது.

## உருவ வழிபாடு

கோயில்களில் உற்சவர் படிமம் ஐம்பொன்னாலும் மூலவர் படிமம் கருங்கல்லினாலும் வடிவமைக்கப் படுகிறது.

முதன்முதலில் சிற்பக்கலைகள் கல்லில்தான் செதுக்கப்பட்டன. கற்கள், பாறைகள் நம் பூமியில் நிறைந்து காணப்பட்ட காலத்தில் இறைவனது திருநாமத்தை உச்சரித்துக் கொண்டு காடுகளிலும் மலைகளிலும் ஞானம் தேடி அலைந்த ஞானிகள், கலை ஆர்வம் மிகுதியால் ஓய்வு நேரங்களில் இந்தக் கற்களில் இறைவனின் உருவங்களைச் செதுக்கினர். இப்படிச் செதுக்கிய சிலைகளை வழிபடுவதற்காகக் கோயில் அமைத்தனர். மந்திரங்களும், வேதங்களும் சொல்லி அந்தச் சிலைக்குத் தெய்வ சக்தியைக் கொடுத்தனர்.

இறைவன் என்பவன் பாறையைப் போல, கல்லைப் போல, மலையைப் போல, குன்றினைப் போல மிகவும் பலமானவன். சக்திமிக்கவன், திடமான மனதைக் கொண்டவன் என்பதைச் சொல்வதற்காகவும் கூட இறைவனைக் கற்களால் அமைத்தார்கள். கற்கள் கடினமானதாக இருந்தாலும் சுனை என்று சொல்லப்படும் நீரூற்றுகள் இந்தப் பாறைகளுக்குள்ளிருந்து தான் புறப்பட்டு வருகின்றன. கல்லானது எந்தப் பொருளையும் தன்பால் இழுத்துக் கொள்ளக்கூடிய சக்தி வாய்ந்ததாகும். கல்லில் பஞ்சபூதங்களான ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், நிலம் ஆகியவற்றின்

தன்மையும் அடங்கியிருந்து வெளிப்படுதல் போல மற்ற உலோகங்களில் இத்தன்மை இல்லை.

1. ஆகாயத்தைப் போல வெளியில் உள்ள சப்தத்தைத் தன்னகத்தே இழுத்து ஒடுக்கிப் பின்னர் வெளியிடும் சக்தி கல்லுக்கும் உண்டு.
2. கல்லிலே காற்று உண்டு
3. கல்லிலே நெருப்பும் தங்கியுள்ளது. வேறு எந்தப் பொருளிலும் இல்லை. நெருப்பின் சக்தி மிகுதியாக கல்லில்தான் இருக்கிறது. நெருப்பு உருவான வரலாறு இதனை உணர்த்துகிறது.
4. கல்லில் நீர் இருப்பதால் தான் இயல்பான குளிர்ந்த நிலையிலிருந்து மாறாமல் இருக்கிறது. கல்லைத் தொட்டால் தண்ணீர் போல் தண்ணொற்றிருப்பது கல்லினுள் நீர்த்தன்மை இருப்பதனை உறுதிப்படுத்துகின்றது
5. கல்லில் நிலம் என்ற கடைசிப் பூதமும் உள்ளது. ஐம்பூத வடிவாகி விளங்கும் ஆண்டவனது உருவத்தை வீற்றிருந்த படி செய்து வழிபட்டு வரும்படி நமது முன்னோர்கள் ஏற்பாடு செய்துள்ளனர்.''[43]

கடவுளின் உருவ வழிபாட்டிற்காக ஐந்து உலோகங்களைக் கொண்டும் உருவங்களைச் செய்தார்கள். தங்கம், வெள்ளி, செம்பு, பித்தளை, இரும்பு இவைகளைக் கொண்டு ஐம்பொன் சிலைகளைச் செய்தார்கள். மனித உடல், முறையாக, சிறப்பாக இயங்க வேண்டுமென்றால் இந்த ஐம்பொன் உலோகங்கள் மிகவும் அவசியமாகும்.

அதுபோலச் சித்தர்கள் நவபாசாணத்தைக் கொண்டு கடவுளின் உருவங்களை உருவாக்கி அவைகளுக்குப் பூசை முறைகளைச் செய்தார்கள். ``நவபாசாணங்கள் என்பது வீரம், பூரம், லிங்கம், தாளகம், இரசம், அரிதாரம், மனோசிலை, கந்தகம், வெள்ளிப் பாசாணம் போன்றவைகள் ஆகும்.''[44] நவபாசாணங்கள் நம் உடலில் ஏற்படுகின்ற சகல நோய்களையும் தீர்க்கக் கூடிய அற்புதமான மருந்தாகும்.

தெய்வச்சிலைகளைப் பீடத்தின் மேல் நிறுவ வேண்டிச் செய்யப்படுவதே அட்டபந்தனம். இது மருத்துவ அடிப்படையிலேயே நடைபெறுகின்றது. சுக்கான்கல், கொம்பரக்கு, சாதிலிங்கம், செம்பஞ்சு, தேன்மெழுகு, எருமை வெண்ணெய், குங்கிலியம், கற்காவி என்ற எட்டு வகைப் பொருட்களை வைத்து இடித்துச் செய்து தெய்வீக மருந்தாகச் சிலையைப் பீடத்தில் ஒட்ட வைப்பதே அட்டபந்தனம். அட்டம் - எட்டு, பந்தனம் - கட்டுவது. இந்த பொருட்கள் சகல நோய்களையும் குணமாக்குகிறது.

தேன், பால், பன்னீர், இளநீர், தயிர் போன்றவற்றை வைத்து அபிடேகங்கள் பல செய்யப்படுகிறது. இறைவனுக்குச் செய்கின்ற அபிடேகத் தீர்த்தங்களை உட்கொண்டு, கண்களில் தடவிக் கொள்வதால் நம் உடலில் தொற்று நோய்க் கிருமிகளால் ஏற்படுகின்ற பலவிதமான கொடிய நோய்கள் குணமாகின்றன. கண்களில் ஏற்படுகின்ற எந்த நோய்க்கும் மருந்தாகப் பயன்படுகிறது. இதனால் இறைவனைச் சிலை வடிவில் செய்து வழிபடுவது தமிழரின் பண்பாடாக உள்ளது.

## சிவாலய வழிபாட்டு முறைகள்

திருக்கோயிலுக்குள் செல்லும் பொழுது பக்தர்கள் உலக விவகாரங்களில் மனதைச் செலுத்தாமல் சிவபெருமானின் திருப்பெயர்களை உச்சரித்துக் கொண்டு செல்ல வேண்டும். இறைவனுக்குப் படைப்பதற்கு பூ, பழம், தேங்காய் முதலியனவும் அபிடேகத்திற்குரிய பொருள்களும் தீபம் இட நெய் முதலியனவும் கொண்டு சென்று வழிபட வேண்டும்.

முதலில் கோபுர தரிசனம் செய்தல் வேண்டும். பிறகு விநாயகரை வழிபடவேண்டும். பிறகு கொடிமரத்திற்குச் சென்று நந்தியின் இரு கொம்புகளுக்கிடையில் சிவபெருமானை தரிசனம் செய்த பின்பு நந்தியின் வலமாக முன்புறம் சென்று வழிபட்டு, அனுமதி பெற்று உள்ளே நுழைதல் வேண்டும். துவாரபாலகரை வழிபட்ட பிறகு உட்புறம் சென்று சிவபெருமான் சன்னதியை அடைதல் வேண்டும்.

இறைவனுடைய திருப்பெயர்களையும் மந்திரங்களையும் உச்சரித்து வழிபடுதல் வேண்டும். பிறகு வலமாகச் சுற்றுக் கோயிலுள்ள நாயன்மார்கள், தட்சிணாமூர்த்தி, சோமாசுகந்தர், சுப்பிரமணியர், மகாஇலக்குமி, நடராசர், நவக்கிரகங்கள் போன்ற மூர்த்தங்களை வழிபடுதல் வேண்டும். மூன்று முறை கோயிலை வலம் வருதல் முறையாகும். மூன்றாவது சுற்றில் ஈசானத்தில் அமர்ந்திருக்கும் சண்டிகேசரைத் தரிசித்து பிறகு அம்மனை வழிபட்டு, இரண்டு முறை வலம் வந்து வெளிவருதல் வேண்டும். மீண்டும் கொடிமரத்துக்கு வந்து கீழே விழுந்து வழிபட்டு, சிவபெருமானை வணங்கி, உத்தரவு பெற்றுக் கொள்ள வேண்டும்.

தொகுப்புரை

- உலகில் உயிரினங்கள் பலவாகக் காணப்படினும் மக்கள் இனத்திற்கே பண்பாடு என்பது பொருந்துவதாக அமைகின்றது. பண்பாடு என்பது மனித மனத் தொடர்பானது. மாறக்கூடியது. நாகரிகம் என்ற பொருளிலும் வழங்கப்படுவது. மனித வாழ்க்கையைத் திருத்துவது அல்ல. செம்மைப்படுத்துவது அந்தந்தச் சமூகத்திற்கேற்ப மாறக்கூடியது.

- கால மாற்றத்திற்கேற்பப் புதிதாக உருவாக்கிக் கொள்ளக் கூடிய வாழ்வியல் பண்புகளையும் பண்பாடு என வரையறை செய்து கொள்ளலாம்.

- தமிழர்களின் மேம்பட்ட வாழ்விற்குக் கோயில்களோடு அவர்கள் கொண்டுள்ள தொடர்பு பெரிதும் காரணமாக அமைகின்றது. தமிழர்களின் புராதனக் கலைகளும் இலக்கிய வளங்களும் வழிபாடு போன்ற செயல்பாடுகளும் பக்தி நெறியையும் சமயப் பண்பாட்டையும் உயர்த்து வனவாகும்.

- கோயில்களும் மக்கள் வாழ்வும் பிரிக்க முடியாத வகையில் அமைந்துள்ளன. கோயில்கள் கலையையும் பொருளாதாரத்தையும் சமயத்தையும் வளர்த்ததோடு நாட்டில் நலத்துறையையும் சுகாதாரத்தையும் கூட வளர்த்தன.

- தனக்கு மேல் ஒரு ஆற்றல் உள்ளது என மனிதன் நம்புகின்றான். அவ்வாற்றலே தெய்வம் என்றும் இறைவன் என்றும் கருதுகிறான். அதனால் தான் தனது வாழ்க்கையில் எல்லா நிகழ்வுகளும் நடைபெறுகின்றன எனக்கருதி அதற்கு நேர்த்திக்கடன்கள் முதலியவற்றைச் செலுத்தி வழிபடுகிறான்.

- மனிதன் இறைவனுக்குச் செய்யும் அபிடேகம், அலங்காரம், பூசை முறைகள் ஒவ்வொன்றினுக்கும் ஒரு தன்மை உண்டு. காரணம் உண்டு. இறைவனுக்குக் கூறப்படும் மந்திரத்திற்கு சக்தி உண்டு. இதன் மூலம் கோயில்களில் பெறப்படும் பிரசாதத்திற்கு சக்தி உண்டாகிறது. அது பக்தர்களுக்கு நன்மையளிக்கிறது. மருந்தாகப் பயன் தருகிறது.

- மனிதனால் உருவாக்கப்பட்ட கோயில்கள் அனைத்தும் ஆகமங்களை முன்னிருத்திக் கட்டப்படுவதால் அவை ஒவ்வொன்றும் மனிதனுக்கு பக்குவ நிலையைச் சுட்டுவதாகவே அமைந்துள்ளது. தான் என்ற அகந்தையை அழித்து இறைவன் பதம் அடைவது எப்படி என்ற தத்துவத்தை முன்னிலைப்படுத்துகிறது.

- மொத்தத்தில் இறைவன் திருக்கோயில்கள் மக்களுடன் இரண்டறக் கலந்து அவனைப் பண்படுத்தி மனிதனை உயர்நிலைப் படுத்தும் நிலைக்கலன்களாகப் பண்பாட்டுப் பெட்டகமாக அமைந்துள்ளன.

சான்றெண் விளக்கம்


1. ஞா.தேவநேயப்பாவாணர், பண்டைத்தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.6.
2. அ.தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பணபாடும், ப.4.
3. மேலது, ப.5.
4. கா.சிவதம்பி, தமிழிலக்கியத்தில் மதமும் மானுடமும், ப.14.
5. எரிதழல், பண்பாடும் புரட்சியும், ப.16.
6. செ.வைத்தியலிங்கன், தமிழ்ப் பண்பாட்டு வரலாறு, ப.1.
7. மேலது, ப.3.
8. செ.வைத்திய லிங்கன், மு.நூ, ப.5.
9. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி.12, ப.16.
10. மேலது, ப.16.
11. மேலது, ப.16.
12. மேலது, ப.16
13. அ.தட்சிணாமூர்த்தி, மு.நூ. ப.245.
14. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.15.
15. அ.ஜெகதீசன், சங்க இலக்கிய மதிப்பீடுகள், ப.53.
16. அகநா., பா.198.
17. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி II, பக்.220- 224.
18. செ.பழனிச்சாமி, புறநானூற்றில் தமிழர் பண்பாடு, ப.102.
19. P.C.Dep, Rural Sociology, p.10.
20. க.வெள்ளை வாரணனார், சங்க இலக்கியத்தில் சமய நோக்கு, சங்க இலக்கியக் கருத்தரங்கம், ப.2.
21. வை.இரத்தின சபாபதி, சமய இலக்கியங்கள், ப.7.
22. குன்றக்குடி அடிகளார், நமது நிலையில் சமயம் சமுதாயம், ப.2.
23. இரா.சாரங்கபாணி, வழிபாட்டு முறைகள், ப.27.
24. நற்., பா. 343.
25. வேங்கடவன், பூஜைக்குரிய பொருட்களும் பலன்களும், ப.9.
26. மேலது, ப.10.
27. திருஞா.தேவா. தலமுறை. பக்.692- 694.
28. வேங்கடவன், மு.நூ. ப.67.

29. மேலது, ப.21.

30. மேலது, ப.30.

31. மேலது, ப.129.

32. க.த.திருநாவுக்கரசு, தமிழ்ப்பண்பாடு, ப.72.

33. திருநா.தேவா. 245.

34. திருநா.தேவா. 135.

35. திருநா.தேவா. 4,6.

36. அ.தட்சிணாமூர்த்தி, மு.நூ. ப.82.

37. கு.கதிரைவேல் பிள்ளை, தமிழ்ச் சொல்லகராதி, தொகுதி மூன்று, ப.1403.

38. மா.இராசமாணிக்கனார், எல்லோரும் வாழவேண்டும், ப.78.

39. புறநா., பா. 212. 5.

40. திருஞா.தேவா. தலமுறை. பக்.692- 694.

41. ப.இராமநாத பிள்ளை, திருக்கோயில் வழிபாடு, ப.6.

42. புலவர் செந்துறைமுத்து, திருக்கோயில்களும் வழிபாட்டு முறைகளும், ப.39.

43. மு.திரவியம், இந்து சமயக் களஞ்சியம், ப.287.

44. டாக்டர்.எஸ்.முரளிதர், இந்து மதத்தின் இயற்கைக் களஞ்சியம், ப.5.

## முடிவுரை

- சைவசமயத்தின் முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான் நிகழ்த்திய அரிய செயல்கள் திருவிளையாடல் எனப்பெறும். இத்திருவிளையாடல்களை அடிப்படையாகக் கொண்டு பல நூல்கள் இயற்றப்பட்டுள்ளன. அவற்றுள் மிகச் சிறந்ததாகக் கருதப்படுவது பரஞ்சோதி முனிவர் இயற்றியத் திருவிளையாடல் புராணம் ஆகும். இத்திருவிளையாடல் புராணத்தில் சுட்டப்பெறும் 64 திருவிளையாடல்களில் **இடைக்காடன் பிணக்குத் தீர்த்தது, மண் சுமந்தது, சமணரைக் கழுவேற்றியது** என மூன்று முக்கிய திருவிளையாடல்கள் நடந்த இடங்களில் இத்திருவிளையாடல்களை அடிப்படையாகக் கொண்டு அருள்மிகு **ஆதிசொக்கநாதர் கோயில், புட்டு சொக்கநாதர் கோயில், திருஏடகநாதர் கோயில்** என்னும் மூன்று திருக்கோயில்கள் எழுந்துள்ளன.
- திருவிளையாடல் புராணத்தை இயற்றிய பரஞ்சோதி முனிவரின் காலம் **கி.பி 17-ஆம் நூற்றாண்டு** ஆகும்.
- திருவிளையாடல் புராணம், மதுரைக் காண்டம், கூடற்காண்டம், திருவாலவாய்க் காண்டம் என முப்பெறும் பிரிவுகளைக் கொண்டுள்ளது.
- தல விசேடம், தீர்த்த விசேடம், மூர்த்தி விசேடம் என்ற மூன்றும் சிவபெருமானின் திருவிளையாடல்கள் அறுபத்து நான்கும் அருச்சனை புரிந்த செயல் ஒன்றும் சேர்த்து அறுபத்து எட்டுப் படலங்களாக அமைந்துள்ளன. இந்நூலில் உள்ள மொத்தப் பாடல்களின் எண்ணிக்கை 3363 ஆகும்.
- மதுரையை ஆண்ட குலேசபாண்டியனிடம் கபிலரின் நண்பனான **இடைக்காடன்** என்ற புலவர் தமிழ்ச்செய்யுள் ஒன்றை இயற்றிச் சென்று பாடிக் காண்பித்தார். அதனை மன்னன் கண்டு கொள்ள வில்லை. அதனால் வருத்தமுற்ற புலவர் சிவபெருமானிடம் சென்று முறையிட்டார். அதனால் சிவபெருமான் தன் இருப்பிடத்திலிருந்து நீங்கி **உத்தர ஆலவாய்** என்னும் இடத்திற்குச் சென்று அங்கு உறைந்தார். இதனை அறிந்த மன்னன் வருந்தி புலவரிடம் மன்னிப்புக்கோரி பொன்னும் பொருளும் பரிசாக அளித்தான். இடைக்காடனுக்காக இறைவன் வந்து தங்கிய இடமே **ஆதிசொக்கநாதர் கோயில்** ஆகும்.
- சிவபெருமான், மாணிக்கவாசகர் பொருட்டு வைகையைப் பெருக்கெடுக்கச் செய்த பொழுது வந்தி என்ற பிட்டு விற்கும் மூதாட்டிக்காக அவளுடைய பங்குக் கரையை அடைக்கக் கூலியாள் வேடங்கொண்டு சிவபெருமான் வந்தார். அப்பொழுது வந்தி கொடுத்த பிட்டினை உண்ட களைப்பில் கரையை அடைக்காமல் மரத்தடியில் படுத்துத் துயில் கொண்டார். வந்தியின் பங்கு அடைபடாமல் இருப்பதைக் கண்டு கோபம் கொண்ட மன்னன் அரிமர்த்தன

பாண்டியன், அவரைப் பிரம்பால் அடித்தான். அந்த அடி மன்னன் மீதும் மற்றவர்கள் மீதும் பட்டது. வந்திருப்பது சிவபெருமான் என்பதை உணர்ந்து இறைவனிடமும் மாணிக்கவாசகரிடமும் மன்னிப்புக் கோரினான். இந்நிகழ்வு நடந்த இடத்தில் அமைந்துள்ளதே **புட்டுசொக்கநாதர் கோயில்** ஆகும்.

- சைவசமயத்திற்கும் சமணசமயத்திற்கும் இடையே நடைபெற்ற வாதுப்போரில் மதுரையில் நடைபெற்றது. இதில் திருஞானசம்பந்தர் வைகை ஆற்றில் இட்ட ஏடானது ஆற்றின் போக்கை எதிர்த்து மேற்கே சென்றது. சமணர்கள் இட்ட ஏடானது ஆற்றோடு சென்றது. ஞானசம்பந்தர் இட்ட ஏடு எதிர்த்துக் கரை ஏறிய இடம் திருஏடகம் என்று அழைக்கப்பட்டது. இதனால் சமணத்திலிருந்து சைவத்திற்கு மாறிய கூன்பாண்டியன் என்ற நின்றசீர் நெடுமாறன் மன்னனால் கட்டப்பட்டதே **திருஏடகநாதர் கோயில்.**
- ஆதிசொக்கநாதர் கோயில் கட்டிய மன்னர் பெயர் அறியுமாறில்லை. இராணிமங்கம்மாள் இக்கோயிலுக்கு திருப்பணி செய்துள்ளார்.
- புட்டுசொக்கநாதர் கோயில் திருமலைநாயக்கரால் கட்டப்பட்டது.
- திருவிளையாடல் புராணத்தோடு தொடர்புடைய ஆதிசொக்கநாதர் கோயில், புட்டுசொக்கநாதர் கோயில், திருஏடகநாதர் கோயில் ஆகிய மூன்று கோயில்களும் ஆகம விதிமுறைகளைப் பின்பற்றி அமைக்கப் பெற்ற திருக்கோயில்களாக உள்ளன. மூன்று கோயில்களிலும் மூலத்தெய்வம் சிவபெருமான் ஆவர்.
- இத்திருக்கோயில்கள் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம், திருச்சுற்று, பரிவாரத் தெய்வங்களின் சன்னதிகள், அம்மன்சன்னதி, மடைப்பள்ளி, பள்ளியறை ஆகிய பகுதிகளைக் கொண்டு அமைந்துள்ளன.
- மூன்று கோயில்களிலும் கருவறை கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. சுவாமி கருவறையின் தேவகோட்டத்தில் தெற்கே தட்சிணாமூர்த்தியும் மேற்கே லிங்கோத்பவரும் வடக்கே துர்க்கையும் இடம் பெற்றுள்ளனர்.
- கருவறை வாயிலின் இருபுறமும் துவாரபாலகர்களும் கருவறையின் முன்பு பலிபீடம், நந்தி போன்றவையும் அமைந்துள்ளன.
- மகாமண்டபத்துடன் கூடிய திருச்சுற்றிலேயே பரிவாரத்தெய்வங்களாகிய முருகன், விநாயகர், இலக்குமி, சரசுவதி, பைரவர், நடராசர், சண்டிகேசுவரர், நவக்கிரகங்கள், 63 நாயன்மார்கள், வந்தி, இடைக்காடன் போன்றவர்கள் இடம் பெற்றுள்ளனர்.
- சுவாமியின் கருவறையை ஒட்டி அம்மன் சன்னதி அமைந்துள்ளது. திருஏடகநாதர் கோயிலில் மட்டும் தனி மண்டபத்துடன் கூடிய சன்னதியில், சுவாமி கருவறையை ஒட்டினார் போல் அம்மன் சன்னதி உள்ளது.

- ஆதிசொக்கநாதர் கோயிலில் சுவாமி கருவறையின் மீதும் அம்மன் சன்னதி மீதும் என இரு துவிதள விமானங்களும் புட்டுசொக்கநாதர் கோயிலில் சுவாமி, அம்மன், வந்தி ஆகியோர் தம் சன்னதிகளின் மீது துவிதள விமானங்களும் உள்ளன. திருஏடகநாதர் கோயிலில் சுவாமி, அம்மன், பரிவாரத்தெய்வங்கள் சன்னதிகள் அனைத்திலும் ஏகதள விமானங்களும் இடம்பெற்றுள்ளன.
- புட்டுசொக்கநாதர் கோயிலின் அருகில் இக்கோயிலுக்குச் சொந்தமான 36 கால் கல்மண்டபம் அமைந்துள்ளது. இங்கு தான் வருடாவருடம் புட்டுத்திருவிழா நடத்தப்பட்டு, வந்திக்கும் மாணிக்கவாசகருக்கும் மோட்சம் கொடுக்கப்படுகிறது. அதன் அருகில் அமைந்துள்ள சிவலிங்கத்துடன் கூடிய மேடை மீது குளம் போன்ற அமைப்பு ஆறாகக் கருதப்பட்டு அதில் வைகை ஆறு கரை அடைக்கும் நிகழ்வு நடைபெறுகிறது.
- திருஏடகநாதர் கோயிலின் அருகில் திருஞானசம்பந்தருக்குத் தனிக் கோயில் அமைத்து ஞானசம்பந்தரைப் பெருமைப் படுத்தியுள்ளனர்.
- மூன்று கோயில்களிலும் இடம்பெற்றுள்ள இறைவன், இறைவியரது திருவுருவங்கள் கற்படிமமாகவும் செப்புப்படிமமாகவும் வடிக்கப்பட்டு வழிபடப் பெறுகின்றன.
- திருக்கோயில்களில் உள்ள மூலவர்கள் இலிங்க வடிவில் காட்சியளிக்கின்றனர். அம்மன்கள் நின்ற வடிவில் இரு திருக்கரங்களுடன் அருட்பாலிக்கின்றனர்.
- கருவறைத் தேவகோட்டத் தெய்வங்களாக தட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், துர்க்கை ஆகியோர் இடம் பெற்றுள்ளனர். தட்சிணாமூர்த்தி கல்லால மரத்தின் கீழ் அமர்ந்து முனிவர்களுக்கு வேதாகமங்களை உபதேசித்தவாறும் லிங்கோத்பவர் விட்ணு, பிரமன் ஆகியோருக்குத் தீப்பிழம்பாகக் காட்சி கொடுத்த நிலையிலும் துர்க்கை மகிடாசுரன் தலை மீது நின்ற கோலத்திலும் காட்சியளிக்கின்றனர்.
- பரிவாரத் தெய்வங்கள் பீடத்தின் மீது நின்ற நிலையிலும் அமர்ந்த நிலையிலும் நடராசர், முருகன் ஆகியோருக்குத் தனிச் சன்னதியும் நவக்கிரகங்கள் உயர்ந்த பீடத்தின் மீது உள்ளவாறும் மூன்று கோயில்களிலும் அமைக்கப்பட்டுள்ளன. இவர்கள் அவர்களுக்குரிய ஆயுதங்களுடன் மக்களைக் காக்கும் அபய, வரத முத்திரைகளுடனும் காணப்பெறுகின்றனர்.
- 63 நாயன்மார்களில் காரைக்கால் அம்மையார்(அமர்ந்த நிலை) தவிர மற்றவர்கள் நின்ற நிலையில் காட்சியளிக்கின்றனர்.
- திருவிளையாடல்களுடன் தொடர்புடையச் சிற்பங்களான இடைக்காடன் அமர்ந்த நிலையிலும் வந்தி, திருஞானசம்பந்தர் ஆகிய இருவரும் நின்ற நிலையிலும் அதனோடு தொடர்புடைய கோயிலில் காட்சியளிக்கின்றனர்.

- விமானம், கோபுரங்களில் சிவபெருமான், பார்வதி, விநாயகர், முருகன் ஆகியோரின் வெவ்வேறு வடிவங்கள், விட்ணுவின் அவதார வடிவங்கள், தேவர்கள், மனிதச்சிற்பங்கள், பறவை, விலங்குகள் போன்றவற்றின் சிற்பங்கள் ஆகியவை சுதைச் சிற்பமாக அழகுடன் வடிக்கப்பட்டுள்ளன.

- ஆதிசொக்கநாதர் கோயில் மற்றும் புட்டுசொக்கநாதர் கோயில்களில் காரண, காமிக ஆகம முறைப்படி பூசை முறைகளும் திருஏடகநாதர் கோயிலில் காரண ஆகமப்படி பூசை முறைகளும் நடைபெறுகின்றன. நாள் வழிபாடாக ஆதிசொக்கநாதர் கோயிலில் நான்கு காலப் பூசையும் புட்டுசொக்கநாதர் கோயிலில் இரண்டு காலப் பூசையும் திருஏடகநாதர் கோயிலில் ஆறு காலப் பூசையும் நடைபெறுகின்றன.

- இத்திருக்கோயில் தெய்வங்கள் அபிடேகம், அலங்காரம், அருச்சனை, நைவேத்தியம், ஆராதனை, உற்சவம் ஆகிய ஆறு முறைகளில் வழிபடப்பெறுகின்றனர்.

- மூன்று கோயில்களிலும் திங்கள், செவ்வாய், வியாழன், வெள்ளி, சனி ஆகிய கிழமைகளில் சிறப்பு வழிபாடு நிகழ்த்தப்பெறுகிறது.

- மாதமிரு முறை நடைபெறும் விழாக்களில் பிரதோசம் மூன்று கோயில்களிலும் சிறப்பாகக் கொண்டாடப்பெறுகிறது.

- சித்திரை வருடப்பிறப்பு, வைகாசி விசாகம், ஆனித் திருமஞ்சனம், ஆடிப்பூரம், ஆவணி மாதம் புட்டுசொக்கநாதர் கோயிலில் நடைபெறும் புட்டுத்திருவிழா, திருஏடகநாதர் கோயிலில் நடைபெறும் ஏட்டுத்திருவிழா, புரட்டாசி நவராத்திரி விழா, ஐப்பசி அன்னாபிடேகம், கார்த்திகை தீபவிழா, சங்காபிடேகம், மார்கழி திருவாதிரை, திருப்பள்ளி எழுச்சி, தைப்பூசம், மகாசிவராத்திரி, பங்குனி உத்திரம் போன்ற ஆண்டு விழாக்கள் இம்மூன்று கோயில்களிலும் சிறப்புற நடைபெறுகிறது.

- பத்துநாட்கள் கொண்டாடப்படும் திருவிழாக்கள் எதுவும் இக்கோயில்களில் நடை பெறுவதில்லை. திருஏடகநாதர் கோயிலில் மட்டும் முன்பு நடைபெற்றதாகவும் தற்பொழுது பொருளாதாரப் பற்றாக்குறையால் நடைபெறுவது இல்லை என்றும் கூறப்பெறுகிறது.

- கும்பாபிடேகம் பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை ஆதிசொக்கநாதர் கோயில் மற்றும் திருஏடகநாதர் கோயில் ஆகியவற்றில் நடைபெறுகிறது.

ஆனால் புட்டு சொக்கநாதர் கோயிலில் 1889-க்குப் பிறகு கும்பாபிடேகம் நடைபெறவில்லை.

- ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களில் ஆதிசொக்கநாதர் கோயில் மதுரை மீனாட்சிஅம்மன் கோயிலின் உபக்கோயிலாக அமைந்துள்ளதால் இக்கோயிலின் வரவு, செலவுகளை அக்கோயிலின் நிருவாகமே மேற்கொள்கிறது.
- புட்டுசொக்கநாதர் கோயில் இனத்தார் நிருவாகத்தின் கீழ் நிருவகிக்கப்படுகிறது. தற்பொழுது அதன் நிருவாகத் தலைவராக இ.மாணிக்கம் என்பவர் உள்ளார்.
- திருஏடகநாதர் திருக்கோயில் அறநிலையத்துறையின் கட்டுப்பாட்டில் உள்ளதால் இக்கோயிலின் மூன்றாம் நிலை செயல் அலுவலராக ஆ.இளஞ்செழியன் என்பவர் நியமிக்கப்பட்டுள்ளார். பரம்பரை அறங்காவலராக எஸ்.எல்.சேவுகன் செட்டியார் என்பவர் உள்ளார்.
- நித்திய வழிபாடு மற்றும் மாதத் திருவிழாக் காலங்களில் செய்யப்படும் செலவுகள், கோயில் பணியாளர்கள் ஊதியம், மராமத்து, கும்பாபிடேகம், மின்சாரக்கட்டணம் போன்றவை இக்கோயில்களுக்குரிய செலவினங்களாக அமைகின்றன. இவை அனைத்தும் கோயில் வருவாயிலிருந்தே மேற்கொள்ளப் பெறுகிறது.

- உலகில் உயிரினங்கள் பலவாகக் காணப்படினும் மக்கள் இனத்திற்கே பண்பாடு என்பது பொருந்துவதாக அமைகின்றது. பண்பாடு என்பது மனித மனம் தொடர்பானது. மனித வாழ்க்கையைச் செம்மைப்படுத்துவது.

- தமிழர்களின் மேம்பட்ட வாழ்விற்குக் கோயில்களோடு அவர்கள் கொண்டுள்ள தொடர்பு பெரிதும் காரணமாக அமைகின்றது. கோயிலைச் சார்ந்த குடிகள், குடிகளைச் சார்ந்த கோயில் என்பது தமிழர்களின் பண்பாட்டு நெறியாக விளங்குதல் இவ்வாய்வின் வழி புலனாகின்றது.

- **மேலாய்வுக்களன்கள்**

திருவிளையாடல் புராணத்தோடு தொடர்புடைய பிறகோயில்களை ஆராயலாம்.

## முதன்மைச் சான்றாதாரங்கள்


1. அண்ணாமலை. சுப (ப.ஆ) - திருவிளையாடற்புராணம், ஸ்ரீ எஸ்.எஸ்.பிரிண்டர்ஸ், 213, நேதாஜி ரோடு, மதுரை, 2004.

2. இரத்தின வேலுமுதலியார் (உ.ஆ) - பரஞ்சோதி முனிவர் அருளிய திருவிளையாடற்புராணம், முருகவேள் புத்தக சாலை, இராயப்பேட்டை, சென்னை. 1973.

3. இராய.சொ., (உ.ஆ) - திருவிளையாடற்புராணம், மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோயில், மதுரை, 1973.

4. ஜகந்நாதன் கி.வா (ப.ஆ) - திருவிளையாடற்புராணம், வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 17, 1956.

5. டாக்டர். கோபாலன்.ப. - திருவிளையாடற்புராணம் இலக்கிய மதிப்பீடு, இலட்சுமி பதிப்பகம், நரசிம்மபுரம், குனியமுத்தூர், கோவை, 1983.

6. சுவாமிசண்முகானந்தா. - திருவிளையாடற்புராணம் வசனம், ஸ்ரீ செண்பகா பதிப்பகம், 32, பி. கிருஷ்ணா தெரு, பாண்டிபஜார், தியாகராய நகர், சென்னை - 600 017.

7. வித்துவான்.பட்டுச்சாமிஓதுவார்.தி. - பரஞ்சோதி முனிவர் அருளிச் செய்த திருவிளையாடற்புராணம் (உரைநடை) திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து வெளியீடு, 1955.

8. வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ). - திருவிளையாடற்புராணம், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி - 6, 1964.

## துணைமைச்சான்றாதாரங்கள்


1. டாக்டர் அம்பை மணிவண்ணன். - கோயில் ஆய்வும் நெறிமுறைகளும், ஜே.ஜே.பப்ளிகேஷன்ஸ், 29, கற்பக விநாயகர் வணிக வளாகம், கோ.புதூர், மதுரை - 625 007.

2. அருணாச்சலம்.ப. - பக்தி இலக்கியம், பாரி புத்தகப் பண்ணை, 58, டிபி கோவில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005. 2000.

3. அருணை வடிவேலு முதலியார். - திருமுறைத்தொகுதி - 1, தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 2003.

4. முனைவர் அறிவுடைநம்பி.ம.சா. - சைவத்தமிழ், கருமணி பதிப்பகம், சி.3 குடியிருப்பு வளாகம், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 613 005.

5. இராமசாமி.மே.சு. - தமிழ்நாட்டுச் செப்புத் திருமேனிகள், தமிழக அரசு தொல் பொருள் ஆய்வுத் துறை, சென்னை, 1976.

6. இராமநாத பிள்ளை.ப. - திருக்கோயில் வழிபாடு, தமிழக அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை, சென்னை 1977.

7. இராமநாத பிள்ளை.ப. (சம்பந்தர்) - தேவாரத்திருப்பதிகத் திரட்டு திருநெல்வேலி நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி - 6, 1964.

8. இராம்லட்சுமணன். - பிரதோஷம், வரலாறும்-வழிபாடு,
சகுந்தலை நிலையம்,
37 (புது.எண்.71)
பவளக்காரத் தெரு,
மண்ணடி, சென்னை - 600 001.

9. கணபதி ஸ்தபதி - சிற்பச் செந்நூல்,
தொழில் நுட்பக் கல்வி இயக்கம்,
சென்னை.
1978.

10. பேரா.டாக்டர்.கல்யாணசுந்தரம். ந. - திருச்செந்தூர்முருகன் கோயில் வரலாறு,
திருக்குமரன் பதிப்பகம்,
66, சபாபதிபுரம் தெரு,
திருச்செந்தூர்.

11. கானமஞ்சரி சம்பத்குமார் - சிவமயம் கண்ட சித்தர்கள்,
ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ்,
40, பிஞ்சால சுப்பிரமணியம் தெரு,
(உஸ்மான் ரோடு)
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

12. கிருபானந்த வாரியார் - ஆலயம் ஏன்?
குகஸ்ரீ வாரியார் பதிப்பகம்,
சென்னை,
1998.

13. கிருஷ்ணன். - வெற்றி தரும் விநாயகர் வழிபாடு,
கார்த்தீபன் புத்தகாலயம்,
சென்னை,
1999.

14. குன்றில்குமார். - கோயிலுக்குப் போறீங்களா?
சங்கர் பதிப்பகம்,
15/21, டீச்சர்ஸ் கில்டுகாலஸ்,
சென்னை - 600 049.

15. கைலாசநாத குருக்கள். - சைவத்திருக்கோவிற்கிரியை நெறி,
ஸ்ரீ முத்து விநாயகர் கோவில்,
221. செட்டியார் தெரு,
கொழும்பு - 11.

16. சத்தியவேல்முருகனார்.மு.பெ. - திருக்கோயில்களில் நாள் வழிபாடு,
அருள்மிகு முனீஸ்வரர் ஆலயம்,

குயின்ஸ் வே,
சிங்கப்பூர்.

17. சிங்கார வேலன்.சொ - திருக்கோயில்களும் பண்பாடும்,
திருவாடுதுறை ஆதீனம்,
1995.

18. சித்பவானந்தர் சுவாமி. - கடவுளின் வடிவங்கள்,
ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்,
திருப்பராய்த்துறை,
ஒன்பதாம் பதிப்பு
1987.

19. சீனி வேங்கடசாமி.மயிலை. - தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 1,
நான்காம் பதிப்பு - 1989.

20. சுந்தரேசன்.துரை. - புராணம், வரலாறு ஒரு தொகுப்பு,
ஜோதி எண்டர் பிரைசஸ்,
சென்னை.
2007.

21. சுப்பிரமணியன்.பெ. - தமிழர் திருவிழாக்களும் பண்பாடும்,
ராம்குமார் பதிப்பகம்,
பழனி.
1999.

22. சுப்பிரமணிய சாஸ்திரி.கே.எம். - ஆசாரசிவாச்சாரியார் செய்தருளிய
சிவாகம் நித்திய பூஜா விதி என்னும்
ஸ்ரீ பரார்த்த நித்திய பூஜா விதி,
தேவகோட்டை சித்தாந்தபரிபாலன
சங்கம்,
கும்பகோணம், 1930.

23. செந்துறைமுத்து.புலவர் - திருக்கோயில்களும் வழிபாட்டு
முறைகளும்,
இராமு நிலையம்,
23, காசிம் தெரு,
இராயப்பேட்டை,
சென்னை - 14.

24. செந்துறைமுத்து.புலவர். - திருமுறையும் திருக்கோயில்களும்,
மணிவாசகர் பதிப்பகம்,
சிதம்பரம்,
1985.

25. சேதுராமன்.கு. - தமிழ்நாட்டு சமுதாய பண்பாட்டுக்
கலை
வரலாறு,
ஜெ.ஜெ. பப்ளிகேசன்ஸ்,
மதுரை,
1997.

26. சொக்கலிங்கம். ம. - நாட்டுக்கோட்டை நகரத்தார்கள், அறப்பணிகளும் வரலாறும், பார்வதி பதிப்பகம், காரைக்குடி - 3. 1997.

27. சோமசுந்தரம் செட்டியார் - திருவிழாவின் தத்துவவிளக்கம், திருமயிலை ஸ்ரீ கபாலீஸ்வரர், தேவஸ்தான வெளியீடு, 1958.

28. முனைவர் தட்சிணாமூர்த்தி.அ. - தமிழர் நாகரிகமும் பண்பாடும், ஐந்திணைப் பதிப்பகம், ஏ.பி.1108 தென்றல் காலனி, மூன்றாவது தெரு, மேற்கு அண்ணாநகர், சென்னை - 600 040, மறுபதிப்பு - 2016.

29. திருஞானம். கோ. - தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு, தமிழ் நாட்டு வரலாறு, பல்லவர் - பாண்டியர் காலம், தமிழ் வளர்ச்சி இயக்கம், சென்னை - 600 108.

30. திருஞானம். கோ. - மரபுக்கட்டடக்கலை, முதல் & இரண்டாம் தொகுதி, மாணவர் புத்தகப் பண்ணை, 26, ச.ப.சாலை, அடையாறு, சென்னை - 600 020.

31. - திருக்கோயில்களும் பண்பாடும், எட்டாவது உலகத் தமிழ் மாநாட்டு மலர், திருவாவடுதுறை ஆதினம், 1995.

32. துரைசாமிப்பிள்ளை ஔவை.சு. - சைவ இலக்கிய வரலாறு, (கி.பி. 7 முதல் 10-ஆம் நூற்றாண்டுவரை) அண்ணாமலை பல்கலைக்கழகம், சிதம்பரம், 1978.

33. தேனப்பன்.வ. - ஒன்பது நகரக்கோயில்கள், தேன் வள்ளியம்மை பதிப்பகம், தேவகோட்டை, 1990.

34. நஜன். - ஆலயங்களும் ஆகமங்களும்,

பிரதிபா பிரசுரம்,
சென்னை - 4
இரண்டாம் பதிப்பு - 1985.

35. நஜன். - சிவமூர்த்தங்கள்,
பிரதிபா பிரசுரம்,
சென்னை - 4
1985.

36. நஜன். - தமிழர் பண்டிகைகளும் பண்பாடும்,
பிரதிபா பிரசுரம், சென்னை - 4
இரண்டாம் பதிப்பு,
1978.

37. நஜன். - துர்க்கா பரமேஸ்வரி,
பிரதிபா பிரசுரம்,
ஐந்தாம் பதிப்பு - 1990.

38. நாராயண வேலுப்பிள்ளை. எம். (உ.ஆ) - திருவாசகம் மூலமும் உரையும்,
வர்த்தமானன் பதிப்பகம்,
எம்.ஆர்.ஆர்.காம்ப்ளக்ஸ்,
தி.நகர். சென்னை - 17,
1993.

39. நாகசாமி.இரா.
சந்திரமூர்த்தி.மா. - தமிழகக் கோயில் கலைகள்,
தமிழ்நாட்டு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை, சென்னை,
1973.

40. நாகப்பா நாச்சியப்பன் - திருக்கோயில் வழிபாடு,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 1,
1991.

41. நாச்சியப்பன். சி.என். - பிரதோஷ மகிமை,
பொன்னழகம்மை நூலகம்,
சென்னை - 24,
1988.

42. நாராயணசுவாமி.எஸ். - சண்டேசுவரர்,
திருவாவடுதுறை ஆதீனம்,
1992.

43. நாராயணசுவாமி.எஸ். - சோமஸ்கந்தர்,
திருவாவடுதுறை ஆதீனம்,
1992.

44. நாராயணசுவாமி.எஸ். - தட்சிணாமூர்த்தி, பாகம் 1,2
திருவாடுதுறை ஆதீனம்,
1990-91

45. நாராயணசுவாமி.எஸ். - பைரவர்,
திருவாடுதுறை ஆதீனம்,
1996.

46. நாராயணசுவாமி.எஸ். - பிரதோஷ வழிபாடு,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை - 1
1994.

47. பழனியப்பன்.தா.மணி (பொ.ப.ஆ) - சைவம் வளர்த்த தமிழ் (தொகுதி -2)
மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம் - 608 001.
2007.

48. பூதலிங்கம். டி.என். - கோயில் களஞ்சியம்,
சமயப் பிரச்சார நிலையம்,
சேலம் - 1, 1996.

49. - பிள்ளையார் வழிபாடு,
கொழும்பு, கொட்டாஞ்சேனை,
அருள்மிகு வரதராஜ விநாயகர்,
கோவில் வெளியீடு,
834. அண்ணா சாலை,
சென்னை,
1993.

50. ஆசிரியர் குழு - மணிமேகலைப் பிரசுரம்,
இந்துப் பண்டிகைகள் வரலாறும்
வழிபாட்டு முறைகளும்,
மணிமேகலை பிரசுரம்,
சென்னை - 17
1985.

51. மேலது. - தமிழக இந்து சமய அறநிலையக்
கட்டளை சட்டம், மணிமேகலை
பிரசுரம்,
சென்னை - 17
1985.

52. மாணிக்கவேலு, மு.அ. - தமிழ்நாட்டில் நடராசர் வழிபாடு,
அம்பலவாணன் பதிப்பகம்,
சென்னை - 2
1994.

53. மாதவன்.வே.இரா. - தமிழில் தல புராணங்கள், பகுதி 1,2,
பாவை பதிப்பகம்,
தஞ்சாவூர்,
1995.

54. முத்துசாமி பிள்ளை. கோ.மு - கோயிற்களஞ்சியம் அறிமுகம்,
தமிழ் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,

1991.

55. மேலது. - சிவராத்திரி வழிபாடு, அருள்மிகு மருந்தீசர் ஆலய வழிபாட்டுச் சங்கம், திருவான்மியூர், சென்னை - 41. 1965.

56. டாக்டர். முரளிதர். எஸ்.என். - இந்து மதத்தின் இயற்கைக் களஞ்சியம், ஹோலிபப்ளிகேசன்ஸ், 74, பெரியார் வீதி, ஈரோடு - 638 001.

57. முருக பூபதி.ஞா. மல்லிகை.எம். - திருவிளையாடல் போற்றிக் கலிவெண்பா, மதுரை மீனாட்சி அம்பிகை மற்றும் துதிப்பாடல்கள், பன்னிரு திருமுறை மன்றம், மதுரை - 1, 1995.

58. முருகவேள். ந.ரா. - முருகன் பெருமை, ஆணையர், இந்து அறநிலையத்துறை, சென்னை, 1977.

59. மேலது. - தெய்வத்திருவுருவங்கள், தணிக்கைப் பதிப்பகம், சென்னை - 1974.

60. மெய்யப்பன் ச. எம்.ஏ. - மதுரை மீனாட்சி, மணிவாசகன் பதிப்பகம், 55, லிங்கிதெரு, சென்னை - 600 001, 1990.

61. ரிஷபானந்தர் - இந்துமதப் பண்டிகைகளும் விரதங்களும், அனுராகம் பதிப்பகம், சென்னை – 17, 1990.

62. வெள்ளை வாரணம்.கா. - பன்னிரு திருமுறை வரலாறு, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1969.

63. வெற்றிச்செல்வன் - விரதங்கள், ஸ்டார் பிரசுரம், சென்னை – 5, நான்காம் பதிப்பு - 1969.

64. வேங்கடவன் - பூஜைக்குரிய பொருள்களும்
பலன்களும்,
தமிழ்மணி நிலையம்,
7. எஸ்.எஸ் சாஹிப் தெரு,
அமைந்த கரை,
சென்னை - 600 029.

65. ஜகந்நாதன், கி.வா. - நவக்கிரகங்கள்,
அல்லயைன்ஸ் கம்பெனி,
சென்னை - 4, 1993.

66. ஜானகி.எஸ்.எஸ். (Ed) - சிவாலயங்களும்
ஆலயக்கிரியைகளும்,
குப்புசாமி சாஸ்திரி நினைவு,
ஆய்வு மையம்,
சென்னை - 1998.

67. ஜெய செந்தில்நாதன்.மா - சிவத்திருமேனிகள்,
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை - 17,
இரண்டாம் பதிப்பு - 1997.

68. ஸ்ரீநிவாசன்.மா.ஆர். - நாம் வணங்கும் தெய்வங்கள்,
இளங்கோ பதிப்பகம்,
சென்னை - 17,
1959.

# பின்னிணைப்பு 1

## நேர்காணல்

| | | | |
|---|---|---|---|
| 1. | இராசப்பா ஐயர். | அர்ச்சகர், திருஏடகநாதர் திருக்கோயில். | 10.4.2018 |
| 2. | ஆ.இளஞ்செழியன். | செயல்அலுவலர், திருஏடகநாதர் திருக்கோயில். | 10.4.2018 |
| 3. | நா.கணேசன். | பரிசாரகர், திருஏடகநாதர் திருக்கோயில். | 10.4.2018 |
| 4. | எஸ்.சிவசங்கர். | அர்ச்சகர், புட்டுசொக்கநாதர் கோயில். | 2.8.2018 |
| 5. | கோ.சுவாமிநாதன். | அர்ச்சகர், ஆதிசொக்கநாதர் கோயில். | 7.8.2018 |
| 6. | போ.பிருந்தா. | கணினி உதவியாளர், திருஏடகநாதர் திருக்கோயில். | 10.4.2018 |
| 7. | இ.மாணிக்கம். | நிர்வாகி, புட்டுசொக்கநாதர் கோயில். | 2.8.2018 |
| 8. | க.முத்துவேல் | எழுத்தர், புட்டுசொக்கநாதர் கோயில். | 2.8.2018 |

## பின்னிணைப்பு 2

**நேர்காணல் கண்டவர்**
ந.முத்துமணி,
முனைவர் பட்ட ஆய்வாளர்.

**நேர்காணலாளர்**
கோ.சுவாமிநாதன்,
அர்ச்சகர்,
ஆதிசொக்கநாதர் கோயில்,

நாள்: 7.8.2018.

1. ஆதிசொக்கநாதர் கோயில் எப்பொழுது, யாரால் கட்டப்பட்டது?

   இக்கோயில் 2000-ஆம் ஆண்டுப் பழமை வாய்ந்தது. பாண்டிய மன்னனால் கட்டப்பட்டது எனக் கூறுகின்றனர். ஆனால் மன்னன் பெயர் தெரியவில்லை.

2. இக்கோயிலுக்குத் திருப்பணி செய்த பிற மன்னர்கள் பற்றிக் கூறுங்கள்?

   இராணிமங்கம்மாள் காலத்தில் இக்கோயிலுக்கு மகாமண்டபம் கட்டப்பட்டது.

3. இக்கோயிலில் நடைபெறும் பூசைமுறைகள் ?

   தினந்தோறும் நான்கு காலப்பூசை நடைபெறுகிறது.

4. இத்திருக்கோயிலில் எந்த ஆகம முறைப்படி பூசைகள் நடைபெறுகின்றன?

   காரணம், காமிகம் என்னும் இரு ஆகம முறைப்படி பூசைகள் நடைபெறுகின்றன.

5. இத்திருக்கோயிலில் பத்து நாள் திருவிழா உண்டா?

   இல்லை.

6. இக்கோயில் யாருடைய நிருவாகத்தின் கீழ் செயல்படுகிறது?

   மீனாட்சிஅம்மன் கோயில் நிருவாகத்தின் கீழ் செயல்படுகிறது. அங்குள்ள அலுவலர்களே இக்கோயிலையும் நிருவகிக்கின்றனர்.

7. இக்கோயிலுக்கு தனியாகச் சொத்துக்கள் உண்டா?

   இல்லை.

8. இக்கோயிலுக்கும் இடைக்காடருக்கும் இடையே உள்ள தொடர்பு பற்றிக் கூறுங்கள்?

   இடைக்காடன் திருவுருவம் இக்கோயிலில் அமைந்துள்ளது. அவருக்கும் நாள் தோறும் வழிபாடு நிகழ்த்தப் பெறுகிறது.

| நேர்காணல் கண்டவர் | நேர்காணலாளர் |
| --- | --- |
| ந.முத்துமணி, | க.முத்துவேல், |
| முனைவர் பட்ட ஆய்வாளர். | எழுத்தர், |
| | ஆதிசொக்கநாதர் கோயில், |

நாள்: 2.8.2018.

1. புட்டுசொக்கநாதர் கோயில் யாரால் கட்டப்பட்டது?

   திருமலைநாயக்கர் மன்னரால் கட்டப்பட்டது.

2. இக்கோயில் யாருடைய நிருவாகத்தின் கீழ் உள்ளது?

   மதுரைவடக்கு சிம்மக்கல்தெரு, வடக்கு செல்லத்தம்மன் கோயில் தெரு, சோழவந்தான், வாடிப்பட்டி வகையறா பதினெண் கிராம வாணிப வைசிய உறவின் முறைக்கு உட்பட்டது.

3. அறநிலையத்துறை கட்டுப்பாட்டில் இல்லையா?

   அறநிலையத்துறையின் மேற்பார்வையில் உள்ளது.

4. இங்குள்ள பணியாளர்களுக்கு யாரால் ஊதியம் வழங்கப்படும்?

   பதினெண் கிராம வாணிப வைசிய உறவின் முறையினரால் வழங்கப்படும்.

5. இக்கோயிலில் எத்தனை காலப்பூசை நடைபெறுகிறது?

   இரண்டு காலப்பூசை மட்டும் நடைபெறுகிறது.

6. திருவிளையாடலை நினைவுப்படுத்தும் விதமாக திருவிழா எதுவும் நடைபெறுகிறதா?

   ஆம். ஆவணி மாதம் புட்டுத்திருவிழா நடைபெறுகிறது.

| **நேர்காணல் கண்டவர்** | **நேர்காணலாளர்** |
|---|---|
| ந.முத்துமணி, | ஆ.இளஞ்செழியன், |
| முனைவர் பட்ட ஆய்வாளர். | செயல் அலுவலர், |
| | திருஏடகநாதர் கோயில், |

நாள்: 10.4.2018.

1. திருஏடகநாதர் கோயில் யாரால் கட்டப்பட்டது?

நின்றசீர் நெடுமாறனால் கட்டப்பட்டு பின்பு பழங்காலப் பாண்டிய மன்னர்களால் பல

திருப்பணிகளுக்கு இடமாகியிருக்கிறது. பின்பு தேவகோட்டை நகரத்தார்கள் இக்கோயிலுக்குத் பல திருப்பணிகள் செய்துள்ளனர்.

2. யாருடைய நிருவாகத்தின் கீழ் இக்கோயில் உள்ளது?

இக்கோயிலை நிருவகித்து வந்த நகரத்தார்களை 1993-ம் ஆண்டு முதல் அறங்காவலராக நியமித்து விட்டு, தற்போது அறநிலையத்துறை இக்கோயிலை நிருவகித்து வருகிறது.

3. இக்கோயிலில் பெருந்திருவிழா நடைபெறுகிறதா?

இல்லை.

4. கொடிமரம் இருக்கிறதே?

முன்பு இக்கோயிலில் திருவிழா நடைபெற்றது. பொருளாதாரக் குறைவால் நடை தற்பொழுது பெறுவதில்லை.

5. இக்கோயிலின் சிறப்பு வாய்ந்த விழா எது?

ஏட்டுத்திருவிழா. ஆவணி மாதம் மிகச் சிறப்பாக நடைபெறும், இவ்விழா இத்தலத்தில் நடைபெற்ற சிவனின் திருவிளையாடலை நினைவு படுத்தும் விதமாகக் கொண்டாடப்பெறுகிறது.

6. கிழக்கு வாயில் மொட்டைக் கோபுரமாக இருக்கிறதே ஏன்?

கோபுரம் அமைக்க எடுத்து வந்த கல் தேரை விழுந்ததாக இருந்ததால் வேலை பாதியில் நின்று போனது.

7. இத்திருத்தலத்தின் தனிச்சிறப்பு யாது?

திருஞானசம்பந்தருக்கு இத்தலத்தில் தனிக்கோயில் அமைந்துள்ளது. மேலும் வைகை ஆற்றின் கரையில் உள்ள படித்துறையில் ஏட்டினை, மீன் ஒன்று

கரையேற்றிய நிகழ்வு புடைப்புச் சிற்பமாகப் பொறிக்கப்பட்டுள்ளது. திருஞானசம்பர்

ஆற்றில் இட்ட ஏட்டினை நினைவுப்படுத்தும் விதமாக இங்கு தங்கத்தினால் ஆன ஏடு உள்ளது. இது ஏட்டுத்திருவிழாவின் போது திருஞானசம்பந்தர் கையில் இருக்கும்.

# பின்னிணைப்பு 3

## திருஞானசம்பந்தர் அருளிய தேவாரப் பதிகம்
## திருவேடகம்

3.ம். திருமுறை.

வன்னியும் மத்தமும் மதிபொதி சடையினன்
பொன்னியின் திருவடி புதுமலரை வைகொடு
மன்னிய மறையவர் வழிபட வடியவர்
இன்னிசைப் பாடலர் ஏடகத் தொருவனே 1

கொடிநெடு மாளிகைக் கோபுரங் குளிர்மதி
வடிவுற அமைதர மருவிய ஏடகத்
தடிகளை யடிபணிந் தாற்றுமின் அன்பினால்
இடிபடும் வினைகள்போய் இல்லைய தாகுமே 2

குண்டலந் திகழ்தரு காதுடைக் குழகனை
வண்டலம் பும்மலர்க் கொன்றைவான் மதியணி
செண்டலம் பும்விடைசத் சேடனூர் ஏடகங்
கண்டுகை தொழுதலுங் கவலைநோய் கழலுமே 3

ஏலமார் தருகுழல் ஏழையோ டெழில்பெறுங்
கோலமார் தருவிடைக் குழகனார் உறைவிடஞ்
சாலமா தவிகளுஞ் சந்தனஞ் சம்பகஞ்
சீலமார் ஏடகஞ் சேர்தலாஞ் செல்வமே 4

வரியணி நயனிநன் மலைமகள் மறுகிடக்
கரியினை யுரிசெய்த கறையணி மிடறினன்
பெரியவன் பெண்ணினோ டாணலி யாகிய
எரியவன் உறைவிடம் ஏடகக் கோயிலே 5

பொய்கையின் பொழிலுறு புதுமலர்த் தென்றலார்
வைகையின் வடகரை மருவிய ஏடகத்
தையனை அடிபணிந் தாற்றுமின் அடர்தரும்
வெய்யவன் பிணிகெட வீடெளி தாகுமே 6

தடவரை யெடுத்தவன் தருக்கிறத் தோளடர்
படவிரல் ஊன்றியே பரிந்தவற் கருள்செய்தான்
மடவரல் எருக்கோடு வன்னியும் மத்தமும்
இடமுடைச் சடையினன் ஏடகத் திறைவனே 7

பொன்னுமா மணிகளும் பொருதிரைச் சந்தகில்
தன்னுளார் வைகையின் கரைதனிற் சமைவுற
அன்னமாம் அயனுமா லடிமுடி தேடியும்
இன்னவா றெனவொணான் ஏடகத் தொருவனே 8

குண்டிகைக் கையினர் குணமிலாத் தேரர்கள்
பண்டியைப் பெருக்கிடும் பளகர்கள் பணிகிலர்
வண்டிரைக் கும்மலர்க் கொன்றையும் வன்னியும்
இண்டைசேர்க் குஞ்சடை ஏடகத் தெந்தையே 9

கோடுசந் தனமகில் கொண்டிழி வைகைநீர்
ஏடுசென் றணைதரும் ஏடகத் தொருவனை
நாடுதென புகலியுண் ஞானசம் பந்தன்
பாடல்பத் திவைவல்லார்க் கில்லையாம் பாவமே. 10

## பின்னிணைப்பு 4

### கலைச்சொல் விளக்கம்

அந்தராளம் - இடைநாழி

அதிட்டானம் - அடித்தளம்

அபிடேகம் - நீராட்டுதல்

அர்த்தசாமப்பூசை - இரவு நேரத்தில் திருக்கோயில்களில் செய்யப்படும் பூசை

அனுக்கிரகம் - அருளல்

அனுக்ஞை - அனுமதி பெறுதல்

அஷ்டத்திக்குப் பாலகர்கள் - எட்டுத் திசைக் காவலர்கள்

அஷ்டோத்திரம் - இறைவனுக்குரிய பெயர்களைச் சொல்லி வழிபடுதல்

ஆசனம் - அமர்வு

ஆராதனை - வழிபாடு

ஆவாஹனம் - கும்பத்திலோ, இறையுருவிலோ மந்திரங்களைச் சொல்லி இறைவனை எழுந்தருளச் செய்வது

இலட்சார்ச்சனை - இறைவனின் திருப்பெயரை இலட்சம் முறை சொல்லி வழிபடுதல்

உபபீடம் - அதிட்டானத்தில் இடம்பெறும் துணை அடிப்பகுதி

உற்சவம் - திருவிழா

உற்சவமூர்த்தி - விழாக்காலங்களில் உலாவரும் தெய்வம்

கண்டம் - அதிட்டானத்தில் குமுதம் மற்றும் பட்டிகைக்கு இடைப்பட்ட கழுத்து போன்ற பகுதி

கபாலம் - மண்டை ஓடு

கபோதம் - புறாக்கூடு போன்ற அமைப்பு

கரண்ட மகுடம் - பெண் தெய்வங்களுக்கு தலையில் அணிவிக்கப் பயன் படுத்தப்படும் மகுடம்

கிரியை - இறையுருவத்திற்குச் செய்யப்படும் சடங்குகள்

குமுதம் - அல்லி

கூடு - குதிரைலாடம் போன்ற சிறிய அமைப்பு

| | | |
|---|---|---|
| சமபங்கம் | - | நேராக நின்ற நிலை |
| சப்பரம் | - | சிறிய திருத்தேர் |
| சம்ஹாரம் | - | அழித்தல் |
| சரியை | - | உடலால் செய்யப்படும் வழிபாடு |
| சாமரம் | - | விசிறி |
| சாயரட்சை | - | மாலை நேர வழிபாடு |
| சாலை | - | தளத்தின் மேல் இருதடங்களுக்கு இடையே உள்ள நீள் சதுரக் கட்டடம் |
| சிவாச்சாரியார் | - | நாள் வழிபாடுகளைச் செய்பவர் |
| சூசி முத்திரை | - | ஆட்காட்டி விரலால் மேல்நோக்கிச் சுட்டுதல் |
| டோல ஹஸ்தம் | - | தோளிலிருந்து நீட்டப் பெற்று தொங்கியமையும் கையமைதி |
| தமருகம் | - | இறைவனின் கையில் இடம்பெறும் உடுக்கை |
| தல விருட்சம் | - | கோயிலுக்குரிய புனித மரம் |
| தாடி | - | தூணின் கலசத்திற்கு மேல் இடம்பெறும் உறுப்பு |
| துவஜாரோகணம் | - | கொடியேற்றுதல் |
| துவாரபாலகர் | - | வாயிற்காவலர் |
| தேவகோட்டம் சிற்பம் | - | கருவறையின் வெளிப்புறச் சுவரில் தெய்வங்களின் இடம் பெறும் மாடம் |
| தோரணம் | - | தெய்வங்களின் சிற்பம் இடம் பெறும் மாடத்தின் மேல் அமையும் அலங்கார அமைப்பு |
| நாகபந்தம் | - | தூணின் கீழ்சதுரப்பகுதியில் நான்கு மூலைகளில் இடம் பெறும் நாகப்பாம்பின் தலை போன்ற அமைப்பு |
| நைவேத்தியம் | - | வழிபாட்டின் போது இறைவனுக்குப் படைக்கப் படும் உணவு |
| நைமித்தியக்கிரியை | - | சில காரணங்களின் பொருட்டு நடத்தப்படும் வழிபாடு |
| பஞ்சரம் | - | வளையும் கூடு |
| பத்மம் | - | தாமரை |
| பத்ரம் | - | இலை |
| பத்ர குண்டலம் | - | பனையோலைச் சுருள் போன்று |

செய்யப்படும் செவியணி

| | |
|---|---|
| பரிவார தேவதைகள் | - திருச்சுற்றில் இடம் பெறும் தெய்வங்கள் |
| பலி | - பூவும் சோறும் இடல் |
| பலிபீடம் | - திசைக்காவல் தெய்வங்களுக்கு உணவு இடப்படும் இடம் |
| பாதம் | - கால் |
| பிரகாரம் | - திருச்சுற்று |
| பிரசாதம் | - திருக்கோயில்களில் வழங்கப்படும் உணவுப் பொருட்கள் |
| பிரநாளம் | - கருவறையிலுள்ள இறைவனை நீராட்டும் நீர் வெளியேறும் இடம் |
| பிரதோசம் | - பதினைந்து நாட்களுக்கொரு முறை சிவனுக்காக நிகழும் வழிபாடு |
| பிரும்மோற்சவம் | - பெருந்திருவிழா |
| போகவடிவம் | - இறைவியுடன் கூடிய நிலை |
| மகர குண்டலம் | - மகரமீனைப்போல் வளைவாக அமைத்துச் செய்யப் பட்ட செவியணி |
| வசந்தோற்சவம் | - கோகைாலத்தில் நடைபெறும் திருவிழா |
| வரதம் | - வரமளிக்கும் முத்திரை |

# பின்னிணைப்பு 5

## ஆலயமும் மனித உடலும்

வழிபாடு நிகழும் போது அது ஒரு புற நிகழ்ச்சியாக இருந்தால் போதாது, மனிதனின் அகத்திலும் பூசையின் எதிரொலி புலப்பட வேண்டும். எனவே மனித உடலை

முன்மாதிரியாகக் கொண்டு கோயிலை எழுப்பினர்.



மூலவர்  திருஏடகநாதர்



ஏலவார்குழலி  அம்மன்



மூலவர் ஆதிசொக்கநாதர்



மீனாட்சி அம்மன்



மூலவர் புட்டுசொக்கநாதர்



மீனாட்சி அம்மன்



## இடைக்காடன்



## வந்தியம்மை



## திருஞானசம்பந்தர்



# விமானம்

## திருஏடகநாதர் கோயில்



புட்டுசொக்கநாதர் கோயில்



ஆதிசொக்கநாதர் கோயில்



# கோபுரம்

## ஆதிசொக்கநாதர் சாளக் கோபுரம்



## திருஏடகநாதர் மொட்டைக்கோபுரம்



## திருஏடகநாதர் சுவாமி, அம்மன் சன்னதிகள்

## ஐந்துநிலைக் கோபுரம்





## மூன்றுநிலைக் கோபுரம்





# 36 கால்மண்டபம்



# திருஏடு கரையேறிய கல்வெட்டு



# உபபீடம்

## ஆதிசொக்கநாதர் கோயில்



புட்டுசொக்கநாதர் கோயில்



திருஏடகநாதர் கோயில்



# தூண்

ஆதிசொக்கநாதர் கோயில்



புட்டுசொக்கநாதர் கோயில்



திருஏடகநாதர் கோயில்



# இரட்டைக்கால பைரவர்



# பிட்டு லீலை நடக்கும் இடம்



பாதபந்த அதிட்டானம் ஆதிசொக்கநாதர் சன்னதி



வர்க்கபேத அதிட்டானம் திருஏடகநாதர் சன்னதி



# திருவிளையாடல் புராணக்கோயில்கள்- ஓர்ஆய்வு

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (**Ph.D.,**) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

ந.முத்துமணி

(பதிவு எண் :1506)

நெறியாளர்

பேராசிரியர்.சே.செந்தமிழ்ப்பாவை






தமிழ்ப்பண்பாட்டு மையம்

அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர நிர்ணயக்குழுவின் மூன்றாம் சுற்றுத் தர மதிப்பீட்டில் $A^+$ (CGPA: 3.64) தகுதி பெற்றது மற்றும் மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு - இந்தியா


ஜூன் - 2019

# இயல் - 5

## திருக்கோயில்கள் உணர்த்தும் பண்பாடு

பண்டைக் காலந்தொட்டுத் தமிழர்களின் வாழ்வில் ஊடுருவிப் பரந்து நிலைத்தவை கோயில்கள் ஆகும். இக்கோயில்களை ஆராய்வதன் மூலம் தமிழர்களின் பண்பாட்டைப் புரிந்து கொள்ள முடியும். பண்பாடு என்பது மனித வாழ்க்கையைச் செம்மைப்படுத்துவது ஆகும். மனிதன் தனக்கு மேல் ஒரு இறை சக்தி இருப்பதாகக் கருதி அதற்குப் பயந்து தனது வாழ்க்கையை ஒழுங்குபடுத்திக் கொண்டான். கோயில்கள் கலைகளை வளர்க்கும் கலைக்கூடமாகவும் பொருளாதார நிலைக்களன்களாகவும் பண்பாட்டுப் பெட்டகமாகவும் விளங்கின. மன்னர்கள் தங்களது கலை ஆர்வத்தை கோயில்கள் மூலம் நிறைவேற்றிக்கொண்டனர். மனிதன் திருவிழாக்களை நடத்தி ஒற்றுமையை வளர்த்துக் கொண்டான். அவ்வகையில் கோயில்கள் வெளிப்படுத்தும் பண்பாட்டுக் கூறுகளை எடுத்துரைப்பது இவ்வியலின் நோக்கமாகும்.

### பண்பாடு – விளக்கங்களும் வரையறையும்

உலகில் மக்கள் இனம் தோற்றம் பெற்று இன்று வரை வந்துள்ள வளர்ச்சி நிலைகளுக்கு, அடிப்படையாக அமைவது பண்பாடு ஆகும். அவரவர் நிலத்தின் தன்மைக்கும் பருவ நிலைக்கும் ஏற்றவாறு உலகம் முழுவதும் பல்வேறு பண்பாடுகள் உருவாகி நிலவி வருகின்றன.

“பண்படுவது பண்பாடு, பண்படுதல், சீர்ப்படுதல் அல்லது திருந்துதல், திருந்திய நிலத்தைப் பண்பட்ட அல்லது பண்படுத்தப்பட்ட நிலமென்றும் திருந்திய தமிழைப் ‘பண்பட்ட செந்தமிழ்’ என்றும் திருந்திய உள்ளத்தைப் பண்பட்ட உள்ளமென்றும் சொல்வது வழக்கம்.”[1]

“ஆங்கிலத்தில் கல்சர் என்று சுட்டுவதற்கு நேராகவே ‘பண்பாடு’ என்பது ஆளப்படுகின்றது. இச்சொல்லை இப்பொருளில் முதன்முதலில் ஆண்ட பெருமை டி.கே.சிதம்பரநாத முதலியாருக்கே உரியது என்பர். பண்படு என்னும் சொல்லிலிருந்து அமைத்துக் கொள்ளப்பட்டது இச்சொல்லாகும்.”[2]

தெ.பொ.மீனாட்சி சுந்தரனார், பண்பாடு என்ற சொல்லுக்கு “பெரும்பாலும் சிறந்த வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைகின்ற உள்ளப் பாங்கின் வெளிப்பாட்டையே பண்பாடு என்கிறோம். அந்த வெளிப்பாடு சுவையுணர்வாகவும் நடையுடை பாவனைகளாகவும் தோன்றும். அப்பண்பாடில்லாதவனைக் காட்டுமிராண்டி என்கிறோம்.

வாழ்வின் பலபல போக்குகள் அமைந்த பல்வேறு நிலைகளையும் இந்தப் பண்பாடென்பது குறிக்கும். உடலைப் பற்றிய நன்னிலை மனத்தைப் பற்றிய தூய்மைநிலை, பேச்சின் இனிமை இவையெல்லாம் பண்பாட்டில் அடங்கும்''[3] என்று விளக்குவர்.

''பண்பாடு என்பது குறிப்பிட்ட ஒரு மக்கட்கூட்டம் தனது சமூக வரலாற்று வளர்ச்சியினடியாகத் தோற்றுவித்துக் கொண்ட பௌதிகப் பொருள்கள், ஆத்மார்த்தக் கருத்துக்கள், மதநடைமுறைகள், சமூகப் பெறுமானங்கள் ஆகிய யாவற்றின் தொகுதியேயாகும். ஒரு கூட்டத்தினரின் பண்பாடு என்பது அக்கூட்டத்தினரின் தொழில் நுட்ப வளர்ச்சி உற்பத்தி முறைமை, உற்பத்தி உறவுகள், கல்வி, விஞ்ஞானம், இலக்கியம், கலைகள். நம்பிக்கைகள் ஆகியவற்றின் தொகுதியாகும்''[4] என்பார் கா.சிவத்தம்பி.

''பண்பாடு என்பது தேங்கிப் போனதோ, நிலையானதோ அல்ல. அது தொடர்ந்து வளர்கதியில் மாறிவருகிறது. மனிதன் தனது முழு மனிதாயப் பரிமாணங்களையும் மேலெழுந்து எட்டுவதைச் சாத்தியமாக்கும் உரிமைகளையே பண்பாடு''[5] என்பர் எரிதழல்.

''உலகத்தில் உயிரினங்கள் பலவாகக் காணப்படினும் மக்கள் இனத்திற்கே பண்பாடு என்பது பொருந்துவதாக எண்ணுகின்றனர். பண்பாடு என்பது பொதுவாக நாகரிகத்தில் அடங்கியதாகும். காலப்போக்கில் மக்கள் தம் மனநல ஆக்கமே பண்பாடாகப் பெறுகிறது எனலாம்''[6] என விளக்குவார் எஸ்.வைத்தியலிங்கன்.

''பண்பாடு என்பது அகப்பண்பாடு, புறப்பண்பாடு என்று இருவகைப்படும். உணவு, உடை, உறையுள் முதலிய அடிப்படையில் காணக்கூடியது புறப்பண்பாடு. இது ஒரு வகையில் இன்றைய நாகரீகத்திலே அடங்கும். அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை, மெய்யுணர்வு, தெய்வ நம்பிக்கை, அருள், புலனடக்கம், நன்றி, சீலம் முதலிய அடிப்படையில் உணரலாவது அகப்பண்பாடு என மேலும் விளக்குவர்.''[7]

ஈ.பி.டெய்லர், ''பண்பாடு என்பது மனிதன் சமுதாயத்தில் ஓர் உறுப்பினன் என்ற நிலைமையில் அறிவு, நம்பிக்கை, கலை, சட்டம், நீதிகள், பழக்க வழக்கங்கள், ஆற்றல்கள் முதலியவை பற்றிப் பெற்ற ஒருவித வாழ்க்கை முறையாகும்''[8] என்பார்.

''பண்பாடு என்பது மக்களால் ஆக்கப்பெற்ற கருவி, இந்த ஊடகத்தைக் கொண்டே மக்கள் அவர்களின் தேவைகளை நிறைவு செய்து கொள்கின்றனர்''[9] என்பார் மாலினோசுக்கி.

“தலைமுறை தலைமுறையாக மக்கள் குழுவாகச் சேர்ந்து கற்ற நடத்தை முறைகளும் பழக்க வழக்கங்களும் மரபுகளும் சேர்ந்து ஒரு தொகுதியே பண்பாடு”[10] என்பார் இலப்பியர்.

“பண்பாடு என்பது மக்கள் அனைவரும் கூட்டாகச் சேர்ந்து செயற்படும் போது உண்டாகும் நடத்தை முறைகளின் சேர்மமாகும். இது அந்தந்தச் சமூகத்திற்கு மட்டுமே உரியது. இது உயிரியல் நிலையில் மரபுரிமையாக வராதது”[11] என்பார் ஆடம்சன் ஒபல்.

இவ்வாறாகப் பண்பாடு என்பதற்குப் பல்வேறு விளக்கங்கள் கூறப்படுகின்றன. பண்பாடு என்னும் கருத்து இலக்கியவியல், வரலாற்றியல், உளவியல், சமுதாயவியல், மானிடவியல் போன்ற பலதுறைகளில் பலநிலைகளில் பயன்படுத்தப்படுவதால் இது பற்றிய வரையறையும் பலவாறாக உள்ளது. “இதைப் பற்றிய வரையறை 160க்கும் மேல் உள்ளன”[12] என்று வாழ்வியல் களஞ்சியம் குறிப்பிடுகின்றது.

சமூகத்தின் மரபு காரணமாக மனிதன் மீது வந்து சேர்கிற தவிர்க்க முடியாத வாழ்வியல் பண்புகளையும் காலமாற்றத்திற்கு ஏற்பப் புதிதாக உருவாக்கிக் கொள்ளக்கூடிய வாழ்வியல் பண்புகளையும் பண்பாடு என வரையறை செய்து கொள்ள இயலும்.

## கோயில் பண்பாடு

தமிழர்களின் மேம்பட்ட வாழ்விற்கு ‘கோயில் பண்பாடு’ பெரிதும் காரணமாக அமைந்துள்ளது. கோயில்கள் மக்கள் வாழ்வில் பின்னிப் பிணைந்து நிலைத்தன. எனவே தான் தமிழர்கள், கோயிலைச் சுற்றிலும் குடியிருப்புப் பகுதிகளை அமைத்துக் கோயிலோடு நிலைத்து வாழும் முறையைக் கையாண்டனர்.

தமிழர்கள் கோயில்களோடு கொண்டுள்ள தொடர்பால், சமய வாழ்க்கை பல சிறப்புக் கூறுகளைப் பெற்றிருந்தது. தமிழர்களின் பண்டைக் கலைகளும் இலக்கிய வளங்களும் வழிபாடு போன்ற செயல்பாடுகளும் பக்தி நெறியையும் சமயப் பண்பாட்டையும் உயர்த்துவனவாகும். பண்டைக்காலந்தொட்டுத் தமிழர்களின் வாழ்வில் ஊடுருவிப் பரந்து நிலைத்தவை கோயில்கள் ஆகும். தமிழ் இலக்கியங்களில் ஒரு பெரும்பிரிவான பக்தி இலக்கியங்கள் கோயில்களால் வளர்க்கப்பட்டவை என்பது குறிப்பிடத்தக்கது.

மனதை ஒன்று படுத்தி, சிந்தனைகளைச் சிதறவிடாது, ஒரு ஏகாந்தமும் அமைதியும் கிட்டுமாறு இருந்தால்தான் இறைவனை அடையமுடியும் என்பது தமிழரின் நம்பிக்கையாகும். இந்த ஏகாந்தமும் அமைதியும் ஏற்படும் வகையில் தான் தமிழர்களின் கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளன. இறைனை அடைவதற்குப் பாசங்கள்

தடையாகும். பாசங்கள் அறுபடின் இறைபதம் எளிதில் கிட்டும். எனவே தான் தமிழர்களின் கோயில்கள் அனைத்திலும் ஆசைகளைப் பலியிடப் பலிபீடங்கள் அமைத்தனர்.

எங்கெல்லாம் அழகுணர்ச்சி இருக்கின்றதோ அங்கெல்லாம் இறைமை இருக்கும் என்பது தமிழர்களின் நம்பிக்கையாகும். எனவே தான் தமிழர்களின் கோயில்கள் கலைவளம் மிக்கனவாக அமைக்கப்பட்டன.

கோயிலோடு தொடர்புடையவர்களின் மனநிலை, ஆர்வம், பண்பாடு இவைகளுக்கு ஏற்ப வழிபாடு அமைகிறது. சாத்வீகப் பண்புடையவர்கள் தொடர்பு கொண்டுள்ள சைவ, வைணவக் கோயில்களில் அமைதி வழிபாடும் சிறுதெய்வக் கோயில்களில் பலி முதலியன நேர்ந்து வீர வழிபாடும் நடத்துவதை இதற்குச் சான்றாகக் கூறலாம்.

தான் விரும்புகின்றவர்களுக்குத் தான் பெரிதாக விரும்பியவற்றையே கொடுக்கும் பண்பு தமிழர்களுக்கு உண்டு. மக்களைத் துன்பத்திலிருந்து காப்பாற்றக் கூடியது, இறை சக்தி ஒன்றே என்பது தமிழர்களின் நம்பிக்கையாகும். நோய்க்கு ஆட்படாமலும் இயற்கை வளந்தரவும் மக்கட்பேறு முதலிய உண்டாகவும் இறைவனை முழுமையாக நம்பினர். மேலும் இறைவனை உண்மையாக நம்புகின்ற போது புறச் செயல்கள் ஏதும் தம்மை பாதிக்காது என்ற நம்பிக்கையின் விளைவாக தம்மையே வருத்திக் கொள்கின்ற நேர்த்திக் கடன்களில் ஈடுபட்டனர். தொன்று தொட்டு வரும் தமிழர்களின் சமய நம்பிக்கையில் பேரின்ப வீடுபேறு அடைய இம்மையில் சிற்றின்பங்களைத் துறந்து தியாகங்கள் பல செய்து. தம்மையே வருத்திக் கொள்வது தலையாயது. அகத்தை ஒருமைப்படுத்துவதோடு புறத்தையும் ஒருமைப்படுத்தச் சில சோதனைகளை மேற்கொண்டனர். இதன் விளைவாக வந்த நேர்த்திக் கடன்களே தீமிதித்தல், அலகு குத்திக் கொள்ளுதல், காவடி எடுத்தல், அங்கப் பிரதட்சணம் போன்றவை. அதோடு ஒரு பேரின்பத்தை அடைய வேண்டும் என்ற ஆர்வம் ஏற்படும்போது துன்பத்தையும் இழப்பையும் தாங்குகின்ற ஒரு மனநிலை ஏற்பட வேண்டும் என்ற தத்துவத்தை நேர்த்திக் கடன்கள் விளக்குகின்றன.

விழாக்கள் முழுக்க முழுக்க சமயத் தொடர்பான ஒன்றாக இருப்பினும் அவற்றில் தமிழர்களின் பல பண்பாடுகள் வெளிப்படுகின்றன. ‘யாதும் ஊரே யாவரும் கேளிர்’ என்ற பொதுவுடைமைப் பண்பாடு தமிழர்களுக்கே உரியதாகும். விழாக்கள் பொருட்டு வேறு ஊர்களிலிருந்து வருவோரையும் உறவினர்களையும் நண்பர்களையும் அரவணைத்து உபசரித்து உறவு கொண்டனர். இவை தமிழர் பண்பாட்டை விளக்குவதாக அமைகிறது.

**நம்பிக்கைகள்**

தொன்று தொட்டு வழிவழியாக வருகின்ற சிந்தனைகளும் அனுபவங்களும் நம்பிக்கையின் வழியே தோன்றின. நம்பிக்கைகள் மனித இனத்தோடு ஒன்றிய பொருண்மையாகக் கருதப்படுகின்றது. இத்தகைய நம்பிக்கைகள் அறிவின் முதிர்ச்சியாலும் அனுபவ உண்மைகளாலும் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளன. மக்களின் வாழ்வானது நம்பிக்கையின் பாற்பட்டதாக உள்ளது. ஒவ்வொரு இனத்தின் பண்பாட்டு நிலைக்கேற்றவாறு காலம், இடம், சமுதாயச் சூழல் இவற்றின் மரபிற்கேற்ப நம்பிக்கைகளின் வெளிப்பாடு அமைகின்றது. ஏதாவது ஒரு நிகழ்வின் மீது ஈடுபாடு கொண்ட மனிதன் அதனை நம்பிக்கையெனக் கருதினான்.

காலம்காலமாகக் காரண காரியங்களின் அடிப்படையில் உருவாகிய கருத்துருவாக்கமானது நாளடைவில் நம்பிக்கையாக உருப்பெற்றது. மனிதன் அச்ச உணர்வினை அடிப்படையாகக் கொண்டு தோன்றியவை நம்பிக்கை என்ற கருத்தும் நிலவுகின்றது. அச்சத்தின் காரணமாக மனிதன் இயற்கையின் தோற்றத்தினையும் செயல்பாடுகளையும் தனது வாழ்வியல் நடப்புகளோடு இணைத்து நோக்கிய நிலையில் நம்பிக்கைகள் தோற்றம் கொண்டன. ‘‘நன்மையின் மீதுள்ள ஆர்வமும் தீமையின் மீது ஏற்படும் அச்சமும் நம்பிக்கையின் அடிப்படைகளாகும்.’’[13]

“பெரும்பான்மையான நம்பிக்கை என்பது அறிவிற்கு அப்பால் ஒருவரின் அல்லது ஒன்றின் மீது மிகுந்த பற்றாலும் கூடிய விருப்பினாலும் உண்டாகும் உளம் சார்ந்த வெளிப்பாடு என்று வரையறுக்கப்படுகின்றது. பழமையான அனைத்து இனங்களிடத்தும் பெரும்பான்மையான நம்பிக்கைகள் நிலவி வருகின்றன.

நம்பிக்கைகளின் உருவாக்கம் குறித்து மனித வாழ்வில் நிகழும் ஊறுகளுக்குக் காரணம் கற்பிக்க இயலாத நிலையில் மனித மனம் சிலவற்றைப் படைத்துக் கற்பித்துக் கொள்கின்றது. அவையே நம்பிக்கைகளாக உருப்பெறுகின்றன’’[14] என்பர் க.காந்தி.

“அச்ச உணர்வினை அடிப்படையாகக் கொண்டு தோன்றியவையே நம்பிக்கைகள் என்று கருத முடிகின்றது. இயற்கையின் புதிரான செயல்களை மனித மனங்களால் கண்டுணர முடிவதில்லை. இந்நிலையில் மனித மனம் அதனை ஏற்று கொள்கின்றது. நம்பிக்கை என்பது ஒரு உணர்ச்சி. இது எண்ணத்தின் இயக்கத்தோடு கலந்து வரப்பெற்று நிலைத்த போது அது ஒரு மனநிலை என்று சொல்லப்படுகின்றது. அந்த மனதில் தொடர்ந்து நீடித்த உரமடைந்த போது உள்மனத்தின் உதவியைப் பெறுகின்றது. இந்த நிலையில் அதற்கு மகத்தான சக்தி உண்டாகின்றது’’[15] என்று அ.ஜெகதீசன் நம்பிக்கை குறித்து விளக்கம் அளிக்கின்றார்.

நம்பிக்கை என்ற சொல் ‘நம்பு’ என்பதன் பகுதி அடியாகப் பிறந்ததாகும். நம்பு என்ற சொல் விருப்பம் என்னும் பொருளில் கருதப்படுவதை,

**“நயந்து நாம் விட்ட நகைமொழி நம்பி”[16]**

என்ற பாடலடி காட்டுகின்றது. ஏதேனும் ஒரு நிகழ்வினையோ அல்லது பொருளையோ உண்மை என உணருகின்ற நிலையில் அதன் மீது நம்பிக்கை உண்டாகின்றது. “நம்பிக்கை ஒரு செயலின் காரணமாகவும் மரபு வழியாகச் சந்ததி, பின் சந்ததி ஆகியோரால் பின்பற்றப்படும் வழக்கமாகவும் உள்ளது என்று வாழ்வியற் களஞ்சியம்”[17] பொருள் தருகின்றது.

இத்தகைய நம்பிக்கையாகத் தோன்றிக் காலப்போக்கில் சமூகத்தால் ஏற்று கொள்ளப் படுகின்ற நிலையில் சமூக நம்பிக்கையாகத் தோற்றம் கொள்கின்றது. பழக்கமானது கால ஓட்டத்தில் வழக்கமாக மாறுவது போல மக்களின் மனதில் தோன்றும் நம்பிக்கை காலப்போக்கில் பண்பாடுகளாகப் பரிணமிக்கத் தொடங்கின. நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்படுகின்றன. மனிதனின் தன்னல உணர்வும் சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன”[18] என்பர்.

அறிவு அல்லது உணர்வின் அடிப்படையில் ஒன்றின் மேல் ஈடுபாடு கொள்கின்ற நிலையே நம்பிக்கை எனப்படுகின்றது. தமிழரின் நம்பிக்கைகள் பரந்துபட்டவை காலங்காலமாக மக்களிடையே வழக்கில் பயின்று வருபவை. இலக்கியங்களில் கூறப்பெற்றுள்ள நம்பிக்கைகளை விடத் தனிமனித வாழ்வில் கருதப்படுகின்ற நம்பிக்கைகளே பலதரப்பட்டவைகளாக உள்ளன.

### திருக்கோயில்களும் நம்பிக்கைகளும்

பண்டுதொட்டு இன்றுவரை கோயில்களும் மக்கள் வாழ்வும் பிரிக்கமுடியாத வகையில் அமைந்துள. பலகிராமங்களில் கோயிற்கிணறுகளே மக்கள் உயிர்வாழ்வதற்கு உதவும் தண்ணீரைக் கொடுப்பதைப் பார்க்க முடிகின்றது. கோயில்களில் உள்ள குளங்கள் ஊரின் நீர்ப்பஞ்சத்தை நீக்குவதற்காக அமைக்கப்பட்டுள்ளது. கோயில்களில் வழங்கப்படும் உணவு பலகுடும்பங்களுக்கும் யாத்திரிகர்களுக்கும் பக்தர்களுக்கும் பசியைப் போக்கும் மருந்தாகப் பயன்படுகிறது.

ஊர்தோறும் உள்ள கோயில்களில் பலர் பணியாற்றுகின்றனர். சில ஊர்களில், கோயில் பணியைவைத்தே பல குடும்பங்கள் வாழ்வு நடத்துகின்றன. கோயிலின் பொருளாதாரம் இத்தகைய பல பணியாளர் குடும்பங்களைத் தாங்கும் நிலையில் உள்ளது. இங்ஙனம் பொருளாதார நிலைக்களனாக மட்டுமின்றிக் கோயில்கள் கலைவளர்க்கும் கல்லூரிகளாகவும் விளங்கின. விளங்குகின்றன. இசையும், இயலும்,

நாடகமும் கோயிலில் இடம்பெற்றன. தேவாரம் போன்ற இனிய சமயப்பாடல்களை இசை பொருந்தப்பாடும் பல 'ஓதுவார்கள்' கோயில்தோறும் இசைபாடுகிறார்கள். இதனால் கலைப்பண்பாடு வளர்கிறது. பண்பாடு கல்விப்பண்பாடு, கலைப்பண்பாடு, சமூகப்பண்பாடு எனப்பல நிலைகளில் அமையும்.

திருக்கோயில் மண்டபங்கள் கலைகளை வளர்க்கவும் திருச்சுற்றுகள் நாடக சாலைகளாகவும் அரங்கேற்று மண்டபங்களாகவும் விளங்கின. ஆயிரங்கால் மண்டபம் போன்றவை ஊர்மக்கள் திருமணம் போன்ற சுப நிகழ்ச்சிகள் நடத்தவும் பயன்பட்டன. இன்றும் நடுத்தரமக்கள் பெரிய மண்டபத்திற்குக் கட்டணம் செலுத்தித் திருமணம் போன்ற நிகழ்ச்சிகள் செய்ய முடியாத நிலையில் கோயில்களில் நடத்தப்படுகின்றன.

கலையையும் பொருளாதாரத்தையும் சமயத்தையும் வளர்த்ததோடமையாது கோயில்கள் நாட்டில் நலத்துறையும் சுகாதாரத்தையும் கூட வளர்த்தன. கோயில்களில் தயாரிக்கப்படும் உணவு நோயற்று வாழ வழிகாட்டும் வகையில் தயாரிக்கப்படுகின்றன. பெரும்பாலும் மிளகும் நெய்யும் பயன்படுத்தப்படுகின்றது. இவை உடம்பிற்கு நல்ல ஆரோக்கியத்தைத் தருகின்றன. மக்கள் நலம் கெடுக்காத நல் உணவுக் களஞ்சியங்களாகக் கோயில்கள் விளங்குகின்றன.

திருஏடகநாதர் கோயிலில் 20-ஆம் நூற்றாண்டில் தேவகோட்டை நகரத்தார்கள் வேதபாடசாலை அமைத்து வேதக் கல்வியைக் கற்றுத் தந்தனர். தண்ணீர் பந்தல் அமைத்து தாகத்தைத் தீர்த்துள்ளனர். தற்பொழுது அரசாங்கம் நடத்தும் அன்னதானக் கூடம் திருஏடகநாதர் கோயிலில் அமைந்துள்ளது. அங்கு தினமும் நூறு பேருக்கு உணவு வழங்கப்பெறுகிறது. இச்செயல் உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர் என்னும் பண்டை மரபைப், பண்பாட்டைப் பேணுவதாக உள்ளது.

கோயில் அமைப்பு ஊர் எல்லையில் உள்ளாகவோ அன்றி வெளியில் அமைந்திருப்பினும் அது சற்று உயர்ந்த காற்றோட்டமான இடத்திலேதான் இருக்கும். காற்றுப்புகக்கூடிய புறத்தாழ்வாரங்களும் சாளரங்களும் அகன்ற வாயில்களும் அணி செய்கின்றன. விமானத்தில் இருக்கும் செம்பாலாகிய கலசங்கள் இயற்கையின் விளைவுகளைத் தடுக்க உதவுகின்றன.

கோயில்களில் நடைபெறும் விழாக்கள் நாட்டில் பகையும் பிணியும் பசியும் நீங்குவதற்காகவே கொண்டாடப்பெற்றன. இன்றும் கொண்டாடப்பெற்று வருகின்றன.

திருவிழாக் காண வருகின்ற மக்களுக்கு நீரும் மோரும் அளிக்கத் தண்ணீர்ப்பந்தர்கள் அமைத்தல் தமிழ்ப்பண்பாட்டின் ஒரு கூறாக உள்ளது.

அக்காலத்தில் பிணி நிலவக் கூடாது என்ற அடிப்படையிலேயே விழாக்களும் விரதங்களும் அமைந்துள்ளன. இவை நீங்குவதோடு நாட்டில் மழைபெய்து வளம்

கொழிக்க வேண்டும் எனவும் விழாச் செய்கின்றனர். இப்படியே கோயில்களும் கோயில்களில் நாள்தோறும் நடைபெறும் பூசைகளும் விழாக்களும் மக்கள் வாழ்வுடன் இணைந்து காணப்படுகின்றன.

## சமுதாயமும் சமயமும்

தனி மனிதர்களை உறுப்பினர்களாகக் கொண்ட ஓர் அமைப்பே சமுதாயம் எனப்படும். தனிப்பட்டவர்களின் கூட்டமைப்பு, உரிமை மற்றும் ஒற்றுமை உணர்வு, ஏகதேசம் நிரந்தர இயல்பு முதலான சிறப்புக் கூறுகளைக் கொண்டது சமுதாயம் என்று பி.சி.டெப் என்ற சமூகவிலறிஞர் விளக்கம் தருகின்றார்.[19]

“சில வாழ்நாள் பல்பிணிச் சிற்றறிவினராகிய மக்கட்குலத்தார் தமது குறைவுடைய அறிவினை மட்டும் துணையாகக் கொண்டு அமைத்துக் கொள்ளும் உலகியல் வாழ்க்கை முறைகளை விட நாடு, மொழி, இனம் என்ற வேற்றுமைகளுக்கு இடம் தராது எல்லா உயிர்களுக்கும் உரிய தனி முதற்பொருளாயும் எல்லா உயிர்களுக்கும் உயிராக நின்று உலகை இயக்கியருளும் தெய்வம் ஒன்று உண்டு என்ற தெளிவுடையராய்த் தெய்வத்தின் திருவருள் வழி அடங்கி நின்று எல்லா உயிர்களும் வையத்துள் வாழ்வாங்கு வாழும் வண்ணம் சமயம் என்று மேற்கொள்ளத்தகும் சிறப்புடையது. உயர்திணை எனச் சிறப்பிக்கப்பெறும் மக்கட்குலத்தார் அறத்தின் விதிநிலைபெற்றுப் பொருள் ஈட்டித் தாமும் பிறரும் இன்பமுடன் இனிது வாழ்தல் வேண்டித் தமது வாழ்க்கையில் தவறாது கடைபிடிப்பதற்கு அமைத்துக் கொண்ட ஒழுக்க நெறியே சமயம் என்ற பெயரால் அழைக்கப்பெறுகின்றது”[20] என வெள்ளை வாரணனார் விளக்கம் தருகிறார்.

சராசரி மனித வாழ்க்கையை உயிர்ப்புள்ள தாக்கி முழுமையாக்கும் உணர்வின் தேவையில் தோன்றியதே சமயம்”[21] என்பது வை.இரத்தின சபாபதியின் கருத்தாகும்.

சமயம் என்பது வாழ்க்கை முறை. அதாவது மனிதனை நெறிப்படுத்தி, அவன் உள்ளத்தைப் பக்குவப்படுத்தும் கருவியாகத் திகழ்கின்றது. குறை நீக்கத்துக்கும் நிறை நலம் பெறுவதற்கும் சமயம் இன்றியமையாதது ஆகும”[22] என்று குன்றக்குடி அடிகளார் விளக்குவார்.

சமுதாயமும் சமயமும் ஒன்றை ஒன்று பிரிக்க முடியாததாக அமைந்துள்ளது. ஒரு சமுதாயம் ஒழுக்கத்துடனும் சிறப்புடனும் அமைய வேண்டுமெனில் சமயம் இன்றியமையாததாக உள்ளது.

## இறைவழிபாடு

ஆதித்தமிழர்கள் இயற்கையால் விளங்குகின்ற பஞ்சபூதங்களைத் தான் முதலில் வழிபட்டனர். இயற்கை வழிபாட்டிலிருந்து தான் உருவ வழிபாடு அமைந்தது. வழிபாட்டு முறை குறித்து இரா.சாரங்கபாணி தமது நூலில், "முதலில் மரங்களை வழிபட்டனர். பின் மர நிழலில் தூணை நிறுத்தி இறைஞ்சினர். .தூண்- கந்து எனப்படும். கந்து இலிங்கமாயிற்று. இங்ஙனம் மரவழிபாடு வளர்ந்து கடவுள் வழிபாட்டிற்கு இடமளித்தது. ஆலமர் சிவவழிபாட்டிற்கும் கடம்பமர் கடவுள், முருக வழிபாட்டிற்கும் கானமர் செல்வி கொற்றவை வழிபாட்டிற்கும் இடம் தந்து சமய வளர்ச்சிக்குத் துணைபுரிகின்றன."[23]

சங்க இலக்கியங்களில் தெய்வ வழிபாடு இருந்தாலும் குறிப்பிட்ட சமயத்தைச் சார்ந்ததாக இல்லை. இக்கருத்தினை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழிலக்கியங்களில் சமயம் என்ற சொல்லே இல்லை எனலாம். அதற்கு பிற்பட்ட நூல்களில் தான் சமயம், மதம் என்ற சொற்கள் காணப்படுகின்றன. எனவே சங்க காலத்து மக்களுக்கு கடவுள் நம்பிக்கை இருப்பினும் அவர்கள் சிவன், திருமால் போன்ற கடவுள்களை வழிபட்டாலும் சைவ சமயம், வைணவ சமயம் போன்றவை வேரூன்ற வில்லை. சமயம் அல்லது மதம் என்பது வடநாட்டிலிருந்து சமணர்களாலும் பௌத்தர்களாலும் கொண்டு வரப்பட்டது. அதற்கு முன்பு குறிப்பிட்ட மதமோ, சமயமோ இல்லை எனலாம்.

ஒவ்வொரு நிலத்திற்கும் தலைமைக் கடவுள் உள்ளன. மாயோன், சேயோன், வேந்தன், வருணன் ஆகியோர் தொல்காப்பியத்தில் இடம்பெறுகின்றனர். சங்க நூல்களில் பதிவாகியுள்ள கடவுள் வழிபாட்டிற்கு,

**" …… ஆ புறம் தீண்டும்**

**நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து"**[24]

என்ற பாடலடிகள் சான்றாக அமைகின்றன.

## வழிபாட்டுத் தத்துவம்

இறைவனுக்குப் பஞ்ச பூதங்களும் பணியும் என்பதைக் காட்டுவதற்காகவும் மனிதன் பஞ்ச பூதங்களையும் பயன்படுத்தி இறைவனையே வணங்க வேண்டும் என்பதைக் காட்டுவதற்காகவும் பூசைகள் நடக்கின்றன. நீர் என்ற பூதத்தின் அடையாளகமாகச் சுவை உணர்வைக் குறிக்கும் உணவுப் பொருட்களை இறைவனுக்கு படைக்கின்றோம்.

மண் என்ற பூதம் மணத்தை நுகரும் பலன்களோடு தொடர்புடையது ஆகும். அதற்கு அடையாளமாகச் சந்தனத்தையும் சாம்பிராணிப் புகையையும் இடுகிறோம்.

காற்று என்ற பூதம் தொடு உணர்ச்சியோடு தொடர்புடையது ஆகும். இதற்கு அடையாளமாக மலரிடுதல், சாமரம் வீசுதல் போன்ற வழிபாடுகளைச் செய்கிறோம்.

ஆகாயம் என்ற தத்துவம் ஒலியோடு தொடர்புடையது. இதற்கென மணி அடித்தல், சங்கு ஊதுதல் ஆகிய சடங்குகள் செய்யப்படுகிறது.

தீ என்ற தத்துவம் கண்பார்வையுடன் தொடர்புடையது. இதற்கெனக் கற்பூரம், தீபம் ஆகியவற்றை ஏற்றி தீபாராதனை செய்யப்படுகிறது. இப்படி ஐம்புலன்களால் பஞ்ச பூதங்களைப் பயன்படுத்தி, கோயில்களிலும் வீடுகளிலும் இறைவனை வழிபடுகிறோம். அப்படி எங்கும் நிறைந்த பரம்பொருளை அனைத்திற்கும் சாட்சியாக வைத்து வழிபடுகிறோம். உலக இயக்கம் பஞ்ச பூதங்களினால் நடக்கிறது. பஞ்ச பூதங்களும் இறைவனின் படைப்பே ஆகும்.

### வழிபாட்டு முறைகள்

இறை வழிபாட்டின் மூலகர்த்தா ஆதிமனிதன்தான். அவன் உருவ வழிபாட்டையோ, ஆகம முறையினையோ, வழிபாட்டு முறையையோ அறிந்திருக்க வில்லை. இயற்கை வழிபாட்டிற்கு பிறகு முன்னோர் வழிபாடு ஏற்பட்டது. பின்னர் சூரிய வழிபாடு, சந்திர வழிபாடு உண்டாயிற்று. பின்னர் உருவ வழிபாடு தோன்றியது. நாகரிக முதிர்ச்சியினால் மனிதன், மற்ற உயிரினங்களை விட மேம்பட்டவனாக உயர்ந்து, சமூக வாழ்க்கையை மேற்கொண்ட போதுதான் உருவ வழிபாடும் சடங்குகளும் சம்பிரதாயங்களும் தோன்றியிருக்க வேண்டும்.

கூட்டு வழிபாட்டு முறைகள் தோன்றியபோதே கோயில்களும் கோயில்கள் தோன்றிய பின்னரே ஆகம நெறிமுறைகளும் தோன்றியிருக்கிறது. அதன் பின்னர்ப் பூசைமுறைகள் வளர்ச்சி அடைந்திருக்கிறது. பூசைக்கு எனப் பல பொருள்களைத் தேர்வு செய்து பயன்படுத்தி இருக்கிறார்கள். அபிடேகப் பொருள்கள், அருச்சனைப் பொருள்கள், நிவேதனப் பொருள்கள் எனப் பலவற்றைக் காரணகாரியங்களுடன் தேர்ந்தெடுத்து பூசைக்குப் பயன்படுத்தி வந்தனர்.

எந்தெந்தப் பொருள்கள் எந்தெந்தத் தெய்வத்திற்கு உகந்தது என்றும் எவை எவை விலக்கப்பட்ட வேண்டும் என்றும் வரையறுத்துப் பூசைமுறைகளை ஒழுங்குபடுத்தினர். இந்தப் பூசைமுறைகள் அந்தந்தத் திருத்தலத்திற்கு ஏற்றபடி பூசைமுறைகள் வேறுபடுகின்றன.

### கல்வெட்டுகளில் ஆலய வழிபாட்டுச் செய்திகள்

கி.பி. 600- இல் காஞ்சியை ஆண்ட முதலாம் மகேந்திரவர்மப்பல்லவன் காலத்தில் தான் கல்வெட்டுகளில் ஆலயங்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

கி.பி. 900 முதல் 1250 வரையுள்ள கல்வெட்டுகளில், ஆலய நிர்மாணம், நித்திய வழிபாடு, திருவிழா, திருப்பணி ஆகிய பலவற்றை அறியமுடிகிறது. கோயில்களில் இறைத்திருமேனிகளைப் பிரதிட்டை செய்வதும் கோயில் மேல் விமானத்தில் செப்புக்கலசம் வைத்துக் கும்பாபிடேகம் செய்யும் வழக்கங்களும் தொன்று தொட்டு நடந்து வருகின்றன. "பிரதிட்டை செய்த கணபதியாருக்கு பூதி பராந்தகன் கற்றளி எடுத்துச் சிறப்புச் செய்தான் எனறு கல்வெட்டுகள் குறிப்பிடுகிறது."[25]

தினந்தோறும் செய்து வந்த வழிபாட்டு முறைகளைப் பற்றி செய்திகளையும் கல்வெட்டுகள் கூறுகின்றன. சிறுகாலைச் சந்தி, உச்சியம் போது சந்தி, இரவுச் சந்தி என மூன்று பூசைகள் நடந்து வந்தன. இவை தவிர அர்த்தயாம சந்தியும் திருப்பள்ளியெழுச்சியும் நிகழ்ந்து வந்தன. திருப்பள்ளியெழுச்சியின் போது ஆழ்வார்கள், நாயன்மார்கள் பாடிய பதிகங்களைப் பாடுவதுண்டு. முச்சந்திகளில் ஆண்டவனுக்குக் திருமஞ்சன நீராட்டல் உண்டு. இத்தகு நீரிலே செண்பகமொட்டு, ஏலஅரிசி, இலாமிச்சவேர் முதலியவை போடப்பட்டதை, 'ராசராசேச் அரவமுடையார் ஆடியருளும் திருமஞ்சன நீரிலும், தண்ணீர் மீதிலும் இடம்பெறும் செண்பக மொட்டுக்கும் ஏலமரிசிக்கும் இலமிச்சத்துக்கும் வேண்டும் நிபந்தம்"[26] என்னும் இராசராசன் கல்வெட்டு உரைக்கும்.

### கோயில்கள் பண்பாட்டு உறைவிடம்

கோயில்கள் பண்பாட்டு உறைவிடமாக விளங்குகின்றன. மக்களிடையே கோயில் தொடர்பாக எழுந்த நம்பிக்கையே பண்பாடாக மாறியது. மக்கள் தங்களை இறைவன் துன்பத்திலிருந்து மீட்டெடுப்பார் என்று கருதி இறைவனுக்குப் பல்வேறு நேர்த்திக்கடன்களைச் செய்து வழிபடுகின்றனர்.

### ஆதிசொக்கநாதர் கோயில்

குபேரன் தன்னிடம் உள்ள செல்வம் மேன் மேலும் பெருக இத்தலத்தில் சிவனை பிரதிட்டை செய்து வழிபட்டார் என்பதால் இங்குள்ள சிவனை வழிபட்டால் செல்வம் பெருகும் என்பது மக்கள் நம்பிக்கையாகும். இதுவே மக்களிடையே தொன்று தொட்டு பண்பாடாக மாறியுள்ளது.

### புட்டுசொக்கநாதர் கோயில்

புட்டுசொக்கநாதர் கோயிலில் மாணிக்கவாசகருக்கும் வந்திக்கும் சிவன் மோட்சம் கொடுத்தார் என்பதால் இங்கு வந்து சிவனை வழிபட்டால் மக்கள் தங்களுக்கு மோட்சம் கிட்டும் என நம்புகின்றனர்.

பக்தர்கள் தங்களது வறுமை நீங்கி செல்வம் பெருகுவதற்கும் இழந்த பொருட்களை மீட்பதற்கும் குழந்தை பாக்கியம் பெறுவதற்கும் நவகிரகங்களால் ஏற்படும் தொல்லைகள் தீரவும் இங்குள்ள இரட்டைகால பைரவரை வணங்குகின்றனர்.

**திருஏடகநாதர் கோயில்**

**திருமணத்தடை**

திருமணஞ்சேரியில் திருமணத்தடை உள்ள ஆண், பெண்களுக்கு பரிகாரப்பூசை செய்வது போல இங்கும் பரிகாரப்பூசை செய்யப்படுகிறது. ஏலவார்குழலி அம்மனுக்கு மாலை அணிவித்து அதை ஆணோ, பெண்ணோ அவர்கள் கழுத்தில் அணிந்து அம்மன் சன்னதியை ஒன்பது முறை சுற்றி வந்து பின்பு அதை வீட்டிற்கு எடுத்துச்சென்று நாற்பதெட்டு தினங்கள் தொடர்ந்து வழிபட்டு வர திருமணத்தடை நீங்கப்பெற்று விரைவில் திருமணம் நடக்கும் என்பது அங்கு கடைப்பிடிக்கப்பட்டு வரும் மரபு. திருமணத்திற்குப் பின் தம்பதிகள் இருவரும் இங்கு வந்து சுவாமி, அம்மனை வழிபடுகின்றனர்.

**தீர்த்தங்கள்**

திருஏடகநாதர் கோயிலில் இரண்டு தீர்த்தங்கள் உள்ளன. ஒன்று பிரமதீர்த்தம். மற்றொன்று கோயிலுக்கு அருகில் ஓடும் வைகை நதி. இங்கு இறந்தவர்களின் ஆன்மா மோட்சம் அடைய வேண்டி அத்தியைக் கரைக்கின்றார்கள். இறந்தவர்களுக்கு தர்ப்பணம் கொடுக்கும் வழக்கமும் இங்குள்ளது. மேலும் பிறவியை முடித்த உயிர்கள் நற்கதி அடைவதற்காக மோட்சதீபம் ஏற்றும் வழக்கமும் இந்தக் கோயிலில் உள்ளது.

**வயிற்று வலிதீர்க்கும் சட்டைநாதர்**

சட்டைநாதர் என்ற சித்தர் சமாதியான இடம் பற்றிப் பல கருத்துக்கள் உண்டு. இவர் திருவேடகம் வந்த பொழுது செல்லும் வழியெல்லாம் லிங்கங்கள் பூமிக்குள் பதிந்திருப்பதைப் பார்த்து தரையில் கால் வைப்பதற்கே அஞ்சினார். அவரைச் சிறுவர்கள் தூக்கிச் சென்று கோயிலுக்குள் விடுவார்கள். அவர்களுக்கு ஆற்று மணலைப் பண்டமாக மாற்றி தருவார். சட்டைநாதர் நீராகாரத்தில் நோயினைப் போக்கினார். இப்போதும் நீராகாரம் கொண்டு வந்து கோயிலின் தென்பகுதியில் உள்ள சட்டைநாதர் முன்பு வைத்து திருநீறிட்டு குடித்தால் வயிற்று வலி தீருமென்று பக்தர்கள் நம்புகின்றனர். ஆடி அமாவாசையன்று சித்தருக்குக் குருபூசை நடக்கிறது.

**வாராகி பூசை**

திருமணம் ஆகாதவர்கள் இங்குள்ள வாராகி அம்மனுக்கு காய்கறி, பழங்கள், அரிசி போன்றவற்றைப் படைத்து வெள்ளிக்கிழமை ராகு காலத்தில் வழிபட்டால் திருமணத்தடை நீங்கும் என்பது நம்பிக்கை. மேலும் வாராகி அம்மனை பஞ்சமி

திதியில் வழிபட்டால் எதிரிகள் அழிவர். வழக்குகளில் வெற்றி பெறுவர். இது போன்று மக்களிடம் தோன்றும் நம்பிக்கையே பண்பாடாக மாறி தொடர்ந்து கடைபிடிக்கப் பெற்று வருகிறது.

### அபிடேகம்

அபிடேகம் என்பது இறைவனைப் பால், பன்னீர், பழங்கள் கொண்டு நீராட்டுவது ஆகும். இறைவனுக்கு உருவம் கொடுத்த மனிதன் அதற்கு தன்னைப்போல் நீராட்டவும் உணவு படைக்கவும் செய்து, அதனை மகிழ்விக்கச் செய்தான். அவ்வாறு இறைவனுக்குச் செய்யப்படும் ஒவ்வொரு வித அபிடேக ஆராதனைகளுக்கும் தனித்தனிப் பலன்கள் உண்டு.

இறைவன் அமர்ந்திருக்கும் பீடம், தாமரை போன்ற வடிவம் உடையது. நம்முடைய இதயமும் அதே வடிவம் கொண்டது தான். எனவே நமது இதயத்தில் குடியிருக்கும் இறைவனுக்கு இந்த அபிடேகங்கள் செய்யும் போது அது நம் உள்ளத்தையும் குளிர்விக்கிறது.

மேலும் இறைவனின் திருமேனி மூலிகைகளாலும் மந்திரங்களாலும் உருவேற்றப்பட்டது. இந்த அபிடேகத்தினால் அந்த சக்திகளும் அதனுள் கலந்து விடுகிறது. இந்த அபிடேகத்தை நாம் தலை மற்றும் கண்களில் ஒற்றுவதாலும் கொஞ்சம் பருகுவதாலும் நம் உடலுக்குள் அந்த சக்திகள் நுழைகிறது. இதன் காரணமாக உடல் மட்டுமல்லாமல் உள்ளமும் நல்ல பலத்தையும் ஆரோக்கியத்தையும் பெறுகிறது. திருக்கோயில் வழிபாட்டில் அபிடேகத்திற்குப் பயன்படும் பொருட்கள் அனைத்தும் தமிழர்களின் பண்பட்ட, அறிவு சார்ந்த நிலையைப் புலப்படுத்துகின்றன.

### எண்ணெய்

சிலைகள் கல்லால் ஆனவை. எனவே அவற்றின் பளபளப்புக் குறையாமல் இருக்க நல்லெணணெய் காப்பு சாத்துவது வழக்கம். முதலில் தைலம் அபிடேகம் செய்யுமுன் வாசனையூட்டப்பட்ட எண்ணெயை இரு கைகளாலும் அள்ளி எடுத்து இறைவனின் உருவம் முழுவதும் நன்கு பூசி, தலை, இரு கண்கள், கை நகங்கள், கால் நகங்கள், காதுத்துவாரங்கள் ஆகிய இடங்களில் எண்ணெய் நன்கு புகும்படி 'சாத்தி' இறைவனின் கை கால்களை மெல்ல வருடிப் பின்னர் சந்தனாதி எண்ணெயினால் திரு உறுப்புகள் அனைத்தும் தோயும் படி அபிடேகம் செய்வதும் இவ்வாறு எண்ணெய் 'சாத்தும்' வேளை இறைவனுக்குச் சிரமந் தோன்றாதிருக்க இருமருங்கிலும் விசிறிகளால் வீசுவதும் சாமரங்களை இரட்டச் செய்தலும் அபிடேக வேளைகளில் கடைபிடிக்கப்படும் மரபாகும். நல்லெண்ணெய் குளிர்ச்சியைத் தரும்.

## நீர்

தினமும் காலையில் கோயில் திறக்கப்பட்டதும் விளக்கேற்றி வைத்து அதன்பிறகு ஆற்று நீரில் அல்லது கிணற்று நீரில் அபிடேகம் செய்வது வழக்கத்தில் உள்ளது. முதலில் எண்ணெய் காப்பு சார்த்தி அதன் பின்னர் நீராபிடேகம் செய்வது வழக்கத்தில் உள்ளது. நீரானது உடலைச் சுத்தம் செய்யப் பயன்படுகிறது.

## ஆற்றுநீரும் அருவி நீரும்

கோயில்கள் பெரும்பாலும் ஆற்றங்கரையில் அமைந்திருக்கும் அல்லது அருவிக் கரையில் அமைந்திருக்கும். இவைகள் பெரும்பாலும் மலைப் பகுதியிலிருந்து வருகிறது. இங்கிருந்து வரும் நீரானது பலவித மூலிகைகள் மீது பட்டு அவற்றையும் அடித்துக் கொண்டு வருகிறது. மூலிகைகளில் ஊறி வரும் தண்ணீர் படுவதால் நோய்கள் குணமாகின்றன. உயரப் பகுதிகளிலிருந்து விழும் நீர் ஒருவித விசையுடன் உடலில் படுவதால் இரத்த ஓட்டம் தூண்டப்பட்டு உடலெங்கும் இரத்தம் நல்லமுறையில் பரவும்.

சுத்தமான மூலிகை கலந்த நீரால் அபிடேகம் செய்யும் பொழுது சிலை சுத்தம் அடைவதுடன் குளிர்ந்த நிலையும் அடைகிறது. பொதுவாக அபிடேகம் செய்வது என்பது இறைவனைக் குளிரவைப்பதற்காகத் தான். தண்ணீரால் சிலையை அபிடேகம் செய்வதால் சிலையின் மின் கடத்தும் திறன் அதிகரிக்கிறது.

ஆறோ அருவியோ அருகில் இல்லையெனில் பெரும் வசதியமைந்த கோயில்களில் அர்ச்சகர் முதலியோர் ஆற்றிற்குச் சென்று, அபிடேகத்திற்காக நீரைக் குடத்தில் நிரப்பி, அதனை யானை மீது ஏற்றிக் கொடி, குடை முதலிய விருதுகளுடன் தினந்தோறும் கோயிலுக்குக் கொண்டு வருவர். இவ்வாறு நதி தீர்த்தம் கிடைக்காத இடத்தில் கிடைக்கக்கூடிய வேறுநீர் நிலையங்களிலிருந்து சேகரிக்கப்பட்ட நீரினை மந்திர ரூபமாகப் புனிதமாக்கி அபிடேகத்திற்கும் பூசைக்கும் பயன்படுத்தும் மரபு உண்டு.

## கும்பநீர்

பூரண கும்பத்தை மனித உடலாகப் பாவித்து யாக சாலையில் வைத்து யாகமும் பூசையும் செய்யப்படுகின்றன. தர்ப்பை, மாவிலை முதலியவைகளைக் கொண்டு மந்திரங்களைச் சொல்லிப் பிம்பத்தில் விளங்கும் இறைவனைக் கும்பத்தில் எழுந்தருளுமாறு வேண்டிக்கொள்ள வேண்டும். அதற்கு ‘ஆவாகனம்’ என்று பெயர். கும்பத்தில் இருக்கும் நீர் கெடாது இருக்க கிராம்பு, ஜாதிக்காய், பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ முதலிய திரவியங்கள் போடப்படுகின்றன. கும்பத்தை உபசாரங்களுடன் யாகசாலையில் பிரதிட்டை செய்து யாகம் வளர்ப்பர்.

இறைவனை அக்கினியால் எழுந்தருளச் செய்து, அக்கினியில் இருந்து கும்பத்தில் எழுந்தருளச் செய்வார்கள். இந்த கும்பநீரை இறைவனுக்கு அபிடேகம் செய்வார்கள். கும்பாபிடேக காலங்களில் கோபுர கலசத்திற்கு அபிடேகம் செய்வார்கள். இந்தக் கும்பநீரைத் தலையில் தெளித்துக் கொண்டால் வியாதிகளும் நீங்கும்.

உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களும் நீரிலிருந்தே உண்டாகின்றன. பிரளய காலத்தில் மீண்டும் தண்ணீரிலேயே ஐக்கியமாகி விடுகின்றன என்று வேதங்கள் கூறுகின்றன. எனவே அபிடேகத்தில் நீர் முக்கியத்துவம் பெறுகிறது.

**பால்**

வழிபாட்டின் போது பாலாபிடேகம் செய்யப்படுகிறது. திருவிழா நாட்களில் குடம் குடமாகப் பால் அபிடேகம் செய்யப்படுகிறது. பால் அபிடேகம் செய்வதால் நல்ல மழைபொழியும் பசுக்கள் அதிக அளவில் பால் சுரக்கும் கால்நடைகள் செழிக்கும் இறையருள் கிடைக்கும் எடுத்த காரியங்கள் நிறைவேறும் நல்ல செய்திகள் கிடைக்கும் என்பது மக்களின் நம்பிக்கை.

**தயிர்**

குழந்தைப் பேறு இல்லாத தம்பதிகள் தயிரை அபிடேகம் செய்வதால் மக்கட்பேறு உண்டாகும் என்று நம்பப்படுகிறது. தயிர் உடலைக் குளிர்ச்சியாக வைக்க உதவுகிறது.

**இளநீர்**

இளநீர் சூட்டைத் தனித்து குளிர்ச்சியைத் தரவல்லது. சூட்டினால் ஏற்படும் நோய்களைத் தீர்க்கக் கூடியது. இறைவனுக்குக் குளிர்ச்சி பொருந்திய இளநீரை அபிடேகம் செய்வதால் இறைவனது மனதைக் குளிரச் செய்யலாம் என்பது நம்பிக்கை.

இளநீர் மருத்துவ குணமுடையது. குரும்பை இளநீராக மாறும்பொழுது அதற்கு மூன்று கண்கள் உண்டாகின்றன. அப்பொழுது முதல் இளநீர் வழிபாட்டுக்கு உரிய பொருளாக மாறுகிறது. இளநீரைப் பயன்படுத்தும் முன்பாக அதன் பக்குவ நிலையை அறிந்து பயன்படுத்த வேண்டும். இதே போல் பக்குவமுடைய மனமே இறைவனை வழிபடத்தக்கதாகும்.

**பன்னீர்**

சுத்தமான பன்னீரால் அபிடேகம் செய்வதால் சிலைக்கு ஒருவித மனத்தைக் கொடுக்கும். பன்னீர் குளிர்ச்சியைத் தரவல்லது.

## சந்தனம்

மரங்களில் அதிக மணம் உள்ளது சந்தன மரமாகும். சந்தனத்தை உடலில் பூசிக் கொண்டால் வேனல் கட்டி, வேர்க்குரு போன்றவை வருவதில்லை. உடலுக்கு குளிர்ச்சியைத் தரும்.

விருந்தினர்களை வரவேற்பதிலும் வீட்டில் நடைபெறும் சுபநிகழ்ச்சிகளிலும் சந்தனம் முக்கிய இடம் வகிக்கிறது. இதே அடிப்படையில் இறைவனுக்கு மரியாதை செய்யும் பொருட்டுச் சந்தன அபிடேகம் செய்யப்படுகிறது. சந்தனத்தை அபிடேகம் செய்யும்பொழுது மின்கடத்தும் திறன் சிலையில் அதிகரிக்கிறது. சந்தனம் வாசனை தருகிறது. தெய்வச் சிலை மேலும் மெருகேறுகிறது.

## மஞ்சள்

கோயில்களிலும் வீடுகளிலும் மஞ்சள் நீரால் ஆரத்தி, அபிடேகம் நடைபெறுகிறது. கோயில்களில் பால்குடம் போன்ற நேர்த்திக்கடன்கள் செய்யும்பொழுது வழியெங்கும் பக்தர்கள் தலையில் மஞ்சள் நீர் ஊற்றுவார்கள். இவ்வாறு எல்லாக் காரியங்களிலும் மஞ்சள் முக்கிய இடம் பெற்றுள்ளதற்கானக் காரணம் அது ஒரு கிருமி நாசினி ஆகும். மஞ்சள், கார்ப்புச்சுவையும் கசப்புச்சுவையும் கொண்டதாகும். உடலுக்கு தோற்றத்தையும் ஒளியையும் கொடுக்க வல்லது. அதனால் மஞ்சள், அபிடேகப் பொருளாகப் பயன்படுகிறது.

## எலுமிச்சை

இறை வழிபாட்டில் எலுமிச்சை மிகமுக்கிய இடம்பெற்றுள்ளது. எலுமிச்சை அபிடேகப் பொருள் மட்டுமல்லாமல் பூசைக்கும் பயன்படுகிறது. மனிதன் எப்பொழுதும் எந்த சூழலிலும் ஒரே குணத்தைக் கொண்டு இருக்க வேண்டும் என்ற தத்துவத்தை எலுமிச்சை நமக்கு உணர்த்துகிறது.

நாம் ஒருவரைச் சந்திக்கும் பொழுது எலுமிச்சைப் பழத்தைக் கையில் கொடுத்து வணங்குகிறோம். அதற்கு உட்பொருள் ஒன்று உள்ளது. எலுமிச்சம் பழத்தைப் போல் நமது நட்பு மாறாமல் நிலையாக இருக்கவேண்டும் என்ற அடிப்படையில் ஒருவருக்கொருவர் எலுமிச்சம் பழத்தைக் கொடுத்து நட்பைப் பலப்படுத்திக் கொள்கிறோம்.

இறைவனுக்கும் நமக்கும் உள்ள தொடர்பு ஆண்டவனுக்கும் பக்தனுக்கும் உள்ள தொடர்பாகும். இத்தொடர்பு நின்று நிலைத்து முடிவில் பக்தனுக்கு வீடு பேற்றை அளிக்கும். அதனால் இறைவழிபாட்டில் எலுமிச்சை அதிக அளவு பயன் படுத்தப்படுகிறது. மக்கள் எலுமிச்சை பழத்தில் விளக்கேற்றியும் மாலையாகத்

தொடுத்தும் அபிடேகம் செய்தும் தமக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பைப் பலப்படுத்திக் கொள்கிறார்கள்.

**பஞ்சகவ்வியம்**

பஞ்சகவ்வியம் என்பது உலர்ந்த கட்டைகளை எவ்விதம் தீயானது எரித்துச் சாம்பலாக்குமோ அவ்விதம் ஒருவனது நோய்களையும் பாவங்களையும் நீக்கவல்லது. பசுவின் மூத்திரத்தில் வருணனும் சாணத்தில் அக்னியும் தயிரில் வாயுவும் பாலில் சோமனும் (சந்திரன்) நெய்யில் சூரியனும் வசிக்கிறார்கள். இவர்களின் அருள் இருந்தால் நீங்காத நோயும் வராத செல்வமும் பெறாத அருளும் இல்லை எனலாம்."[27]

சிவனுக்கு மிக விருப்பமான அபிடேகப் பொருள் பஞ்சகவ்வியமாகும். சிவராத்திரியன்று நடைபெறுகின்ற நான்கு காலப்பூசையில், முதல் காலத்திற்குரிய முதல் பூசையில் முக்கிய மிகப் பயன்படும் அபிடேகப் பொருள் பஞ்சகவ்வியமாகும்.

**திருநீறு**

சிவபக்தர்கள் தரிக்கும் முக்கிய சின்னங்களில் திருநீறும் ஒன்றாகும். ஆன்மாக்களைக் காத்து இரட்சிப்பதால் 'இரட்சை' எனவும் தீவினைகளை நீறுபடுத்துவதால் திருநீறு எனவும் அழியாத செல்வத்தைக் கொடுப்பதால் விபூதி எனவும் அறியாமையை அழித்து ஞானத்தைத் தருவதால் 'பசிதமெனவும்' பெயர் பெற்றுள்ளது.

**திருநீற்றின் வகைகள்**

திருநீற்றைக் கற்பம், அனுகற்பம், உபகற்பம் என்று மூன்று வகையாகப் பிரிப்பர்.

**கற்பம்**

அட்டமி, சதுர்த்தி, பவுர்ணமி, அமாவாசை என்று ஏதாவது ஒரு திதியில் பசுமாட்டின் சாணத்தை கீழே விழாமல் தாமரை இலையில் ஏந்த வேண்டும். பின் மந்திரங்களை உச்சரித்துக் கொண்டே பஞ்ச கவ்வியத்தைவிட்டு பிசைந்து உருட்டி ஹோமம் செய்யும் அக்கினியில் நெல் பதருடன் வைத்து எடுத்த திருநீற்றை புதிய துணியில் வைத்து வடிகட்டி எடுத்துப் புதிய பாத்திரத்தில் நிரப்பி காயத்ரி மந்திரத்தைச் சொல்லி மலர் வைத்து வணங்கி பின்னர் வெள்ளைத் துணியில் சுற்றி வைக்க வேண்டும்.

## அனுகற்பம்

சித்திரை மாதத்தில் காட்டிற்குச் சென்று அங்கு கிடைக்கும் சாணத்தை எடுத்து வந்து இடித்து பஞ்ச கவ்வியத்தைச் சேர்த்து நன்கு கலந்து உருட்டி மந்திரங்களைச் சொல்லித தயாரிப்பது அனுகற்பம் எனப்படும்.

## உபகற்பம்

பெரிய காடுகளில் தீப்பற்றியதால் உண்டாகும் சாம்பலை எடுத்துப் பஞ்ச கவ்வியத்தைச் சேர்த்து உருட்டித் தயார் செய்யும் திருநீறு உபகற்பம் எனப்படும். எல்லாவித திருநீறுகளைத் தயாரிக்கும் போதும் மந்திரங்களைத் தவறாமல் சொல்ல வேண்டும்.

## பலன்கள்

சகல நன்மைகளையும் தரும் திருநீறு முடிசான்ற மன்னனும் முடிவில் பிடிசாம்பல் ஆகிவிடுவர் என்று வாழ்க்கையின் நிலையாமைத் தத்துவத்தை நமக்கு உணர்த்துகிறது.

திருஞானசம்பந்தர் மன்னன் கூன்பாண்டியனுக்கு வந்த வெப்பு நோயைத் திருநீறு அணிவித்து குணமாக்கினார் என்றும் திருநாவுக்கரசர் வெப்பு நோயும் சிவபெருமானை நினைத்து அவர் சகோதரி திலகவதியார் அணிவித்ததால் குணமானது என்றும் பெரிய புராணம் குறிப்பிடும். திருநீறு அணிவதால் தலையில் இருக்கும் அதிகப்படியான நீர் உறிஞ்சப்படுகிறது.

**"முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு**

**சத்தியமாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு"**[28]

என்று திருநீற்றின் புகழை ஞானசம்பந்தர் கூறுவர். திருநீற்றை அணிவது மூலம் தீவினைகள் சூழாது என்ற நம்பிக்கை தமிழ் மக்களிடையே காணப்படுகிறது. மனநோய்கள் முதலியன திருநீறு அணிவதால் மறைகின்றன. மந்திரங்களை உச்சரித்தும் தீபாராதனை செய்தும் உருவேற்றிய பின்னர், அத்திருநீற்றை நெற்றியில் பூசிக்கொள்வதின் மூலமும் நீரில் கலந்து அருந்துவது மூலமும் நன்மை உண்டாகும் என்று நம்பப்படுகிறது.

## அபிடேக திருநீறு

சிவலாயங்களில் சிவபெருமானுக்கு பிரதோசம் போன்ற தினங்களில் அபிடேகம் செய்யும் பொழுது திருநீறு முக்கிய இடம் பெறுகிறது. அபிடேக திருநீறு அணிவதால் சகல நன்மைகளும் உண்டாகும். ஆரோக்கியம் உண்டாகும். நீண்ட ஆயள்

கிடைக்கும். அபிடேகம் முடிந்தவுடன் திருநீறு அபிடேகம் செய்வதால் சிலைகளில் உள்ள மற்ற பொருள்களினால் உண்டாகும் நீர்த் தன்மை உறிஞ்சப்பட்டு தூய்மை பெறுகிறது.

சைவ சமயத்திற்குரிய முக்கியமான சாதனங்கள் மூன்று. அவை: திருநீறு, உருத்திராட்சம், ஐந்தெழுத்து மந்திரம். இவற்றுள் ஐந்தெழுத்து உள்ளத்தில் இருப்பது. திருநீறும் உருத்திராட்சமும் உடம்பில் உள்ளவை. உருத்திராட்சம் பெரிதும் ஆண்கள் அணியக்கூடியது. திருநீறே ஆண், பெண் என்ற பேதமின்றி அனைவருக்கும் உரியதாக விளங்குகிறது.

## அறிவியல் உண்மை

அபிடேகம் செய்யும்பெழுது சிலைகளில் ஏற்படும் வேதியியல் மாற்றம் குறித்து குற்றாலம் பராசக்தி கல்லூரியில் ஒரு ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. கற்சிலை ஒன்றைத் தேர்வு செய்து அதற்கு எண்ணெய் காப்புச் சார்த்தி அதன் பின்னர் தண்ணீர், பால், தேன், தயிர், குங்குமம், திருநீறு முதலியவற்றால் அபிடேகம் செய்யப்பட்டது. அப்பொழுது அச்சிலையின் மேல் ஊற்றப்பட்ட ஒவ்வொரு அபிடேகப் பொருளுக்கும் மின் கடத்தும் திறன் மாறுபடுவது பதிவு செய்யப்பட்டது.

| “பொருள் | மின்னோட்டம் | சிலையின் மின்கடத்தும் திறன் |
|---|---|---|
| தண்ணீர் | .028 | 2.8 |
| வெண்ணெய் | .022 | 2.2 |
| பால் | 0.2 | 20 |
| தயிர் | 0.7 | 70 |
| சந்தனம் | 0.15 | 15 |
| தேன் | 0.10 | 10 |
| குங்குமம் | 0.036 | 3.6 |
| பட்டுத்துணி | 0.025 | 2.5 |
| கற்பூரம் | 0.007 | 0.7 |
| பூ | 0.018 | 1.8 |
| அபிடேகத்திற்கு முன் | | |
| உலர்ந்த நிலையில் சிலை | 0.001 | பின் 0.1 |

தயிர், பால், தண்ணீர். சந்தனம் ஆகியவற்றால் அபிடேகம் செய்யும் பொழுது மின்கடத்தல் திறன் அதிகரிக்கிறது. எண்ணெய், தேன், திருநீறு, குங்குமம் ஆகியவற்றால் அபிடேகம் செய்வதால் மின்கடத்தும் திறன் குறைந்தாலும் நிலையாக உள்ளது.

ஒரு திரவத்தின் மதிப்பு அதிகரிப்பது அதன்மின்னோட்டம் அதிகரிப்பதையே குறிக்கும். குங்குமம், சந்தனம், மஞ்சள், தண்ணீர் ஆகியவை அதிக மதிப்புள்ளவை. இவற்றைக் கொண்டு அபிடேகம் செய்வதால் கருவறையில் உள்ள மண்டலத்தில் எதிர் மின்னோட்டம் அதிகரிக்கும். அபிடேகப் பொருள்களின் பி.எச். மதிப்பும் அளவிடப்பட்டுள்ளது.

| பொருள் | பி.எச்.மதிப்பு |
|---|---|
| தண்ணீர் | 5.0 |
| பால் | 6.0 |
| தயிர் | 4.0 |
| சந்தனம் | 5.5 |
| தேன் | 2.5 |
| எண்ணெய் | 3.0 |
| குங்குமம் | 7.0 |
| மஞ்சள் | 4.0 |
| பாலும் தேனும் கலந்தவை | 4.0 |

அபிடேகம், அருச்சனை செய்து தீபாராதனை காட்டும் பொழுது காற்று மண்டலத்தில் எப்படி மாறுபாடு ஏற்படுகிறது என்று சோதனை செய்யப்பட்டது. காற்று மண்டலத்தில் ஒருமின் தேக்கியை அமைத்து அதற்கு குறிப்பிட்ட மின்னூட்டம் கொடுத்து அதை அளந்து கொண்டார்கள். தூபம், தீபம் காட்டும் பொழுது காற்று மண்டலத்தில் ஏற்படும் மாறுபாட்டால் மின்தேக்கி, மின்னூட்டம் மாறுபடுவது சோதனை மூலம் தெரிய வருகிறது.”[29]

மேலும் ஈரப்பதம் உள்ள காற்று மண்டலத்தில் பிராணவாயுவின் அழுத்தம் அதிகரிக்கிறது. அந்தக் காற்று மண்டலம் பிராணவாயு மூலக்கூறுகளை அதிக அளவில் பெறுவதால் அக்காற்று உடலுக்கு நன்மை பயக்கும். மேலும் ஒலியின் திசைவேகம் ஈரப்பதம் மிக்க காற்றில் அதிகமாக இருக்கும் என்பது அறிவியல் உண்மை. எதிர் மின்னூட்டமும் ஈரப்பதமும் உள்ள காற்று மண்டலமும் கருவறைக்குள் அமைந்துள்ளது. அந்தக்காற்று மண்டலத்தில் ‘ஓம்’ என்ற பிரணவ ஒலியுடன் அர்ச்சனை செய்யப்படும் பொழுது அவ்வொலி சிலையில் பட்டு

எதிரொலிக்கிறது. இதனால் அக்காற்று மண்டலம் பெரும் அலைவும் ஓத்ததிர்வும் பெறுகிறது. இக்காற்று மண்டலத்தில் அயனியாக்கப்பட்ட மூலக்கூறுகள் எதிரேயுள்ள பக்தர்களை அடையும்பொழுது அவர்களது உடலுக்கும் உள்ளத்திற்கும் நன்மை அளிக்கும். இது அறிவியல் உண்மையாகும்.

இவ்வாறு பூசையின் போது பக்தர்கள் பலன் பெறுவதால் ஆறுகாலபூசை, ஆராதனை முதலியவை தினம் செய்யப்படுகின்றன. இவ்வதிர்வுகள் சிலைக்கு அடியில் உள்ள தாமிரத் தகட்டில் ஆற்றலாகச் சேமிக்கப்படுகிறது. இந்த ஆற்றல் பக்தர்களுக்குத் தொடர்ந்து கிடைத்துக் கொண்டே இருக்கும்.

கோயில் பிரதிட்டை செய்யப்பட்ட சிலைகளின் சக்தி பன்னிரெண்டு ஆண்டுகள் வரை இருக்கும். அதனால் தான் மீண்டும் கும்பாபிடேகம் செய்து சிலைகளுக்குப் புது சக்தி உண்டாக்கப்படுகிறது. அதன் பிறகு பூசையும் அபிடேகங்களும் செய்யச் செய்ய சிலைக்கு அதிகளவு சக்தி உண்டாகிறது.

### நைவேத்தியம் (நிவேதனம்)

இறைவன் அருளால் கிடைத்த உணவுப் பொருள்களை இறைவனுக்குப் படைத்துப்பின்னர் அனைவருக்கும் பிரசாதமாக வழங்குவதே நிவேதனம் எனப்படும்.

நைவேத்தியம் என்றால் அறிவித்தல் எனப்படும். கோயிலில் நைவேத்தியத்தைப் பிறர்க்கு அறிவித்து அளித்தல் என்று பொருள்படும். நமக்குச் சொந்தமான உடைமைகளைப் பொது உடைமை ஆக்குவதே ‘நிவேதனம்’ எனப்படும்.

நிவேதனம் என்பது இறைவனுக்கு உணவு தருவது மட்டுமல்ல, உன் கருணையால் இந்த உணவு கிடைத்திருக்கிறது என்று நன்றியை அறிவித்து விட்டு உண்பது. நாம் உண்ணும் உணவு நம் உழைப்பால் கிடைத்தாலும் அதற்கு வேண்டியதை அளிப்பவன் இறைவன். அவன் முன் வைத்து அவன் அனுமதியுடன் உண்பதுதான் நிவேதனம்.

உணவை உண்பது கர்மம். அதை சுவைப்பது ஞானம். சுவையால் இன்பம் பெறுவது போகம். சுவையை சிவபெருமான் தந்த பிரசாதமாக ஏற்பது யோகம்.

கோயிலுக்குக் கொண்டு செல்லும் எல்லாப் பொருட்களும் வழிபாடு முடிந்து இறைவனுக்கு நிவேதனம் செய்தவுடன் பிரசாதம் என்ற புனித நிலையை அடைகின்றன. அதுபோல எத்தகைய மாசுக்கள் படிந்த மனிதனும் தன்னை மனப்பூர்வமாக இறைவனுக்கு ஒப்படைத்து விட்டால் புனிதத் தன்மை அடைந்து விடலாம் என்பதையே பிரசாதம் குறிக்கிறது.

“நிவேதப் பொருளை மூன்று பங்காக்கி இரண்டு பங்கை நிவேதித்தல் வேண்டும். பாத்திரத்தில் ஒருபங்கு மிச்சமாக இருக்கும். நிவேதிப்பதற்கான வகுக்கப்பட்ட அன்னம் முதலியவற்றை மேலும் எட்டுப்பங்காகப் பிரித்து இருபங்குகள் சிவனுக்கும் ஒன்று சக்திக்கும் ஒன்று கணேசனுக்கும் இன்னொன்று கந்தனுக்கும் ஒன்று பலியிடுவதற்கும் அக்கினி கார்யத்திற்கும் ஒரு பங்கு தேசிகனுக்கும் ஒரு பங்கு பாத்திரசேமமாக இருப்பதற்கும் உரியன என ஆகமத்தில் கூறப்பட்டுள்ளது.”[30] பாத்திரசேமமாக இருப்பது பரிசாரகா் முதலியோா்க்கு உரியதாகும்.

## பிரசாதத்தின் காந்தசக்தி

“இந்தியாவின் கோயில்களில் வழங்கப்படும் பிரசாதங்களும் அவற்றின் தன்மையும் நாம் சாதாரணமாக வெளியே காணபவற்றைக் காட்டிலும் அபாரணமான சக்தி வாய்ந்தவை என்று மற்றவா்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். இதனை நான் அனுபவப்பூா்வமாகவே உணா்ந்தேன். கோவில்களில் மூலவா் இருந்தாலும் உற்சவத் திருமேனிகள் ஊா் முழுவதும் வீதிகளில் கொண்டு சென்று மக்களுக்குப் பிரசாதம் வழங்கும் முறையும் இந்த அடிப்படையில்தான் ஏற்பட்டது. இந்துக் கோயில்கள் பலவற்றிலும் சிறப்பாகப் பக்தா்கள் ஏராளமாக வந்து கூடும் புகழ்பெற்ற ஆலயங்களில், இந்த சக்தி மிகவும் மேலோங்கி இருக்கிறது. இந்த சக்தி நிரந்தராமாகவும் இருக்கிறது. இதனை நான் சோதனை மூலம் உணா்ந்தேன்.

நான் இந்தியாவின் தென்பகுதியில் உள்ள மதுரைமீனாட்சி ஆலயத்துக்குப் போயிருந்தேன். அப்போது அங்கு எனக்குப் பிரசாதமாக விபூதியும் குங்குமமும் கொடுத்தாா்கள். அவற்றை நான் சோதித்துப் பாா்த்தபோது காந்தசக்தி அதில் இருப்பதை உணர முடிந்தது. அது எனக்கு அதிசயமாகவே இருந்தது. அதைவிட அதிசயமாக இருந்தது ஒன்றுண்டு. பல ஆண்டுகளுக்குப் பிறகு நான் அந்தப் பிரசாதத்தை மீண்டும் சோதனை செய்து பாா்த்தேன். அந்தக் காந்த சக்தி சிறிதும் குறையவே இல்லை. இப்படி ஒரு அதிசயத்தை நான் எந்த நாட்டிலும் கண்டதே இல்லை”[31] என்கிறாா் சாா்லஸ் டபிள்யூ எலப்பீட்டா் என்ற அறிஞா். அவரது கருத்துகளின்படி நிவேதனப் பொருள்களில் இறைவனின் காந்த சக்தி உண்டாகிறது என்பதும் இதுநின்று நிலைத்திருக்கிறது என்பதும் உண்மையாகிறது. திருநீற்றை நெற்றி மற்றும் உடல் பகுதியில் அணிவதால் உடலில் உள்ள அதிகப்படியான நீா் உறிஞ்சப்படுகிறது. இதனால் உடல் ஆரோக்கியம் உண்டாகிறது.

அதுபோலக் குங்குமம் சுமங்கலிப் பெண்கள் நெற்றியின் உச்சி வகிட்டிலும் புருவ மத்தியிலும் இருப்பதால் பிற ஆண்கள் செய்யும் மெஸ்மரிசம் போன்றவற்றிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ள முடியும் என்பதால் இவை இறைவன் பிரசாதமாக வழங்கப்பட்டு நமது பண்பாட்டு மரபாக மாறி வளா்ந்துள்ளது.

## தீப வழிபாடு

பூசை வேளையில் நிகழும் நிகழ்ச்சியில் தீபாராதனை மிக முக்கியமானதாகும். வழிபடும் மக்கள் பூசை நிகழும் பொழுது ஏனைய பூசைமுறைகளைத்தவற விட்டாலும் தீபாராதனை நடக்கும் பொழுது தீப ஒளியில் இறைவன் திருக்கோலம் கண்டு தரிசிப்பதே பெரும் பேறாகக் கருதுவர்.

தூபதீபங்காட்டி நைவேத்தியம் நிகழ்ந்ததும் தீபாராதனை தொடங்கும். ஒவ்வோர் ஆராதனைக்கும் ஒவ்வொரு காரணம் உண்டு. இறைவன் அகரம் முதலாக க்ஷகரம் முடிவாக 51 அட்சர வடிவாக விளங்குகிறான். அதை விளக்க 'அருங்காலத்தி' என்ற அட்சர தீபத்தைக் காட்டுவார்கள்.

இருபத்தி ஏழு நட்சத்திர வடிவாக இறைவன் விளங்குகிறான் என்பதை உணர்த்தும் பொருட்டு நட்சத்திர தீபம் காட்டுவார்கள். சிவன் ஐந்து மந்திர வடிவாக விளங்குகிறான் என்பதை அறிவிக்க ஐந்து தட்டுகளில் தீபத்தைக் காட்டுவார்கள்.

தீபத்திலே துர்க்கை, இலக்குமி, சரசுவதி என்று சக்திகளும் உள்ளன. தீப ஒளி புற இருளையும் உள்ளத்தின் இருளையும் அகற்றுகிறது. தீய சிந்தனைகள் ஏற்படா வண்ணம் தடுக்கிறது. மனத்தில் உள்ள கவலைகளைப் போக்குகிறது.

இறைவன் எங்கே இருந்தாலும் எந்த வடிவத்தில் இருந்தாலும் சோதி வடிவத்திலே, நம்முடைய மனத்திலே உறைகிறான். ஆகவே தீப வழிபாட்டின் மூலம் உள்ளத்தில் உள்ள சோதியை வழிபடும் பலனைப் பெறலாம்.

திருவிளக்குகள் தெய்வங்களின் உறைவிடமாகத் திகழ்கின்றன. தெய்வச் சிலைகளை அலங்கரிப்பதைப் போல் திருவிளக்கும் அலங்கரிக்கப்படுகின்றன. எனவே பூசை அறையிலும் ஆலயத்திலும் விளக்கைத் தரையில் வைக்கக்கூடாது. மனைப்பலகை மீதோ அல்லது தாம்பாளத்தட்டின் மீதோ வைக்க வேண்டும். பலகையின் மேல் கோலமிட்டிருக்க வேண்டும்.

## தேங்காய் தத்துவம்

இறைவனுக்கு பூசையின் போது தேங்காய் உடைத்து வைக்கப்படுகிறது. தேங்காயை உடைத்து வைப்பது ஒரு சிறந்த உண்மையைத் தெளிவுபடுத்துகின்றது. தேங்காயின் கடினமான மேல் ஓடும் அதனுள்ள வெண்மையான பருப்பும் அதனுள் இனிய இளநீரும் உள்ளன.

உருண்டையான புறஓடு உலகை ஒத்திருக்கின்றது. இரண்டும் கோளவடிவம் உடையது. உலக மாயையைக் குறிப்பது. உள்ளே வெண்மையான பகுதி பரமானந்தத்தைக் குறிக்கின்றது. சீவான்மா மாயையினால் பரமாத்மாவை உணராமல்

பரமானந்த பேற்றினைப் பெறாமல் நிற்கின்றது. மாயையைப் போன்றே புறஓடும் வெள்ளைப் பகுதியையும் இளநீரையும் காணமுடியாமல் மறைத்திருக்கின்றது.

**பழங்கள்**

பழங்களில் உள்ள வைட்டமின் சி, வைட்டமின் டி, கால்சியம், இரும்பு சத்து முதலியவைகள் இயற்கையாக நம்மை நோயினின்றும் காக்கின்றன. நமக்கு ஆரோக்கியத்தையும் தருகின்றன. மலச்சிக்கலை நீக்கும். கொழுப்பு நோய் உண்டாகாது. இரத்த சுத்தி ஏற்படும். உடலுக்கு நல்ல நிறத்தைக் கொடுக்கும் மனிதன் தனக்கு எதுவெல்லாம்நன்மை செய்கின்றதோ அதனையெல்லாம் தனக்குப் பிடித்த இறைவனுக்கும் படைத்தான் என்ற அடிப்படையில் பழங்களையும் இறைவனுக்குப் படைத்தான்.

**அட்சதை**

அட்சதை என்பது சுத்தமான அரிசியில் சிறிது மஞ்சள் சேர்த்து சில துளிகள் நீர் விட்டுக் கலந்து உருவாக்குவது. மஞ்சள் சேர்க்கப்படுவதால் அந்த அரிசி பூசைக்கு உரியதாகிறது.

வடமொழியில் ‘சதம்’ என்றால் பழுது என்று பொருள். ‘அசதை’ என்றால் பழுதற்றது என்று பெருள்படும். பழுதுபடாத அரிசிபோல நமது வாழ்வும் பழுதுபடாமல் இருக்க வேண்டும் என்பது இதன் பொருள் ஆகும். வீட்டிலும் கோயில்களிலும் பூசையின் போது மலர்களைச் சமர்ப்பிப்பது போல அட்சதையைச் சமர்ப்பிப்பதும் உண்டு.

**பூசை மலர்கள்**

இந்து சமய வழிபாட்டு முறையில் வேள்விநெறி, பூசெய் (பூசை) நெறி என்றும் இருவகை நெறி முறைகள் பின்பற்றப்பட்டு வருகின்றன. தீயினை வளர்த்து அதன் வாயிலாக இறைவழிபாட்டை நடத்துவதே ‘வேள்வி நெறி’ ஆகும். வேதக் காலத்திலிருந்து இது சிறப்புமிக்க ஒன்றாகப் போற்றப்பட்டு வருகின்றது. பூவினைக் கொண்டு இறைவனுடைய திருப்பாதங்களைப் போற்றிப் பூசிப்பதே பூசெய் நெறியாகும். பூவினைக் கொண்டு இறைவனை வழிபாடு செய்யும் புனித நெறி பண்டைய வைதீக சமயத்தில் இல்லை. ‘வேள்வி’ நெறியை ‘நிகமம்’ என்னும் வடமொழிப் பெயராலும் பூசைநெறியை ‘ஆகமம்’’ என்னும் சொல்லாலும் சுட்டுவர்.”[32] ஆகம நெறியிலும் வேள்வி இடம் பெற்றது. ஆயினும் தமிழகக் கோயில்களில் பேரளவிற்கு இன்றும் பூசைநெறியாகிய ஆகம வழிபாட்டு முறையே பின்பற்றப்பட்டு வருகிறது.

**'பூசை' 'பூஜா' என்னும் சொல்**

தமிழில் இறைவழிபாட்டைச் சுட்டும் 'பூசை' என்னும் சொல் வடமொழியில் பயன்படுத்தப்பட்ட பொழுது 'பூஜா' என்று திரிந்தது. 'பூசை' என்னும் சொல் 'பூ', 'செய்' என்னும் இரண்டு தமிழ்ச் சொற்களின் சேர்க்கையாகும். பூவினைக் கொண்டு செய்யப்படும் வழிபாடு என்பதே இச்சொல்லின் பொருளாகும். பூவினைக் கொண்டு செய்யப்படும் வழிபாடு சிறந்ததோர் பண்பாட்டு அடிப்படையில் தோன்றிய வழிபாட்டு முறையாகும். இப்பேரண்டம் முழுவதும் ஓர் இறையாற்றல் நிறைந்திருப்பதை உணர்ந்து, அந்த மாபெரும் இறையாற்றலோடு மனிதன் தான் கலந்து ஒன்று படவும் மகிழ்ந்து இன்புறவும் பெருவிருப்போடு செய்யப்படும் வழிபாடே 'பூசை' ஆகும். இறைவன் பெயர்களை ஒவ்வொன்றாகக் கூறி மலர்தூவி அருச்சித்தல் ஆகம வழக்கு ஆகும்.

**இலக்கியங்களில் 'பூசெய்'**

சிலப்பதிகாரம் குன்றக்குரவையுள் ''பூப்பலி செய்ம்மின்'' எனக் குறிக்கப் பெற்றுள்ளது. திருநாவுக்கரசர் தேவாரத்தில்,

**'பூமாலை புனைந்தேத்தி'**[33]

**"தொழுது மலர்தூவித் துதித்து"**[34]

**"புண்ணியம் செய்த நல்ல புனலொடு மலர்தூவி**
**எண்ணுமின் எந்தை நாமம்"**[35]

எனவும் வருமிடங்கள் இதற்குச் சான்றுகளாகும்.

எனவே 'பூஜை' (பூசை) என்னும் வடசொல் 'பூசெய்' என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபாக வடமொழியில் இடம்பெற்றுள்ளது.

ஒவ்வொரு தெய்வத்திற்கும் ஒவ்வொரு மலர் சிறந்ததாகக் கருதப்படுகிறது. ஒரு தெய்வத்திற்கு உகந்த பொருள் வேறு தெய்வத்திற்கு உகந்ததாக இராது.

**சிவன்**

சிவனுக்கு உகந்தது வில்வம் ஆகும். வில்வ இலையில் இலட்சுமி வாசம் செய்கிறாள். அதனால் வில்வ மரத்திற்கு திருமரம் (ஸ்ரீவிருட்சம்) என்று பெயருமுண்டு. வில்வத்தின் மூன்று இலைகள் சிவபெருமான் ஏந்தியுள்ள திரிசூலத்தின் வடிவத்தையும்

இறைவன் முக்கண்களையும் காட்டுகிற வடிவில் அமைந்துள்ளது. ஒரு வில்வ இலை ஒரு இலட்சம் தங்க மலர்களுக்குச் சமமாகும் என்று கூறப்படுகிறது.

### வில்வத்தின் மகிமை

வில்வத்தினால் இறைவனை அருச்சனை செய்து வழிபடுவது பாவ நீக்கத்திற்கு ஒரு முக்கியமான வழிமுறையாகும். வில்வத்தில் திருமகள் இருப்பதால் அடியவர்கள், செல்வங்கள் எல்லாவற்றையும் இறைவன் திருவடிகளிலேயே அர்ப்பணித்து விடுவதற்குச் சமமாகும். அவன் திருவருளை மட்டுமே வேண்டுகின்ற நிலையை வில்வ இலை அருச்சனை காட்டுகிறது.

ஒரு வில்வதனத்தைச் சிவனுக்கு அர்ப்பணித்தால் சகல பாவங்களும் நீங்கி அனைத்து நன்மைகளும் உண்டாகும். வில்வமரத்தை வளர்ப்பதனால் அசுவமேதயாகம் செய்த பலன் கிடைக்கும். அதனால் ஆயிரம் பேருக்கு அன்னதானம் செய்த புண்ணியம் கிடைக்கும். கங்கை முதலான புண்ணிய நதிகளில் நீராடிய பலன் கிடைக்கும். எல்லா சிவதலங்களையும் வழிபட்டதன் பலன் கிடைக்கும். சிவனுக்குக் கொன்றை மலரும் ஏற்றது.

சிவனுக்குத் தாழம்பூவை விலக்கவேண்டும். பொதுவாகத் தாழம்பூவைப் பூசைக்குப் பயன்படுத்துவதில்லை. பிரமனும் திருமாலும் சிவனின் அடிமுடி தேடியபோது பிரமனுக்காக பொய் சாட்சி சொல்லியதால் தாழம்பூவை சிவபெருமான் தனக்கு உகந்த மலர்களில் இருந்து விலக்கி வைத்தார் என்று புராணங்கள் கூறினாலும் பாம்பு போன்ற நச்சு உயிரினங்கள் தாழம்பூவின் வாசம் அறிந்து வரக்கூடும் என்பதனால் தாழம்பூ பூசைக்குப் பயன்படுத்துவதில்லை.

### துர்க்கை (மலைமகள்)

சிவப்புநிற மலர்கள் துர்க்கைக்கு உகந்த மலர்களாகும். அருகம்புல் சேர்க்கவே கூடாது.

### இலக்குமி (திருமகள்)

செந்தாமரை, செவ்வரளி, ரோசா, சாமந்தி ஆகியவை இவருக்குப் பூசை செய்ய ஏற்ற மலர்களாகும். தும்பைப்பூ விலக்கப்படல் வேண்டும்.

### சரசுவதி (கலைமகள்)

கலைமகளுக்கு ஏற்றது வெண்தாமரை, வெள்ளரளி, முல்லை, மல்லிகை, நந்தியாவட்டை, சம்பங்கி முதலான வெள்ளை நிற மலர்கள் ஆகும். சிவப்புநிற மலர்களால் சரசுவதியை வழிபடக்கூடாது.

### விநாயகர்

விநாயகருக்கு எருக்கம்பூ, அருகம்புல் ஏற்றது.

### கற்பூர ஆரத்தி தத்துவம்

வெண்மையான கற்பூர வடிவம் போலவே ஆன்மாக்களும் இயல்பாகவே வெண்ணிறமான தூய தன்மையினைக் கொள்ளுதல் வேண்டும். கற்பூரமானது அக்கினி பற்றியவுடன் தன் வடிவமாக விளங்காது அவ்வக்கினியொளி மயமாக நிற்பது போல, ஆன்மாக்களும் பிரம்ம ஞானம் பற்றியவுடன் மாயத் தன்மை நீங்கிப் பிரம்மத்துவம் விளக்கம் பெற்று நிற்கும். பின்னர் அக்கற்பூரம் யாதொரு பற்றுமில்லாமல் தம் வடிவம் முழுவதும் கரையப் பெற்று விளங்குதல் போல ஆன்மாக்களும் சகல பற்றுகளும் ஒழிந்து பரமாத்மாவுடன் கலந்து பேரின்ப பெருவாழ்வடையும் என்ற உண்மையை உரைப்பதே கற்பூர ஆரத்தியின் தத்துவம் ஆகும். அதனால் அனைத்து வழிபாட்டுச் சடங்குகளும் நிறைவு பெற்றவுடன் கற்பூரதீபம் காட்டி அதை அடியவர்கள் கண்களில் ஒற்றிக் கொள்வது வழக்கத்தில் உள்ளது.

### வழிபாட்டுத் தத்துவம்

ஆசாரியர் என்றும் பட்டர், குருக்கள் என்றெல்லாம் அழைக்கப்படுகின்றவரிடம் இறைவழிபாட்டிற்குச் செல்லும் பக்தர்கள் தேங்காய், பழம், வெற்றிலை பாக்கு, கற்பூரம் ஆகியவற்றைக் கொண்டு சென்று கொடுக்க வேண்டும் என்பது ஆகம விதி. எனவே வழிபடச் செல்வோர் இவற்றைக் கொண்டு செல்வது வழக்கம். குருக்கள் அவற்றைக் கொண்டு செய்யும் வழிபாடும் ஒரு தத்துவத்தை உணர்த்துகின்றது.

தேங்காயானது வழிபடச் செல்லும் ஆன்மாவைக் குறிக்கும். தேங்காயின் மூன்று கண்களும் ஆன்மாவை மூடி நிற்கும் மும்மலங்களைக் குறிக்கும். மும்மலங்கள் ஆணவம், கன்மம், மாயை என மூன்று கண்களையுடைய ஓடு ஆன்மாவில் ஒட்டியிருக்கும். பாசங்களின் கடினத் தன்மையைக் குறிக்கும் அந்த ஓட்டினுள் அமைந்த வெண்மையானபருப்பு ஆன்மாவைக் குறிக்கும்.

தேங்காயின் ஓடு, கருவியின் துணையின்றிக் கையால் உடைபடுவதில்லை. மிகவும் கடினம் எளிதில் விலக்க முடியாத தன்மையைக் குறிக்கும். அத்தேங்காயை உடைப்பதற்குத் தேவையான கருவி, ஆன்ம விடுதலைக்குத் தேவையான இறைவனது திருவருளைக் குறிக்கும். கருவி கொண்டு தேங்காயை உடைக்கும் குருக்கள், இறைவனுடைய கருணையைக் குறிக்கும்.

பழங்கள் அடியவர்களின் நல்வினைப் பலன்களைக் குறிக்கும். வெற்றிலைப் பாக்கு அவருடைய முக்குணங்களைக் குறிக்கும். தூய வெண் கற்பூரம் இறைவனோடு இரண்டறக் கலக்கும் பக்குவம் வாய்ந்த ஆன்ம நிலையை உணர்த்தும்.

தேங்காய், பழம் முதலியவற்றோடு வழிபடச் செல்லும் அடியவர், தம்மையும் தம் வினைப் பயன்களையும் இறைவனுக்கு அர்ப்பணிக்கச் சென்று மகாமண்டபத்தை அடைந்தவுடன் ஆசாரியர் வந்து அவற்றை ஏற்றுத் தேங்காயை உடைத்து, அனைத்தையும் சுத்தம் செய்து, அதாவது மலங்களை நீக்கி இறைவனுக்கு அர்ப்பணித்து கற்பூரத்தை ஏற்றி இறைவனின் தரிசனத்தையும் அருளையும் இந்த அடியார்க்கு வழங்குவார். மும்மலங்களால் பந்தப்பட்டு நிற்கும் ஆன்மா, உலகைச் சார்ந்து நிற்கும் போது உடைக்கப்பட்ட தேங்காயின் உள்ளிருக்கும் தூய இனிய வெண்பருப்புப் போன்று மலநீக்கம் பெற்றுப் பேரின்பம் பெருதலையும் அந்த ஆசாரியர் உணர்த்துவார். மந்திர உபாசனையையும் அவருக்கு உபதேசிப்பார். இந்நிலையே மந்திரான்ம நிலையாகும்.

### நேர்த்திக் கடன்கள்

நம்பிக்கைக்கும் நேர்த்திக்கடன்களுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. நன்மையின் மீதுள்ள விருப்பையும் தீமையின் பாலுள்ள வெறுப்பையும் இவைகாட்ட வல்லன."[36] நம்பிக்கை வெற்றி பெருமானால் அது நேர்த்திக் கடனாகிறது.

இறைவனுக்கும் பக்தனுக்கும் நடக்கும் ஒரு பண்டமாற்று முறை. நீ இது செய்வாயானால் நான் இது செய்வேன் என நேர்த்திக் கொண்டு செய்வது. இறைவன் உயிர்களிடமிருந்து எதுவும் எதிர்பார்க்கமாட்டார். ஆயினும் மக்கள் தம் மன அமைதிக்காக இறைவனிடம் செய்து கொள்ளும் ஒரு ஒப்பந்தமே நேர்த்திக்கடன்.

ஆயிரமாயிரம் செலவு செய்து அன்னதானம் செய்தலும் அது அனைவருக்கும் சென்று சேராது. ஒருவருக்குத் தனிப்பட்ட முறையில் உறவாலும் பகையாலும் இனத்தாலும் நிறத்தாலும் சமுதாய ஏற்றத் தாழ்வுகள் உண்டு. அன்னதானத்தை வீட்டிலிருந்து செய்யாது, கோயில்மூலம் பிரசாதம் என்ற பெயரால் அளிக்கும்போது அவ்வேறுபாடுகள் மறைகின்றன. அனைவருக்கும் அவ்வுணவு சென்றடைகிறது.

எனவே தான் நேர்த்திக்கடன்கள் பலகோயில்களில் செய்யப்படுகின்றன. நேர்த்திக்கடனாக பெறப்படும் பொருள்கள் இல்லாதவர்களிடம் சென்றடைவதே நேர்த்திக்கடனின் குறிக்கோளாகும். கோயிலில் செய்யப்படும் நிவேதன உணவுகள், அபிடேகப்பால், சந்தனம், திருநீறு போன்ற பொருள்கள் பொது மக்களுக்கு அளிக்கப்பட வேண்டும் என்பதற்காகவே செய்யப்படுகிறது. கடும் சோதனைகளிலிருந்து

மீண்டு, இறைவனுக்குத் தம் மனம் மகிழ்ந்து அளிக்கப்படும் பொருள்களே நேர்த்திக்கடன் பொருள்களாகும். இதனால் மக்களுக்கு மன அமைதி கிடைக்கிறது.

### நேர்த்திக்கடன்

தனக்கு மேலாக ஓர் ஆற்றல் இருக்கிறது என்று ஒவ்வொரு மனிதனும் நம்புகிறான். அவ்வாற்றலே தெய்வம் என்றும் அத்தெய்வத்தின் கருணையாகத்தான் தனது வாழ்க்கையின் எல்லா நிகழ்வுகளும் நடைபெறுகின்றன என்றும் நம்புகின்றான். தனக்கு வேண்டியவற்றைத் தெய்வம் நிறைவேற்றித் தர வேண்டும் என்றும் தான் எண்ணிய செயல்கள் நிறைவேறினால், இன்னது செய்வேன் என்றும் தெய்வத்திடம் வேண்டுகிறான். இத்தகைய நம்பிக்கையின் அடிப்படையில் செய்யப்படுவதே நேர்த்திக்கடனாகும். நேர்த்திக்கடன் என்ற முறை இந்து சமயத்தில் மட்டுமன்றி உலகிலுள்ள அனைத்துச் சமயங்களிலும் வேரூன்றி இருப்பதைக் காணமுடிகிறது.

### நேர்த்திக்கடன் விளக்கம்

நேர்த்திக்கடன் என்பது தெய்வத்திற்கு அளிப்பதற்காக நேர்ந்த கடன் ஆகும். இந்நேர்த்திக்கடனை ‘நேர்தல்’, ‘நேர்ச்சை’, ‘நேர்த்தி’, ‘அங்கீகரித்தல்’, ‘உடன்படல்’, ‘சாமிக்கு நேர்தல்’, ‘வேண்டல்’ என்று தமிழ்ச்சொல்லகராதி குறிப்பிடுகிறது.”[37]

“நேர்த்திக்கடன் என்பதற்கு ‘நேர்ச்சை’, ‘நேமிசம்’, ‘வேண்டுதல்’, ‘தெய்வக்கடன்’ என்ற பல பெயர்கள் வழங்கப்படுகின்றன.. “துன்பம் தீர்ந்தால் இன்னது செய்வேன், நோய் தீர்ந்தால் இன்னது செய்வேன் என மக்கள் தெய்வத்திடம் வேண்டிக்கொள்வதே நேர்த்திக்கடனாகும்.”[38] எனவே நேர்த்திக்கடன் என்பது மக்கள் நம்பிக்கையின் அடிப்படையில் தெய்வத்திற்குச் செய்யப்படும் ஒரு செயலாகும்.

### தெய்வ வழிபாட்டில் நேர்த்திக்கடன்

திட்டமிட்ட வினைகளே ‘சடங்குகள்’ எனப்படுகின்றன. சமயத்தின் பயன்பாட்டிற்காக, சமுதாய உணர்வினை, சமய ஒழுக்கங்களை பாரம்பரியமாகக் கொண்டு பழமையுடன் இணைப்புக் கொண்டு, சமயப்பண்பினைப் பெரிதும் குறிப்பனவாக விளங்குவது சடங்குகள் ஆகும். சமயச்சடங்குகள் எல்லாம் மக்களின் உண்மையான சமய உணர்வுக்குத் துணைசெய்யும் சாதனங்களாகும். இவ்வாறு நம்பிக்கையின் அடிப்படையில் தெய்வத்திற்குச் செய்வதே ‘நேர்த்திக்கடன்’ என்ற சடங்காகும். மக்கள் தாங்கள் அனுபவிக்கும் துன்பங்களுக்கு எல்லாம் தாங்களே காரணம் என்பதை உணர்ந்து அத்துன்பங்களை நீக்க வல்லவன் ‘இறைவன் ஒருவனே’ என்று நம்பினர். இந்த நம்பிக்கையின் அடிப்படையிலேயே தெய்வ விழாக்களில் தங்களின் துயரங்களை நீக்குமாறு தெய்வத்திடம் வேண்டுகின்றனர். தங்களின் வேண்டுதல்கள்

நிறைவேறிவிட்டால் தெய்வத்திற்கு நன்றி செலுத்தும் பொருட்டு நேர்த்திக் கடன்களைச் செய்கின்றனர். இத்தகைய நேர்த்திக்கடன்கள் தெய்வ வழிபாட்டின் வளர்ச்சிக்கு மேலும் வித்திட்டன எனக் கருதலாம். நேர்த்திக்கடன்கள் மூலமே மனிதன் தெய்வ வழிபாட்டில் பல்வேறு வழிபாட்டு முறைகளையும் சடங்குகளையும் ஏற்படுத்தினான். எனவே தெய்வத்திடம் மக்கள் ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காக நேர்ந்து கொண்டு அந்த நோக்கம் நிறைவேறியபின் அத்தெய்வத்திற்குச் செலுத்துவதே நேர்த்திக்கடன்கள் என வரையறைப் படுத்தப்படுகின்றன.

### நேர்த்திக்கடன் செலுத்தப்படுவதன் நோக்கம்

பொதுவாக மக்கள் தெய்வத்திடம் தனி ஒருவரது நலன் கருதியும் குடும்பநலன் கருதியும் பொதுநலன் கருதியும் நேர்த்திக்கடன் செலுத்துவதைக் காணமுடிகிறது.

தனி ஓரவரது நலன் கருதி எடுக்கப்படும் நேர்த்திக்கடன்கள் பெரும்பாலும் குழந்தைப்பேறு வேண்டியும் திருமணம் நடைபெறவேண்டியும் வேலைபெற வேண்டியும் நோய் நீங்க வேண்டியுமே நேர்ந்து கொள்ளப்படுகிறது.

குடும்ப நலன் கருதி குடும்ப உறுப்பினர்களால் எடுக்கப்படும் நேர்த்திக் கடன்கள், வாரிசு கிடைக்க வேண்டியும் குடும்பம் சிறக்க வேண்டியும் நேர்ந்து கொள்ளப்படுகின்றன.

பொதுநலன் கருதி ஊர்மக்களால் எடுக்கப்படும் நேர்த்திக்கடன்கள் மழைபெய்ய, விளைச்சல் பெருக, அம்மை, காலரா போன்ற கொடிய நோய்களிலிருந்து தங்களைக் காக்க வேண்டியும் நேர்ந்து கொள்ளப்படுகின்றன.

மக்கள் தங்களின் வேண்டுதல் நிறைவேறிய பின் நேர்ந்துகொண்ட தெய்வத்திற்கு நேர்த்திக்கடன்களைச் செய்யாமலிருந்தாலோ அல்லது காலம் தாழ்த்திச் செய்தாலோ, நேர்ந்து கொண்டவர்களைத் தெய்வம் தண்டிக்கும் என்று நம்பினர். ஆதலால், நேர்ந்து கொண்ட காலத்திற்குள்ளேயே தங்களது நேர்த்திக் கடன்களை முறையாகச் செய்து விடுகின்றனர்.

### நேர்த்திக்கடன்கள் அளிக்கும் முறை

நோய்களுக்குத்தக்க முறையில் நேர்த்திக்கடன் அளிக்கப்படுகிறது. உடல் உறுப்புகளில் ஏதேனும் குறைபாடுகள் ஏற்படின் அதனை நீக்குவதற்காக அவ்வுறுப்பினைப் போன்று மாதிரிகளை அளிப்பது உண்டு. தலை, கண், கால், கை, வயிறு முதலிய உறுப்புகள் அளிக்கப்படுகின்றன. இவை வெள்ளி, தங்கம், பித்தளை போன்ற உலோகத்தால் செய்யப்பட்டிருக்கும். கண்களில் ஏற்படும் குறைகளைப் போக்குவதற்காக கண்மலரை இறைவன் கண்களில் சாற்றித் தன் கடனை

நிறைவேற்றுவர். தோளில் ஏற்படும் வேனிற்கட்டி., பரு போன்ற நோய்கள் நீங்க உப்பு, மிளகு முதலியன இடப்படுகின்றன.

பிள்ளையில்லாதவர்கள் வேண்டிக்கொண்டு தொட்டில் கட்டுவது மரபாகும். இதனை அம்மன் சன்னிதியிலோ அல்லது தல மரத்திலோ கட்டித் தொங்க விடுவர். திருஏடகநாதர் கோயில் தலமரத்தில் தொட்டில் கட்டும் வழக்கம் உள்ளது. சிலர் வயிற்றுவலி போன்ற நோய்கள் நீங்குவதற்காக மாவிளக்கு இட்டுக் கடவுளை வழிபடுவர்.

### உயிருக்கு உயிர்

உயிருக்கு தீங்கு ஏற்பட்டால் வேண்டிக் கொண்டு உயிருக்கு உயிர் அளித்தல் மரபு. முற்காலத்தில் ஆடு, சேவல் முதலியவற்றை உயிர்ப் பலியாக இடுவது வழக்கம். தற்காலத்தில் அவை உயிரோடு கோயிலுக்கு விடப்படுகின்றன. திருஏடகநாதர் கோயிலில் வேண்டுதலுக்காகப் பசுக்களை உயிரோடு விடும் வழக்கம் உள்ளது.

### காவடி எடுத்தல்

எண்ணற்ற மக்கள் இந்நேர்த்திக் கடனில் ஈடுபடுகின்றனர். விரதம் இருந்தும் காப்புக்கட்டியும் இச்செயலில் ஈடுபடுகின்றனர். காவடி எடுப்பது முருகனுக்கு உரியதாகும். பால்காவடி எடுத்து வந்து அபிடேகம் செய்யப்படும். இது இறைவனைக் குளிர்விப்பதற்காக செய்யும் செயலாகும். அலகுக்காவடி என்பது கம்பிகளால் உடல் முழுவதும் குத்திக்கொண்டு காவடியைச் சுமந்து வருவது ஆகும். சிலர் நாக்கிலும் அன்னத்திலும் வேலைக் குத்திக்கொண்டு வருவதும் வழக்கமாகும். இது தன்னை வருத்திக் கொண்டு இறைவனிடம் வேண்டுவதைக் குறிக்கிறது.

### திருவிழாக்கள்

தமிழர்களின் நாகரிகத்தையும் பண்பாட்டையும் விளக்குவனவற்றுள் திருவிழாக்களும் பண்டிகைகளும் சிறந்த இடத்தைப் பெறுகின்றன. பண்டைக் காலந்தொட்டே விழக்கள் தமிழகத்தில் நடந்து வருகின்றன.

**“மடியா விழவின் யாணர் நன்னாடு”**[39]

என்று வரும் புறநானூற்று அடியில் ‘மடியா’ என்ற சொல் ஆண்டு முழுவதும் என்ற பொருளைத் தருகிறது.

திருஞானசம்பந்தர் திருமயிலாப்பூர் திருப்பதிகத்தில் பல திருவிழாக்களைக் குறிப்பிடுகிறார்.

"ஐப்பசி ஓண விழாவும் ......
காணாதே போதியோ பூம்பாவாய்
விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்
ஆதிரைநாள் காணாதே போதியோ பூம்பாவாய்
ஆதிரை நாள் காணாதே போதியோ பூம்பாவாய்
ஓண விழாக் காணாதே போதியோ பூம்பாவாய்
...... ..... ...... அட்டமிநாள்
...... ..... ..... .....
பொற்றாப்புக் காணாதே போதியோ பூம்பாவாய்
பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய்"[40]

'விழா' என்பதற்கு விழைவு என்று பொருள் கொண்டால் அது இறைவனை நோக்கி மனிதன் விழைவும் செயலைக் குறித்து நிற்கும். இன்பமான காலம், இறைவன் அடியார்களுக்கு வரங்களை அள்ளித்தரும் காலம். விழாக்கள் சமயத்தோடு எந்த அளவுக்கு நெருக்கமான தொடர்பு கொண்டிருக்கிறதோ அதே அளவுக்குச் சமுதாயத்துடனும் தொடர்பு கொண்டிருக்கிறது. நாட்டில் எத்தனை வேறுபாடுகள் இருந்தாலும் அவை திருவிழா நாட்களில் இல்லாமல் செய்கிறது. சாதி, சமயம், பொருள் வேறுபாட்டினையும் திருவிழா நீக்குகிறது. மக்களின் வாழ்வில் சலிப்பினைப் போக்கி இன்பமும் மலர்ச்சியும் புத்துணர்ச்சியும் ஊட்டுவது திருவிழாவாகும்.

ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் நடைபெறும் விழாக்கள் அனைத்திலும் மக்கள் சாதி, மதப்பேதம் இன்றி கலந்து கொண்டு இறைவனின் அருளைப் பெருகின்றனர். புட்டுசொக்கநாதர் கோயில் பதினெட்டு ஊர்களைச் சேர்ந்த வாணிபச்செட்டியார் நிருவாகத்தின் கீழ் இருந்தாலும் அங்கு நடக்கும் புட்டுத்திருவிழாவின் போது அனைத்துச் சாதி மக்களும் கலந்து கொள்கிறார்கள். இது மக்களிடையே ஒற்றுமையை வழியுறுத்துவதாக அமைகிறது.

## கோபுரத் தத்துவம்

திருக்கோயிலுள்ள கோபுரம், மனிதனுடைய மயக்கத்தை நீக்கியருள வல்லதாய் விளங்குகின்றது. மக்கள் தம் உடம்பையே தாமாகக் கொண்டு தங்களுடைய ஒழுக்கத்தையும் உலகச் சூழல்களையும் வகுத்துக் கொள்கின்றனர். அதனால் போட்டிகளும் பிணக்குகளும் ஏற்படுகின்றன.

தம் உடம்பையே தாமாகக் கொள்வது மயக்கம். அந்த மயக்கத்தை நீக்கி, 'மனிதன் உடம்பல்ல' 'ஆன்மா' என்று உண்மையை இடைவிடாது உணர்த்தி நிற்பது

கோபுரம். எனவே திருக்கோயிலுக்கு வழிபடச் செல்லும் பக்தர்கள் ஒவ்வொருவரும் திருக்கோபுரத்தைக் கண்டவுடன் ‘நான் இந்த உடம்பல்ல, உள்ளிருக்கும் ஆன்மா’ என்ற உண்மையை உள்ளத்திற்கு அறிவுறுத்திக் கொள்ளுதல் வேண்டும்.

உடம்பையே தானாகக் கொள்வது பழக்கம். எனவே, அதனை அவ்வளவு எளிதில் தவிர்த்தல் இயலாது. அதனைத் தவிர்க்க கோபுரம் உணர்த்தும் ‘நான் ஆன்மா’ என்னும் உண்மையை அடிக்கடி நினைவில் கொண்டு வருதல் வேண்டும். அப்போது தான் ‘நான் ஆன்மா’ என்ற உண்மை நிலை கொள்ள முடியும். பிறரைக் காணும் போது அவர்களையும் உடம்பாகக் கருதாமல் ஆன்மாவாகக் காணும் தன்மையும் உண்டாகும். கோயிலுக்கு வரமுடியாத மக்கள் ‘கோபுரதரிசனம் கோடி புண்ணியம்’ என்று கோபுரத்தை வழிபடும் வழக்கம் திருஏடகநாதர் கோயிலில் உள்ளது.

## இராசகோபுரம்

திருக்கோயில் உள்ளிருக்கும் கோபுரங்கள் எல்லாவற்றையும் விட இராசகோபுரம் உயர்ந்ததாக இருக்கும். இந்தக் கோபுரத்தைத்தான் ‘தூபலிங்கம்’ என்று அழைப்பர். தூரத்தில் உள்ளவர்களுக்கு இறைவனை நினைவூட்டவே இது அமைந்திருக்கிறது. நெடுந்தொலைவிலே காணப்படும் இக்கோபுரத்தைக் கண்டு எவன் வணங்குகின்றானோ, அவன் சட்டை நீங்கி அரவம் போல் பாவத்திலிருந்து நீங்குகின்றான்.

இராசகோபுரத்தில் அநேக வடிவங்கள் காணப்படும். மானிட வடிவங்கள், வனவிலங்குகள், பறவைகள் மற்றும் ஏனைய சிற்றுயிர்கள் முதலியவை இருக்கக் காணலாம். இவையெல்லாம் அலங்கார வடிவங்களாகக் கருதக்கூடாது.

இவ்வடிவங்கள் ஆகம விதிப்படியும் இயற்கை நடைமுறையின் புறச் சின்னமாகவும் உள்ளன. உலக உற்பத்தியில் இவையெல்லாவற்றிற்கும் இடமுண்டு என்பது இதன் கோட்பாடு. சிற்றுயிர்கள், பேருயிர்கள், விலங்கினம், மக்களினம், தேவர் கூட்டம் ஆகியவர்கள் எல்லோரும் உலகில் இருக்கின்றார்கள்.

அண்டத்தில் இன்னது இருக்கின்றது. இன்னது இல்லை என்று பாகுபடுத்த முடியாது என்னும் கோட்பாட்டை இராசகோபுரம் விளக்குகின்றது.

இராசகோபுரத்தின் வாயில்கள் ஒற்றைப் படை எண்ணிக்கையில் மூன்று, ஐந்து, ஏழு, பதினொன்று என்று அமைந்திருக்கும். இவ்வாயில்கள் நிலைகள் என்று அழைக்கப்படுகிறது.

சிவாகம வாக்கியத்தின் படி இறைவன் கோபுரத்திலும் விமானத்திலும் வாயிற்படியிலும் மண்டபங்களிலும் பலிபீடத்திலும் மூலலிங்கத்திலும் எப்போதும் வெளிப்பட்டிருக்கின்றார் என்பதால் தூலலிங்கமான கோபுரத்தை வணங்கியே உட்சென்று இறைவனை வழிபடுதல் வேண்டும் என்பது விதி.

தூலலிங்கமான கோபுரத்திற்குள் காலை வைத்தவுடன் சிவகணங்கள் நம்மிடம் வந்து சூழ்ந்து கொள்கின்றன. ஆகையால் அவை திரும்பிச் சொன்று கோபுர வாயிற்படியில் உட்காரும் வரையில் கண்டிப்பாகச் சில நியமங்களைக் கடைப்பிடிக்க வேண்டும். சிவனுக்கு விரைவில் கோபமும் மகிழ்ச்சியும் உண்டாகும். ஆகையால், செய்யக் கூடாத குற்றங்களையெல்லாம் தவிர்த்து, தூய்மையுடன் தரிசனம் செய்தல் வேண்டும்.

## பலிபீடத் தத்துவம்

திருக்கோயிலின் முன் கோபுரம் எளிதில் புலப்படுவது போலவே, மனிதனுக்கு எளிதிற் புலப்படுவது 'தூலஉடம்பு' கோபுரவீதியில் நிகழ்கின்ற தேர்த்திருவிழா முதலிய ஆர்ப்பாட்டங்கள் தூலஉடம்பை ஒட்டி நிகழுகின்ற சிற்றின்ப அனுபவங்கள்.

தூலஉடம்பைத் தானாக எண்ணும் ஆன்மா, 'தூலான்மா' 'தேகான்மா' 'பூதான்மா' என்றெல்லாம் சொல்லப்படும் தூலான்மா நிலையை முன்கோபுரம் உணர்த்துவது போலவே 'அந்தரான்ம' நிலையை உணர்த்துவது மகாபலிபீடம்.

முன்கோபுரத்தை வழிபட்டு உடம்பைத் தானாகக் கொள்ளாது, தான் ஆன்மா என்ற உண்மையை உணர்ந்த நிலையில் கோபுர வாயிலைக் கடந்து உள்ளே செல்லுகின்ற மனிதன், நன்மை தீமைகளைப் பகுத்தறியும் உணர்வினை உடையவன் ஆகின்றான். எனவே, அவன் காமக்குரோத, லோப, மோகம், மதம் போன்ற மிருக இச்சைகளாகிய மிருகங்களைப் பலி கொடுக்கும் பொருட்டுக் கீழே விழுந்து வணங்குகின்றான். இச்சைகளைப் பலி கொடுத்து எழுந்த அவன் அந்தரான்ம நிலையினை உடையவன் ஆகின்றான். இந்த அந்தரான்ம நிலையை உணர்த்துவது மகாபலிபீடம் ஆகும்.

## கொடி மரத்தத்துவம்

மகாபலி பீடத்தின் முன் தன் இச்சைகளைப் பலி கொடுத்து, தான் உடம்புமன்று, தான் இச்சைகளுமல்ல என்ற உண்மையுணர்ந்து பலிபீடத்தை அடுத்து உள்ள கொடிமரத்தைக் காண்கின்றான். அது அந்த அந்தரான்ம நிலையில் இருப்பவனுக்குத் தத்துவான்ம நிலையை உணர்த்தும் சின்னமாக உள்ளது.

பூதான்மா, அந்தரான்மா, தத்துவான்மா ஆகிய மூன்று ஆன்மாக்களும் கொடிமரத்தின் உச்சியில் அடுத்தடுத்து அமைந்துள்ள மூன்று நிலைகள் அமைக்கப்பட்டுள்ளன. அம்மூன்று நிலைகளும் மூன்று ஆன்மா நிலைகளை உணர்த்துவதாகும். இம்மூன்று ஆன்மாக்களில் பூதான்மா பெரிதும் விரும்புவது உண்ணல், உடுத்தல், குடித்தல் முதலிய ஐம்புல நுகர்ச்சிகளும் பெண்ணாசையுமாகும். இவற்றின் பொருட்டு மண், பொன், புகழ் போன்றவற்றை இழக்கத் துணிவர்.

அந்தரான்ம நிலையிலுள்ளோர் மண், பெண், பொன் மூன்றையும் விரும்புவர். ஆனால், மிகவும் விரும்புவது சுக வாழ்க்கையையும் அதற்கு துணைபுரியும் பொன்னையுமாகும். பிறர் மனைவியையும் மண்ணையும் விரும்புவர். ஆனால், அவற்றால் துன்பம் வருமெனில், அவ்விருப்பத்தைச் செயல்படுத்தாது அடக்கிக் கொள்வர். வகுத்தவற்றை இயன்றவரை பின்பற்றுவர்.

தத்துவான்ம நிலையிலுள்ளோர் மிகவும் விரும்புவன புகழும் போற்றுதலுமாகும். புகழுக்காக அறிவைப் பெருக்குவர். தான தருமங்களில் ஈடுபடுபவர். புகழுக்காகப் பொன்னையும் மண்ணையும் இழக்க முன்வருவர். பெண், பொன் ஆசைகளைக் கைவிடுவர். கொடி மரத்தால் பெறப்படுவது இத்தத்துவான்ம நிலை ஆகும்.

கொடிமரம் என்பதை வடமொழியில் ‘துவஜஸ்தம்பம்’ என்று கூறுவார்கள். துவஜம் என்பதற்குத் தருமம் என்று ஆகமங்கள் பொருள் கூறுகிறது. உடம்பில் வீணாதண்டம் போல் மூலாதாரம் முதல் பிரம்மமந்திரம் வரையில் மேனோக்கிச் செல்லும் பரமநாடியாகக் கொடி மரத்தைக் கூறுவர்.

கொடிமரம் போல் உடல்நேராக இருந்து விளங்கும். இடைகலை, பிங்கலை என்னும் இரண்டு நாடிகளின் வழியே சென்று திரும்பும் பிராண வாயுவை நடுநாடியில் நிறுத்த சிறிதும் அசையாமல் தியானிக்கின்ற பிராணவாயு நிற்கும். அது நிற்க, மனமும் நிற்கும். மனம் நிற்க ஐம்பொறிகளும் அவயங்களும் அடங்கும். அவையடங்கவே உலகப் பற்றுக்களெல்லாம் ஒழியும். எனவேதான் கொடிமரம் திருக்கோயில்களில் மூலதானத்துக்கு நேராக நிறுத்தப்பட்டுள்ளது.

திருக்கோயிலில் ஆகம விதிப்படி ஒரு கொடிமரம் அமைக்கப்பட்டிருப்பது, பஞ்ச லிங்கங்களில் இரண்டாவதாகும். இதனருகே பலிபீடம் என்னும் பத்திரலிங்கமும் நந்தியும் அமைக்கப்பட்டிருக்கும்.

இக்கொடிமரம் வெயில், மழையில் அடிபட்டு அசைவற்று எவ்வகையான மாறுதலுமின்றித் தூண்போல் நிற்கின்றது. இது முக்கோண வடிவமான மாயா காரியத்தில் ஈடுபடாமல் தூபருபமாயிருக்கும் பரமாத்ம சொரூபத்தை விளக்குவதாகும். இதன் அருகே பலிபீடம் என்பது பரிவார தேவதைகளுக்குப் பலி (பூசை) போடுமிடம்.

இங்குதான் நாம் விழுந்து வணங்க வேண்டும். இங்கு நான் என்ற அகந்தையை பலிகொடுத்து, தன்னை மறந்து தியானம் செய்ய வேண்டும். இவ்வாறு செய்யும் போது வீடு, மனைவி, மக்கள் ஆகியவற்றைப் பற்றி நினைப்பதை விடுதல் வேண்டும்.

கொடிமரத்தைக் கடந்து உள்ளே சென்ற பின் எந்த இடத்திலும் விழுந்து வணங்குதல் கூடாது.

## வணங்குதல்

வணங்குதல் என்பது பணிதலாகும். வழிபாடு என்னும் சொல் இன்று தொழுதல், வணங்குதல் என்ற பொருளிலேயே பெரும்பாலும் வழங்கப்படுகிறது. மனித இனத்தில் தோன்றிய அச்சம், குற்ற உணர்வு போன்ற பண்புகளில் பரிணாம வளர்ச்சியே வழிபாட்டு நெறிக்கு வித்திட்டது. இதனால் மனிதனுக்கு அச்சம் வரும் போது வேறு வழியில்லாமல் கண்களை மூடிக் கொண்டான். தரையில் புகலிடம் தேடினான். குப்புற மண்ணில் விழுந்து முகம் புதைத்தான். இப்பழக்கம் வணக்கமாகவும் இயற்கை வழிபாடாகவும் மாறியது. நான் என்னும் அகந்தை உள்ளவன் யாருக்கும் பணிய மாட்டான். நாம் உலகில் எவ்வளவு செல்வம், மேதை, அதிகாரம் பெற்றிருந்தாலும் இறைவனுக்கு எதிரில் அவை ஒரு பொருட்டல்ல. இறைவன் அருளன்றி நம்மால் ஒன்றையும் செய்ய முடியாது என்பதை நன்கு உணர வேண்டும்.

“பக்தர்கள் யான், எனது ஆகிய செருக்கையகற்றிக் கீழே விழுந்து கும்பிடும் போது அறியாமையும் வீழ்கிறது. எழும்போது மெய்யுணர்வு உடன் வருகிறது.”[41]

பணிதலை இருவகைப்படுத்தலாம். அவை: அட்டாங்கப் பணிவு, பஞ்சாங்கப் பணிவு என்பவையாகும். கொடி மரத்தின் முன் வணங்குகின்றவர்களில் ஆடவர் அட்டாங்கப் பணிவு முறையையும் பெண்கள் பஞ்சாங்கப் பணிவு முறையையும் பின்பற்ற வேண்டும்.

## அட்டாங்கப் பணிவு

அட்டாங்கம் என்பது எட்டு அங்கங்களைக் குறிக்கும். உடம்பிலுள்ள எட்டு அங்கங்கள் தரையில் படுமாறு பணிந்து வணங்குதல் வேண்டும். அவை: தலை, இரண்டு செவிகள், இரண்டு கைகள், இரண்டு கால்கள், முகவாய்க்கட்டை என்பனவாகும். ஆண்கள் இவ்வாறு பணிந்து வணங்குதல் வேண்டும்.

## பஞ்சாங்கப் பணிவு

பஞ்சாங்கம் என்பது ஐந்து அங்கங்களைக் குறிக்கும். அவை: தலை, இரு கைகள், இரு முழங்கால்கள் என்பனவாகும். இவ்வைந்து அங்கங்களும் நிலத்தில் நன்கு படுமாறு பெண்கள் பணிந்து வணங்குதல் வேண்டும்.

கொடிமரத்தின் முன்பணிந்து வணங்குவோர் மூன்று முறையோ, ஏழு முறையோ, ஒன்பது முறையோ, பன்னிரெண்டு முறையோ, பணிந்து வணங்குதல் வேண்டும். ஒருமுறை, இருமுறை பணிந்து வணங்குதல் குற்றமாகும்.

அவ்வாறு பணிந்து வணங்கும் போது மேற்கோ அல்லது தெற்கோ கால் நீட்டல் வேண்டும். கிழக்கோ, வடக்கோ கால் நீட்டுதல் கூடாது. தெற்கு, வடக்கு நோக்கிய திருச்சன்னதிகளில் அட்டாங்க, பஞ்சாங்கப்பணிவு முறையில் வணங்காது கரங்குவித்து வணங்குதல் வேண்டும். தலைமீது இரு கரங்குவித்து வணங்குதல் வேண்டும்.

இம்முறையினால் இரத்த ஓட்டம், இதயத்துடிப்பு, நரம்புகளின் செயல்பாடுகள் ஆகியனவும் சீா்படுவதால் இது சிறந்த உடற்பயிற்சியாகவும் அமைகின்றது என்பது உண்மையாகும்.

## தோப்புக்கரணம் இடுதல்

விநாயகா் சன்னதியில் 'தோப்புக்கரணம் இடுதல்' கடைப்பிடிக்கப்படுகிறது. வேறெந்த தெய்வ சன்னதியிலும் தோப்புக்கரணம் இடும் விதிமுறை இல்லை. தோப்புக்கரணம் என்பது வலது கையால் இடது காதும் இடது கையால் வலது காதும் தொட்டுக் கொண்டு கை முட்டுகள் பலமுறை தரையில் தொட்டு வணங்குதல் ஆகும். மற்றொரு முறை, இடதுகால் மேல் ஊன்றி நின்று வலதுகால் இடதுகாலில் முன்பக்கமாக இடது பக்கம் கொண்டு வந்து பெருவிரல் மட்டும் தரையில் தொட்டு நின்றும் இடது கைப் பெருவிரலும் ஆள்காட்டி விரலும் சோ்ந்து வலது காதிலும் வலது கையினை முன்பக்கமாக இடப்பக்கம் கொண்டு வந்து பெருவிரலும் ஆள்காட்டி விரல்களால் இடது காதையும் பிடிக்க வேண்டும். பின்பு குணிந்து வணங்கி நிமிா்வதே தோப்புக் கரணத்தின் முறை. இவ்வாறு செய்வதால் பக்தா்களிடமிருக்கும் தடங்கல்கள், துன்பங்கள் விலகும் என்பது ஐதீகம். இதன் அறிவியல் உண்மை, இது நரம்புகளை உணா்வடையச் செய்யவும் பலப்படுத்தவும் மூளைக்குச் செல்லும் இரத்த ஓட்டத்தை அதிகரிக்கவும் செய்யும் என்பதாகும். இப்பழக்கம் கோயில்களைத் தொடா்ந்து தற்பொழுது பள்ளிகளிலும் கடைப்பிடிப்பதலிருந்து தோப்புக்கரணம் இடுவதின் முக்கியத்துவம் வெளிப்படுகிறது.

## அதிகார நந்தித் தத்துவம்

திருக்கோயிலில் சிவலிங்கம், அதிகாரநந்தி, கொடிமரம், பலிபீடம் ஆகியவை ஒரே வரிசையில் இருப்பதைக் காணலாம். நந்தி சிவபெருமானுக்குரிய வாகனம். அம்மனுக்கு சிங்க வாகனம். வாகனம் எதுவாயினும் அது சீவான்மாவைக் குறிக்கின்றது. இறைவனைப் பார்த்த வண்ணமாக வாகனம் அமைந்திருக்கிறது. கடவுளைச் சென்றடைய வேண்டியது சீவான்மாவின் குறிக்கோள். மனம் எப்போதும் இறைவன் மீதே நாட்டம் கொண்டு இருக்க வேண்டும் என்னும் கோட்பாட்டை வாகனம் விளக்கிக் கொண்டிருக்கிறது. பக்தர்கள் வலம்வரும் போது வாகனத்தையும் சேர்த்துத்தான் வலம் வருதல் வேண்டும். குறுக்கே செல்வது முறையன்று.

திருக்கோயிலில் ஒரே வரிசையில் உள்ள சிவலிங்கம், அதிகார நந்தி, கொடிமரம் ஆகிய மூன்றையும் பதி, பசு, பாசம் என்று சைவ நூல்கள் குறிப்பிடுகின்றன.

நந்தி, கொடிமரத்தை நோக்காமல் சிவலிங்கத்தை நோக்கி விளங்குகின்றது. கொடிமரத்தை நோக்கினால் வேற்றுமைகளும் சிற்றின்ப அனுபவங்களும் துன்பங்களுமே ஆன்மாவுக்குப் புலப்படும். கொடிமரத்தை நோக்காமல் பதியாகிய சிவலிங்கத்தை நோக்குவதால் அண்டத்திற்கு அடிப்படையில் ஒற்றுமையும் பேரின்ப அனுபவும் ஆன்மாவிற்கு உண்டாகும் என்னும் தத்துவம் உணர்த்தப்படுகிறது.

இந்நந்தியின் உத்தரவு பெற்ற பின்பே கருவறையில் எழுந்தருளியுள்ள பதியாகி சிவபெருமானைத் தரிசனம் செய்தல் வேண்டும்.

## திருச்சுற்றுத் தத்துவம்

திருக்கோயில் இராசகோபுரத்தைக் கடந்து உள்ளே சென்றால் திருச்சுற்றுக்கள் உள்ளன. பொதுவாகக் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் இறைவனைத் திருசுற்று மதில் சுவர்கள் மறைத்துக் கொண்டுள்ளன. எல்லாத் திசைகளிலிருந்தும் இறைவனைக் காண முடிவதில்லை. பிரதானவாயில் என்று சொல்லப்படுகின்ற கிழக்கு வாயில் வழியாகவே சென்று வழிபட முடிகின்றது. இறைவனை மறைத்துக் கொண்டிருக்கும் திருச்சுற்று மதில் சுவர்கள், மனிதன் தன்னிடத்தில் உள்ள ஆன்மாவை, தான் ஆன்மா என்ற உண்மையை எளிதில் அறியமுடியாத வகையில் அமைந்தள்ள உடம்பை உணர்த்துகின்றன. மதில் சுவர்கள் இல்லையென்றால் இறைவனை எங்கிருந்தும் எப்பொழுதும் கண்டு வழிபடலாம். உடம்பு இல்லையென்றால், மனிதன் ‘தான் உடம்பல்ல’ ஆன்மாதான் என்ற உண்மையை எப்பொழுதும் நினைவில் கொண்டிருப்பான்.

பிரதான வாயில் என்று சொல்லப்படுகின்ற கிழக்கு வாயில் வழியாகவே இறைவனைக் காண முடிகின்றது. இறைவழிபாட்டின் வாயிலாகவே தான் ஆன்மா என்பதை மனிதன் அறியமுடிகின்றது.

திருச்சுற்று மதில் சுவர்களின் மறைப்பு இறைவனுடைய ஐந்தொழில்கள் முறையில் மறைத்தல் என்னும் தொழிலைக் குறிக்கின்றது.

திருக்கோயில்கள் ஐந்து திருச்சுற்றுக்கள் உள்ள கோயில்களும் மூன்று திருச்சுற்றுக்கள் உள்ள கோயில்களும் ஒரே திருச்சுற்று உள்ள கோயில்களும் உண்டு.

திருக்கோயிலில் உள்ள ஐந்து திருச்சுற்றுக்கள் அன்மையம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞான மயம், ஆனந்த மயம் என்னும் ஐந்து வித கோசங்களையும் குறிக்கின்றன.

திருக்கோயில் உள்ள மூன்று திருச்சுற்றுக்கள் ஐந்து கோசங்களிலான தூல, சூட்சுமம், காரணம் என்னும் மூவகை உடம்புகளைக் குறிக்கின்றது.

கோயிலில் வழிபடுவோர் மூன்று முறை, ஐந்து முறை திருச்சுற்றுக்களைச் சுற்ற வேண்டும் என்பது. மூவகை உடம்புகளையும் ஐந்து வித கோசங்களையும் கடந்து இறைவன் விளங்குகின்றான் என்பதை உணர்த்துகின்றது.

இந்த ஐந்து திருச்சுற்றுக்களையும் கடந்தால் இறைவனது நிலையை அடையலாம் என்னும் உண்மையை உணர்தல் வேண்டும்.

திருக்கோயில் உள்ள ஒரே திருச்சுற்று பொதுவாக உடம்பைக் குறிப்பதாகும்.

### திருச்சுற்று வலம்வருதல்

திருக்கோயிலில் உள்ள திருச்சுற்றுகளில் வலம் வருவதற்கென்று சில நியதிகளும் வலம் வருவதால் உண்டாகும் பலன்களும் உள்ளன.

| | | |
|---|---|---|
| காலையில் வலம் வருதல் | - | நோய் நீங்கும் |
| மாலையில் வலம் வருதல் | - | எல்லாப் பாவங்களையும் அகற்றும் |
| பகலில் வலம் வருதல் | - | விருப்பம் அளிக்கும் |
| அர்த்தசாமத்தில் வலம் வருதல் | - | மோட்சம் உண்டாகும். |
| விநாயகர் | - | ஒருமுறை |
| சூரியன் | - | இரண்டு முறை |
| சிவன் | - | மூன்று முறை |

| | | |
|---|---|---|
| அம்மன் | - | நான்கு முறை |
| நவக்கிரகங்கள் | - | ஒன்பது முறை |

என்று ஒவ்வொரு தெய்வத்திற்கும் ஒவ்வொரு எண்ணிக்கையில் வலம் வருதல் வேண்டும். பிரகாரத்தில் வலம் வரும்போது, பெண்கள் எண்ணெய்க் குடத்தைஎடுத்துச் செல்வது போல் அடிமேல் அடிவைத்து பிறருடன் பேசாமல் செல்லுதல் வேண்டும்.

திருக்கோயிலுள்ள விநாயகர், முருகன், அம்மன் ஆகியோர்தம் திருச் சன்னதிகளைத் தனித்தனியாக வலம் வருதல் கூடாது. சேர்ந்தே பொதுவாக வலம் வருதல் வேண்டும். கொடிமரத்துக்கு வெளியிலுள்ள இடங்களுக்கு இந்த நியதி இல்லை.

அடி தண்டவலம் வருதல் - ஓர் அடிக்கு ஒருமுறை வணக்கம் செய்தவாறு வலம் வருதல்

அங்கம் வலம்வருதல் - உடல் முழுவதும் நிலத்திற்படும் படி படுத்துக் கொண்டே உருண்டு வலம் வருதல்

"சூரிய உதயம் தொடங்கி அர்த்தசாமம் வரையிலோ அல்லது ஒரு சாமம் வரையிலோ அங்கம் வலம் வருதல் செய்தவர், தீவினைகளெல்லாம் நீங்கப் பெற்று முக்தியடைவார்என்று அருணகிரி புராணம் கூறுகின்றது.

நாம் பிறப்பு இறப்பு என்னும் மாயாசக்கரத்தில் சுழன்று வருகின்றோம். மாயாசக்கரமான பலிபீடத்துடன் மூன்று முறை வலம் செய்வது, 'தூல, சூட்சும, காரண உடல்களிலிருந்து என்னை விடுவி' என்று வேண்டுவதாகும் என்று சிவபுராணம் கூறுகின்றது. காசி அன்னபூரணி கோயிலை ஒரு பறவை தற்செயலாக வலம் வந்ததால், இரண்டு கல்பகாலம் சுவர்க்க இன்பத்தை அனுபவித்து பூமியில் அரசனாகப் பிறந்ததாக வரலாறு உண்டு."[42]

வலம் வருதலில் சோம சூக்த வலம் வருதல் என்று ஒருமுறை உண்டு. இதை அன்றாடம் செய்யாவிட்டாலும் பிரதோச காலத்தில் செய்தல் மிகவும் சிறப்பானது. இவ்வலம் வரும் முறையாவது, முதலில் நந்தியைத் தரிசிக்க வேண்டும். அங்கிருந்து வலமாகச் சென்று சோமசூத்ரம்(கோமுகி) என்னும் சிவலிங்க அபிடேகத்தீர்த்தம் விழும் இடத்தைத் தரிசித்து, வந்த வழியாகவே திரும்பி வந்து நந்தியைத் தரிசிக்க வேண்டும். மீண்டும் அங்கிருந்து இடப்பக்கமாகச் சென்று சண்டிகேசரைத் தரிசித்து அதே வழியாகத் திரும்பி வந்து நந்தியின் இரு கொம்புகள் வழியாக சிவலிங்கத்தை தரிசனம் செய்தல் வேண்டும்.

இறைவனின் திருச்சுற்றுக்களைச் சுற்றிவருவதால் இறைவனின் கருணையைப் பெறலாம் என்பதைப் போல் இது உடலுக்கு உடற்பயிற்சியாகவும் அமைகிறது. ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களிலும் காலை, மாலை இருவேளைகளிலும் திருச்சுற்றில் வலம் வரும் பழக்கம் பக்தர்களுக்கிடையே உள்ளது. இவ்வாறு தரிசனம் செய்தவர் சகலப்பாவங்களும் நீங்கி இறைவனை எளிதில் அடையலாம்.

## மூலவர் தத்துவம்

மூலவர் என்பவர் கருவறையில் எழுந்தருளியுள்ள சிவலிங்க மூர்த்தியாவார். இவரைத் தரிசிக்கும் முன், துவாரபாலகர்களின் முன் சென்று ‘அடியேன் உட்சென்று இறைவனை வணங்குவதற்கு அனுமதி செய்தருளும் என்று வேண்டிக் கொண்டு கருவறையில் முன்னுள்ள வாயிற்படி வரைதான் செல்ல வேண்டும். கருவறையைக் கர்ப்பக்கிரகம் என்றும் மூலத்தானம் என்றும் சொல்வார்கள். இது பிரதானமூர்த்தியை வைத்து வணங்கும் இடம். இதன் உண்மை, எல்லா உலகங்களையும் படைத்தற்குக் காரணமான மூலக்கடவுளின் இடம் என்பதாகும். இம்மூலமூர்த்தியை வணங்கிக் கொண்டு, உட்பிரகாரத்தில் உள்ள ஒவ்வொரு மூர்த்தியையும் வணங்குதல் வேண்டும்.

தத்துவான்ம நிலையில் அதிகார நந்தியை வணங்கி ஆன்மாவின் கடமையை உணர்ந்த மனிதன், நந்தியின் அருகில் நின்று மூலவரைக் கண்டு வணங்குகின்றான். கருவறையில் காட்சியருளும் மூர்த்தி பக்தனுக்குச் சீவான்ம நிலையை உணர்த்தும் சின்னமாகத் திகழ்கின்றார்.

மூலவரை நோக்கி வழிபடுவதால் உண்டாகும் இந்நினைவின் நிலையே சீவான்ம நிலை. சீவான்ம நிலையை உணர்த்தும் மூர்த்தியாக மூலமுர்த்தி மூலவர் விளங்குகின்றார்.

## மகா மண்டபத் தத்துவம்

அதிகார நந்தியின் அருகில் நின்று மூலவரைக் கண்டு வணங்கியவன், அடுத்துள்ள மகாமண்டபத்திற்குள் செல்கின்றான். அம்மகா மண்டபத்திலிருந்து உள்ளே செல்லச் செல்ல இடம் குறுகலாகவே அமைந்துள்ளது. இந்த அமைப்பு, உண்மையில் ஆன்ம நிலையில் வழிபட வருவோரின் எண்ணிக்கை குறைந்த அளவு என்பதை உணர்த்துவதாகும்.

## கருவறை தத்துவம்

கோயில்களில் கருவறை மட்டும் இன்றும் மின் விளக்கு போடாமல் இருளாகவே உள்ளது. அங்கு தீப விளக்கு ஏற்றித்தான் அந்த காரிருள் நீக்கி நாம் இறைவனை தரிசிக்க முடியும்.

இதற்குக் காரணம் மின்சாரம் என்பது எரிசக்தி. அதை இயற்கையாக நாம் பெறுவதில்லை. தண்ணீரின் மூலமோ நிலக்கரி வாயிலாகவோ அல்லது அணுக்களின் உதவியாகவோ செயற்கையான முறையில் பல கட்டடங்களில் இந்த மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது. இது நல்ல சக்தி மிகுந்த வெளிச்சத்தைக் கொடுத்தாலும் கூட இதன் மின் கதிர்களால் இயற்கையான முறைகளுக்குப் பாதிப்பு ஏற்படுகின்றது.

கர்ப்பக்கிரகத்தில் இருக்கும் இறைவனின் விக்கிரகம் பல மந்திரசக்திகளால் நிறுவப்பட்டுள்ளது. விக்கிரகத்தின் கீழே மூலிகைகளும் பஞ்சலோகங்களும் கலந்த ஒரு அபார சக்தி உள்ளது. இப்படிப்பட்ட ஒரு புனித சக்தி கெட்டுப்போய் விடக்கூடும். மேலும் நாம் வணங்கும் இறைவன் பஞ்சபூத வடிவமானவர். பஞ்ச பூதங்களில் ஒன்றான நெருப்பு என்கிற சோதி வடிவத்தில் தான் மூலவரை நாம் வணங்குகின்றோம். எனவே தான் எண்ணெய் விளக்கின் ஒளியில் அவரைக் காண வேண்டும்.

இதுபோன்ற கனமான இருளில் மெல்லிய விளக்கின் தீப ஒளியில் இறைவனை நாம் தரிசிக்கும்போது நம்மனத்தில் பிற எண்ணங்கள் எதுவும் ஏற்படாமல் தீபம் மட்டுமே நிற்கிறது. அதன் காரணமாக நம் மனம் இன்னும் ஒருநிலைப்படுகிறது. அது இறைவனோடு நம்மை ஒருங்கிணைக்கவும் செய்கிறது.

### உருவ வழிபாடு

கோயில்களில் உற்சவர் படிமம் ஐம்பொன்னாலும் மூலவர் படிமம் கருங்கல்லினாலும் வடிவமைக்கப் படுகிறது.

முதன்முதலில் சிற்பக்கலைகள் கல்லில்தான் செதுக்கப்பட்டன. கற்கள், பாறைகள் நம் பூமியில் நிறைந்து காணப்பட்ட காலத்தில் இறைவனது திருநாமத்தை உச்சரித்துக் கொண்டு காடுகளிலும் மலைகளிலும் ஞானம் தேடி அலைந்த ஞானிகள், கலை ஆர்வம் மிகுதியால் ஓய்வு நேரங்களில் இந்தக் கற்களில் இறைவனின் உருவங்களைச் செதுக்கினர். இப்படிச் செதுக்கிய சிலைகளை வழிபடுவதற்காகக் கோயில் அமைத்தனர். மந்திரங்களும், வேதங்களும் சொல்லி அந்தச் சிலைக்குத் தெய்வ சக்தியைக் கொடுத்தனர்.

இறைவன் என்பவன் பாறையைப் போல, கல்லைப் போல, மலையைப் போல, குன்றினைப் போல மிகவும் பலமானவன். சக்திமிக்கவன், திடமான மனதைக் கொண்டவன் என்பதைச் சொல்வதற்காகவும் கூட இறைவனைக் கற்களால் அமைத்தார்கள். கற்கள் கடினமானதாக இருந்தாலும் சுனை என்று சொல்லப்படும் நீரூற்றுகள் இந்தப் பாறைகளுக்குள்ளிருந்து தான் புறப்பட்டு வருகின்றன. கல்லானது எந்தப் பொருளையும் தன்பால் இழுத்துக் கொள்ளக்கூடிய சக்தி வாய்ந்ததாகும். கல்லில் பஞ்சபூதங்களான ஆகாயம், காற்று, நெருப்பு, நீர், நிலம் ஆகியவற்றின்

தன்மையும் அடங்கியிருந்து வெளிப்படுதல் போல மற்ற உலோகங்களில் இத்தன்மை இல்லை.

1. ஆகாயத்தைப் போல வெளியில் உள்ள சப்தத்தைத் தன்னகத்தே இழுத்து ஒடுக்கிப் பின்னர் வெளியிடும் சக்தி கல்லுக்கும் உண்டு.

2. கல்லிலே காற்று உண்டு

3. கல்லிலே நெருப்பும் தங்கியுள்ளது. வேறு எந்தப் பொருளிலும் இல்லை. நெருப்பின் சக்தி மிகுதியாக கல்லில்தான் இருக்கிறது. நெருப்பு உருவான வரலாறு இதனை உணர்த்துகிறது.

4. கல்லில் நீர் இருப்பதால் தான் இயல்பான குளிர்ந்த நிலையிலிருந்து மாறாமல் இருக்கிறது. கல்லைத் தொட்டால் தண்ணீர் போல் தண்ணொற்றிருப்பது கல்லினுள் நீர்த்தன்மை இருப்பதனை உறுதிப்படுத்துகின்றது

5. கல்லில் நிலம் என்ற கடைசிப் பூதமும் உள்ளது. ஐம்பூத வடிவாகி விளங்கும் ஆண்டவனது உருவத்தை வீற்றிருந்த படி செய்து வழிபட்டு வரும்படி நமது முன்னோர்கள் ஏற்பாடு செய்துள்ளனர்.''[43]

கடவுளின் உருவ வழிபாட்டிற்காக ஐந்து உலோகங்களைக் கொண்டும் உருவங்களைச் செய்தார்கள். தங்கம், வெள்ளி, செம்பு, பித்தளை, இரும்பு இவைகளைக் கொண்டு ஐம்பொன் சிலைகளைச் செய்தார்கள். மனித உடல், முறையாக, சிறப்பாக இயங்க வேண்டுமென்றால் இந்த ஐம்பொன் உலோகங்கள் மிகவும் அவசியமாகும்.

அதுபோலச் சித்தர்கள் நவபாசாணத்தைக் கொண்டு கடவுளின் உருவங்களை உருவாக்கி அவைகளுக்குப் பூசை முறைகளைச் செய்தார்கள். ‘‘நவபாசாணங்கள் என்பது வீரம், பூரம், லிங்கம், தாளகம், இரசம், அரிதாரம், மனோசிலை, கந்தகம், வெள்ளிப் பாசாணம் போன்றவைகள் ஆகும்.''[44] நவபாசாணங்கள் நம் உடலில் ஏற்படுகின்ற சகல நோய்களையும் தீர்க்கக் கூடிய அற்புதமான மருந்தாகும்.

தெய்வச்சிலைகளைப் பீடத்தின் மேல் நிறுவ வேண்டிச் செய்யப்படுவதே அட்டபந்தனம். இது மருத்துவ அடிப்படையிலேயே நடைபெறுகின்றது. சுக்கான்கல், கொம்பரக்கு, சாதிலிங்கம், செம்பஞ்சு, தேன்மெழுகு, எருமை வெண்ணெய், குங்கிலியம், கற்காவி என்ற எட்டு வகைப் பொருட்களை வைத்து இடித்துச் செய்து தெய்வீக மருந்தாகச் சிலையைப் பீடத்தில் ஒட்ட வைப்பதே அட்டபந்தனம். அட்டம் - எட்டு, பந்தனம் - கட்டுவது. இந்த பொருட்கள் சகல நோய்களையும் குணமாக்குகிறது.

தேன், பால், பன்னீர், இளநீர், தயிர் போன்றவற்றை வைத்து அபிடேகங்கள் பல செய்யப்படுகிறது. இறைவனுக்குச் செய்கின்ற அபிடேகத் தீர்த்தங்களை உட்கொண்டு, கண்களில் தடவிக் கொள்வதால் நம் உடலில் தொற்று நோய்க் கிருமிகளால் ஏற்படுகின்ற பலவிதமான கொடிய நோய்கள் குணமாகின்றன. கண்களில் ஏற்படுகின்ற எந்த நோய்க்கும் மருந்தாகப் பயன்படுகிறது. இதனால் இறைவனைச் சிலை வடிவில் செய்து வழிபடுவது தமிழரின் பண்பாடாக உள்ளது.

## சிவாலய வழிபாட்டு முறைகள்

திருக்கோயிலுக்குள் செல்லும் பொழுது பக்தர்கள் உலக விவகாரங்களில் மனதைச் செலுத்தாமல் சிவபெருமானின் திருப்பெயர்களை உச்சரித்துக் கொண்டு செல்ல வேண்டும். இறைவனுக்குப் படைப்பதற்கு பூ, பழம், தேங்காய் முதலியனவும் அபிடேகத்திற்குரிய பொருள்களும் தீபம் இட நெய் முதலியனவும் கொண்டு சென்று வழிபட வேண்டும்.

முதலில் கோபுர தரிசனம் செய்தல் வேண்டும். பிறகு விநாயகரை வழிபடவேண்டும். பிறகு கொடிமரத்திற்குச் சென்று நந்தியின் இரு கொம்புகளுக்கிடையில் சிவபெருமானை தரிசனம் செய்த பின்பு நந்தியின் வலமாக முன்புறம் சென்று வழிபட்டு, அனுமதி பெற்று உள்ளே நுழைதல் வேண்டும். துவாரபாலகரை வழிபட்ட பிறகு உட்புறம் சென்று சிவபெருமான் சன்னதியை அடைதல் வேண்டும்.

இறைவனுடைய திருப்பெயர்களையும் மந்திரங்களையும் உச்சரித்து வழிபடுதல் வேண்டும். பிறகு வலமாகச் சுற்றுக் கோயிலுள்ள நாயன்மார்கள், தட்சிணாமூர்த்தி, சோமாசுகந்தர், சுப்பிரமணியர், மகாஇலக்குமி, நடராசர், நவக்கிரகங்கள் போன்ற மூர்த்தங்களை வழிபடுதல் வேண்டும். மூன்று முறை கோயிலை வலம் வருதல் முறையாகும். மூன்றாவது சுற்றில் ஈசானத்தில் அமர்ந்திருக்கும் சண்டிகேசரைத் தரிசித்து பிறகு அம்மனை வழிபட்டு, இரண்டு முறை வலம் வந்து வெளிவருதல் வேண்டும். மீண்டும் கொடிமரத்துக்கு வந்து கீழே விழுந்து வழிபட்டு, சிவபெருமானை வணங்கி, உத்தரவு பெற்றுக் கொள்ள வேண்டும்.

தொகுப்புரை

- உலகில் உயிரினங்கள் பலவாகக் காணப்படினும் மக்கள் இனத்திற்கே பண்பாடு என்பது பொருந்துவதாக அமைகின்றது. பண்பாடு என்பது மனித மனத் தொடர்பானது. மாறக்கூடியது. நாகரிகம் என்ற பொருளிலும் வழங்கப்படுவது. மனித வாழ்க்கையைத் திருத்துவது அல்ல. செம்மைப்படுத்துவது அந்தந்தச் சமூகத்திற்கேற்ப மாறக்கூடியது.

- கால மாற்றத்திற்கேற்பப் புதிதாக உருவாக்கிக் கொள்ளக் கூடிய வாழ்வியல் பண்புகளையும் பண்பாடு என வரையறை செய்து கொள்ளலாம்.

- தமிழர்களின் மேம்பட்ட வாழ்விற்குக் கோயில்களோடு அவர்கள் கொண்டுள்ள தொடர்பு பெரிதும் காரணமாக அமைகின்றது. தமிழர்களின் புராதனக் கலைகளும் இலக்கிய வளங்களும் வழிபாடு போன்ற செயல்பாடுகளும் பக்தி நெறியையும் சமயப் பண்பாட்டையும் உயர்த்து வனவாகும்.

- கோயில்களும் மக்கள் வாழ்வும் பிரிக்க முடியாத வகையில் அமைந்துள்ளன. கோயில்கள் கலையையும் பொருளாதாரத்தையும் சமயத்தையும் வளர்த்ததோடு நாட்டில் நலத்துறையையும் சுகாதாரத்தையும் கூட வளர்த்தன.

- தனக்கு மேல் ஒரு ஆற்றல் உள்ளது என மனிதன் நம்புகின்றான். அவ்வாற்றலே தெய்வம் என்றும் இறைவன் என்றும் கருதுகிறான். அதனால் தான் தனது வாழ்க்கையில் எல்லா நிகழ்வுகளும் நடைபெறுகின்றன எனக்கருதி அதற்கு நேர்த்திக்கடன்கள் முதலியவற்றைச் செலுத்தி வழிபடுகிறான்.

- மனிதன் இறைவனுக்குச் செய்யும் அபிடேகம், அலங்காரம், பூசை முறைகள் ஒவ்வொன்றினுக்கும் ஒரு தன்மை உண்டு. காரணம் உண்டு. இறைவனுக்குக் கூறப்படும் மந்திரத்திற்கு சக்தி உண்டு. இதன் மூலம் கோயில்களில் பெறப்படும் பிரசாதத்திற்கு சக்தி உண்டாகிறது. அது பக்தர்களுக்கு நன்மையளிக்கிறது. மருந்தாகப் பயன் தருகிறது.

- மனிதனால் உருவாக்கப்பட்ட கோயில்கள் அனைத்தும் ஆகமங்களை முன்னிருத்திக் கட்டப்படுவதால் அவை ஒவ்வொன்றும் மனிதனுக்கு பக்குவ நிலையைச் சுட்டுவதாகவே அமைந்துள்ளது. தான் என்ற அகந்தையை அழித்து இறைவன் பதம் அடைவது எப்படி என்ற தத்துவத்தை முன்னிலைப்படுத்துகிறது.

- மொத்தத்தில் இறைவன் திருக்கோயில்கள் மக்களுடன் இரண்டறக் கலந்து அவனைப் பண்படுத்தி மனிதனை உயர்நிலைப் படுத்தும் நிலைக்கலன்களாகப் பண்பாட்டுப் பெட்டகமாக அமைந்துள்ளன.

சான்றெண் விளக்கம்


1. ஞா.தேவநேயப்பாவாணர், பண்டைத்தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.6.
2. அ.தட்சிணாமூர்த்தி, தமிழர் நாகரிகமும் பணபாடும், ப.4.
3. மேலது, ப.5.
4. கா.சிவதம்பி, தமிழிலக்கியத்தில் மதமும் மானுடமும், ப.14.
5. எரிதழல், பண்பாடும் புரட்சியும், ப.16.
6. செ.வைத்தியலிங்கன், தமிழ்ப் பண்பாட்டு வரலாறு, ப.1.
7. மேலது, ப.3.
8. செ.வைத்திய லிங்கன், மு.நூ, ப.5.
9. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி.12, ப.16.
10. மேலது, ப.16.
11. மேலது, ப.16.
12. மேலது, ப.16
13. அ.தட்சிணாமூர்த்தி, மு.நூ. ப.245.
14. க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.15.
15. அ.ஜெகதீசன், சங்க இலக்கிய மதிப்பீடுகள், ப.53.
16. அகநா., பா.198.
17. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி II, பக்.220- 224.
18. செ.பழனிச்சாமி, புறநானூற்றில் தமிழர் பண்பாடு, ப.102.
19. P.C.Dep, Rural Sociology, p.10.
20. க.வெள்ளை வாரணனார், சங்க இலக்கியத்தில் சமய நோக்கு, சங்க இலக்கியக் கருத்தரங்கம், ப.2.
21. வை.இரத்தின சபாபதி, சமய இலக்கியங்கள், ப.7.
22. குன்றக்குடி அடிகளார், நமது நிலையில் சமயம் சமுதாயம், ப.2.
23. இரா.சாரங்கபாணி, வழிபாட்டு முறைகள், ப.27.
24. நற்., பா. 343.
25. வேங்கடவன், பூஜைக்குரிய பொருட்களும் பலன்களும், ப.9.
26. மேலது, ப.10.
27. திருஞா.தேவா. தலமுறை. பக்.692- 694.
28. வேங்கடவன், மு.நூ. ப.67.

29. மேலது, ப.21.

30. மேலது, ப.30.

31. மேலது, ப.129.

32. க.த.திருநாவுக்கரசு, தமிழ்ப்பண்பாடு, ப.72.

33. திருநா.தேவா. 245.

34. திருநா.தேவா. 135.

35. திருநா.தேவா. 4,6.

36. அ.தட்சிணாமூர்த்தி, மு.நூ. ப.82.

37. கு.கதிரைவேல் பிள்ளை, தமிழ்ச் சொல்லகராதி, தொகுதி மூன்று, ப.1403.

38. மா.இராசமாணிக்கனார், எல்லோரும் வாழவேண்டும், ப.78.

39. புறநா., பா. 212. 5.

40. திருஞா.தேவா. தலமுறை. பக்.692- 694.

41. ப.இராமநாத பிள்ளை, திருக்கோயில் வழிபாடு, ப.6.

42. புலவர் செந்துறைமுத்து, திருக்கோயில்களும் வழிபாட்டு முறைகளும், ப.39.

43. மு.திரவியம், இந்து சமயக் களஞ்சியம், ப.287.

44. டாக்டர்.எஸ்.முரளிதர், இந்து மதத்தின் இயற்கைக் களஞ்சியம், ப.5.

## முடிவுரை

- சைவசமயத்தின் முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான் நிகழ்த்திய அரிய செயல்கள் திருவிளையாடல் எனப்பெறும். இத்திருவிளையாடல்களை அடிப்படையாகக் கொண்டு பல நூல்கள் இயற்றப்பட்டுள்ளன. அவற்றுள் மிகச் சிறந்ததாகக் கருதப்படுவது பரஞ்சோதி முனிவர் இயற்றியத் திருவிளையாடல் புராணம் ஆகும். இத்திருவிளையாடல் புராணத்தில் சுட்டப்பெறும் 64 திருவிளையாடல்களில் **இடைக்காடன் பிணக்குத் தீர்த்தது, மண் சுமந்தது, சமணரைக் கழுவேற்றியது** என மூன்று முக்கிய திருவிளையாடல்கள் நடந்த இடங்களில் இத்திருவிளையாடல்களை அடிப்படையாகக் கொண்டு அருள்மிகு **ஆதிசொக்கநாதர் கோயில், புட்டு சொக்கநாதர் கோயில், திருஏடகநாதர் கோயில்** என்னும் மூன்று திருக்கோயில்கள் எழுந்துள்ளன.
- திருவிளையாடல் புராணத்தை இயற்றிய பரஞ்சோதி முனிவரின் காலம் **கி.பி 17-ஆம் நூற்றாண்டு** ஆகும்.
- திருவிளையாடல் புராணம், மதுரைக் காண்டம், கூடற்காண்டம், திருவாலவாய்க் காண்டம் என முப்பெறும் பிரிவுகளைக் கொண்டுள்ளது.
- தல விசேடம், தீர்த்த விசேடம், மூர்த்தி விசேடம் என்ற மூன்றும் சிவபெருமானின் திருவிளையாடல்கள் அறுபத்து நான்கும் அருச்சனை புரிந்த செயல் ஒன்றும் சேர்த்து அறுபத்து எட்டுப் படலங்களாக அமைந்துள்ளன. இந்நூலில் உள்ள மொத்தப் பாடல்களின் எண்ணிக்கை 3363 ஆகும்.
- மதுரையை ஆண்ட குலேசபாண்டியனிடம் கபிலரின் நண்பனான **இடைக்காடன்** என்ற புலவர் தமிழ்ச்செய்யுள் ஒன்றை இயற்றிச் சென்று பாடிக் காண்பித்தார். அதனை மன்னன் கண்டு கொள்ள வில்லை. அதனால் வருத்தமுற்ற புலவர் சிவபெருமானிடம் சென்று முறையிட்டார். அதனால் சிவபெருமான் தன் இருப்பிடத்திலிருந்து நீங்கி **உத்தர ஆலவாய்** என்னும் இடத்திற்குச் சென்று அங்கு உறைந்தார். இதனை அறிந்த மன்னன் வருந்தி புலவரிடம் மன்னிப்புக்கோரி பொன்னும் பொருளும் பரிசாக அளித்தான். இடைக்காடனுக்காக இறைவன் வந்து தங்கிய இடமே **ஆதிசொக்கநாதர் கோயில்** ஆகும்.
- சிவபெருமான், மாணிக்கவாசகர் பொருட்டு வைகையைப் பெருக்கெடுக்கச் செய்த பொழுது வந்தி என்ற பிட்டு விற்கும் மூதாட்டிக்காக அவளுடைய பங்குக் கரையை அடைக்கக் கூலியாள் வேடங்கொண்டு சிவபெருமான் வந்தார். அப்பொழுது வந்தி கொடுத்த பிட்டினை உண்ட களைப்பில் கரையை அடைக்காமல் மரத்தடியில் படுத்துத் துயில் கொண்டார். வந்தியின் பங்கு அடைபடாமல் இருப்பதைக் கண்டு கோபம் கொண்ட மன்னன் அரிமர்த்தன

பாண்டியன், அவரைப் பிரம்பால் அடித்தான். அந்த அடி மன்னன் மீதும் மற்றவர்கள் மீதும் பட்டது. வந்திருப்பது சிவபெருமான் என்பதை உணர்ந்து இறைவனிடமும் மாணிக்கவாசகரிடமும் மன்னிப்புக் கோரினான். இந்நிகழ்வு நடந்த இடத்தில் அமைந்துள்ளதே **புட்டுசொக்கநாதர் கோயில்** ஆகும்.

- சைவசமயத்திற்கும் சமணசமயத்திற்கும் இடையே நடைபெற்ற வாதுப்போரில் மதுரையில் நடைபெற்றது. இதில் திருஞானசம்பந்தர் வைகை ஆற்றில் இட்ட ஏடானது ஆற்றின் போக்கை எதிர்த்து மேற்கே சென்றது. சமணர்கள் இட்ட ஏடானது ஆற்றோடு சென்றது. ஞானசம்பந்தர் இட்ட ஏடு எதிர்த்துக் கரை ஏறிய இடம் திருஏடகம் என்று அழைக்கப்பட்டது. இதனால் சமணத்திலிருந்து சைவத்திற்கு மாறிய கூன்பாண்டியன் என்ற நின்றசீர் நெடுமாறன் மன்னனால் கட்டப்பட்டதே **திருஏடகநாதர் கோயில்.**
- ஆதிசொக்கநாதர் கோயில் கட்டிய மன்னர் பெயர் அறியுமாறில்லை. இராணிமங்கம்மாள் இக்கோயிலுக்கு திருப்பணி செய்துள்ளார்.
- புட்டுசொக்கநாதர் கோயில் திருமலைநாயக்கரால் கட்டப்பட்டது.
- திருவிளையாடல் புராணத்தோடு தொடர்புடைய ஆதிசொக்கநாதர் கோயில், புட்டுசொக்கநாதர் கோயில், திருஏடகநாதர் கோயில் ஆகிய மூன்று கோயில்களும் ஆகம விதிமுறைகளைப் பின்பற்றி அமைக்கப் பெற்ற திருக்கோயில்களாக உள்ளன. மூன்று கோயில்களிலும் மூலத்தெய்வம் சிவபெருமான் ஆவர்.
- இத்திருக்கோயில்கள் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம், திருச்சுற்று, பரிவாரத் தெய்வங்களின் சன்னதிகள், அம்மன்சன்னதி, மடைப்பள்ளி, பள்ளியறை ஆகிய பகுதிகளைக் கொண்டு அமைந்துள்ளன.
- மூன்று கோயில்களிலும் கருவறை கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. சுவாமி கருவறையின் தேவகோட்டத்தில் தெற்கே தட்சிணாமூர்த்தியும் மேற்கே லிங்கோத்பவரும் வடக்கே துர்க்கையும் இடம் பெற்றுள்ளனர்.
- கருவறை வாயிலின் இருபுறமும் துவாரபாலகர்களும் கருவறையின் முன்பு பலிபீடம், நந்தி போன்றவையும் அமைந்துள்ளன.
- மகாமண்டபத்துடன் கூடிய திருச்சுற்றிலேயே பரிவாரத்தெய்வங்களாகிய முருகன், விநாயகர், இலக்குமி, சரசுவதி, பைரவர், நடராசர், சண்டிகேசுவரர், நவக்கிரகங்கள், 63 நாயன்மார்கள், வந்தி, இடைக்காடன் போன்றவர்கள் இடம் பெற்றுள்ளனர்.
- சுவாமியின் கருவறையை ஒட்டி அம்மன் சன்னதி அமைந்துள்ளது. திருஏடகநாதர் கோயிலில் மட்டும் தனி மண்டபத்துடன் கூடிய சன்னதியில், சுவாமி கருவறையை ஒட்டினார் போல் அம்மன் சன்னதி உள்ளது.

- ஆதிசொக்கநாதர் கோயிலில் சுவாமி கருவறையின் மீதும் அம்மன் சன்னதி மீதும் என இரு துவிதள விமானங்களும் புட்டுசொக்கநாதர் கோயிலில் சுவாமி, அம்மன், வந்தி ஆகியோர் தம் சன்னதிகளின் மீது துவிதள விமானங்களும் உள்ளன. திருஏடகநாதர் கோயிலில் சுவாமி, அம்மன், பரிவாரத்தெய்வங்கள் சன்னதிகள் அனைத்திலும் ஏகதள விமானங்களும் இடம்பெற்றுள்ளன.
- புட்டுசொக்கநாதர் கோயிலின் அருகில் இக்கோயிலுக்குச் சொந்தமான 36 கால் கல்மண்டபம் அமைந்துள்ளது. இங்கு தான் வருடாவருடம் புட்டுத்திருவிழா நடத்தப்பட்டு, வந்திக்கும் மாணிக்கவாசகருக்கும் மோட்சம் கொடுக்கப்படுகிறது. அதன் அருகில் அமைந்துள்ள சிவலிங்கத்துடன் கூடிய மேடை மீது குளம் போன்ற அமைப்பு ஆறாகக் கருதப்பட்டு அதில் வைகை ஆறு கரை அடைக்கும் நிகழ்வு நடைபெறுகிறது.
- திருஏடகநாதர் கோயிலின் அருகில் திருஞானசம்பந்தருக்குத் தனிக் கோயில் அமைத்து ஞானசம்பந்தரைப் பெருமைப் படுத்தியுள்ளனர்.
- மூன்று கோயில்களிலும் இடம்பெற்றுள்ள இறைவன், இறைவியரது திருவுருவங்கள் கற்படிமமாகவும் செப்புப்படிமமாகவும் வடிக்கப்பட்டு வழிபடப் பெறுகின்றன.
- திருக்கோயில்களில் உள்ள மூலவர்கள் இலிங்க வடிவில் காட்சியளிக்கின்றனர். அம்மன்கள் நின்ற வடிவில் இரு திருக்கரங்களுடன் அருட்பாலிக்கின்றனர்.
- கருவறைத் தேவகோட்டத் தெய்வங்களாக தட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், துர்க்கை ஆகியோர் இடம் பெற்றுள்ளனர். தட்சிணாமூர்த்தி கல்லால மரத்தின் கீழ் அமர்ந்து முனிவர்களுக்கு வேதாகமங்களை உபதேசித்தவாறும் லிங்கோத்பவர் விட்னு, பிரமன் ஆகியோருக்குத் தீப்பிழம்பாகக் காட்சி கொடுத்த நிலையிலும் துர்க்கை மகிடாசுரன் தலை மீது நின்ற கோலத்திலும் காட்சியளிக்கின்றனர்.
- பரிவாரத் தெய்வங்கள் பீடத்தின் மீது நின்ற நிலையிலும் அமர்ந்த நிலையிலும் நடராசர், முருகன் ஆகியோருக்குத் தனிச் சன்னதியும் நவக்கிரகங்கள் உயர்ந்த பீடத்தின் மீது உள்ளவாறும் மூன்று கோயில்களிலும் அமைக்கப்பட்டுள்ளன. இவர்கள் அவர்களுக்குரிய ஆயுதங்களுடன் மக்களைக் காக்கும் அபய, வரத முத்திரைகளுடனும் காணப்பெறுகின்றனர்.
- 63 நாயன்மார்களில் காரைக்கால் அம்மையார்(அமர்ந்த நிலை) தவிர மற்றவர்கள் நின்ற நிலையில் காட்சியளிக்கின்றனர்.
- திருவிளையாடல்களுடன் தொடர்புடையச் சிற்பங்களான இடைக்காடன் அமர்ந்த நிலையிலும் வந்தி, திருஞானசம்பந்தர் ஆகிய இருவரும் நின்ற நிலையிலும் அதனோடு தொடர்புடைய கோயிலில் காட்சியளிக்கின்றனர்.

- விமானம், கோபுரங்களில் சிவபெருமான், பார்வதி, விநாயகர், முருகன் ஆகியோரின் வெவ்வேறு வடிவங்கள், விட்ணுவின் அவதார வடிவங்கள், தேவர்கள், மனிதச்சிற்பங்கள், பறவை, விலங்குகள் போன்றவற்றின் சிற்பங்கள் ஆகியவை சுதைச் சிற்பமாக அழகுடன் வடிக்கப்பட்டுள்ளன.

- ஆதிசொக்கநாதர் கோயில் மற்றும் புட்டுசொக்கநாதர் கோயில்களில் காரண, காமிக ஆகம முறைப்படி பூசை முறைகளும் திருஏடகநாதர் கோயிலில் காரண ஆகமப்படி பூசை முறைகளும் நடைபெறுகின்றன. நாள் வழிபாடாக ஆதிசொக்கநாதர் கோயிலில் நான்கு காலப் பூசையும் புட்டுசொக்கநாதர் கோயிலில் இரண்டு காலப் பூசையும் திருஏடகநாதர் கோயிலில் ஆறு காலப் பூசையும் நடைபெறுகின்றன.

- இத்திருக்கோயில் தெய்வங்கள் அபிடேகம், அலங்காரம், அருச்சனை, நைவேத்தியம், ஆராதனை, உற்சவம் ஆகிய ஆறு முறைகளில் வழிபடப்பெறுகின்றனர்.

- மூன்று கோயில்களிலும் திங்கள், செவ்வாய், வியாழன், வெள்ளி, சனி ஆகிய கிழமைகளில் சிறப்பு வழிபாடு நிகழ்த்தப்பெறுகிறது.

- மாதமிரு முறை நடைபெறும் விழாக்களில் பிரதோசம் மூன்று கோயில்களிலும் சிறப்பாகக் கொண்டாடப்பெறுகிறது.

- சித்திரை வருடப்பிறப்பு, வைகாசி விசாகம், ஆனித் திருமஞ்சனம், ஆடிப்பூரம், ஆவணி மாதம் புட்டுசொக்கநாதர் கோயிலில் நடைபெறும் புட்டுத்திருவிழா, திருஏடகநாதர் கோயிலில் நடைபெறும் ஏட்டுத்திருவிழா, புரட்டாசி நவராத்திரி விழா, ஐப்பசி அன்னாபிடேகம், கார்த்திகை தீபவிழா, சங்காபிடேகம், மார்கழி திருவாதிரை, திருப்பள்ளி எழுச்சி, தைப்பூசம், மகாசிவராத்திரி, பங்குனி உத்திரம் போன்ற ஆண்டு விழாக்கள் இம்மூன்று கோயில்களிலும் சிறப்புற நடைபெறுகிறது.

- பத்துநாட்கள் கொண்டாடப்படும் திருவிழாக்கள் எதுவும் இக்கோயில்களில் நடை பெறுவதில்லை. திருஏடகநாதர் கோயிலில் மட்டும் முன்பு நடைபெற்றதாகவும் தற்பொழுது பொருளாதாரப் பற்றாக்குறையால் நடைபெறுவது இல்லை என்றும் கூறப்பெறுகிறது.

- கும்பாபிடேகம் பன்னிரெண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை ஆதிசொக்கநாதர் கோயில் மற்றும் திருஏடகநாதர் கோயில் ஆகியவற்றில் நடைபெறுகிறது.

ஆனால் புட்டு சொக்கநாதர் கோயிலில் 1889-க்குப் பிறகு கும்பாபிடேகம் நடைபெறவில்லை.

- ஆய்விற்குட்பட்ட மூன்று கோயில்களில் ஆதிசொக்கநாதர் கோயில் மதுரை மீனாட்சிஅம்மன் கோயிலின் உபக்கோயிலாக அமைந்துள்ளதால் இக்கோயிலின் வரவு, செலவுகளை அக்கோயிலின் நிருவாகமே மேற்கொள்கிறது.
- புட்டுசொக்கநாதர் கோயில் இனத்தார் நிருவாகத்தின் கீழ் நிருவகிக்கப்படுகிறது. தற்பொழுது அதன் நிருவாகத் தலைவராக இ.மாணிக்கம் என்பவர் உள்ளார்.
- திருஏடகநாதர் திருக்கோயில் அறநிலையத்துறையின் கட்டுப்பாட்டில் உள்ளதால் இக்கோயிலின் மூன்றாம் நிலை செயல் அலுவலராக ஆ.இளஞ்செழியன் என்பவர் நியமிக்கப்பட்டுள்ளார். பரம்பரை அறங்காவலராக எஸ்.எல்.சேவுகன் செட்டியார் என்பவர் உள்ளார்.
- நித்திய வழிபாடு மற்றும் மாதத் திருவிழாக் காலங்களில் செய்யப்படும் செலவுகள், கோயில் பணியாளர்கள் ஊதியம், மராமத்து, கும்பாபிடேகம், மின்சாரக்கட்டணம் போன்றவை இக்கோயில்களுக்குரிய செலவினங்களாக அமைகின்றன. இவை அனைத்தும் கோயில் வருவாயிலிருந்தே மேற்கொள்ளப் பெறுகிறது.

- உலகில் உயிரினங்கள் பலவாகக் காணப்படினும் மக்கள் இனத்திற்கே பண்பாடு என்பது பொருந்துவதாக அமைகின்றது. பண்பாடு என்பது மனித மனம் தொடர்பானது. மனித வாழ்க்கையைச் செம்மைப்படுத்துவது.

- தமிழர்களின் மேம்பட்ட வாழ்விற்குக் கோயில்களோடு அவர்கள் கொண்டுள்ள தொடர்பு பெரிதும் காரணமாக அமைகின்றது. கோயிலைச் சார்ந்த குடிகள், குடிகளைச் சார்ந்த கோயில் என்பது தமிழர்களின் பண்பாட்டு நெறியாக விளங்குதல் இவ்வாய்வின் வழி புலனாகின்றது.

- **மேலாய்வுக்களன்கள்**

திருவிளையாடல் புராணத்தோடு தொடர்புடைய பிறகோயில்களை ஆராயலாம்.